உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# இரகுவம்மிசம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

மகாவித்துவான்

அரசகேசரி

இயற்றியது.

இது

காரைக்குடி ம-௱-௱-ஸ்ரீ.

மெய்யப்பசெட்டியாரவர்கள்

கேட்டுக்கொண்டபடி

நல்லூர்

வித்துவசிரோமணி

ச. பொன்னம்பலபிள்ளையால்

பரிசோதித்து,

யாழ்ப்பாணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



சர்வசித்துஞு ஆவணிமீ.

1887.

# முகவுரை.

---

ஏறக்குறையத் தொளாயிரம் வருஷங்களுக்கு முன்னே மதுரையினின்றும் வந்து யாழ்ப்பாணத்தை அரசாண்ட சிங்கையாரிய சக்கிரவர்த்தியும், அவர்பின்சந்ததியாராகிய மற்றை ஆரியசக்கிரவர்த்திகளும், இவ்வியாழ்ப்பாணம் எங்குங் கல்விவிருத்திசெய்து நல்லூரிலிருந்து செங்கோல் செலுத்தி அரசியற்றிவந்தார்கள். அவர்களுள், முற்கூறிய சிங்கையாரிய சக்கிரவர்த்திக்குப் பதினோராம்வழித்தோன்றலாகிய கனகசூரியசிங்கையாரியசக்கிரவர்த்தியிடத்திலே பரராசசேகரர் செகராசசேகரர் என இருபுத்திரர்கள் பிறந்தார்கள். இவர் இருவரும் சம்ஸ்கிருதம் தமிழ் என்னும் இருபாஷைகளினும் உள்ள பலநூல்களையுங்கற்றுப் பாண்டித்தியம் அடைந்தவராயினார்.

பரராசசேகரர் தம்பிதாவினால் முடிசூட்டப்பெற்று அரசராகிக், கல்வி விருத்திசெய்தும், சிதம்பரத்தில் ஒரு மடங்கட்டுவித்துச் சிதம்பராலயத்து அபிஷேக நைவேத்தியத்தின் பொருட்டுந் துறவிகள் முதலாயினோருக்குப் பிக்ஷையின்பொருட்டும் வெகுகிராமங்கள் தானஞ்செய்தும், தமிழிலே பரராசசேகரம் என்னும் சிறந்த வைத்தியநூலைத் தாஞ்செய்தும், வித்துவான்களைக்கொண்டு பலநூல்களைச் செய்வித்தும், பெரும்புகழ் படைத்து அரசியற்றி வாழ்ந்தனர். இவர் தம்பியாராகிய செகராசசேகரமகாராசா, இடைவிடாது கல்வியிலே பொழுதுபோக்குங் குணமுடையராய்த் தமிழ்ப்புலவர்களைப் போஷித்தும், அவர்களைக்கொண்டு பலநூல்களைச் செய்வித்தும், தாமே சில நூல்களைச் செய்தும், தமிழை மிக நன்கு வளர்த்தலிலே தமது காலத்தைக் கழித்து வாழ்ந்தார். இவர்செய்த நூல்களுள்ளே, செகராசசேகரம் என்பது மிகச்சிறந்த சோதிடசாத்திரம்.

பரராசசேகரமகாராசாவின் அநுமதிப்படி, அவர் மருகராகிய அரசகேசரி என்பவர், காளிதாசர் என்னுங் கவிசிரேட்டர் வடமொழியில் இயற்றிய அரிய காவியமாகிய இரகுவம்மிசத்தைத் தமிழில் மொழிபெயர்த்து, இரகுவம்மிசம் என அம்முதனூற்பெயரையே தந்து சிறந்த காவியமாகப் பாடினார். சரித்திரமேயன்றி வருணனைகளும் வடமொழி இரகுவம்மிசத்தோடு மாறுபடாவண்ணம்

இதனைப்பாடிய நூலாசிரியருடைய வடமொழிதென்மொழிக் கல்வித்திறமையைக் குறித்து இவரைப் புகழ்ந்து பாராட்டாதார் யாவர். இந்நூலாசிரியராகிய அரசகேசரி என்பவர், இதனைச் சோழராசாக்களுடைய ராசதானிகளில் ஒன்றாகிய திருவாரூரிலே அரங்கேற்றினார். இந்நூலில், குலமுறைப்படலத்துக்குப் பின்னுள்ள சரித்திரங்களும் அக்காலத்தில் இவரால் மொழிபெயர்த்துப் பாடப்பட்டன என்பது கர்ணபாரம்பரியம். "கல்லோரறிவெனும் வாய்மைதன்னுணிலைப்படாவிவன்றன் வெய்யநீர்மையை நிகழ்த்துகிற்பாம்". என்னுங் குலமுறைப்படலத்திறுதிச் செய்யுளானும் அஃதுண்டென்பது துணியப்படும். அகப்பட்ட பிரதிகளொன்றினுங் காணப்படாமையாற் பிற்காலத்திற் சிதைந்தன போலும்.

கல்வியறிவொழுக்கங்களினும் சிவபத்தி அடியார்பத்திகளினும் சிறப்புற்றவரும் இந்நூலின் அருமைபெருமைகளை நன்குணர்ந்தவரும் ஆகிய சிங்கப்பூர் மெய்யப்பசெட்டியார் என்றழைக்கப்படும் காரைக்குடி ம-ா-ா-ஸ்ரீ. மெய்யப்பசெட்டியாரவர்கள் உபகரித்த பொருள்கொண்டு இந்நூலைப்பிழையறப் பரிசோதித்து அச்சிறப்பித்தேன். தாம் அந்நிய தேசத்தாராயினும் யாழ்ப்பாணத்து வித்துவான் செய்த இந்நூலின் மகிமையை உணர்ந்து அச்சிடுவித்த மெய்யப்பசெட்டியாரவர்களுடைய கல்வியறிவின் றிறமை நம்மாற் பாராட்டற் பாலதே.

சர்வசித்து௵ }
ஆவணி௴ உகஉ. } ந. ச. பொ.

# படல அட்டவணை.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# இரகுவம்மிசம்.

## காப்பு.

உதையமாவலரியெண்ணிலுதித்தனவொளியிற்றூய
சிதைவிலாநிலவுச்செக்கர்ச்செவ்வந்திமெய்யார்தந்த
புதைகொண்மாமதத்தவாம்பலானனப்புனிதப்பொற்றே
னிதையவாரிசத்ததாளுலெக்கலைமணவாதெற்கே.

## பாயிரம்.

உலகம்யாவையுநிற்பனவுத்தொழில்
வில்கலாதுவிளைத்தும்விளைத்திலா
தில்குநீர்மையதெப்பொருளப்பொரு
ளலகிலாதவருட்கடன்மூழ்குவாம். (க)

ஆதியாயணுவாயல்வாயரு
ணீதி* யாய்நிப‡ மாய்நிபமாவதற்
கேதிலாதவரெவ்வெவரவ்வவர்
பாததாமரைசென்னிபரிக்குவாம். (உ)

கோதிகந்தகுரவர்பரஞ்சுட்
ராதியாறறுதத்துவமல்லதென்
றோதிநின்றகுணங்குறியோதிலார்
சோதியென்பதையாமுந்துதித்துமே. (௩)

கற்புணைக்கொடுகார்க்கடனீந்துவா
னற்புதத்தினமைந்தவனாசைபோற்
சொற்புணைக்கொடுசொல்லுதன்மேயினேன்
மற்புயத்தரகுவின்மரபரோ. (ச)

உட்டுளக்கறுசொற்பொருளுக்கமுள்
ளிட்டுளத்தமிழ்சொல்வனென்றியான்மடக்
கட்டுளத்தெணல்கையிலிகற்குழி
தொட்டுளப்புணச்சுட்டுதலொக்குமே. (ரு)

* நீதி-நடத்துவது, ‡ நிபம்-காரணம்.

அறியகத்தைவெலற்புதர்ச்சேரினென்
சிறியசொற்பொருட்செம்மைபயக்குமாற்
பொறியலர்ப்பலகைகொண்டலவோபுனல்
வறியகற்பணிவாரியளிப்பதே. (௬)

கற்றசிந்தையர்ச்சேரினென் * கர்க்கசச்
சொற்றவாதெனச்சொற்றிடல்வேண்டுமோ
வெற்றயங்குமினன்கரத்தேயென்று
முற்றதாமரைக்கோர்குறையில்லையே. (௭)

வன்றிசைக்காளிதாசன்வடமொழி
தென்றிசைத்தமிழானனிசெப்புகே
னன்றிசைக்குமுரைவழிநன்னெடுங்
குன்றிசைப்பதுபோலுங்குறிப்பரோ (௮)

இன்னகாதையியன்றவிரும்பொருட்
டுன்னுசெஞ்சொற்றுகடபுதூயநூல்
பன்னுசெஞ்சொற்பரராசசேகர
மன்னனின்பமனங்கொளவாய்ந்ததே. (௯)

பாயிரமுற்றிற்று.

# ஆற்றுப்படலம்.

தெள்ளனந்தமதாகிச்சிறைகொடு
வெள்ளிவெண்கிரிவிண்ணெழல்போலெழாப்
பள்ளவேலைபருகுபுவஞ்சருட்
கள்ளமென்னவிருண்டனகாரரோ. (௧)

மறிபெருந்திரையுண்டலின்மல்கிய
நறியவெண்ணுரைபற்றலினுவிறு
னெறியவாய்ப்புறநீவுதல்செய்தெனச்
செறியுமின்னறலைத்தலைசெய்தவே. (௨)

மேக்கெறிந்துவிரிகடலுண்டுமே
னீக்கெறிந்தவகடுநிரம்பலா
லேக்கெறிந்துலகெங்குமிரைத்திட்த்
தேக்கெறிந்தெனப்பம்பினசெல்லரோ. (௩)

* கர்க்கசம்-கடினம்.

பகடுசுற்றலைப்பைம்புனலோட்டொ
லகட்டக்கியட்க்கரிதாயயர்
வுகடகைப்பினுமிழ்வனபோலொரு
* திருடனித்தனிகான்றனவெங்குமே. (ச)

அங்கணுழிசெல்ந்தமெய்கொண்டுவெற்
பெங்குநுங்கவிழ்ந்தனபோலவே
மங்குல்வாடைமடுப்பமயங்கலாற்
பொங்குதாரைதிரண்டுபொழிந்தவே. (ரு)

உன்னுமாழியுவர்ப்புனலுண்டுட
னன்னறும்புனனன்னரினல்கலா
லன்னகாலையளக்கருமற்புதச்
சென்னெடுங்கலைச்சித்தரிஞயவே. (சா)

விஞ்சுமாமலைமீதுவிழுங்கிருண்
மஞ்சுகான்றிடுமாவிமறித்தெழ
லெஞ்சலின்றியவ்வெற்பினிளங்கிளி
யஞ்சொலார்கழங்காடுவபோன்றவே. (எ)

துன்றுமைப்புயல்சோனையினம்மலை
முன்றின்முற்றவுநீர்கொடுமூட்லான்
மன்றினித்தநடம்புரிவானவன்
குன்றமொத்ததுசெம்பொற்குவட்ரோ. (அ)

புணர்பணிக்கிரிநீரிற்புதைத்தவா
ணிணர்மலர்த்தொடையிந்திரனுலெழா
வணரலைப்படுமைந்தன்வருத்தநீ
யுணர்தியென்றங்குணர்த்துவபோன்றவே. (கூ)

வேறு.

கார்த்தலைக்குன்றத்தங்கண்கதத்தவாய்மதத்தமாவி
னீர்த்தலையருவிபொங்கிரந்துகானிமிர்ந்துகைபோய்த்
தார்த்தலைமரவஞ்சாடிச்சம்பகஞ்சரித்தசோகு
பேர்த்தலைசிந்தியுந்திநடந்தனபெரிதினம்மா. (க0)

தேக்ககிலாரநாகஞ்சிந்துரந்திலகந்தீப
மாக்கதமதமாமற்றும்வாரிநேர்வருதலாலே
மேக்குறநிமிரக்குன்றம்வேலைவாய்மைந்தற்காண்பா
ளுக்கமீக்கொள்ளச்சேறலன்னவவ்வருவிமன்னே. (கக)

---

* இருள்-இடி.

மலைப்படியருவிநீத்தமத்தன்மாதுலன்றன்சென்னி
கலைப்படிதிரிந்துகாணிற்காயமொன்றமையாதென்னத்
தலைப்படியுடல்கொண்டேகித்தலைகண்டுதெரிப்பில்சேட்
னிலைப்படியடியுங்காண்பானிறங்குதனிகர்க்குமன்றே. (௧௨)

இறப்புவியனந்தபானுவெண்ணில்கார்லெரியுமேனும்
வறப்பிலநீரதாயமல்லிகைமலரஞ்சோதிச்
சிறப்புறுசரயுவென்னுந்திருநதிதெண்டங்கொள்ளா
வறப்பயனருத்துவாரினகலிடத்தருத்துமாக்கம். (௧௩)

சதிர்படநிமிர்ந்துதாவித்தழல்விழிப்புயங்கமெல்லாம்
விதிர்படவௌவிப்பச்சைவிண்டுவையெடுத்துவையம்
பிதிர்படவிரைந்துசுற்றிப்பெருஞ்சிறைபுடைத்துச்சேட்
னதிர்படவழன்றிடாப்புள்ளரசினிற்போயிற்றன்றே. (௧௪)

தட்வரையெறிந்திட்டாரத்தாருகனூறிவெய்ய
வடவையினெரிகட்டானவரையிறமடித்துவாரி
விடமெனவயிரவன்மாவீட்டுபுசெவ்வேள்வென்றிப்
புடைபட்விளங்குவைவேல்போலவும்போயிற்றன்றே. (௧௫)

பொன்கொழித்தெறிந்துஞ்செய்யமணிதலைபொடித்துமுத்த
முன்கொழித்திட்டுச்சந்தமுருக்குபுமுகங்கடேர்ந்துந்
தென்கொழித்தியங்கிற்றல்லாற்றிருநதிசிறப்பின்மிக்க
நன்கொழித்தைதயோவேகாநிபடநடந்துமம்மா. (௧௬)

பெருவரைத்தடங்கடத்திப்பிறங்குவில்லெயினர்யாரும்
வெருவரப்புகுந்துவெள்ளைநுரையுளைவிதிர்த்துவாய்விட்
டருவலிக்களிறுநூறியம்மருப்பெறிந்துபாய்ந்து
பொருசினத்தரியேறென்னப்புறவஞ்சென்றடைந்ததன்றே. (௧௭)

ஆசறுதளவச்செம்மலரிறபத்தைவந்தாயர்
பாசிழைபரந்தமுன்றிற்பான்முடைகழீஇவெண்சாந்தம்
பூசுபுநறியவேங்கைப்பூமலர்பரப்பிற்றன்றே
தேசுறுமுல்லையாட்குச்செய்தொழில்வரினம்மா. (௧௮)

நொவ்விற்கொண்டிளைத்தவன்னதொழிலிடைநோன்கான்முற்றுந்
தவ்விக்கொண்டெடுத்தவெல்லாந்தலைத்தலைசிதறிற்றேனுஞ்
செவ்விக்கொண்டிமிர்பொன்பூத்தகடுக்கையைச்சிறிதும்போடா
வவ்விக்கொண்டிறந்துபோகிமருதத்தைமணந்ததன்றே. (௧௯)

துடித்தெழுதொகையாநங்கப்பல்லியத்துவைப்பினோதை
பிடித்தளியிசையினென்றபெருவயலரங்கம்புக்குச்
செடித்தலைக்கரும்புமென்பூந்திரையினைவட்டிட்டோங்கி
நடித்தெதிர்நடந்ததன்றேநடனியர்தம்மின்மன்னோ. (உ0)

வளத்தனதரங்கச்செங்கைவலமிடம்போக்கியாடற்
களத்தணிவிளங்குவாவிக்காவியங்கண்கள்காட்டித்
தளத்தனகமலமென்பூந்தார்முகந்துளக்கித்தாழா
தளத்தனபுன்னையங்கானளக்கர்வாயடைந்ததன்றே. (உக)

குன்றவான்றலையவுச்சிமும்மதக்குவட்டினோடு
கன்றவான்காரான்வாரிக்கழித்தடங்கடந்தகாட்சி
துன்றுபேரியாற்றுமூரிக்கதியினிற்றுளக்கிலாது
நின்றவோதிரிந்தவாயிற்றரிப்பவோநிலையிலாத. (உஉ)

மெய்தகுஞ்சயிலமொன்றேவெறியதுவெறியதேனும்
பொய்தகுந்தளவமெங்கும்பூத்தனபுனிதவேங்கை
நொய்தில்வண்டட்டங்களெங்கும்விரிந்தனபூவைநோக்கிற்
கைதையங்கானமெங்குமலர்ந்தனகமலக்காடே. (உங)

அறைந்தனமணியும்பொன்னுமாரமுமகிலுமேகொண்
டுறைந்தனவூர்கள்குன்றக்கொன்றளிந்திடுவதுண்டே
நிறைந்தனவளத்தினாகிநிலைதளம்பாதநீர்மை
சிறந்தனபெரியோர்க்கென்கொலளிப்பதுசிறியரம்மா. (உச)

பற்பல்பொருளையெங்கும்பறித்துடன்பறித்தவெல்லா
மற்பகலாதுசிந்தித்தவர்தமக்களித்தலாலே
பொற்பில்கொடியோர்தம்மிற்போந்ததுபோந்ததேனுங்
கற்பகவனமுமாகிநடந்ததுகன்னியாறே. (உரு)

நெடுநிலத்தனந்தமாகிநிமிர்நதிமள்ளர்வெள்ளத்
தடையினுட்கிடந்துய்யானந்தவழ்ந்துசெய்நடந்துதாவி
மடுவுறத்திரிந்துமற்றும்வயின்றொறுமுலாவியாரம்
படுதிரைப்பணிலவேலைபட்டதுபட்டதன்றே. (உசா)

ஆற்றுப்படலமுற்றிற்று.

ஆக செய்யுள்-ஙசா.



# நாட்டுப்படலம்.



தெளிநயந்தருநாட்டிடைப்பலபொருட்டிருவை
யளிநயந்துசிற்சிலசொலவமைந்தனமனைத்து
மொளிநலந்தருதிகிரியானுலகமேழ்பூத்த
நளினமென்னநையன்னதுகோசலநாடே. (௧)

விரவித்தண்வயற்குவளைவண்டுழக்கிடமென்று
திரவுச்செய்திடவாகங்கடணக்குமவ்வெல்லை
நிரவித்தேனிசைத்துயின்றுசூலுளைந்தெழுநீள்சங்
கரவத்தின்றுயிலெழுவனசரோருகத்தன்னம். (௨)

கலிப்பவெள்வரால்பாய்தலுங்கட்டவிழ்கழுநீர்
சலிப்பவுள்புகுந்துழக்கியதண்ணறும்பெடைநீர்
பலிப்பவான்றிரையெறிந்திதழடைத்தலும்பதைத்துள்
ளொலிப்பவண்டுலாய்ப்புறத்திருந்திரங்குவவோடை. (௩)

வாகினீர்வளம்பொறுமையின்மடற்களம்விம்ம
லாகநோக்கினபோலிசைக்குரலரிதரவே
பாகமோடியவாளையின்பாய்ச்சலாற்கோட்டுப்
பூகராசியின்பொதிமிடறுடைப்பனபொய்கை. (௪)

துழனிநன்னதித்திரைக்கரத்தடிபடாச்சூற்சங்
கழவினைந்துகொண்டாற்றுபுதலைக்கொடுபோகி
யெழநிமிர்ந்தனவளம்பலவீன்றுடன்வளர்க்குங்
கழனிமங்கைகைக்கையடைகொடுப்பனகால்கள். (௫)

பயிலுமொண்சினைக்கரங்கொடேயணைத்துடன்பைந்தேன்
றயிலம்வாக்கிமென்றுதெனுங்காப்புறத்தரித்து
வெயிலவெண்மதிக்குழவிவண்டிசையினைவேட்டுத்
துயிலவின்மலர்த்தொட்டில்கையசைப்பனசோலை. (௬)

நெறியகட்டவிழ்மைக்குவளைப்புனனிலைவாய்ச்
செறியணிப்பதியத்திடைவளரிளஞ்சேல்கள்
பிறிவில்கொத்திழைப்பிணிக்கிடைநெடிதுகைபிழையா
தெறிதொழிற்கருவியினுழைந்தோடுவவெங்கும். (௭)

கள்ளறுதனநறுமலர்கருத்தழிகளியே
புள்ளறுதனவைகலும்போகலாவஞ்ச
முள்ளறுதனசரோருகங்கண்ணெரிந்துடையத்
துள்ளறுதனகழைபடுநித்திலத்தொகையே, (௮)

தோயளித்தொகைக்கருநறவளிப்பனசோலை
வாய்முகிற்கணிவதுவைசெய்திடுவனவனசஞ்
சாய்கழைக்கடையணைவிரித்திடுவனசங்கம்
பாய்புனற்றலைக்கெதிர்கொளவிடுப்பனபழனம். (௯)

தேசுநாறுவமென்னகைநகையொடுசேத்திற்*
காசுநாறுவநித்திலமெனநிகர்காறு
வாசுநாறுவநாவலர்நாவமுதன்னார்
தூசுநாறுவதெள்ளகிற்படுநறுந்தூமம். (௧௦)

நோற்றலும்பலன்பெறுதலுஞ்செயிரெனுநுவறீ
யாற்றலும்புகழ்விளைத்தலும்பெரியவரடியே
போற்றலும்வெளிறகத்தலும்புதியநல்விருந்தே
யேற்றலும்பதமிடுதலுமல்லதொன்றிலையே. (௧௧)

காரிரும்புறம்பணைமருப்பிணைந்தலைக்காரான்
மூரிவெம்பிடர்நுகப்*பகற்றலைக்கொளீஇமுறையா
வாரிருங்கொழுநுதியிடறிடுமணியொளியாற்
பாரினந்தரப்பரிதியோடிக்லுவபழனம். (௧௨)

மழவுகான்முதிர்பருவநாகதனொடுமெருவும்
விழவுசெய்வனவேட்கையான்மதகொலிவீக்க
முழவிற்றுகவால்வலைமணித்தீபங்கண்முதிர
வுழவுசாலணிவீதிதோறூர்ந்துலாவருமால். (௧௩)

நிலையுறுத்தடிபெயர்த்திணையேகுபுநீல
மலையுறுத்தென்விடம்புரிகடாவலம்புரியக்
குலையுறுத்தியவயலெறுமுழுங்கொழுநுதியின்
றலையுறுத்தலும்வலம்புரியிடம்புரிதருமால். (௧௪)

நெய்த்தமாலையமுத்தொடுபொன்மணிநிறைசால்
பொய்த்தமாலையர்க்கருள்செயாப்பூமகண்மார்பின்
முத்தமாலையுமுழுமணிமாலையுமுதிரும்
வித்தமாலையுமணிந்தெனவயின்றெறும்விளங்கும். (௧௫)

சேறுகாலிடுமள்ளருள்ளருள்செய்தும்
வீறுசாணில்வுகுத்தனவெங்கொலோவியக்கே
னேறுதேசிகவலையரிமணிக்கதிரிகல
நாறுநாறுகைக்கொண்டெழுகடைசியர்நகையே. (௧௬)

---

* சேத்து-உவமை. ‡ பகல்-நுகத்திலாணி.

குவளைமாக்கயத்தராபதத்தன்றியுங்குதலை
திவளமாக்களிகின்னரமிதுனமெற்செயுமாற்
கவளமாக்கனதனப்பிடிநடைக்கருங்கயற்கட்
பவளவாய்க்கடைசியர்வளமுடிநடும்பாடல். (கஎ)

தொய்யுநோவொடுதுணைமலைமுலைசுமந்துழலும்
பொய்யினேடைலைந்திடுவதேயல்லதுபுகுந்த
செய்யினைகொண்டணிமுடிநடுமொழித்தேனர்
கையினேபுகுந்துலாயதுமள்ளர்தங்கருத்தே. (கஅ)

கயற்பிறங்கினபிறங்கினகண்கள்செங்கமல
மயற்பிறங்கினபிறங்கினமுகங்களாரத்தி
னியற்பிறங்கினபிறங்கினவெண்ணகையெண்ணில்
வயற்பிறங்கினபிறங்கினமாதரார்வயினும். (கக)

அம்பொனூபுரமரற்றினவரற்றினவன்னங்
கம்புகையகத்தொலித்தனவொலித்தனகம்பு
தும்பிகோதையிற்றொனித்தனதொனித்தனசுரும்பு
பைம்பொனார்வயிற்கலித்தனகலித்தனபழனம். (உ0)

நடவுநட்டிடுநாரியர்க்கெளியவோநறுஞ்செய்
வடமதற்றிடமனக்களிவிளைத்தவம்மடவார்
சுடர்செய்கற்பலசிந்தினர்சிந்தலுந்துள்ளித்
தடமுலைத்தலைப்பங்கமிட்டெறிந்தனதடிகள். (உஉ)

கொண்டபல்வளப்பெரியவர்தம்மொடுங்கொடியார்
தண்டுகின்றலிற்றவறலாற்சார்வதுமுண்டே
யுண்டொர்மாமறுமதிக்கெனவுடைத்திடும்வதன
மண்டலங்களும்படைத்தனசேதகமறுக்கள். (உஉ)

துத்தமன்னசொல்லியர்புரியோரொருதொழிலின்
பைத்தசெவ்வியிற்பொலிவனவான்மரம்பத்து
மத்திறத்தனவையிருதொழிலுமந்நாற்றுக்
கொத்தசெவ்விகொண்டுய்வதற்கையமுமுளவோ. (உங

புரங்களாறியவுயிரெலாமயக்குவபோர்வே
ளுரங்கொள்வாளியேயாயினுமாங்கொளிரிழையார்
கரங்களாய்வனகளைகளங்கவன்முதல்கடையிற்
சரங்களாதலின்யாதினும்பெண்மையேசான்ற. (உச

இட்டமெத்தியவெய்யவரிடுக்கண்வர்திறத்தான்
முட்டவத்தலைப்பகைவராகுவரெனமுன்னோர்
பட்டுரைத்தனகாட்டுமாபானுவாற்பரியுங்
கட்டகட்டலைக்கொட்டைவான்சரோருகக்களையே. (௨௫)

கார்செயுங்குழற்கடைசியர்கட்டபூங்காவி
தார்செயுங்கழைத்தலைப்பொலிவனவவர்தம்மே
லேர்செயுந்தகையுருவிலியுயிர்கொளவிகல்வான்
போர்செயும்படிபடையெடுத்தெழுந்தனபோலும். (௨௬)

நரப்புநல்லிசையளிமுரனளினமென்கழனிப்
பரப்புண்மெல்லிளங்கால்படவசையியபைங்கூழ்
வரப்புமாமணிச்சுற்றுடைமரகதப்பலகை
நிரப்புமென்கதிர்நிரைநெறிந்திலங்குவநிகர்க்கும். (௨௭)

ஊன்கொடுத்திடும்வேற்கணார்க்கொதுங்கிடுமாம்பல்
தான்கொடுத்திடுங்குவளைநாட்கமலமுமிரண்டும்
வான்கொடுத்திடுமன்னையராறவரின்வழிபாற்
றேன்கொடுத்திடமுருகனின்வளர்ந்தனசெந்நெல். (௨௮)

தோன்றமப்பயிர்துகடபவெழுந்துசூன்முதிர்ந்திட்
டான்றமாமரகதப்பொதியவிழ்ந்தரும்வயிர
மீன்றுநெட்டிலைத்தாடொறுமீர்ஞ்சுடர்முத்தங்
கான்றுசெம்பவளக்குலைகாய்த்தனவன்றே. (௨௯)

கூறுவேழத்தினரம்பையின்வளைத்தனகுரல்க
ளூறுசெய்திடத்தொடுத்தகூன்குயமொத்தவேனும்
பாறுநெட்டிலைப்பூகமேல்வீழ்ந்தனபழுக்காய்த்
தாறுவேறிடக்கொளீஇயனதோட்டியிற்றயங்கும். (௩0)

தண்ணெனீர்மையிற்றலைவளைதடங்கதிர்தழீஇய
வண்ணனீலத்தொடரும்பவிழாய்மலர்க்குமுதம்
வண்ணமாநிலமடந்தைதன்மகமகவினைமைக்
கண்ணிநெற்றிவாய்முத்தமிட்டனவெனக்கவினும். (௩௧)

அருப்பமாகில்வருங்கதிரகம்புறமசைமீ
மருப்பெய்தாமரைமதுத்தொடாத்தூற்றுபுமறிவ
விருப்பொடேயுழுதொழிலகமறக்கலைமேலோன்
றருப்பைநீர்நிலத்தையன்மேற்றெளித்தமைதகுமால். (௩௨)

நன்னெடுங்கழைக்கூத்தர்வாதியன் றெனாணித்திங்
கன்னலந்தழைத்தலைச்சிறகுரீஇயினங்கலப்ப
பன்னருந்தரளங்கடாளுகச்செழும்பவளச்
செங்கெலங்கதிர்த்தலைதழீஇவீழ்வனசேல்கள். (௩௩)

நிறைக்குமொண்சுடரொருட்பெழச்சிவந்தனசண்ணி
னிறைக்கரஞ்சிவப்பெய்திடவெய்தினீர்க்குராலை
நறைக்கணுண்டெழீஇமள்ளரார்பிற்பதினெலாம்
யிறைக்கொடும்படையாலரிகின்றனர்பெரிதும். (௩௪)

காவில்வீழவுங்கணைத்தலைவணக்கவுநடுக்க
மேலவாகவும்விட்டிடாவெந்தொழில்வினைத்தார்
வாலிதாகவேவளர்த்தனவருமையுமறந்தார்
கோலமள்ளரிற்கொடுந்தொழிற்கொடியருமுளரோ. (௩௫)

வேறு.

வன்மையர்மள்ளரேமாதராருமத்
தன்மையரென்னிற்பெண்டன்மையென்கொலாம்
பொன்மையநூபுரம்புலம்பக்கைக்கொளீஇ
யென்மயமார்பணைத்தெடுத்தன்மேயினார். (௩௬)

இருந்தகைமள்ளராங்கவற்றையேன்றபோர்ப்
பெருங்கிரிசெய்தனர்பிறங்குமம்மலை
கரும்பகடுழக்குமுன்வெளியகாரெனு
மரும்பகடுழக்குதலருதகீரவே. (௩௭)

வழக்குறுபலன்றவம்வருந்திச்செய்துளோர
னிழக்கவேதண்டியாவெறுழிற்கொள்வபோற்
பழக்கதிர்வறிதுறப்பரியவான்பகட்
டுழக்கியங்கப்பயனொருகொண்டாரரோ. (௩௮)

கழியமாவினைபலன்மற்றுங்கைக்கொளன்
மொழியவாந்தகையதாமுயன்றவப்பல
னொழிவுறுகொண்டுபல்சகடமூர்தரும்
வழிபலால்வழியெலாமற்றொன்றில்லையே. (௩௯)

ஈட்டகன்சரோருகராகவெய்யிலான்
மீட்டகன்றிடமனம்விடாதசெய்யெலாம்
வேட்டகமதிப்பதவ்வினைவின்றென்றுதண்
கோட்டகம்பரிதியங்குடிங்கு * கூடுமே. (௪௦)

* பரிதியங்குடிங்கு- சக்கரவாகப்பறவை.

ஒத்தியாடவிர்ந்தொளைகளியின் சட்களாற்
பத்தியானைமெனட்பண்ணைவிட்டெழா
நத்தியானஞ்செயமுதலினுண்மல
ருத்தியானத்துமோருநதிகாட்டுமால். (சக)

நாட்டகவிலங்கையநாரமீதெலாஞ்
சேட்டளி * மாயையஞ்சேடிகொண்டுநீஇ
யீட்டுகமயிர்ந்தடங்குழற்சணிண்டலர்
சூட்டுவவெனச்சினைச்செம்மறாற்றமால். (சஉ)

கான்றுவார்மதுச்சொரிதருநன்காவெலா
மீன்றவாய்தழீஇமகவிரங்கல்போலொலி
யான்றவாரணத்துவாயடைப்பவம்புலி
யூன்றுகோடுழகெகாவுடையிருலரோ. (சங)

அன்னனிகடத்துயிரடுவார்சட்சிய
மின்னகுவிளக்கெனவுயிர்கண்மேல்விழப்
பன்னகமணிகளாலசைபைங்கூட்டிடு
†கின்னகவிளக்கமெத்திசையுங்கீறுமே. (சச)

வேறு.

ஈர்ந்தநுண்பாளைவாய்கின்றிழிதுளியிணர்த்தாரேறீ
வார்ந்துகேடுறந்துநெக்கவான்கனிமயங்கிச்சால்பு
பேர்ந்துதேனருவிருவிற்பிறந்துபோர்மறக்தவென்று
னேர்ந்தவாறின்னதென்றுநிறுப்பரிதெவர்க்குமாதோ. (சரு)

பச்சடைப்பதுமத்தாதிபாங்குறப்பாய்காற்பாணி
கிச்சயமருத்துச்செய்யநீலங்களுறக்கிநெக்க
வச்சிலதேரைவாய்விட்டரற்றமெல்லணையினுய
கச்சபவெரிந்மீதேறிக்கம்புகூல்கழிக்குமன்றே. (சசு)

புடைப்படுசுரிசங்கொவ்வாக்களத்தியர்நகைதம்பொற்பிற்
படைப்படுநாணந்தீர்ப்பான்பஞ்சின்மெல்லடியிற்றுக்கித்
தடைப்படவொளித்தவன்னதகைத்தரோமேதித்தாளிற்
கிடைப்படுசேற்றுலாந்நிற்கீழ்ப்படுதரளமன்றே. (சஎ)

மாதரார்நெகிழ்மிபோதையினமெனமரீஇயம்மான்பி
ணுதகாவென்னவன்னமயல்செலவளகுமாடே
மேதகாவெறுப்பவேட்பவாயினவிளையமின்னூர்
பாதசாலத்தமென்கானடைதொடர்பரிசின்மாதோ. (சஅ)

* மாயை- அன்பு. †கின்னகம்- தூக்கணங்குரீஇ.

காதியங்கிளைக்கட்செவ்வாய்க்கடைசியர்காமரம்ம*
வோதிமங்களிற்செஞ்சாந்தவளறுபாரொன்றவோடித்
தீதின்மென்சிவிறிநீர்மேற்சிந்துபுதிரிதலாலே
மேதியங்குழிவாயன்றிவெள்ளிடைப்படுக்குமன்றோ. (சகூ)

கணிப்புதுமலர்ச்செஞ்சூட்டுநுதற்குறக்கன்னிமாதர்
மணிக்கருங்கதுப்பிற்காந்தட்பிங்குசம் o வழுவவாசத்
திணித்துணைக்கொம்மையம்மலைசவுறச்சிகண்டியோடு
தணிப்பிலதூங்கலோசைதழைப்பனசாரலெங்கும். (ருo)

குலமணிவாரிச்செம்பொற்குழிதொட்டுழலங்கொள்ளும்
வலனுயர்வரிவிற்காமர்மகிழ்நர்தமலர்க்கைசேப்ப
விலவிதழ்க்கொடிச்சிநல்லாரிருங்கணீர்கழூஉநலின்ப
நலனுறுநகிலச்சாந்தத்தப்புநன்னலத்ததன்றே. (ருக)

திருமணிவயிரத்தோட்டுச்செழுங்குழைமடவார்கொங்கைப்
பெருமணிகவர்ந்தெனப்பிறங்குதிண்கரிக்கடாத்த
வருமணியலங்கறூங்கவழிவிலவருவியந்தண்
குருமணிவயிரமாலைகொள்வதுகுறிஞ்சியன்றே. (ருஉ)

சித்தமுண்காமத்தீயாற்கொப்புளம்பொடித்தசீர்போற்
குத்திரமுலைமேற்றுள்ளிகொள்ளவாய்ச்சியர்கன்றேங்கக்
கைத்தலப்பாசமீர்க்கமறுகுவகாசிருழி
மத்தெறிதயிரோவற்றேயாடவர்மனமுமாதோ. (ருங)

இளைத்தநூன்மருங்குற்செவ்வாயிடைச்சியரிருகையாரத்
தளைத்தவான்கன்றுகூயசேயொலித்தமரந்தாழக்
கிளைத்தகோவலர்முல்லைத்தார்கிண்டுவண்டுபொங்கங்கூடத்
துளைத்தவேய்ங்குழற்சாதாரிதொம்மெனத்தொனிக்குமன்றே. (ருச)

பாட்டளிமந்தவோசைசெவ்வழிப்பண்ணிற்பாட
மீட்டளத்தியர்கடாரம்பாடுபவிளரிவேண்டார்
மாட்டரும்புன்னைசெவ்விமணநறுந்தாதிற்செம்பொன்
காட்டிடவெள்ளிவெண்டோடெடுப்பனகாயற்கைதை. (ருரு)

மலையனகனவேலிவைப்பனமருதமாவின்
றலையனபொருள்களெல்லாந்திசைத்திசைதழுவித்தம்மோ
டலையனபஃறிபோதவளித்தலினவைகொண்டாசை
நிலையனவிலைமின்னரினிறைவளஞ்சுரக்குநெய்தல். (ருசு)

---

* அம்மம்- முலை. o பின்குச்சம் பிங்குசம் என்றாயது.

கொடிச்சியர்குறிஞ்சிப்பாடற்காய்ச்சியர்குரவைதூங்கு
மடிச்சிலம்பொலிக்குவேட்டுங்கடைசியரகத்தவன்ன
நடைச்செதிர்கலாபம்விம்மவளத்தியர்தம்மினொடுந்
தொடிக்கரமெறிந்துநக்குநடப்பனதோற்றத்தெங்கும். (ருஎ)

கான்குழற்குறத்திநல்லார்கணிமலர்கொள்ளுமோதைக்
கான்கிளைக்காப்புச்செய்துங்கண்டார்நின்றரற்றுமோதை.
தான்புனக்குறிஞ்சியெங்குந்தழைத்தலிற்றாழ்விற்கால
வான்கலித்தனவென்றோகைமஞ்ஞைநின்றாலுமன்றே. (ருஅ)

தங்கணற்புளினத்தோறுமுணங்குமீன்கவருஞ்சங்க
சங்கபத்திரன்னிழன்பருத்தமெல்விதானங்காட்ட
வங்கயல்கவ்வியோடியோதுங்குதோறுநீழற்
பங்கயப்பழனநாரைக்களிப்பனமுல்லைப்பந்தர். (ருகூ)

கடுப்பொதியனைவாளிக்குறத்தியர்காமர்கண்ணி
தொடுப்பமென்றுகமாறிச்சூடல்புன்றைஞ்சோரா
தெடுப்பலிக்காரநேர்கொண்டுவலையாரமேறக்
கொடுப்பநற்கன்றில்வெண்ணெய்கொள்வதோவாவின்வெண்ணெய்

நீக்குமானழைக்குமாயர்சீடிசைநிரையவூது
மூக்கமென்றளவேயாலையோதையதளவேயுந்த
வாக்குநீங்கொன்றை*மீன்பாடரவத்திங்கொன்றைமாற்றத்
தேக்குவேயெனற்காப்பின்றிறத்தவேயகற்றுமன்றே. (சுக)

நீங்கருஞ்செவ்வித்தாயநிறைவளமருதமாக்க
டாங்கொளுங்காநற்றேனிற்றழைப்பனகானற்றாழை
யாங்குழூஉமலையாற்கூயழைப்பனவுடலைவெபூம்
பாங்கொடிசாற்றலோங்கும்பசுங்கொடிமுல்லையன்றே. (சுஉ)

கயற்குலவதோமுகாநற்கழிக்கரைக்கைதைமென்னீ
றயற்கணியடலையாய்த்தாரநற்கணிகொள்ளத்தேனை
நயக்கருவிளைகொண்டொண்பூநவக்கருவிளைப்பவேட்டை
வயற்கயல்குருகெனுமாமலர்க்கயன்மருளுமாதோ. (சுங)

மீமடுத்திலங்குசோதிவெண்ணிலாமதியவட்டம்
பூமடுத்துரிஞ்சமெய்யிற்பொதுளியமதுவைவண்டு
நாமடுத்தயிலுஞ்சோலைநாட்டணியின்னதிப்பால்
யாமெடுத்துரைக்கப்பட்டதிலங்கெழினகரமன்றே. (சுச)

நாட்டுப்படலமுற்றிற்று.

ஆக செய்யுள்-க00.

* கொன்றை- ஓர்பண்.

# நகரப்படலம்.

---

வியன்படப்படைத்தலைவிதியன்றென்றபின்
மயன்படைத்திடும்வகைவகுத்துக்காட்டுவான்
பயன்படப்பஃறொழிற்பதைப்பிலாதிருந்
தயன்படைத்துளநகரயோத்தியென்பவே. (௧)

தற்பவாதாரமென்றறிந்ததம்பிரா
னற்பதாலமைத்தவிவ்வயோத்திபோலயன்
பற்பல்கானன்னகர்படைக்குமேனுந்தன்
கற்பகாலத்தினுங்காட்டற்பாலவோ. (௨)

மொய்த்தலிற்செறிவனன்பவத்தைமுன்னுணர்
மெய்த்தலைத்தகையினிந்நகரைவேட்டராப்
பைத்தலைப்புறத்துத்தன்றொழில்செய்பண்பினால்
வைத்ததிற்பெற்றதிவ்வையமாட்சியே. (௩)

இகல்படப்பொலிந்தவிவ்விருக்கைதாரகை
நகல்படத்துளங்கொளிமணிகணுறலா
வகல்படப்புதுமதியலதுமஞ்சுடர்ப்
பகல்படப்பகலையும்படைக்கப்பட்டதே. (௪)

ஆதியந்தம்படவனைத்துங்காட்டிய
வேதியன்படைப்பினின்மிகையிரண்டுள
யாதெனிலொன்றுபொன்னிலங்குமேருவா
மோதிமமற்றதிவ்வுறையுளென்பவே. (௫)

பொன்கணித்திலங்குரப்புனிதன்றன்பவ
முன்கணித்தொருசுரர்முதல்வரிந்நகர்
நன்கணித்தாகநண்ணிடாதற்கன்றிவே
றென்கணித்தெண்டிசையெண்மர்காப்பதே. (௬)

செம்பொனாலிலங்குபுதிசுழயோத்தியங்
கொம்பனாள்விளங்கியகோலங்கூறுமேற்
கம்பினறுந்துழாய்மார்பனைக்கொளாற்
கம்பொனாண்மணவினையணிகொண்டன்னதே. (௭)

வாமமார்நகர்திகர்கிளக்கின்மற்றைவா
னேமநாடேயரசிருக்கையீர்நிதித்
தாமவாருறையுளேதண்டந்தார்ப்படைக்
காமனூர்புரம்விலைக்காமவீதியே. (௮)

வெல்கலாவிஞ்ஞைசயர்சரம்விஞ்ஞையோர்
பல்கலாவிதிக்களம்பரிதிப்பானுவுஞ்
செல்கலாச்சைத்திரவிரதந்தேங்கொளு
மல்கலார்நந்தனவனமதென்பவே. (௯)

உருக்கிணைகவற்றகந்தருவரோர்மதிப்
பெருக்கினார்யாழ்த்தொழிற்றுணைப்பெண்ணலத்
தருக்கினான்முகங்கொடுதங்குந்தாமரை
யிருக்கினான்பதமதேயாகசாலையே. (௧0)

ஈண்டமெய்த்திருவொடேட்பரமுமோர்வயிற்
கூண்டவேநிசருமன்றெனினென்கூறுகேன்
காண்டகுமிமைப்பிலராகிக்காட்சியா
லாண்டையர்திரிகுவார்க்ககற்றுமையமே. (௧௧)

வேறு.

உறுமைநிறத்ததுசெறார்புரத்துயிருண்ணுமே
வறுமைதரித்தகடுடையவொலிப்பதுவன்னீரார்
முறைமைகரப்பதுவளைதிகிரிப்புறமுந்நீர்மேற்
சிறுமைவிளைப்பதுசிறையையவளைத்திடுமெண்ணீரே. (௧௨)

பசரமரர்க்கிறைமுனியவெருக்கொடுபல்கேள்சூழ்
சகரர்தொடத்தியினிடைபுதைவெற்பதுதளவாணைச்
சிகரவினப்படைகொடுசெருவைப்பயில்செய்மாபோன்
மகரவினத்தொடுசமரம்விளைப்பனவன்மீனே. (௧௩)

வாவியிடிப்பொருயோசனையுய்த்திடுமன்றேதெம்
மேவிமுடித்தறலாருமதக்கொலைவெம்மாவி
னாவிகுடித்திடுமீனமகட்டிரையைதாய்மென்
காவியொழித்துழைபாயவெடித்தெறிகல்லோலம். (௧௪)

நெடுவிசையிற்பிலமுடிவுகணித்திடுநீரூடே
வடுவதுறப்பொருசுறவெறிதற்குடையவன்சேடன்
கடுவுமிழப்பெரிததுவிருளைத்தலைகவ்வாநீர்
நடுவுகுமிழ்த்தெனநலைன்கண்முகிழ்ப்பனநன்னீலம். (௧௫)

தழைவுபடக்கொலைவினையினையுட்கொடுதாமேமெய்
குழைவுபடத்திகழ்முகமலர்பெட்பினர்கோளாமான்
முழவுபடக்குமிறிடுமுதலைக்குலமொய்ந்நீர்மேல்
விழைவுபடப்பொதிவிரிசதபத்திரவீயாலோ. (௧௬)

பிந்திசையிற்றிகழ்செக்கர்மணிச்சுடர்பெய்சோதி
கத்துபுனற்கணெழக்களியுட்கொடுகட்காணு
மெத்துகறைப்போலிபத்மமெனக்கொடுவீழாவெண்
பொய்த்தவெமக்கெனவெட்டியரற்றுவபுட்சாலம். (கஎ)

ஊனையுருக்குயிராயதனிப்பெடையூடாநீ
டுனமுறப்பெருமால்கொடுபுட்குலமேபாரா
மானமதிற்பொறியாயககத்தினைமாணீரு
டானவத்தளகாகுமெனக்கரையானுவே. (கஅ)

இணைநிலைபெற்றுளவகழிப்பிணைப்பெரிதெம்மாலே
தணிபுகறற்கரிதிதனைவளைத்துளதன்னார்தே
னளியளிமொய்த்தொலிசெழுமுமலர்த்தலைநன்காவாங்
கனைகடலைப்பெரிதளவுகணிப்பவர்கல்லாரே. (க௯)

வேறு.

பொருவோர்பொருஞானவோபிறபுகழுஞ்சுடர்பொதியுங்
கருவோடிவரடிமாமுடிகாணுமையின்மதிகு
டொருவோர்நிகர்தருமானரைவனுலியோடனவுருவா
மிருவோரையுநிகராகுவரிவண்மேயினரெல்லாம். (உ0)

மெய்த்துன்னிபழும்மைப்படுதட்டாகலியன்கொண்
டுய்த்தெண்ணிலவறையுட்படவொன்றிற்றனிகடையா
வைத்தன்னதுநாகத்தொடுவளரிங்கர்வளைஇமீ
மொய்த்தும்பரினகரத்தையுமுறைசுற்றியமதிலே. (உக)

மறநண்ணினநடுநண்ணினவுயிர்வாயிலினுலீர்
திறநண்ணினகீழ்மேலுலகெங்குந்தெரியகமே
யுறநண்ணினபுறநண்ணிலவுயர்மாமதிலிதனீள்
புறநண்ணினவகநண்ணிலபிறிதென்புகல்வதுவே. (உஉ)

சூழிக்கனகனகச்சுடர்சுடர்மாமதிலோடே
பேழிற்படுசயிலத்தொகைகளினன்னர்பிடித்தே
யாழிக்கிரியிருபாலினுமொருபாலிருளலதேற்
பாழிற்புகுமோநாவலர்நிகரென்றுசொல்பயனே. (உங)

ஆயுங்கதிர்வானந்தரராகர்*வுடல்வேகா
வோயும்படிபோயங்கழலூறக்கதிபாற
வேயுந்தனுவொருநூறடியிட்டாருயிர்கொட்டா
மாயும்படிபாயும்புகைவாணங்கொடுபாணம். (உச)

* ஆகா- கந்தருவர்கள்.

பங்கங்கொடுநுங்குந்தகைபடினன்றிமெய்படிஞெ
வெங்குங்கொலைமுங்குங்கனலிடுமொலுயிரடுமாற்
றங்கங்கொடுதங்குங்கதிர்தொகுவானவனைகுகான்
மங்கும்படிபொங்குங்கருள்வஞ்சம்பொதிநஞ்சம். (உரு)

பேரும்பொருண்மேனின்றிமைபிந்தும்படிமூந்தும்
வாரும்பொறியோடங்கடல்வாதங்கொடுகாது
மோரும்பயனேரும்பொழுதுந்தும்வினைசிந்து
மாருங்கடிதிருங்கொடிதாலம்பொதிபாலம். (உசு)

கதமிக்குரகனுநெட்டுடல்கம்பித்திடவெம்புற்
றிதமிற்றிடநிலனிற்பெரிதெழுமான்முனம்விழுமாற்
பதகத்துடரொடிவிற்றெரிபாடாயினும்வீடா
வுதகத்தினிலுருகித்தழலொழுகுங்கனன்மெழுகே. (உஎ)

புட்டேறியகட்டார்பொறிபுல்லின்விழிகல்லுந்
தெட்டேறுயிரட்டாறுமெய்சேதந்தருபூத
முட்டேறருமுட்டாள்கொலுமுறவொண்புயமறவே
விட்டேறடுகெட்டாழியவெள்ளந்தலைதள்ளும். (உஅ)

கனமேவுமிவ்வினையேபுரிகதமேபலபொருள்சூழ்
சனமேயதுதகைசால்வதுதனமேதனதுருவா
மனமேருவைவிரியாயிலெஃகாசமெடாநின்
றெனமேலுயர்தருகோபுரவெயினீணிலையினதே. (உகூ)

துதியால்வளர்பணிமாமுடிசுடருஞ்சுடருச்சி
மிதியாலடிசிவவாவெதிர்விரியுங்கருமேகக்
கதியாலிடைகருகாவுயர்ககனத்தெழுகலைதோய்
மதியான்முடிவெளிறுநிறன்மலிகிற்பனமாடம். (௩0).

செவ்விப்பொலிமாடத்தலைதிகழ்பைம்மணியொளிபோய்
வவ்விப்புதுநிலவைப்பெருமதியின்புறமலிவ
வவ்விற்பயினகரத்திருவவளம்மதியகடார்
நவ்விக்கினிதறுகுக்கொடிநல்குந்தகைபோலும். (௩க)

துப்போடிமிர்விதியின்படிதுவர்கொண்டொளிர்சுடரின்
றப்போவிலமணியின்வெயிறடைசெய்தனவிலையேன்
மைப்போதுயர்மாடத்திசைதரளம்வருகதிரோன்
கைப்போதுமுகிழ்ப்பச்சுடர்காலாதொழியாவே. (௩உ)

நலிபத்தருமிகைகொண்டெதிர்நாணுதொளிநல்கப்
பொலியத்தரும்பொருளொன்பனபுறமொன்றிசொல்பகனு
மெலியத்தருதிசையெங்கணும்விளைகின்றனவிருளை
மலிபத்தருமணிபுக்கெரிதரினன்னதுமாதோ. (௧௩)

செல்லார்மணிமாடந்திடுமகிலின்புகைதிரளா
மல்லார்கொடிவனமெங்கணுமறிவுற்றிடைதிரிய
இல்லாதகல்பெடையென்றுறநினையாவுளமறுகிப்
புல்லார்வமருந்தேகொடுபோகும்புடைபுறவம். (௧௪)

மேலாயிரமுளசாளரவிதியாணிவியன்கை
நாலாயிரமுளமாமுடிநவிலாயிரவரையே
காலாயிரமுளகாணுநர்கண்ணாயிரரல்லா
வேலாவியன்மணிமாடநல்லியல்காணியவம்மா. (௧௫)

பொன்றுஞ்சுவமணிதுஞ்சுவபுயறுஞ்சுவபுயலின்
மின்றுஞ்சுவவிதிதுஞ்சுவவெயிறுஞ்சுவவெயில்செய்
மன்றுஞ்சுவவான்மீனொடுமதிதுஞ்சுவவென்று
லென்றுஞ்சுவபுலவோர்புகழெழின்மேருவின்மாதோ. (௧௬)

வேறு.

சந்தனத்தேய்வைபூசிக்குங்குமந்தெளித்துத்தாதுக்
கொந்தலர்க்குப்பைவித்திக்குருமணிக்கோதைநாற்றி
யந்தரத்தமரர்க்கேனுமடியிடற்கரியவாகி
யிந்திரர்க்கிருக்கையாகவகமெலாமியன்றவன்றே (௧௭)

நாவியுமகிலுநாறுநறுங்குழற்றேவர்கோமான்
றேவியுந்திருவும்வேட்கும்பளிக்கரமியமுஞ்செங்கண்
காவியுங்கயலுமன்னார்காற்றடஞ்சுவடுங்கஞ்ச
வாவியுமலருமாகத்துஞ்சுவவனங்களெல்லாம். (௧௮)

வெயிலலவறியாமாடவிளங்கொளிபடியினூடு
மயிலலவனங்கணுப்பண்வான்வழிவருவாராறுந்
துயிலலவியக்கர்சேக்கையுச்சியிற்சூழ்ந்தமேக
வெயிலலவான்யாறூடுமீர்ங்கிடங்கிடங்களெல்லாம். (௧௯)

நீணிலைநிரந்தசெவ்விநிறைமரைப்பொகுட்டுவைகும்
பேணிபலரசவன்னப்பொலிவினிற்பிறங்குமென்ப
சேணொளிருடுக்கள்சூழச்செம்மணித்திரளிற்செய்த
மாணெழின்மாடத்துச்சிவதிந்தவெண்மதியமாதோ. (௨0)

உரங்கொடுதோன்றம்பானுவும்பராயிரத்துவெய்ய
சரங்கொடுதடுக்குமேனுஞ்சாத்திடலாவதுண்டோ
திரங்கொடுமாடத்திட்டவகிற்புகைவிசும்பிற்றேடிப்
புரங்கொடுபோகிச்சேப்பமண்டலம்பரக்குமன்றே. (௩௧)

நீலுறமணிசெய்மாடநிரந்தசெந்துகிற்பதாகை
யோலுறபெருக்கினண்டமொறுக்குநீடுதெதியூடே
மாலுறக்கொழுந்துகொண்டங்கெழுந்துவிண்வாவிச்செவ்வே
காலுறநிமிர்ந்தவூழிக்கனலினிற்கவினுமாதோ. (௩௨)

திருவளங்குலவுபொன்றோய்துகிற்கொடியும்பர்சேண்போ
யுருவிகந்தொளிர்தன்மேலங்கதனுதியுறுத்தலாலே
பொருவரும்வயிறுபோழ்ந்துபுட்கலாவத்தம்பொன்னஞ்
சருவழிந்தொழுகல்போலுங்காட்டுவகாட்சித்தம்மா. (௩௩)

என்றனமாடந்தோறுமினங்கொள்வெண்கொடிகள்வான
மீன்றருபதத்தினீடியேதகவிளங்குந்தோற்றம்
வான்றருகருணைத்தெய்வமாநதிவளங்கொள்வாரி
யான்றபன்முகங்கொடிம்பரணைவதுபோன்றதன்றே. (௩௪)

கார்க்குலமழுந்துமாடங்கணிப்பிலவனந்தமோர்காற்
றேர்க்கதிதடுக்குஞ்சாலைதெளிக்கலைசெவ்விசேரு
நீர்க்கதிர்படுக்குங்கோயிலுலப்பிலகோடிநீண்ட
பார்க்கமைதரிக்குநாகஞ்சுமக்கலாப்பவனமாதோ. (௩௫)

கணிக்குலமலர்ந்தவன்னகதிர்க்குலமனந்தஞ்செய
மணிக்குலமனந்தநீலவனக்குலமனந்தமோவப்
பணிக்குலமனந்தந்தாரப்பாற்குலமனந்தமார
வணிக்குலமனந்தமோரைந்தணைக்குலமனந்தமன்றே. (௩௬)

ஆர்ப்பனதிசைகளெல்லாநாடகவரங்கமல்லை
யீர்ப்பனமகரிகாநற்றோரணமிகலிவானைத்
தூர்ப்பனகடாத்தவேழச்சேவகஞ்சுற்றுமுற்றும்
பார்ப்பனதிசைகளெல்லாம்பாய்பரிப்பந்திமாதோ. (௩௭)

வேறு.

மாதின்மாமலர்ப்பீடமும்வாசமே
யூறுநீரபிடேகமுமொண்டளச்
சேறுமேகொடுசெல்வியர்வெம்முலை
வீறுதாழவிளங்குவவீதியே. (௩௮)

மன்றன்மாதர்தனமுமராட்டமு
மொன்றியொன்றிகல்போலவுகுத்தன
துன்றுகுங்குமத்தொய்யிலுமாலையு
மன்றியெங்கணுமங்நெறியின்றரோ. (௪௯)

கானரூழ்முடித்தேர்செல்கடத்தடற்
கூன்ருமதிக்கோட்டசலம்பொழி
வானருமதமுண்டுமயக்கருத்
தேனருதனசென்னெறியெங்குமே. (௫௰)

பன்னிவார்குழற்பைந்தொடியார்முலைத்
துன்னிவீழ்சுணந்தூர்த்தனவில்லையே
யுன்னிவாய்ப்பொன்கறித்திடவூறிவீழ்
கன்னியாறுகடக்கரிதாமரோ. (௫௧)

கள்ளியிட்டவகிற்குழற்கன்னியர்
தள்ளியிட்டகலன்பலதங்குவ
தெள்ளியிட்டவளைகைத்திருவெலா
மள்ளியிட்டனவன்னதகைத்தரோ. (௫௨)

மாறின்மாமுடிமன்னவர்வையமீ
தேறுபேரணிமின்னவியங்கலாற்
கூறுவீதிகடோறுங்கதிர்குழீஇச்
சேறலென்னவிளங்குந்தெருவெலாம். (௫௩)

தொடைக்குறிக்கொடுதூதுசெல்பாணர்கைக்
கிடைகிடப்பினுமெங்கணுமேகுமா
னடையருக்கிடக்குமின்னார்நிலைப்
படவுருக்கியதந்திரிப்பாணியே. (௫௪)

புக்குடன்வலனேர்ந்திளையோர்புகழ்ந்
தக்குடங்கையறைந்திடுமோர்ப்புடன்
மிக்குடம்பைவெறுத்தென்னவெம்பிநீள்
குக்குடம்பொரக்கூவொலிபொங்குமே. (௫௫)

வெங்கைவேழத்தெதிரெதிர்வீரர்பொற்
கொங்கைவேழமெதிரக்குலைவரால்
வங்கவேழம்பரப்புவிமேன்மதன்
செங்கைவேழச்செயலல்லில்லையே. (௫௬)

முட்டிவான்மறைத்துக்கதிர்முடிமே
லெட்டிநாகரினமைத்திடவேறுமான்
மட்டிலாகுதியாவிவளர்ந்தெழ
வட்டிலாயயொடாரகிலாவியே. (ருஎ)

நெரிநிரம்புசெருக்கினின்னமர்தூர்தோட்
டிரிநிரம்பியமல்லிகைகீழ்வீழ
வரிநிரம்புகண்மங்கையர்கொங்கையாற்
சரிநிரம்புவசம்பகமாலையே. (ருஅ)

கைதக்குநீண்மருப்புக்கரிதார்மலை
யொக்கநிற்பனவோர்புடையோர்புடை
யிக்குவேடனிசாருஞ்சேனைய
மிக்குவார்புனைவெம்முலைவேழமே. (ருகூ)

எண்ணிலாமுடிமன்னரெழிற்குடை
யொண்ணிலாவொருபாலொருபாலெலாந்
தண்ணிலாவியசாளரவாய்நகை
வெண்ணிலாமதிநின்றுவிளங்குமே. (சா0)

தாங்குமன்னர்தருந்திறைப்பொன்வெயி
லோங்குகின்றனவோரயலோரயல்
பாங்கிவர்ந்துபரப்பனபைம்பொனூர்
தேங்கொள்குந்தளராசித்திமிரமே. (சாக)

மல்லன்மாருதவாதொடுவாம்பரி
யொல்லைபோவனவோர்மருங்கோர்மருங்
கல்லனுண்ணிடையற்றிடுமென்றழீஇ
மெல்லவேகுவமெல்லியரீட்டமே. (சாஉ)

களிதழைத்திடுவீரர்தங்கைப்படை
யொளிதழைப்பதொர்பாகமொர்பாகநீ
டளிதழைக்குமரம்பையரன்னவர்
நளிதழைத்திடுநஞ்சுமிழூட்டமே. (சாங)

தெள்கலாமுனிச்சீற்றக்கனறரு
முள்குசாபத்துரங்கெடுமிந்திரன்
வெள்கமேயவிழுப்பொருள்யாவையுங்
கொள்பயோததியொத்ததுகூலமே. (சாச)

பாரவேருக்குமப்பொற்றைபற்றிமா
டாரவேதண்டமேறியவச்சிரர்
நீரவேபெறிசுட்டித்திருமணி
வாரமேவந்துவபாளிதவன்னமே. (௬௫)

கற்குமாமறைக்கன்னிதன்கேள்வனு
மொற்கமாகமாடூடியிருந்தென
வற்குமாறுசெயாரக்குலையரும்
பொற்றுவாலொருபாலிற்பொலியுமே. (௬௬)

தேங்குகானற்கிளிச்சிறைசேர்த்துமே
ஏங்குமாறுமவரணிபங்கயின்
வாங்குநீடலைதேய்ந்திடமான்மத
மோங்கிமீறியொரோசனைவீசுமே. (௬௭)

நிறைபுகழ்ப்பெருநாய்கர்க்குநீணிலத்
துறையிலற்பமுமின்றெனலாயினு
முறையுமிற்றமொழுக்கம்விடாதபோ
லிறைபடைத்திறக்குற்றொடையீழமே. (௬௮)

வீடில்வானுலகத்தினைவென்றுபின்
பாடின்மாநகர்யாதெனப்பல்சனங்
கூடியார்ப்பனகோநிலக்கோநகர்
கேடியார்ப்பதுபோன்றுநிரந்தவே. (௬௯)

கானமும்மலையுங்கடலும்பணைத்
தானமும்பொன்னகரமுந்தாழ்விலா
வானவெண்பெருந்தீபமுமற்றவு
மானவொண்பொருளாலவ்வணிக்கடை. (௭0)

செம்பொடேநிறச்சுண்ணஞ்செறித்திம
வம்பொடேகளபாதியனாயணிக்
கொம்பொடேயலையும்மலர்க்குப்பையின்
வம்பொடேவதியுஞ்சிலமன்றமே. (௭௧)

அறைசெய்கன்னனெரித்துறவட்டசாற்
றுறைசெய்முக்கனியோடமுதூட்டலா
னிறைசெயும்பிரிவுள்ளிலார்நெஞ்சினைச்
சிறைசெயுஞ்சிலசித்திரகூடமே. (௭௨)

சந்தபாமலர்க்காவமுஞ் சாலியுஞ்
சொந்தளாவுமிலஞ்சியுங் குன்றின
மந்தமாருதமும்பின்மரீஇவர
வந்தமாநகரெங்கணுமானவே. (எ௩)

பல்சதிப்பவப்பற்றிலர்பற்றறு
மெல்கதிக்குநகருழியெய்தினோர்
பல்சதிக்கவளம்பலதுய்க்கையாற்
செல்கதிக்கொருசிந்தனையில்லையே. (எ௪)

தூவுந்திப்பதிசெல்வமுந்தொன்மறை
யாவுஞ்சொற்றமிழுங்கொடிருக்கையான்
மாவுஞ்சித்திரவாரிசமேலவ
னாவுந்தக்கிணைநாகருமொக்குமே. (எ௫)

நகரப்படலமுற்றிற்று.

ஆக செய்யுள்-௭௫.

# அரசியற்படலம்.

இந்நகருக்கிறைவனிருங்கழந்பதுமராகமுமோர்
மின்னுருடபத்திரநீலமணியுமிளவெயிலுமிராத்
துன்னிருளுமிகலேறிப்பொருவனபோற்சுடர்தோற்ற
மன்னவர்பொன்முடிவருடச்சேந்தமதுமலர்த்தாளான். (க)

நன்றுயவுலகனைத்தும்வளம்பெருகவருளூறுங்
கன்றுதமாமேகநிலைபோலுங்கலிகீறம்
வன்றுரைகொடுமறையோர்தம்மாடேமாநீர்மை
குன்றுதசீர்பெருகநீர்பெருகுங்குடங்கையினான். (உ)

ஓராடன்மயினிலவின்றிருவென்னுமுவரோகை
காதாடுமெனத்தேனம்பெடையோடுமரீஇமடவார்
காதாடுங்கட்பேடைகவன்றூடச்செந்தேனந்
தாதாடுங்கருந்தேன்கடனியாடுநறுந்தாரான். (௩)

ஏனைமிக்குயர்நேமிவரையேறியெறிகடல்வாய்க்
கோனுமெய்க்கலிவீழநோக்கிமகிழ்குறியோடே
சேனுமுற்பனவேதத்திருப்பொருளைத்தினமுளத்தே
கானுவற்புதஞானக்களியூறிக்களிகருத்தான். (௪)

நீட்டுவிசும்பளாய்வலயநேமிவரைக்குடுமிகொளீஇப்
பூட்டுகதிர்க்குடைநீழலொருறம்விளக்கும்புகழ்நிலவா
னீட்டுமிகற்பரசிருபவிரசணியுய்த்திடுமாட்டற்
றேட்டுசமர்த்தமழுருக்கித்தருக்குகுரூஉச்சுடர்வேலான். (ரு)

தருக்குதணியிகலாழியமைச்செனாற்றவநேசம்
பெருக்குநிலைகூர்தருமமுடிசூடிப்பெரிதாய
விருக்கருகுநெறிகாட்டவெழில்வானமுகடேறிச்
செருக்குபுகழ்பூண்டரசின்றிசையேகுஞ்செங்கோலான். (சு)

மண்ணீர்மைதகவிளங்குமனுகுலத்துநனிதோற்றி
பெண்ணீர்மையுலகனைத்துமிகலாழிசெலநின்றுன்
வெண்ணீர்மைவீங்கொலிப்பாற்விரிகடலின்வந்துதித்த
தெண்ணீர்மைமதியனையான்றிலீபனெனுந்தேர்வேந்தன். (எ)

மறுக்குமேயிவன்கடைக்கண்மலர்சேக்கமன்னர்வயி
னிறுக்குமேயிகலிருள்வல்லிகற்போரினெதிரேறிச்
செறுக்குமேயிவன்கருணைச்சிந்தைசிறிதேவேறிற்
கறுக்குமேற்சிவக்குமன்னர்மலையறுங்கழலிணையே. (அ)

முறைபோதுமரசர்திருக்குறைமதிபோன்முழுதுமிறுங்
குறைபோதுங்காண்பனமெய்க்குறிகொடேயிவன்கூறு
நிறைபோகந்தருங்கருணைமாரியினனீடேனைப்
பிறைபோலுயர்ந்திடும்வேதமுனிவோர்தம்பெருந்தவமே. (கூ)

வன்னவெழிற்கொத்தபெருமாண்புடையானம்மாண்பி
னுன்னுதகைக்கொத்தகலையுணர்வுடையானவ்வுணர்விற்
சொன்னநெறிக்கொத்தபடிதொடங்குதலான்றொடங்குவன
வன்னதொழிற்கொத்தபெறலரும்பலத்தின்பேறுடையான். (க0)

புரைசெறியும்பெருஞ்சீலப்பொலிவினகலவுந்திறலா
லுரைசெறியவனுகவுமோபடாறுகியுடைமையினற்
றரைசெறியுமவர்காணற்கெம்மருங்குந்தயங்குமணிக்
கரைசெறியும்பெருவேலைக்கடுமகரக்கடல்போன்றன். (கக)

தயங்காரமணித்திகிரிதனிப்பாகனடவமுத
லியங்காழிவரையிறவாதிணையாழியியங்கியென
வுயங்காவிங்கிவன்கீழ்ப்பட்டுளசனங்கண்மனுத்தொடங்கி
வயங்காடலிவன்காறும்வரம்பிகந்தவிலையன்றே. (கஉ)

விடுப்பதுகொண்டாயிரமாமடங்குநிலன்விழுப்புனலை
யெடுப்பதுகொண்டுளசோதியிருங்கதிரோனியற்கையெனக்
கெடுப்பதுகொண்டறியாதகிளர்சனங்கட்கம்முறையே
கொடுப்பதுகொண்டிறைவிதியாற்கொள்ளுவதுமுளன்மன்னோ. ( )

நேருமிகனுற்றனைநெடுங்கவரிகவிகையெனச்
சாருமிவர்கலங்காரத்தகைசாரச்சாராவோர்
பேருதவிசெயுமன்றோவெனினிவர்க்குப்பேருதவி
சேருமனுநெறிசேருஞ்சிலைபூண்டநாணியுமே. (க௪)

ஒடுங்குவனவிலகலையினுளபலங்கண்முன்னையிற்செய்
அடங்குவனவவ்வியலையறிவிப்பபோலிவர்க்கு
நடுங்குவனநூதனெறிப்புமின்மையினணியாவை
தொடங்குவனபலத்தல்லாற்பிறிதொன்றாற்றோற்றாவே. (க௫)

அறிவின்மவுனமும்வலியிற்பொறையுமிலங்கருங்கொடையி
னெறிபகர்தலின்மையுமோர்நிலைப்படாநிலையாய
பிறிவினிதவிரோதகுணமென்பவிவைபிறியாது
செறிவினிவனுடன்றோற்றியெழுந்தன்னதிறனுமால். (க௬)

மருளினிலையரையுலகினிலைக்கவருத்துதலானு
மருளுமருஞ்சந்ததிக்காயில்லடையுமதனாலுந்
தெருளுமறமுதன்மூன்றிற்றேடாதுபின்னிரண்டு
பொருளுமுதற்பொருளொன்றின்பொருட்டடைந்தவிவற்கன்றே. )

ஈறின்மகப்பொருட்டரசர்திறைகொண்டானிவன்மகவா
றுறுபயிர்ப்பொருட்டுலகின்மழைநன்னர்நல்கினனாற்
கூறுமினையனதகைகொள்கொடையினலவர்தம்மின்
மாறியிரண்டுலகினையுமலிவித்தார்பெரிதன்றே. (க௮)

மற்றாழ்ந்தபகைவனேயெனினுநெறிமாண்புளனே
ஊற்றாழ்ந்தபிணியானுமருந்தினுளங்கொள்வானாற்
சொற்றாழ்ந்தநட்பினனேனுந்தீமைதோன்றினராப்
பற்றாழ்ந்தவிரல்போலப்பதைப்பினெடுநீக்குவனால். (க௯)

போற்றுறுதக்கணையாகபாரியெனப்புகுந்தமைபோன்
மாற்றரியமகதர்குலத்துதித்திவற்குமனையானாள்
சாற்றரியவிபுதர்குலந்தழைக்கவிரிதடங்கடல்வாய்த்
தோற்றுமருந்தனநீர்மைத்தோகைசுதக்கணையென்பாள். (௨௰)

மலிவாயபெருநதியகழாகமதிலவட்டம்
பொலிவாயபெருந்திகிரிவரைவாகப்புவியாவு
மொலிவாயவொருநகர்போலுலவுதனதாணைசெலக்
கலிவாயகளிற்றரசர்பொதுநீக்கிக்காக்குநாள். (உக)

நறைகொண்டமலர்ப்பொகுட்டுநங்கையெனநலந்திகழ்நன்
னிறைகொண்டமயில்வயிற்சேயுறலின்மைநினைந்துநினைந்
துறைகொண்டபேராசையொருங்குபரந்துளமுழுதுஞ்
சிறைகொண்டுமீதூரச்சிலபகல்போக்கினனன்றே. (உஉ)

## ஆசிரியப்பாடலமுற்றிற்று.

ஆ செய்யுள்-ககூஎ.



# குறைகூறுபடலம்.

ஆயவனெதிர்வநல்லவல்லவையடாதுசென்ற
தீயவைபடாதுதன்மச்செம்மையிற்செல்லுமோர்நாட்
பாய்கதிர்ப்படலைவட்டப்பரிதியஞ்செல்வன்பௌவந்
தூய்துமத்தோற்றிக்கீழ்பாற்றிசைமுகந்துளக்குகாலை. (க)

திருக்குன்றவிளங்குசெவ்விச்செம்பொனங்கொடியையுள்ளத்
திருக்கின்றதின்றுவென்றுவாவியுள்ளிருத்தல்செய்யாப்
பெருக்கின்றமார்பிற்கொங்கையிணைத்தலைச்சுவடுபின்ன
மருக்குன்றலில்லபோதுச்சேக்கைநின்றெழுந்தான்மன்னோ. (உ)

அம்மலர்த்தாதுமூழ்கியாரகிலாவியுண்டு
செம்மையிற்பனிதம்வேய்ந்துமான்மதந்திளைத்ததெண்ணீர்
கொய்ம்மலர்க்கோதைநல்லார்குலமணிக்கடிப்பத்தங்கட்
கைம்மலர்களினேந்தக்கண்மலர்கழீஇயினானே. (ங)

தவிர்விலதகையபற்பறண்ணதிக்கொணர்ந்ததெண்ணீர்
நவிரெறிநலத்திறாடிநன்னிலைநயத்தனுகிக்
கவிர்புரைசெக்கர்ச்சீதக்கான்றவழ்புறத்ததன்றி
யவிர்மணியகத்ததாயவம்பொன்மண்டபத்தனானான். (ச)

நென்மணிநீட்டுவாருநெடிதைந்துநிகழ்த்துவாருஞ்
சொன்முறைதுதிக்குவாருந்தருப்பைநீர்தூற்றுவாரும்
பொன்மழையேற்குவாரும்புராதனபுனிதவேத
மென்மையின்மிழற்றுவாரும்வேதியராயினாரே. (௫)

கோட்டுகிர்ப்பதுமச்செங்கைக்கொடியனார்குழங்கன்மாலை
நீட்டுகிற்பதும்வெண்கற்றைச்சாமரையிரட்டிநேச
மீட்டுகிற்பதும்பல்லாண்டங்கிசைக்குகிற்பதுமாலத்தி
காட்டுகிற்பதும்வேந்தர்க்கேகடனதாயிற்றுமாதோ. (௬)

வாய்ந்துகொண்டடையார்வைவேலணங்கினார்பிணங்கன்மாலை
வேய்ந்துகொண்டுவப்பநாளுந்திகழ்வுறுவீங்குதோளார்
காய்ந்துகொண்டுடையதானையாயிரர்காவல்சூழ்ந்தா
ராய்ந்துகொண்டுள்ளவீரரயுதரிலொருவரம்மா. (௭)

முடிப்பிணையலங்கருழமுதிர்தரமுழங்கும்வெவ்வாய்
நொடிப்பிணையிலாதுவிம்மவிசைத்தெறிநோன்கைச்சூரற்
றுடிப்பிணைத்திசைதுழாவச்செம்முகந்துளக்கிக்கன்னக்
கடிப்பிணைகவினச்சூழ்ந்தார்கஞ்சுகிமிலேச்சரெல்லாம். (௮)

கிளைக்கடல்வளைவுமாலோன்கிளருடுவளைவுநீதி
திளைக்குநர்வளைவுந்தன்மச்செழுங்கலைவளைவுஞ்செஞ்சொல்
விளைக்குநர்வளைவுந்தேனுவேட்டவர்வளைவுமேரு
வளைக்கடல்வளைவுமற்றைமாகதர்வளைவுமொக்கும். (௯)

நகல்கடிந்தெவையுந்தன்னன்கரத்தடக்கும்வெய்ய
பகல்கடிந்தொளிருஞ்சோதிப்பன்மணிப்பீடத்தங்கண்
மிகல்கடிந்துலகமெல்லாம்வெண்குடைநிழற்றும்வேந்த
ரிகல்கடிந்திலங்கும்வேலானின்னணமிருந்தகாலை. (௧௦)

இடைந்ததொன்றிலநன்னீதியிருங்கலையுணர்வினேன்று
நடந்ததொன்றுடையீர்கேண்மினற்கலையேனுமீறிக்
கடந்ததொன்றில்லையெங்குங்கலந்தெழீஇக்கடந்துமுள்ளங்
கிடந்ததொன்றென்னப்பேசுகிற்கியதொடங்கினானே. (௧௧)

தன்மையினமைந்துமுன்னர்த்தவத்திடைத்தலைநின்றின்மை
புன்மையினடாதுநாளும்பெறத்தகும்புரவிற்றாகிப்
பன்மையினடைந்தபேற்றிற்பகர்வருமைந்தற்பேறொன்
றின்மையினுயங்குகின்றேனிதுவென்னதுளத்ததன்றே. (௧௨)

கரமலர்பற்றாற்காயபற்றொடுங்கரையுங்காணா
துரமகரின்னலாழியுட்புதையூறதிரச்
சுரமலர்சுருதிவாய்மைத்தொல்லைநங்குரவன்பாத
வரமலர்புணைக்கோணேறின்வலித்ததுமுண்டுமாதோ. (கங)

பொய்விடாதிருந்தவெய்யபுன்பவக்கடலைநீக்க
மெய்விடாதியைந்தவன்னவிழுத்துணைப்புணையையானே
கைவிடாவிரிந்தவாழிநற்கரைகாணுங்காறுங்
கைவிடாதமைந்தேன்வையங்காக்குமினீர்களென்றான். (கச)

என்றலுமதிமிக்காருமெறழிலாவினையனேமைக்
குன்றெனவுரைத்தற்கென்னேகுணஞ்செய்தோமென்னக்கூறி
யின்றுணைமுனிவற்சேரினிரும்பலன்றருநாள்வீணிற்
பின்றலின்றென்னுமாற்றானம்முறைபெரிதினேர்ந்தார். (கரு)

மோடுடைக்கடாத்தவெற்புமத்தகமூன்றானூன்று
சேடுடைச்சீயவேற்றுச்செம்பொனாசனத்தைநீங்கிக்
கோடுடைக்களிநல்யானைக்கோமகன்விதியிற்கூறும்
பீடுடைப்பெரியபூசைபிதாமகற்கருளினானே. (கசு)

ஓதுக்கறவரசர்தாழ்போதொன்றொடொன்றுரிஞ்சியோங்கு
புதுக்கதிர்மகுடகோடியுக்கனபொற்றூளெல்லாம்
விதுக்கொழுந்தனையவெண்சாமரைவிசைக்காலின்வீழ்தார்
மதுக்கலந்தசும்பதாகமாமணிவாயில்புக்கான். (கஎ)

அரம்புதையயில்வேன்மன்னராகவொண்களபத்தங்கண்
குரம்புதைதரவேவாளிபாய்தருங்கொற்றமாவோன்
பரம்புதைமுலைக்கோல்யானையவளொடும்பணியினுச்சி
யுரம்புதைபரிதிநோன்றாளொண்மணித்தேரானான். (கஅ)

மின்றொன்றுபிறையும்வில்லுமுகங்கொண்டுமேகந்தாங்கிப்
பின்னின்றுவிளங்கச்செய்யசுடரொன்றுபெரியதேரி
னென்னின்றகரங்கண்மாறித்தண்ணின்றங்கிலங்கவிம்பர்ச்
சொன்னின்றநெறிச்சென்றாங்குப்போயினன்றூய்மையுள்ளோன்.

மேனகுவென்றித்தானையதனெடுந்தொடருமிக்க
கோநகாதிறுவியேகிக்குலவியவடிமாநாகர்
நூநகர்வளைப்பவாணித்துளங்கொளியுச்சிவான
மாநகர்வளைக்கும்வேலிவளநகர்நீங்கினானே. (உ0)

வேறு.

சுரிக்கடைவளைநிலாக்குடையோர்தூர்டற்
பரிக்கடைதிறத்தலும்பதுமந்தாழ்ந்துசெல்
சரிக்கடைமீண்டிராவணவெற்றுமுணை
வரிக்கடைபாண்செயுமருதமெய்தினான். (உக)

வரிப்படுசரமலர்மன்னற்காறெலாம்
விரிப்பதுங்குயில்களாண்மெல்லிதேமொழி
தெரிப்பதுபிரமரத்திரளிற்பண்ணிசை
பரிப்பதுமந்நிலப்பணியிற்றாயதே. (உஉ)

ஒளித்தகுவேலற்கண்டுற்பலத்தகண்
களித்தலுமரைமுகமலர்ந்துபட்டுளி
துளித்தலுமடியுனறயாசத்தூயமுத்
தளித்தலுமல்லதையறிகிலாததே. (உங)

அரும்பியபூளைக்கொள்பாலிகைசெய்யாகவான்
சுருங்கைநீரொலிமுழவொலியிற்றண்ணெனக்
கரும்பொடுகதலிபூகதமுங்காண்வர
விரும்புறவெங்கணும்விழவுஞ்செய்ததே. (உச)

புள்ளுலாந்தொடையினானெறிசெல்புன்கணுஞ்
கள்ளுகாதர்பரிவுடனின்றாட்டுதேன்
விள்ளுபாற்றகட்டிதழ்வனசவெள்ளியம்
வள்ளமேற்கொடுதகவேந்திமன்னுமே. (உரு)

செய்யதாமரையனஞ்சிறியபார்ப்பினை
மெய்யதாஞ்சிறைக்கொடங்கெதிர்விளங்கலா
னெய்யதாம்வேலற்குநினைந்தவப்பலங்
கையதாநிமித்தமுங்காட்டுகின்றதே. (உசா)

கிரிநிலமேலெழுபரிதிக்கேழ்கதிர்
விரிநிலமெங்கணும்விளங்குமாழியான்
றெரிநிலநான்கினுட்சிறந்தவின்னணம்
புரிநிலமிறந்துபோய்ப்புறவமெய்தினான். (உஎ)

ஐவருகுங்குமத்தாதளாயகா
றைவருசீதளச்சரிநெருக்குமாற்
பொய்வருநுண்ணிடைசாயற்பொற்பினைக்
கைவருமினமெனக்கலந்தமஞ்ஞையே. (உஅ)

அச்சுநாட்டுருளொலியகற்றவஞ்சியின்
றெச்சுநாட்டங்கொடுசூழவெய்துமாற்
கச்சுநாட்டுந்தடங்கொங்கைகைகொளா
நச்சுநாட்டம்பெருமருண்டநவ்வியே. (௨௯)

உருப்புவண்புகையெழுமுருட்டுலைப்புற
நெருப்பினின்வீழ்வபோனெறியினேருமாற்
கருப்புமென்மொழிச்செழுங்களபச்செந்தளைப்
பொருப்பினைநோக்கியநேமிப்புட்களே. (௩0)

செஞ்சுடர்க்காசினைக்கனியிற்றீண்டுபு
சஞ்சடர்த்திடமணித்தேரிற்சாயுமால்
விஞ்செழிற்கணங்குழைமென்சொற்றேனினைத்
தஞ்செவிப்படுத்தியகிள்ளைச்சாதமே. (௩௧)

அந்தரச்சிற்றிடைபொருட்டிலாங்கிவை
வந்திழைத்தருநெறிதோறுமண்டலாற்
றந்திரத்தமர்புரிசமரவேலுடை
வெந்திறற்குரிசிறன்விரும்பிநோக்கியே. (௩௨)

பைந்தொடிசாயலைநோக்கும்பார்வையைச்
சிந்தையிலிருத்திடுஞ்செவியிற்செஞ்சொலை
முந்துறவைத்திடுமூரிக்கைகளாற்
சந்தணிகொங்கையைத்தழுவநிற்குமே. (௩௩)

இன்னணமுவகைகொண்டிடதயவாரிச
மன்னியகளிபுறம்வளர்ந்துவாடிய
பொன்னிவர்வதனவம்புயமலர்த்திட
நன்னெறிகடந்தனனுமைவேலினான். (௩௪)

கூர்ந்தொளிர்நளினவான்கோட்டைக்கட்டினை
யீர்ந்திணரேந்திவந்திறைக்குந்தென்றலி
னூர்ந்தநுகூலமேசெய்யவோகையாற்
சேர்ந்தனனம்முனிதில்லத்தெல்லையே. (௩௫)

செல்வரைகரியகட்டிருவனொளொடு
நூல்வரைவிளங்குதோர்நொய்தினீங்கினான்
சால்வரையிரும்பிடியோடுந்தாழ்விலா
மால்வரையிழிந்ததோர்களிற்றின்மாட்சியான். (௩௬)

பொருள்படயாவையும்புரக்குவானிடை
யருள்படமறைபுகலறிஞர்தம்முளே
தெருள்படவொருதனிச்சிறுமையாருளத்
திருள்படவந்திவந்திறுத்ததென்பவே. (௩௭)

நிறைமுழக்கெழுமிகுபுணரிநீடொலி
யிறைமுழக்கெனநிரந்தியங்குதேன்முரன்
முறைமுழக்குடையவம்முளரியெங்கணு
மறைமுழக்கல்லதுமற்றொன்றில்லையே. (௩௮)

சீருடைச்சராசரமெவைக்குஞ்சேர்வரு
மேருடைப்பரம்பொருளுளத்ததாகவே
நேருடைப்பெருநிலைநியதியாற்றினன்
போருடைப்பொருந்திறற்புலவுவேலினன். (௩௯)

மின்குலாமொளிறுவேல்வேந்தன்சார்தலாற்
பொன்குலாந்தவவனம்புதுமைபூணலு
நன்குலாமிதுபிறநனிநடந்தவா
றென்கொலாமெனமுனியிதயத்தெண்ணினன். (௪0)

பற்றுளவாமகவிருப்பிற்பார்த்திப
னுற்றுளனீங்கெனவுணர்ச்சியூறினன்
பெற்றுளகாலமூன்றுணரும்பேரறி
வொற்றுளதாகில்வேறுரைப்பதென்கொலோ. (௪௧)

சொற்படையுழவராற்றுதிக்கப்பட்டுள
பொற்படைமாமறையுழவன்பொய்மைதீ
ரற்படைபெருந்தவத்தவரையாடன்மா
விற்படையுழவன்முன்விடுத்திட்டானரோ. (௪௨)

பிறிதலைசலனமுந்தீயும்பேருல
செறிதருவேகமுமின்றியோர்கட
னெறியுடனுளதெனநிகர்க்கும்பல்குழாத்
தறிஞருமெதிர்செலீஇயாசிகூறினர். (௪௩)

புரைபடுமுதுமறைப்பொலிவிற்பொங்கிய
நிரைபடுமவரொடுநிரந்துபோயினன்
கரைபடுவலம்புரிகடலின்வெளவிய
திரையொடும்புகுந்தெனச்சிறந்தசெய்கையான். (௪௪)

மறுத்தவிர்மதியயல்வயங்கத்தண்ணென
விறுத்தொருபகலிருந்தென்னமாதவம்
பொறுத்துயர்பன்னியோடிருந்தபூசுரன்
சிறுத்திலமலரடிசென்னிசேர்த்தினான். (௪௫)

புணையுடைத்தடங்கடற்புவியினல்லறத்
துணையுடைப்பெருநிறைத்துப்பிற்றோன்றிய
சணையுடைக்கூர்விழிக்கற்பின்சாலித
னிணையடிப்போதிணையிருகைகூப்பினான். (௪௬)

தேசிவர்கரத்தவன்சென்னியேந்துபு
சாசிலாசனமுறைநல்கிக்காவல
மாசினின்றிகிரிநேர்வலியதோவென
வாசிகூறியகடையருளிற்கூறினான். (௪௭)

வேறு.

கொற்றாழ்வைவேனிருபர்முரணறுத்திட் டுலகினிலைகொடுக்கும் வெம்போர், சுற்றாடனேமியுமொன்றுளதோநம் மனக்கோடுதுவன் றிச்சூழப், பற்றாபகலைத்திரைமீப் பரப்பிமறைக் கூலத்துட்பட்டுநா ளும், வற்றாதவருளாழிமாதவநீதருவிஞ்சைவலிதேயென்றான். ௪௮

அரிவருசெவ்வெயில்காட்டவரவிந்தம்விகசிதஞ்செய்வதுவேபோல
வெரிவருநல்லாகுதிநீசெயமாரிவான்றரலாலிமைப்பிலாதார்
பரிவருகற்பகநறியமலர்க்குளிர்நீழலிற்சிறந்தபதியேபோலத்
தெரிவருநின்றிருவருளாலரசுசெயநிலமேழுஞ்சிறந்தவன்றே. (௪௯)

வடுவின்மறைப்பெருந்தவநின்னருடினமு மறையோர்க்குவளங்கொ
படுகனககிரியதனினுதவுகினுங்குறையாதபடியேயாக [ள்சோதி
நெடுநிலவைப்பினினரசுநெறிவாரியிடையறாநேரிலேற [தன்றே.
விடுநெதியப்பெருக்கதண்டக்காப்பினென் வயின்றுயரொன்றிறுத்த

சமைவிலவெம்மிடற்றானைமகதர்கோன்றருமிந்தத்தையலாள்பா லமைநிகர வருமகவொன் றின்மையினா னகப்பெரிய வேழ்தீபத் தின், கமையுலவம் புவிமடந்தை நவமணியீன் றளிப்பவுமுட் கரந்து வீடா, வமைவிலநன் மகவாசைப் பெருக்கறாத்துயர்மீக்கொண்டழி கின்றேனே. (௫௧)

செருகுமுவகையவாழ்த்து வாய்மைதருதென்புலத்தார் சிறியே னுள்ள, முருகுதகையொடும்புனித நிலைகூடித் தருப்பிக்கு முதக மேற்றுப், பருகுதொறுமெதிர்கால நிலையுள்ளு நினைப்பெனுந்தீப் பற் றவெய்தாய்ப், பெருகுநெடிதுயிர்ப்பதனால் வெய்துறினிங் கென் யான்செய் பெற்றிதானே. (௫௨)

விண்ணாடும்விதிநாடுமேனாடுமெந்நாடும்வேண்டினல்குந்
தண்ணாடுமுனதருளின்பெருமையினைச்சிறிதேனுந்தமதுணாடி
யெண்ணாதன்னோர்தமியேனிடும்பலியையகடுநிறைந்திடவேவாரி
யுண்ணாதுவருநாட்கும்வைப்பரெனிற்கொடியேனுமுதித்துளேனோ.

பெறத்தகுமைந்தரையில்வாம்பெற்றிலனென்மாசடைந்தேன்பெரி
யயாகந், திறத்தமலமாயினேனாதலின்மின்னுக்குழுவிற்சேண்போ
ய்ச்சுற்று, முறத்தகையபெருஞ்சுடரையுட்படைத்திட்டுணர்வதனுக்
குலப்பிலாத, புறத்திருளைத் தரித்துடையபொன்னேமிவரையினையு
ம்போன்றனேனே. (௫௪)

கோளானவயக்கரடக்கலுழிமதவிருகோட்டுக்குன்றங்கன்றி, யா
னானமதிற்பிணிப்புண்டருஞ்சிறைப்பட்டதுபோலவஞ்சாரஞ்சுந், தா
ளாண்மைவலியுடையேன்றனயலாரின் மையினெமதுதலையாய்மு
ன்னை, காளானவவர்க்குதவுகடன்பிணிப்பவதனாலுண்ணலிகின்றே
னே. (௫௫)

தேக்குபுகழ்த்திறலிக்கு வாகுமரபினர்நினைவிற் றிருவையெல்லா,
மாக்குவதும் பெறற்கரியதளிப்பதுநீ யன்றோவென் னகத்துளாரப்,
பூக்குமரும்பெருந்துயரவன்றனையைநின்கருணைப் பொலிவானொய்தி
னீக்குதியென்றடல்வேந்த னிரப்பமுனிதனியோகநிலையிற் சேர்ந்
தான். (௫௬)

வேறு.

ஆரணமுதலின்மூலத்தறிபெருஞானத்தந்தக்
காரணமதனைமுற்றுங்கணித்துறக்கருத்திற்காணு
வேரணவமுதமாரிபெரிபயிர்க்கிறுக்குமாபோல்
வாரணவணிகத்தாற்குமகிழ்வினின்வகுக்கலுற்றான். (௫௭)

முற்பகலொன்றின்மன்னமுகிற்கிறைபாற்போய்த்தேவ
ருற்பவநகரினின்றுமுவந்துவள்பூப்பையுன்னு
வற்பொடுவிரைவின்மீளுமந்நெறிக்காமதேனுக்
கற்பகதருவினீழற்கவினுறக்கிடந்ததன்றே. (௫௮)

சந்ததித்தருமநோக்கித்தரிப்பிலாததனைப்போற்றும்
வந்தனைத்தொழில்செய்யாதுமறப்பொடுவழிப்பட்டாயாற்
சிந்தையிற்கனன்றந்தேனுச்சேயினாலன்றோவெம்மை
நிந்தனைப்படுத்தாவென்னுநெஞ்சுறநினைந்ததன்றே. (௫௯)

ஆதலின்மகப்பேறின்மையானதிங்கதுவுமுள்ளக்
காதலின்வருணன்வேள்விகலந்ததவ்வேள்விகாணிற்
பாதலத்துளதங்கேழெற்பஃறலைப்பாந்தட்காப்பிற்
போதலுக்கரிதுவேறோர்பொருளுளபுகறுமன்றே. (௬௦)

உகந்தவத்தேனுத்தந்தவுயர்பெருஞ்சுரபியிங்கெம்
மகந்தழைத்திடநின்றுள்ளதிதனைநீமகிழ்வின்வல்லே
யிகந்தவக்கொடியதீயவின்னலையிட்டபொல்லா
வகந்தபவுரிமையோடுமாதரித்திநிதியென்றான். (௬௧)

என்றினிதுரைக்கும்வேலையெறிபுனற்கரசன்யாக
நின்றளசுரபிதேவநிலையினுணர்ந்துபாச
வன்றுயர்ப்பகைஞன்சிந்தைசெய்தலின்வந்திட்டாங்குத்
துன்றுசெஞ்சுடர்சேண்சுற்றச்சூழுறத்தோன்றிற்றன்றே. (௬௨)

புனைந்தனதொடைப்பற்கங்கைப்புரவலன்றனிச்சென்னி
வனைந்தவம்முயற்சியேவமருதுகல்வினைகொண்டார
விளைந்தெதிரப்பமன்னரிதயவாரிசத்தினென்று
நினைந்தவப்பலன்முன்னாகநின்றதும்போன்றதன்றே. (௬௩)

மிக்கவற்புதத்துாளும்விளங்குந்திளிப்பேர்மென்மை
தொக்கவசசெய்யசோதிச்சுந்தரத்தோற்றத்தேனு
தக்கநெற்றியின்மீக்கோட்டந்தருதடஞ்சுவேதரோமஞ்
செக்கரிற்றிகழும்பிள்ளைத்திங்களிற்செவ்விசெய்ய. (௬௪)

பானலவினியவின்பப்பற்றறுப்பான்மைத்தூய
கானலமாமைச்செவ்வாய்க்கன்றுளிச்சொரிபாற்றாரை
ஞாநிலவெழுபொன்மேனித்தொடுகடலாடைத்துப்பின்
மாநிலமகளைமுந்நீராட்டுவவகையின்மான. (௬௫)

தீநிறைந்திட்டதீமைப்பரங்கிழித்தெடுக்குஞ்சீரின்
காநிமாநிலனிற்றூக்குங்கனகுரத்தெழுந்ததூளி
நீதிபால்யாகாந்தத்திலாட்டியசீரின்வென்றிச்
சோதிவேலரசன்செம்பொன்மேனியிற்சூழ்ந்துசுற்ற. (௬௬)

நோக்கருஞ்சாலைபோகநுனித்தகநெக்கவோகை
யாக்கருந்தகையகன்றையழைத்துளவந்தவோதை
தேக்கரும்பலத்தமென்மைத்தீர்த்தவான்புனலுந்தீர
நீக்கருவினைகளுக்குநீண்மறைத்தொனியினிற்க. (௬௭)

எஞ்சலின்றொளிரும்பாதலிருஞ்சுவடரவச்சென்னி
துஞ்சுமின்னுதலிற்றீட்டுந்திலகத்திற்சுடரச்குறை
மஞ்சலங்கியகைச்செவ்வேன்மன்னவிந்நிலையின்மாழ்கி
யஞ்சலென்றருளுமாபோலருகுறவணைந்ததன்றே. (௬௫)

ஆங்கினிதனைநோக்காவருண்முனிபரசமீயுட்
டாங்கியதுயரமெல்லாந்தபுதனிச்சயமிவ்வேலை
யீங்கிதுவரலாலென்னாவிரந்ததனுள்ளத்தேற
வோங்கருள்பெறுமாறெல்லாமுவந்தினிதுரைக்குமன்றே. (௬௬)

தலாதிபதருமெய்ஞ்ஞானத்தன்மையிற்றழுவிவெய்ம்மைக்
கலாதியினைமைநிகாமங்கைக்குதிசாகறல
பலாதிகவித்தியாசில்பவித்திரத்தாதிபாசப்
புலாதிகள்காத்தியாவைப்பூசனைபுரிதிநின்னாக. (௭௰)

நிற்றியாணிற்கிற்செல்லிற்சேறிநீர்துற்றினீயுந்
துற்றியாகிடக்கினக்கணிருத்திநேர்துணிந்தவேசப்
பெற்றியானுறென்றெய்தாவகையினிற்பெரிதுகாத்தி
மற்றிலாயாதியானுண்மகிழ்ந்திடுங்காறுமன்றே. (௭௧)

நின்பெருந்தேவிதானுமருச்சனைநெறியிற்செய்திங்
கென்பெருந்தானத்தெல்லையேகிமீண்டந்தவெல்லை
மன்பெருந்தேனுமீளினெதிர்செலீஇமலரிட்டேத்திப்
பின்படர்ந்தொழுகனேக்கடனெனப்பெரிதுசொன்னான். (௭௨)

இறையுறுதிருவுமுற்றிலெண்ணமுமீறுமாறிக்
குறையுறுயுவும்பெருதுவாழ்கெனவாசிகூறிக்
கறையறுபன்னசாலைகாட்டிடக்காவலானம்
மறையவனருள்கைக்கொள்ளாமாதொடுவணங்கிப்புக்கான். (௭௩)

மாருவானிலவுறுவேன்மன்னனங்குலத்தானுள்ளந்
தீருவானருள்செய்வாய்நீயென்றருட்டெய்வச்செவ்வி
யாருவான்சுரபிக்கன்பாலறைந்திடநாகலோகத்
தேருவான்போலவெய்யோனெறிதிரையுவரிசேர்ந்தான். (௭௪)

குறைகூறுபடலமுற்றிற்று.

ஆ செய்யுள்-௨௭௪.



# தேனுவந்தனப்படலம்.

ஈரிருமறைத்தொனிசெவித்துளையிறுத்தே
தாருரவுரக்குரிசிறன்றுயிலெழுப்பப்
பூருவதிசைப்புணரியிற்கதிர்கள்பூவா
வாரிருள்குடித்தொளிரருக்கனுமுதித்தான். (௧)

பிறந்தகடலுட்பிரதிமண்டலம்பிறங்க
விறந்தபுனறொட்டுமிசைநின்றொளிருமெல்லை
நிறந்தகுவிளிம்பொருதலைத்தொடநிரந்தே
திறந்தவருணன்றனதுசெப்பினைநிகர்க்கும். (௨)

அங்குமுதமுட்சிலவரிக்குலமடக்கித்
தங்கியவரிக்குலமெழுந்துதனிபோகப்
பங்கயமலர்த்திரவிபந்தினையொளித்தோர்
செங்கையைவிரித்தவொருசித்தனையுமொக்கும். (௩)

நெருங்குசுடர்மண்டலநெடுங்கதிர்புறம்போ
யொருங்குறநிமிர்ந்துததியுள்ளுறவயங்கல்
வருங்கடையுகந்தனைவலித்துவடவைத்தீக்
கருங்கடல்வயின்புடைகனன்றெரிதல்போலும். (௪)

மறுத்தவிர்மலர்க்கரவரச்சுடருதிப்பக்
கறுத்தியல்கடற்கிடைகதிர்த்தொகைகிடப்ப
நிறுத்தியாலத்தொடுநிரைத்திறுகவச்சி
ணுறுத்தியனபொற்கயிறொழுக்கியனவொக்கும். (௫)

உட்டெளிவுணர்ச்சிதவரோதவுணர்வில்லார்
தெட்டவரெனக்கதிர்திறக்குமதுபோதின்
மட்டிதழ்விரித்தவிலமாலைமலர்மைதீர்
கட்டிதழ்விரித்தவிரிகாலைமலரெல்லாம். (௬)

காதிநிலையிற்படுமளிக்கலதுகாலைப்
போதுபுகுமத்தகைபுறத்துமுளவாமே
ஓதுபருகிக்கடிசிறைக்கொடுகுறுந்தா
டாதுதழுவிக்கொடுகிரிந்ததகைசால. (௭)

அடைச்சிறியகட்சியவகத்திலணைகாமப்
பெடைப்புறம்விரித்தசிறைபெட்பொடுசுருக்காக்
கிடைத்தலைபெடுத்தயல்கெமித்தடியினோடும்
புடைச்சிறைநிமிர்த்துடல்விதிர்த்தசிலபுட்கள். (௮)

திணிப்புறவரற்றினகிளைக்கரியமாரி
கணிப்புறவரற்றினகதித்திரையவேலை
பணிப்புறவரற்றினபலப்பலபதங்கந்
தணிப்புறவரற்றினசிலச்சிலசகுந்தம். (௯)

பெருக்கியகுருத்துதிபிறங்குகலைநாத
மருக்கியவறற்றமரமாடுபுனலோதை
சுருக்கிழுதுதுய்த்தெழுசுடர்க்கடவுள்சும்மை
யிருக்கியன்மறைத்தொனியெழுந்தனவெங்கும். (௧௦)

பாசவினையைக்கடிதறுத்துநெறிபற்று
வீசனையுளத்தினிலிருத்தியதவத்தோர்
பூசனைகளிற்றருபயத்தையறல்போக்கி
யாசையுளநிற்பநனிதுய்ப்பகளியன்னம். (௧௧)

உய்வவ்வனத்துறையனத்தொகைகளொன்றோ
டொய்வுதருமற்பொடுநுகர்ந்தவைபிரித்த
னைவிடுமகத்தொகைநலிந்துகதிநல்குந்
தெய்வவறறுய்ப்பவருசெவ்வியிளநவ்வி. (௧௨)

கறுத்துளவயப்புலிகலங்குயிர்கதத்தா
லொறுத்துளநினைப்பினையொழிந்தருகுலாவ
நிறத்துளகளிப்பினொடிருந்தியளிநேரா
வெறுத்துளபலத்துளமிசைந்துளவிகங்கம். (௧௩)

பேசுவனமாகலைமுனித்தொகைபெருக்குந்
தேசுவனமாமறைகள்செப்பவருகிள்ளை
வீசுவனதேனுததிமீதுஞிமிறூதா
மூசுவனசோலைதொறுமுங்கியெழுமெங்கும். (௧௪)

ஐவகறையினித்தகைவனத்தினிலெழுந்தா
னுய்க்கறையடிப்படையொறுத்தரசராகம்
பெய்கறைநிரப்பியநிணத்தசைபிடித்தே
மொய்கறைபரித்துமுரண்முற்றுகதிர்வேலான். (௧௫)

மெத்தியபவக்கொடுவினைத்தொகையறுத்தே
முத்தியையளிக்குநதிமூழ்கியளிமூழ்க
நித்தியநடத்துநியமத்திறன்முடித்தே
சித்தியவருட்கடவுள்சேவடிநினைந்தான். (௧௬)

ஏபதனமெய்ப்பொலியிலங்கொளியிராமந்
தூயநிழலெற்றையினிரட்டிகொடுதோன்ற
மேயதருவுக்கிடைவிழ்ந்துதிகழ்வெய்யோன்
சேயவொளிசுற்றவுயர்தேனுவையடைந்தான். (௧௭)

கொங்கைநனைவம்பொடுகுலுங்கியணிகொண்டே
பொங்கமிகுபங்கமொடுபொய்யவிடைகையச்
செங்கைமலரிற்புதியசெவ்விமலர்செவ்வே
துங்கபலமின்பொடுதரும்படிதுலங்க (௧௮)

அனங்கசரவென்றியினழித்தழகையெல்லாந்
தினங்கவர்கவின்கொள்வனதெய்வதமிதென்ன
வினங்கொண்மணியின்கணவிளங்கதிரொறிக்கும்
பொனங்குழையுமன்பினொடுபொற்கொடியினுற்றாள். (௧௯)

உத்தமமறைச்சுருபமொத்தசுசாலையத்தான்
சித்தமகிழ்விற்றிருவலஞ்செய்ததனின்சீர்
மத்தகமிசைப்பனைமருப்பினடுவட்டே
மத்தமலரிட்டுறவருச்சனைபுரிந்தான். (௨௰)

சொற்சதுர்மறைப்படியளித்ததொருதூய்நா
மற்சனைதனைத்தனதகத்தினிதுகொள்ளா
வெற்செருகலர்க்குவைசுமந்துநெறியெய்தா
நற்சுரபிமுற்செலநயந்துபினடந்தார். (௨௧)

மையல்வினைபற்பலவனைத்துவருமேனு
முய்யல்விதிபர்க்குநடுவோர்தடையுமுண்டோ
பையலர்மதுக்கடலிகந்தழிபலத்தின்
செய்யலினடந்துவழிதேனதிகடந்தார். (௨௨)

பரத்தொடுவினைத்தொகையடர்த்தவர்பயன்றேர்
சுரத்தொடுதொனிக்குமறையாகவுழைதோறுந்
திரத்தொடுசெயத்துநிமிர்தம்பமிகைசிங்கா
வுரத்தொடுதிருத்தியனயூபநிலைகண்டார். (௨௩)

ஞானநெறியிற்றழுவுநற்றவர்மகஞ்செ
யூனமில்பதத்தையுணராவொருமையுந்த
வீனமில்வனச்சமிதைகொண்டினிதினெய்துங்
கானவுளிபத்துநிலைகண்டுவகைகொண்டார். (௨௪)

ஆச்சரிகுறங்கலிசொல்கொல்லியதுபாடா
நச்சரியரற்றுவனநன்கனிகொணர்ந்தே
வைச்சரிதவத்துரைவமுழ்ந்துவனகாணு
வச்சரிதையற்புதமகத்தினிலமைத்தார். (உ௫)

குறைத்தகவினைத்தொகைகுலைக்குமறைகூறு
வுறத்தகவினிற்சுசமுருக்கியவுளத்தே
யறத்திறனுரைக்குமுயர்சாரிசையினன்பா
மறைத்தொனியினைச்செவிமடுத்தளிவளர்த்தார். (உ௬)

ஆளிதமமிக்கமெயுரிஞ்சவடிவீழுந்
தூளிதழுவக்களிசுமந்துடையரேணு
நீளிதநல்வற்கலைபெடுத்தவழிநீர்சோர்
பாளிததருக்களயல்கண்டுடரிவுற்றார். (உ௭)

துங்கமதன்மங்கலசுகந்திகிரிவீசப்
பொங்கியெழுசம்பகமலர்த்துகள்புரத்தே
தங்கலினெடுஞ்சுடர்தரித்துடையசெந்தா
தங்கியினையங்குமெய்யணிந்தகுமானர். (உ௮)

ஏமமிகுமாமுனிவர்யாகவனலூறுந்
தூமமிகநீளிடையிடைச்சுலவலாலே
வாமமுகிலூடுறமறைந்தெதிர்வயங்குந்
தாமமிகுமோரிருதடஞ்சுடருமொத்தார். (உ௯)

நயங்குவனவிப்பலபொருட்களிடைசார
நயங்கொடமதன்பெனுநவட்பெரியபாசம்
வியன்கொள்பதநன்கொடுமலைத்திடலின்மெல்ல
வியங்குபசுவின்பினரியன்றினிதுபோனர். (௩0)

மெய்திசதிருஞ்சுருதியின்வழிவிடாதே
மைதவிருநூற்றருமநூலவைமலிந்தே
நைதலதுவின்றிநனிசென்றெனநடந்தே
யெய்தினரருந்தவவனப்பெரியவெல்லை. (௩௧)

செம்மலைவணங்கியுயர்தேனுவைவணங்கா
வைம்மலைபெருந்துயர்மறக்கமொடுமாறு
விம்மலினெடுந்துணையொடுந்துணிவின்மீண்டாள்
கைம்மலைபிரிந்திடுகவின்கொள்பிடியன்னாள். (௩௨)

வேறு.

கடற்படுதரளக்கோவைகவிரின்மென்கவின்கொள்சோதி
மடற்கிடைவைத்தவன்னநகைச்செவ்வாய்மஞ்ஞைனாமீள
மிடற்படுசமரவாகைமிலைச்சியவீரவேற்கை
யடற்படையரசனானலவனொருதமியனானான். (௩௩)

உறத்தருந்தூணிபார்த்திட்டுளைபசுங்கொடியின்வீக்கி
நிறத்திளங்கிளையிற்றோற்றுஞ்சுரபிபின்னெடிதுபோந்தான்
மறத்தெதிர்மார்பத்தல்லால்வானன்றடந்திகிரிமன்னர்
புறத்திடைபுகாதவாகைப்போர்க்கணைச்சிலையினானே. (௩௪)

கரியகட்பெரியகொங்கைக்கன்னியர்கவரிவீச
வரியணைப்பொலிந்துதோன்றிநிதிபலவளிப்போனானிற்
குரியபுற்கொடிகொடாவீயுலவையினேப்பியுள்ளந்
திரிவறச்சென்றான்யாரேயூழ்வினைதீர்க்ககிற்பார். (௩௫)

பெருகுமானேகினேகாப்பேதுறநிற்கினில்லா
முருகுகீராரினாராத்துயின்றிடின்முயன்றிராநெஞ்
சுருகுபேரன்பினாலேன்றதனையேதொடராவொன்றி
யருகுறாவினிதுபோனானெங்கதனிழலினம்மா. (௩௬)

அடுதிறனிருபவேழக்குழாமடுமரியேறிந்த
கடுவனம்புகுந்ததென்றேகுறையினைநவில்வான்போலப்
படுமதக்குன்றக்கோடுபடும்வழிபாய்பால்சோர்க்கு
நெடுநிலைச்சரளங்கண்ணீர்சொரிந்தெனநின்றவன்றே. (௩௭)

ஈட்டியதவத்தினானைக்கண்டுளமிரங்காவண்டு
பாட்டியல்களிப்பவந்தோபடர்ந்தனபரியக்கொம்பர்
நீட்டியதளிர்க்கைகொண்டுமறைத்தலைநினைந்துகண்ணாற்
காட்டியகுறியிற்பூத்தகருவிளைகானமெல்லாம். (௩௮)

வளிபரிற்சேர்ந்துசெம்பொனேற்றுளவறுமைப்பால
வெளியரிற்பொலிந்தவோகோங்கல்லிநென்மணிகளேந்திக்
களிபரிச்சுருதியோதிநிற்றலாற்கடன்செய்வேத
வளியரிற்சிறந்தவேந்தற்கம்மலர்க்காந்தளம்மா. (௩௯)

இழைக்கமரிடையினார்தமிணைமுலைமுகுளமேந்தித்
தழைப்புறங்கோங்குகாட்டத்தகாதெனத்தவத்தினாற்குப்
பிழைத்தனகோங்கென்றெண்ணிப்பிறங்கிதழ்க்கனிகடம்மைக்
குழைக்கிடைசரந்துவைத்தகுறுந்தழைக்கோவையெல்லாம். (௪0)

சொற்பிழைகிளிகள்கொள்ளத்துணைச்சிறைத்தும்பிபம்பி
யற்பிழையலங்கற்கோதைகணிகளாலமைந்துகாட்டும்
பிற்பிழைகளவிற்காகவெண்ணகைபெரிதுகாட்டு
முற்பிழைமுகையகானமுல்லைமேன்முடிந்ததன்றே. (சக)

வகைத்திறப்பகையென்றொன்றுமுணர்ந்திடாவகைநன்னோர்செய்
தகைத்திறற்குரிசில்செல்லப்பிறிதொன்றுசார்வதுண்டோ
மிகைத்திறமாறொன்றின்றித்திரிந்தனவிலங்குந்தம்மிற்
பகைத்திறமுணராதோர்கொம்பிருந்தனபறவைதாமும். (சஉ)

நண்ணலாற்றமியோனுற்றநன்னெறியுணராவாணி
னெண்ணலாற்பிறிதுமுண்டேயிரும்பினுங்கொடியதென்னக்
கண்ணலாற்கருங்கண்சேர்ந்துகடுவனங்கடத்தற்காக
வண்ணலாற்களியதாகவர்ந்திவந்திறுத்ததன்றே. (சங)

கந்தரநிமிர்த்துவீடாகதறியங்காந்துபல்சான்
முந்துறமிதித்துமூரிச்சிறையினைநாற்றிமுன்பே
டுந்தியபார்ப்பினோடுவலைத்துறவுலாயமஞ்ஞை
பந்தியிற்பொலிந்தசேக்கைப்பழுமரப்பாங்கரெல்லாம். (சச)

வெயிற்றருமுருப்பநீங்கிமேயநீர்க்குழிநின்றேறிப்
பயிற்றிளங்குருளைவீழாவெழாநெறிபையப்பைய
வயிற்றுறப்பெட்டைபாதலைப்பிறமயங்குமேன
மெயிற்றிளநிலவுமெய்யாலெல்லியுங்காட்டுமெங்கும். (சரு)

பற்றுரவயின்கட்டோற்றுமகவையாப்பறுத்துப்பாங்க
ரூற்றுறவளத்துமந்தியுடன்சினைமுசுக்களொன்ற
விற்றிறற்குரிசில்செல்லவடங்கியவினைமாச்சோக
முற்றுறக்கூறுமாபோன்முழைதொறுமுழங்குமன்னே. (சசு)

காய்ந்தெறிகொடுமைத்தீயோர்தம்மினெற்கதறிக்கங்கு
லாய்ந்தறிபெரியோர்சிந்தையமைதியினமரும்புட்கள்
வாய்ந்தெறிகுடம்பைப்பார்ப்பைநோக்குபுமகிழாமாடே
யேய்ந்துறுபேடையோடுமிருஞ்சினையிருந்தமாதோ. (சஎ)

மாணிழைக்கொடியனார்தம்வடிவெனவயங்குகாணிற்
சேணினிற்றங்குமேனுந்தெய்வவான்சிந்தையோடிப்
பேணியற்கலைதேர்வேதமுனிவரன்பெரியயாக
நீணிலைச்செல்லந்தேனுநெறியிடைமீண்டதன்றே. (சஅ)

மைபட்டகயல்கண்வேந்தன்மேனியின்வளத்தார்சிந்துந்
தூப்பாற்றேனுந்தூளுந்துவன்றியதொய்பற்றுஞ்சக்
கொய்பலர்க்குவையுமற்றுஞ்சோல்வளைக்காந்தளோரிந்
தையன்முற்றோற்றவேள்வித்தலைவனைஞ்சார்ந்ததன்றே. (௪௯)

புலம்படப்பெரிதுபோற்றிமும்முறைபுரிவருது
வலம்படச்சூழ்ந்துபூசைமாட்சியின்வழங்கிமற்றே
புலம்படத்திரண்டதோளான்றன்னயலொல்கிநின்று
டிலம்படக்கவினுந்துண்டத்தரிவையர்திலகமன்னாள். (௫0)

தடந்தருசுரைகளேறித்தரிட்பில்பாற்றுரைசிந்தக்
குடந்தருமடிபூரிப்பவல்லேபோங்குளிர்பொற்றேனுக்
சடந்தனினின்றுபூசைகொண்டதுநோக்கிக்கன்றுந்
இடந்தனதகத்துக்கொண்டான்றீர்க்கருஞ்சிறுமைதீர்வான். (௫௧)

வான்றருஞ்சுரபியாகநிலைபுகவரத்தின்மிக்காய்த்
தோன்றியமுனிவன்பாதஞ்சென்னிமீச்சூடித்தோமில்
கோன்றனபன்னசாலைகூடிநீணியதிமுற்றி
யான்றனதருகுசார்ந்தானருக்கனுமத்தம்புக்கான். (௫௨)

மருள்சுமந்தாலோன்வைகவதனவாணிலவுபோர்ப்பச்
சுருள்சுமந்தொளிருஞ்செவ்விச்சுரும்புசூழ்தொங்கற்கோதை
யிருள்சுமந்தெரிசெஞ்சோதிவிளக்கமதேந்திநெஞ்சிற்
றெருள்சுமந்தங்கணுற்றாள்சேயரிக்கருங்கண்ணாளே. (௫௩)

அபனகுவிளக்கம்வைத்திட்டம்மலர்றாய்நின்றேத்திப்
புரனவிறடக்கையான்றன்பாங்கரிற்பொலிந்தாளன்றோ
கயினிநெறியவாசக்கட்டலைக்கமழ்தாதீன்ற
வியனறுமலரஞ்சேக்கைத்துயின்றதவ்வின்பத்தேனு. (௫௪)

இயன்றதுதயிலமாடேயிருநிலத்திறைவனின்பாற்
றுயின்றனனவனிமாதைத்தோய்ந்தனனென்னத்தோகை
முயன்றுறவூடுமாபோற்றுயின்றனளயலேமூடப்
பயின்றிடுமெல்லிநீக்கியுதித்ததுபரிதிப்பானு. (௫௫)

நடைத்தினமாண்பினேகியனத்தினிமையிற்காத்திட்
டுடைத்திறமொன்றுபோலவிம்முறையொழுகுநாளி
னிடைத்திறமொன்றுமேற்கொளிருபஃதகன்றுசென்ற
கடைத்தினமரசனன்புகாணியகருதிற்றன்றே. (௫௬)

கண்ணியபலத்தநெஞ்சங்கருதிபமுடிப்பதாக
நுண்ணியவறிவுப்பாலவடதிசைநோக்கிப்போகா
மண்ணியல்வளாகங்காப்போன்மருங்ககலாதுகாப்பத்
திண்ணியவிமையச்சாரல்சேர்ந்ததத்தெய்வத்தேனு. (௫௭)

## வேறு.

சேடுபோகாமலர்த்தெய்வத்தாருநீ
ளேடுபோதாதிழிநறவிறைக்குமான்
றோடுபோமுகிலுடுத்துயர்ந்துவானுல
கூடுபோமுயர்குவட்டுச்சியெங்குமே. (௫௮)

ஆரணத்தவர்புகழலரிவேந்தனும்
பூரணப்பொன்னடிதாழ்ந்துபோதலாற்
றாரணிக்கிரிக்கெலாந்தலைமைகொண்டது
காரணக்குறிகொடுங்காட்டுகின்றதே. (௫௯)

கெழுமியசந்திவந்தனையுங்கீழ்விழுங்
கழுமியவருவிமுந்நூலுங்கன்முழைக்
குழுமியசுருதியுங்கொள்ளலான்மறை
விழுமியர்நிலைமையும்விளக்கப்பட்டதே. (௬0)

களிப்படுபுல்லரிற்கனகந்தானென
வெளிப்படுமேருவின்வெளிறுசெய்யுமோ
துளிப்படுபனிபுறஞ்சூழ்ந்திப்பொன்மலை
யளிப்படுபெரியரினமைந்துதோற்றுமே. (௬௧)

நீளமாபனிகொடுபுதைத்துநீடயன்
காளமாமுகிலிடைசூழ்ந்துங்காக்குவான்
பாளமாபசும்பொனிப்பதலைக்கல்லவோ
வாளமாகிரிபுறம்வளைத்துவைத்ததே. (௬௨)

வாரியல்பனிப்பரப்பசலமன்னனைச்
சூரியன்வெங்கதிர்தொடாதுகாக்குவான்
சீரியசெயற்பரராசசேகர
வாரியன்றடம்புகழ்சூழ்ந்ததன்னதே. (௬௩)

மாடெலாமுழையின்மாமணிகள்வாள்விட
லீடலாற்பழம்பகைநினைந்தநீள்பனி
மூடலாலெழுகதிர்க்கடவுண்மொய்ம்பின்மே
லோடலாதம்முழையொதுங்கியொக்குமே. (௬௪)

அயர்மூலக்கனகிரிமகளிரஞ்சன
வியர்மதர்க்கண்ணிணைவிரகின்மேலவர்
மயர்படச்சூரரமகளிர்சந்தனத்
துயர்மரப்பொதும்பர்புக்கொளியிருப்பரால். (௬௫)

வெற்பகத்தணங்கினார்விரைவினாடிய
பொற்பகப்பந்துகையகன்றுபோதர
வற்பகத்தங்கவர்கொழுநராங்கயற்
கற்பகப்பொதும்பரினோடிக்காண்பரால். (௬௬)

இன்னெறிபேரெழிலியக்கர்மெல்லியர்
சென்னெறித்தாமரையடியிற்சேதகம்
புன்னெறிப்பனித்திரள்புக்கபுக்கதோர்
கன்னெறிப்பாடெலாங்கவர்ந்துகொள்ளுமே. (௬௭)

உம்பரினோங்குமவ்வரையினுச்சிதோய்
விம்பவெண்மதிவயின்விளங்குநவ்வியை
வெம்புலிநோக்குபுவெகுண்டுபாய்தர
வம்புடைப்பொதும்பரின்மறைந்துபார்க்குமே. (௬௮)

நோக்கிவண்குவளைகுற்றிதனுடக்கொடு
காக்குமென்றுணருநீஇக்கரிந்தகைம்மலர்
சேக்கவொண்சம்பகம்பறிக்குஞ்செல்வியர்
நீக்குமெல்லிழைச்சுடரெங்குநீளுமே. (௬௯)

பொன்னிதழ்விரிப்பனகணிகள்பொன்மணி
மின்னிதழவிழ்ப்பனபூவைவெள்ளிய
தென்னிதழ்நெகிழ்ப்பனநாகஞ்செம்மணிக்
கொன்னிதழ்குலைப்பனசெயலைக்கூடலே. (௭௰)

வெருப்பிடித்தூறுருவண்ணமிக்கவா
னுருப்பிடித்தயல்செலாவொருவன்பார்வையை
விருப்பிடித்ததனிடைவிடாதிவ்வெற்பிடைத்
திருப்பிடித்தொருகணஞ்சிறைசெய்திட்டதே. (௭௧)

ஆயபோததிர்திரைக்கங்கையாற்றயன்
மேயதூயிளம்புதலதனைமெல்லவே
நேயமேபெரிதெழக்கறித்துநெஞ்சுறப்
போயதோர்பொறையகற்புழையினென்பவே. (௭௨)

மதக்கரிமத்தகம்வகிர்ந்துமாறரு
திதக்கதிர்கித்திலமெடுக்கும்வாளுகிர்க்
கதக்கலிச்சீயமொன்றெழுந்துகன்றிய
விதக்கதியொடுமதன்மெய்யிற்பாய்ந்ததே. (எக)

கட்புலம்பிறிதுறுகாவலான்செவிக்
குட்புகுந்துளத்திடையுருமினென்றிடப்
பெட்புறுமுடலினிற்பிரிதல்போலுயிர்
கொட்புறுபடரினுளறிவீழ்ந்ததே. (எச)

துடிக்குமாகிலைகொடுசுடர்க்கணைக்குமு
னிடிக்குமாசிலையொடுமிடங்கைமுன்செல
வடிக்குமாகலைதெரிவலங்கைவான்கணை
பிடிக்குமாவாகுபேதப்பின்சென்றிட்டதே. (எரு)

வெற்றிசெய்தனுவொடும்விரைந்துவீரனு
மெற்றகமுன்புகுர்திடங்கையென்செயும்
பொற்றொழிற்றூணிவாய்ப்பகழிப்புங்கமேற்
பற்றியவக்கரம்பந்தமாயதே. (சுஎ)

செருப்படலின்மையிற்றிருகித்தன்னையே
யருப்படவெழுந்தெழுந்தகத்தவெஞ்சின
நெருப்படநின்றனனிருமித்தங்கிலை
யுருப்படவெழுதியவோவமொத்தரோ. (எஎ)

முற்பதந்தடமுகமொய்ப்பமூரிய
பிற்பதங்கறுவிவெண்பிடிப்பவான்மிசைப்
பொற்பொடுமாறறப்பொலிந்தகோளரி
சொற்பயன்வரவெதிர்சொல்லன்மேயதே. (எஎ)

தெவ்வடுசிலையினைத்திருகியூன்றினை
வவ்வவான்பகழியின்வலக்கைகீட்டினை
வெவ்வியநின்வலிவிறல்விடாதுபோ
யெவ்வயினிகழ்ந்தனையாரையேற்றதே. (எகூ)

எய்வதின்றுயினுமெமதுமேலிடர்
செய்வதின்றறுவலிவென்றித்தேசலோர்
தெய்வதம்பொரினுநீடிறலெற்சேர்தர
னொய்தன்மேனியேநோக்கிநிற்கு மே. (அ0)

மேக்குயர்பாதலம்வேரினோடிறத்
தாக்குகாற்பெருவலிசையத்தாகுமோ
சாக்குமிவ்வானின்மேற்சரந்தசிந்தையை
நீக்குதிபெருதிநெறியினீங்கியே. (அக)

செய்பனநெறியுளாய்தெரிக்கினென்னைநீ
வெய்யவன்கொடுந்தொழில்விலங்கென்றெண்ணலை
பொய்ப்பனபுன்றொழினூற்கிலாநெறித்
துய்ப்பனகணத்தினிற்றுன்றினேனரோ. (அஉ)

அலைப்படுகருணையென்றுரைதயேவட
கலைப்படுபொருளெலாமுணர்ந்தகாஞ்சன
மலைப்படுசிலையினல்வடர்குபேரரு
ணிலைப்படுகுரிசில்பேர்நிகுப்பனென்பவே. (அங)

திருந்துவெண்புகழுலகெங்குஞ்சென்றட
விருத்துகும்போதரனென்னும்பேரினேன்
பருத்துவன்முதலினோர்வணங்குமன்றுறை
திருத்தனதேவலேநிலையையின்னதே. (அச)

வெவ்வுருவாகியவேழக்கன்றியு
நொய்வுறவாகுமெவ்வுயிர்க்குநோய்துளம்
லவ்வுருவழித்திடும்வலியசிங்கமா
மிவ்வுருவெடுத்தனையியம்பக்கேட்டியால். (அரு)

உரியவாமகவினின்முண்டத்துற்றசண்
ணெரியினொடொறுமெண்ணப்பட்டது
கரிபமாறுயின்றுளதருவின்காட்சிய
தரியபான்முசன்றருதருவினென்றது. (அசா)

மணிக்கவினுமையவள்கொங்கைமாமய
வணிக்குடத்தமுதமேயருத்தலார்ந்தது
கணிப்பருந்தேவராற்காண்டற்கொத்தது
தணிப்பில்சீருடையதித்தேவதாருவே. (அஎ)

புன்றொழிற்புலிபொருபொருதபோர்மதக்
குன்றரிஞ்சலினிதுவடுவிற்கூடலாற்
கன்றினன்கண்ணுதற்கடவுள்பாகமே
பொன்றியெவ்வுலகமுமுதவுங்கன்னியே. (அஅ)

மிகுதற்கொத்துளவலிதடைப்பட்டுளேன்விளம்ப
னகுதற்கொத்துளதேனுநீசிந்தையுணயத்தாற்
புகுதற்கொத்துளவறிவுனையாதலிற்புகல்கே
ணுகுதப்பில்லதோருரையினையெனவிஃதுரைக்கும். (௯௭)

வானைவிட்டிடாமகேசனதாணையும்வழுவா
கானைவிட்டிடாத்தவத்தினன்யாகமுங்கலையா
வானைவிட்டென்னுடலையேயருந்துதியென்றான்
றேனைவிட்டடிகழுவுதாருரத்தடந்திறலோன். (௯௮)

வெயிற்குடைந்துகந்தரத்துறைகருவரிவெளிய
வெயிற்றெழும்புதுநிலவினாலிரிதரநகையா
வியற்செழுங்கலைநுண்ணறிவின்னதோவென்னாக்
கயிற்பெருங்கதிர்ப்பூணினாற்கடலரிகழறும். (௯௯)

கந்தவேணிகரிளமையுநறுமலர்க்கணைக்கை
யந்தவேள்பரவழகுமுற்றுடையைநீடயனார்
தந்தபாருலகளிப்பதைநீத்திவணடந்த
சிந்தையேதுகொனீகொலோகற்றறிசிறியோன். (௧௦௦)

இறத்தனீசெயினுய்யுமீதொன்றுமேனையவாம்
பிறத்தலாகியவுயிரெலாந்துயருறல்பெரிதா
லறத்துநேரிஃதாய்ந்துணர்பெரிதமராடு
மறத்துமாருயிரடாதுவென்கண்டிடும்வழக்கோய். (௧௦௧)

ஊழினன்பசுவொன்றழமுனிகதத்துருத்தீ
யாழிசூழுலகேழையுமடுமெனவஞ்சே
லேழிரேழிருகோடியானுதவுதியிசையால்
வாழிமாசறவுயர்திசூழ்ந்தளப்பரும்வரத்தோய். (௧௦௨)

திரத்துவிண்ணவர்நகரினுஞ்சிறந்தொருதிருவின்
வரத்துயர்ந்திடுநகருளாய்வழக்கினானின்னை
யிரத்தும்பல்லுயிர்க்கிரங்கிநின்புரத்தினையினிதே
புரத்தலேகடனென்றிடவென்றியம்புகழோன். (௧௦௩)

வெடித்தடங்கயற்கண்ணியர்மைந்தர்வேதியர்கோ
நெடிற்கொடுங்கொலைசூழ்ந்திடநீக்கருந்தீதிற்
படற்றனன்மையிற்காப்பதுகாத்ததுபலியா
விடற்றனவினைவிடுத்திடாவேந்தமோர்வேர்தோ. (௧௦௪)

முன்னையானமகுலந்துக்குமுதல்வனோர்மைந்தன்
றன்னையானிளங்கன்றினுக்களித்தனன்றலைநாட்
பின்னையானதுபிழைப்பதோபிறங்குசீரானிற்
கென்னையானளித்திடுவதுமெங்குலத்தியல்பால். (கOரு)

கேட்டியிப்பசுவப்பெருஞ்சுரபியேகேட்டை
யீட்டிருங்கொலைதப்படாதென்னினுமியல்பால்
வீட்டரும்பெருவலியினார்புரத்திடைவெந்தீ
யூட்டினானென்றனதாணைக்குந்தடையிடையுளதோ. (கOசு)

கைப்புரந்தருமுனதகட்டடங்கியுங்கனலா
திப்பெருந்துயரானுமுய்ந்திடுமெனதிசையா
மெய்ப்புரந்தனிவிளங்குமாசெய்துமேல்விளியிப்
பொய்ப்புரந்தனையயிறிநீயென்றுபின்புகலும். (கOஎ)

தாக்குபேருவகைக்கடறமுவுசற்சங்கம்
வாக்கினான்மொழியெதிர்சொலவருவதேவழக்கா
ணீக்கலாதிவணெம்மொடுமினிதுநேர்பட்ட
போக்கலாதபேரளியைநீபிரிப்பதும்புகழோ. (கOஅ)

அரசகோளரியின்னணமிரப்பநின்றரியே
றுரைசெயாதொளிர்தன்றலைசாய்த்தலுமுயர்தார்
வரைசெய்வாகுபந்தந்தனிதீர்ந்ததுவரிவிற்
றரைசெயாவெதிர்வீழ்ந்தனனுவகையின்றலையான். (கOகூ)

வேறு.

ஆழ்தலைக்கருதுமாவிட்டரியதன்மெய்யிலாளி
வீழ்தலைக்கருதினான்றன்புறத்திடைவீழாநின்ற
தாழ்தலைக்கருதாமேலோர்தடக்கையால்விசும்பினின்று
வாழ்தலைக்கருதிவீழ்த்தகற்பகமலர்ப்பூமாரி. (ககO)

தவப்பயத்துற்றதோர்நந்தலைக்கன்றுவருதிதாழ்வி
லவப்பயத்துறுதசெல்வத்தரும்பொருள்வருதியெண்ணி
னவப்பயத்தளிக்குந்தெய்வநன்மணிவருதியென்னப்
பவப்பயத்தரியதேனுப்பரிந்தினிதழைத்ததன்றே. (ககக)

துடித்தனனெழுந்துமாற்றநல்கியதுணிவாற்றன்னைப்
பிடித்தயின்றிடுவான்வேட்டபெரும்பசிச்சிங்கங்காணான்
செடிச்சிறுசெம்பொற்கிண்ணந்தேக்குபாலூட்டச்சேயை
யடித்தினிதிரங்கிநின்றவன்னையினுவைக்கண்டான். (ககஉ)

கண்பிரித்தியன்றமாயக்காட்சியுமெனதேவேறென்
றெண்பிரித்துணரேலென்றலென்பெறற்கிசைந்தாயென்ன
நண்பிரித்திடாததேனுநவிறலுங்கலியையாளு
மண்பிரித்தளிக்குமாறோர்மைந்தனைத்தருதியென்றான். (ககங)

காய்ப்புறவுள்ளத்துள்ளேகனல்படக்கிடந்தசிந்தை
தீப்புறவெனதுதீம்பாறுய்க்குதிநிருபவென்னை
வேய்ப்புறநின்றகன்றுநுகர்ந்தபினியைந்துகொண்ட
வாய்ப்புறும்யாகசேடம்வாங்குபுநுகர்வனென்றான். (ககச)

புறநிலைபுகாதநீதிபுல்லுபுபொலிந்துபொய்யா
வறநிலைப்பாலதாயவம்மொழிக்கமைந்துபோகா
விறனிலைக்கதிர்வேற்கண்ணிசூசனைகொண்டேவுதத்
திறநிலைத்தகையவேள்விச்சாலைவாய்ச்சேர்ந்ததன்றே. (ககரு)

மறிபெற்றநிறத்ததேனுவருளினைமுறையிற்போற்றி
நெறிபெற்றவாற்றையெல்லாநெடுந்தவற்குரைத்தலோடுங்
குறிபெற்றமுறையிற்றீம்பால்கொள்கெனக்கொடுத்தானுண்டு
வெறிபெற்றதாரினானும்விஞ்செழிற்சாலைமீண்டான். (ககசு)

ஒலித்தரியொன்றுகொள்ளாவுயச்செய்தோனெமையேல்வெய்தின்
மெலித்தெதிர்விலக்குமஞ்சாவெளிப்படினென்னவோராப்
பலித்தொளிர்குருதிச்செங்கட்பகல்செய்வாளரியுமேக்கிற்
கலித்தெழுபேழ்வாயத்திபிடித்துடன்சரந்ததன்றே. (ககஎ)

குறித்திடிபிணையவெய்யகோளரிகுருகிறேறும்
பறித்தெதிருடுக்கவென்னுநிணமிசைப்பரந்துபாயக்
கறித்தெழிமருப்பொன்றேறுங்காருடற்குருதிமீது
தெறித்துவிண்பரந்தல்போலுஞ்செக்கரும்பிறையுமம்மா. (ககஅ)

அவ்வரிகுணக்குவேலைபுகேலெனவாற்றியஞ்சுங்
கவ்வையினொதுங்கிவெற்பிற்கதிர்த்தலைசிறிதுநீட்ட
வொவ்வியவதன்கட்டன்மையுணர்ந்தனன்போலநோக்கி
வெவ்வழின்முனிபாற்புக்கானெழுந்தபேருவகையானே. (ககக)

எழுப்பெருமுதலையுள்ளத்திருத்தியமுனிவன்வேத
விழுத்தகையாசியோடும்விடைகொடுத்தருளாநிற்ப
வழுத்தருமுனியையவேள்வியதனைநல்லாவையன்பால்
வழுத்துமாமலிவினோடும்வலம்வந்துவணங்கிமீண்டான். (கஉ0)

பிரித்தன்னபிள்ளைத்திங்கடனையொருபெரியதிங்க
ளரித்தனநுதலியோடுந்தவவனத்தெல்லைநீங்கித்
தெரித்தனவிதியிற்சொற்றமயன்மயத்திரட்டையெல்லாம்
விரித்தன்னவினையின்றோற்றவிளங்கொளித்தேரனானன். (௧௨௧)

நீட்டியதிசையைமூடுநெடுமூகிற்படலமெல்லா
மோட்டியவாகாயத்துக்கொப்பனைக்குரியகோலங்
காட்டியதுதியைத்திங்கள்கண்டெனநகரோர்காண
வீட்டியதிருவினான்றவிலங்கொளிநகரஞ்சேர்ந்தான். (௧௨௨)

தேனுவந்தனப்படலமுற்றிற்று.

ஆக செய்யுள்-௩௬௩.

---

# இரகுவுற்பத்திப்படலம்.

நளிகூரும்பொன்மவுலிநரபாலனென்னிலா
வொளிகூருமதிவதனியொடுமின்பாலுறையுநா
ளளிகூருமவள்வயினேயாயதாலன்பறாக்
களிகூருநல்லறத்தின்வினைவாயகருப்பமே. (௧)

தொடைவார்மென்மலர்க்கோதைதுவளுண்ணூலிடையொடே
படைபாய்நவ்வியினையமெய்சோரப்பரியுமாற்
புடைவார்மாமலைசுமந்துதள்ளாடிப்பொறுக்கலா
திடைவார்மேற்சோர்வேறினெங்ஙனேபொறுப்பதே. (௨)

நெருங்காவிநுகர்கலையினெருக்கினயர்நிலையதா
மருங்காவிபெற்றபலன்மற்றோவிம்மலர்க்கலா
தொருங்காவியழகழிந்தகருங்காவியொல்லைபோற்
கருங்காவியெனக்கடலங்கண்பசலைபூத்தவே. (௩)

கரவாதுவெண்சோதிக்கவினேறக்கண்டோறும்
வரவாகந்தனின்மாழைவனப்புளதாயினுமறா
விரவாதுள்வாங்கியுறச்செஞ்சோதிமேலெழீஇப்
பரவாதுவிசித்தனபோற்பசுநரம்புபரந்தவே. (௪)

மாதோற்றமுறுங்கிரணமலியருணவனப்பினு
லோதேற்றமுடைத்தேனுமொண்குழைவாய்த்தொளியையே
மீதேற்றவள்ளைபுகாவிளங்குமிருநீலமாம்
போதேற்றசரோருசமும்புதுமதியம்பொருவுமே. (ரு)

வீங்குபுனற்றிருவேலிவிரிகடற்பார்வியப்பமுந்
தீங்கின்முகக்குடைந்தமதிமுகநோக்கிச்செவ்வியா
லாங்களியின்றனைந்தமுகமலர்ந்திடுமென்றமைந்திடாத்
தேங்குமுதவழகழிக்குஞ்செய்யவாய்விளர்த்ததே. (சு)

எள்ளாதிங்கெமைநாளுமெடுக்கலாதெய்ப்'றற்
றள்ளாடிநைந்தவிடையுய்ந்ததெனத்தாம்பொரு
லிள்ளாதுவிம்முமுவெய்துமுவெங்கதங்சண்
கொள்ளாநின்றனபோலக்குவிமுலைக்கண்கரிந்தவே. (எ)

வே று.

வன்னவாறுடைக்கடல்வந்தமுத்தொளி
துன்னவாறரமிளிர்தோட்டுக்காதிடைப்
பொன்னவாறளர்திடுகண்ணிபுன்கணூற்
றின்னவாறணிநலமிழந்துவைகினுள். (அ)

பொன்புரைமேனியடோடையல்பூணினுந்
தன்பெருங்கரங்களாற்றள்ளியாற்றுவாள்
வன்பெருந்துயரிடைமகிழ்ச்சியெய்தினு
டுன்பமுந்தருமரோதொலைவிலின்பமே. (கூ)

மண்ணெதிர்ப்படுபந்தொடாடுமற்றைய
கண்ணெதிர்ப்படினுங்கைச்சோர்வுகாட்டுமாற்
பண்ணெதிர்ப்படுமொழிக்கென்னைபற்றுவ
வெண்ணெதிரப்படுமின்பதுன்பமே. (கய)

மகிழ்ந்துறப்பதத்தினுங்கரத்தும்வாங்கணி
திகழ்ந்தரற்றுதுறைசெயல்கொண்டுள்ளவாற்
புகழ்ந்தவர்க்கல்லதுபொருந்திடாதமை
யிகழ்ந்தவர்க்கியார்கொலோவிரங்குவார்களே. (கக)

மணிவகுத்துடையபேரணிகள்வாங்கவுந்
தணிவறப்புதியதோர்காட்சிதந்தன
டணிவுறக்கருவொடுதோற்றும்வண்ணமே
யணியவட்கென்னைகொலணிகளாயவே. (கஉ)

போதெழில்வண்டலாடிடம்புகாநிகழ்
போதிசைதொழிலுருவறிதிற்போதவே
போதொருமூன்றினிலமைத்தபொங்கணை
போதிரண்டினுழ்விடாபுரிந்துவைகுமே. (௧௩)

மெலியனவலியர்செய்விதியின்மேய்தரும்
வலியனமெலியர்செய்வகையின்வாய்க்குமான்
மெலியனவண்டலாட்டிடஞ்செய்மெய்த்தவம்
வலியனபூவணைத்தவத்தின்மாட்சியே. (௧௪)

சயந்தனைச்சசிபெறுதகவின்மைந்தனைப்
பயந்தனதெய்வதுந்துபியும்பம்பின
வியந்தனபாரெலாமிகுந்தவோகையே
நயந்தருகளிப்பினர்நவிலுமோதையே. (௧௫)

அருகலிலுவகைசொல்பவர்க்குமன்னவன்
வருகெனவேண்டுவமகிழ்ந்துவீசின
னிருகவரியுமுலகெங்குமூடிய
வொருகவிகையுமலாதொழிந்தவில்லையே. (௧௬)

வேறு.

தந்தெனுவுயிர்க்குநுண்ணுசுப்புவல்லிதன்னையே
யந்தநாண்மறத்தல்கொண்டறக்களிப்பினடினர்
சந்தநாறலர்க்குழற்சுருக்குடைந்துகாருடச்
சந்தனுசலத்தனம்வருத்துகின்றதன்மையே. (௧௭)

திக்களந்தமான்மதந்திளைத்தவாசம்யாவும்வான்
புக்களந்தசுண்ணமென்பொடிப்பொலிந்தபூழிபார்
மிக்களந்தகுங்குமத்தளங்களுள்வியப்பொடே
மக்களந்தராசராதிமையல்கொண்டுவைகினர். (௧௮)

உற்றுளாரொருத்தருக்கொருத்தரோடியோகையே
சொற்றுளாரவர்க்கவர்சுருக்கிலாதுதூவினர்
மற்றுளாரியாரும்யாரும்வண்மையார்களாதலாற்
பெற்றுளாரையின்னரென்றுபேசலாவதாகுமோ. (௧௯)

இரக்குவாரிரப்புமற்றையீகுவார்களீகையு
நிரக்குமாகுறைப்படாதுநேர்நிறைந்துநிற்றலாற்
புரக்குவாருமுள்ளகப்பொருட்டிறம்புறம்விடா
கரக்குவாருமற்றைநாளினைத்துளார்கணத்தினே. (௨0)

இம்பர்யாரும்யாவுமெல்லையில்லகொள்ளவின்பொடோர்
நம்பிநாளிரண்டுவாரமாயதென்னவிற்றுவாஞ்
செம்பொன்மாலையம்பொனூர்கள்சிந்துபோதுசென்றுவீழ்
பம்புமார்பதங்களைபலன்பெறாதுமீளுமே. (௨௧)

மாதராரோர்பாலர்மற்றைமைந்தராரோர்பாலரே
தூதராய மாலையார்தழைத்தசாரோர்சாரெலாம்
பாதராகமுங்கழற்பெய்பதுமராகமுஞ்செறி
பேதராகமுங்கொடேபிறங்குமவ்விடங்களே. (௨௨)

நிகரின்மைக்கணாரோடுநெருங்குமாந்தர்தம்மொடு
முகரமிக்கவீறொடுமுதிர்ந்தகேளிர்மூழ்கலாற்
பகருட்டுநீறொடும்பரந்தகந்தநீரொடு
மகருவிட்டசேறொடுமலந்தலைவிளைந்ததே. (௨௩)

வேறு.

வீரமேதருங்கொலைவேற்கணார்முலைப்
பாரமேவருத்தினும்பரிவின்வல்லைபோ
யாரமேகுழைத்திழைத்தப்பிக்கந்தநற்
சாரமேயிறைத்தனர்தலைமயங்கவே. (௨௪)

ஏந்திளங்கொங்கையரிரவிமொய்ம்பினர்
வாய்ந்துளசிவிறிநீர்வழங்கக்கங்கணப்
பூந்தளக்கமலமும்புதியசங்கணி
காந்தளுந்தணித்தனிகடுப்பக்காணுமே. (௨௫)

வலியிராநவ்வியுமடங்கலேறுமொத்
தொலிவிராவெதிர்ந்துளரேனுமோர்ந்திடின்
மெலியரோமெல்லியர்வேற்கையாடவர்
புலிவிராவெறிந்திடக்களபம்போக்குவார். (௨௬)

பணைபடச்சிவிறிநீர்பாய்ச்சற்கேறொடு
பிணைபடச்செல்லுமங்கவர்க்குப்*பெண்மரைத்
துணைபடக்கொடாமையுந்துலங்குகாவியி
னிணைபடக்கொடாமையுமெளியவல்லவே. (௨௭)

நன்பொருட்டிருதிறத்தவர்நன்கேளிர்வாய்த்
தென்பொருட்டெழுமிருசிகரிதாங்கிய
மின்பொருட்டிரங்குமச்சிலம்புதாள்விடா
தென்பொருட்டிரங்குமக்கழல்களென்பவே. (௨௮)

---

* பேண் - பெட்பு. அது பெண்ணெனக் குறுகிற்று.

செருமிதநிலைதெரிந்துரைப்பச்சேணுய
ரருமிதநிலையவர்தமக்குமாகுமே
பெருமிதவரிசனமளாயபெட்பரு
திருமிதநிலையமெய்யாட்டுநீர்மையே. (௨௯)

கலிப்புடைநறும்புனல்படிந்துகானலஞ்
சொலிப்புடைநாமவேலரசன்சொன்மறை
பொலிப்புடைமுனியொடுமேகியொண்டவப்
பலிப்புடைப்பருமணிப்பவனத்தெய்தினான். (௩0)

பரிந்தருடானமுற்பவித்திரத்தகை
யிருந்தொழினடந்தவங்கிருந்தவேந்தரான்
மருந்தனாற்கண்டபின்மகிழ்ச்சியுண்ணிறைந்
திருந்ததுகடந்ததுகவ்வையீட்டமே. (௩௧)

வெங்கயநிருபர்தமகுடமீமிசை
யங்கதிர்களைகழலரசனன்னை
பங்கயமலர்தரவிளங்குபான்மையாற்
செங்கதிராயினனெறியசெம்மலே. (௩௨)

உதியமையுளத்தினானுவகையொண்கடல்
கதியமைவின்றியேபெருகக்காண்டலாற்
புதியனன்கலையெலாநிறைந்தபூரண
மதியமுமாயினானனையமைந்தனே. (௩௩)

அடுஞ்சயத்திகிரியானனையவேலையின்
விடுஞ்சிறையின்மையான்மேயதென்புலம்
படுஞ்செயலினர்கடனென்னும்பாரமா
நெடுஞ்சிறைதான்றனிநீங்கினானரோ. (௩௪)

ரெட்டமெய்த்தவப்பயச்செல்வற்கவ்வயின்
மட்டிலகலைக்கடறனையும்வாளமர்
முட்டியபகையையுமுடிவுகாண்பனென்
றிட்டனரொருபெயரிரகுவென்னவே. (௩௫)

ஒல்லைமென்றிருவிளம்பருவத்தேயுரம்
புல்லவம்புலிமகன்புளகம்பூப்பநாட்
செல்லறத்தொடுமிகவளர்கின்றான்றிகழ்
மல்லலஞ்சிறுகலைமதியமென்னவே. (௩௬)

வேறு.

விண்டிறந்தெழுந்தபானுவிண்ணிழிந்துவரிவீழா
மண்டிறந்தெழுந்தாலொக்கவயங்கொளிவசிட்டன்வாய்மை
யெண்டிறந்தலர்ந்ததொன்மையெழுத்தெனுமிமையாவுள்ளக்
கண்டிறந்திட்டான்செல்வக்கவின்பெறுகாமனார்க்கே. (௩௭)

வரும்பொருளுணருநேசமாசறுதயிலம்வாக்கி
யரும்பொருட்கலைகளென்னுமணித்திரியார்த்தமாட்டிப்
பெரும்பொருட்புத்தியென்னுமகலிடைப்பெரிதினாக
விரும்பொருளறிவுத்தீபமிருளறக்கொளுத்தியிட்டான். (௩௮)

ஈட்டருநயனநல்கியிருளறச்சோதியேற்றிக்
காட்டுமேற்பொருளையெல்லாங்காண்பதற்கரியவாமோ
பூட்டியவிருமையின்பவறத்துறைப்பொருளையெல்லாம்
வேட்டுடன்றெருண்டுகாணவிம்முறுவிழுமந்தீர்ந்தான். (௩௯)

கிபாகவையற்றபெற்றிநெடும்பவமுன்னிநேச
விபாகிலப்பூங்கோதையிடத்துளானெனுமெஞ்சாத்
தபநயநட்பிற்றாயதாபதனருளிற்றாழ்வி
னுபநயனத்தும்வேறோருருற்பவமுற்றானன்றே. (௪௰)

சூழ்பட்டகலைகளொன்றிற்கொருவராந்தூய்மையோர்பாற்
பேழ்பட்டதனுமுற்சொல்லும்பெரும்படைத்தொழில்களெல்லா
மூழ்பட்டவினைகளுக்கத்துறுத்தலிற்கற்றான்கற்ற
காழ்பட்டகடுமையாரேகணித்தெடுத்துரைக்கவல்லார். (௪௧)

வாட்டொழில்வேலிகோலியயிற்றொழிலகழிவாங்கித்
தோட்டொழின்ஞாயிலாக்கித்துளைக்கைமாத்துரகமுள்ள
கோட்டொழிற்பொறிகள்செய்துதந்தைபாற்கற்றகோள்விற்
சேட்டொழிற்றெய்வம்வாய்ந்தோர்தெறற்கருநகருமொத்தான். ( )

முற்பொழுதாயினானல்லறத்துறைமுதிர்வினாப்பட்
சொற்பொழுதாயினான்வெம்பகையடுந்தொழிலிற்றண்ணென்
பிற்பொழுதாயினான்றெண்பெருமதியமைவிற்பின்னை
யற்பொழுதாயினானில்லணிப்பகலொன்றினானான். (௪௩)

விஞ்சியவென்றித்தன்கைவேலொன்றிற்கரசர்யாரு
மெஞ்சலிலிகற்போர்தன்னிலிலக்கமதாகத்தானு
மஞ்சுகப்பரியோனைரந்தம்பினுக்கிலக்கமாய
வஞ்சிபரிருசட்டானாவாளினுக்கிலக்கமானான். (௪௪)

சட்டழகரும்புகாலேக்கற்பகங்காமர்காட்சி
மட்டிலவிளமையென்னுமாட்சியபலத்ததேனும்
பட்டுடைக்கமலச்சேக்கைப்பாசிழைட்பூவைக்கல்லாற்
கிட்டுமோவெளிதிற்கிதப்பனுவன்மென்கிளியினர்க்கே. (சரு)

நோக்கருமநங்கன்முன்னேவிதியினற்பெரிதுநோற்ற
பாக்கியமுருக்கொண்டன்னபடிவத்தபருவக்காளே
மாக்கவின்மடவார்கண்ணுள்வதிதலாற்றுயிலுஞ்சிந்தை
நீக்கறநிரம்பலால்வேறுன்னலுநீக்கினனே. (சசு)

தேசுலாங்காமனன்றன்வடிவெலாந்தெரியக்கொண்டு
பூசலார்விழியார்கள்ளஞ்செய்திடிற்போவதெங்கே
காசுலாங்கொங்கைநல்லார்காண்டொறுமனேயகாமன்
மாசிலாவழகுக்காவல்வல்லியிற்றளேக்கப்பட்டார். (சஎ)

கண்ணினர்சிறியருள்ளக்கருத்தினர்பெரியரேனு
மெண்ணினர்சேய்மைபுக்குமெண்ணுற்றூரண்மைபுக்குங்
கண்ணினர்காணப்பெற்றூர்காளையைப்பெரியர்கண்ணு
ரெண்ணினர்சிறியரென்பாரிலங்கொளியிழையரெல்லாம். (சஅ)

நாணுமொன்றுயிருமொன்றேநன்கிவையிரண்டதாகக்
காணுமொன்றுளதோவுண்டேற்கடிதினீகவர்ந்தநாணே
டேணின்ம்முயிருங்கொண்டிட்டியம்புதியின்றேலேந்தல்
பேணிநின்றருடியென்னுப்பேசுவார்பிடியனரே. (சசு)

நிலேகொண்டநுசுப்புநோவநெடுங்கலேவிசிப்பதன்றி
வலேகொண்டமானம்வேறென்மாணிழையெங்கட்காணன்
முலேகொண்டவடமுஞ்செங்கைமுறைகொண்டவளேயும்போகக்
கலேகொண்டாலமையாதோவிக்காளேதன்காதலென்பார். (ரு0)

பெண்ணினும்பெரியநெஞ்சிற்பெருகியகாதனீக்க
வெண்ணிநின்றியலுவாருமுளரெனிளவறன்னே
மண்ணினுங்காண்பர்தங்கண்மனத்தினுங்காண்பரன்றி
விண்ணினுங்காண்பரொன்றூலெங்ஙனேவிடுவதம்மா. (ருக)

நுண்மையேயகலவாணிற்பிறத்தலாய்முன்னர்நோற்ற
தெண்மையேயானதிப்பாலென்றுகொண்டிளேயோரெல்லாந்
திண்மையேதிரண்டதோளான்கண்படுந்தோறுஞ்செவ்விப்
பெண்மையேவேட்பராயிற்பிழைப்பரோபிடியனரே. (ருஉ)

அ

கொர்திறற்பொலியும்வீதியெங்கணுங்குறுகுந்தோறுஞ்
சந்திறற்பொலியுங்கொங்கைத்தையலாரிணையராக
மைந்திறற்புதுமைத்தாகவடுவறவெடுத்தவாளி
வையர்திறற்குரியவாறுமம்பினின்விளங்கினனே. (௫௩)

பூவினிற்பொலிந்தோன்றந்தபூமயில்புளகம்பூப்ப
மேவிடிற்பிறர்மேலுள்ளம்வைத்திடவிடுமேயென்னைக்
காவலன்கணித்திராசகன்னியர்ச்சேர்த்தலன்னான்
றுவிலெத்தினத்துஞ்சேருஞ்சந்திரன்றனையுமொத்தான். (௫௪)

இட்டித்திண்டிறற்கைவீசிக்கிளர்மதம்பிலிற்றியாவு
மட்டித்துவருமால்யானைமீக்கொளாமதச்செருக்கைக்
கொட்டித்தன்வயத்ததாகவியற்றுமவ்விசையாற்குன்று
வெட்டுத்திக்கன்றிபற்றையிரண்டையுநிரப்புமன்றே. (௫௫)

நிரந்தரங்கறுத்தபோர்த்தெவ்விரசனிநெரிந்துநீளச்
சரந்தருகதியிற்றூயதாருணைப்புரவிமேலாய்க்
குரந்தரும்விசையினீர்மொண்டுண்டிடாக்குரத்துவானிற்
பரந்தெழுதூளிபோர்ப்பப்பரிதியிற்றிரியுமன்றே. (௫௬)

அறுகுவாரணத்தவேங்கையார்த்துமேலீர்த்திட்டங்கஞ்
சிறுகுவாணிலையிற்றூயசித்திரத்திகிரியுய்யா
பெறு*குவார்விசாலமெல்லாம்பிற்பொழுதேந்தும்பெட்பா
னறிகுவாயென்னவல்லேயாழியினளக்குமன்றே. (௫௭)

கைத்தலிலிளைஞர்மார்பங்கொட்டியகளபத்திட்ட
நித்திலக்குறியைத்தன்கைநெடுஞ்சிலைகுழையவாங்கி
வித்தகத்தசலமூடுதுளைத்திடும்வேகவாளி
யுய்த்தவர்க்கூறுறுதேநீக்கிநின்றுவக்குமன்றே. (௫௮)

கனத்தெழுவிலங்கற்றிண்டோர்கட்டடல்கடக்குமற்று
மனத்துணர்கலையின்வந்தபலிப்பினன்மகிழுமாறுச்
சினத்திளம்புலிப்போத்தன்னதிறற்புரவலர்குமார
வினத்திளவரியேறன்னானின்னணம்வளருமன்றே. (௫௯)

இரகுவுற்பத்திப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள்-௪௫௨.

---

*கு- பூமி.

# யாகப்படலம்.



உரைபொடுங்காலையோங்கக்கடாத்தொடுமுரவுக்காலின்
டரைபொடுஞ்சரற்காலத்தின்பொலிவொடும்பொருந்தாநின்ற
நிரையொடுங்கரியசெய்யவெண்மையநெடியசெங்கை
வரையொடுங்கனலியோடுமதியொடுங்கடுத்தமன்னன். (க)

வெய்தவப்பலத்தானன்னிலைகோடுவிழைவினானைக்
கைதவப்பவத்தைநீக்குங்கடவுண்மாமுனிவனன்பாற்
கொய்தவப்புதியபோதுகொண்டருச்சித்தசொள்ளைகச்
செய்தவப்பலிப்பைநோக்கிச்சிந்தையிற்செருக்குக்கொண்டான். (உ)

உப்புடைப்புவனியெங்குமொருதனிகவிக்குஞ்சோதிப்
பப்புடைத்தவளமுத்தப்பருமணிக்கவிகைமன்னன்
வெப்புடைக்கொடியதீயவிம்மிதவினையைவீட்டுந்
துப்புடைத்துரகமேதமியற்றுவான்சூழ்ந்துகொண்டான். (ங)

மிகுப்பினிற்றழீஇயவாயவிழுப்பொருட்கலப்பைவீக்கத்
தொகுப்பினிற்சூழ்ந்தவேள்வித்தொடங்குபவசிட்டன்சொல்லின்
பகுப்பினிற்சிறுமைதீர்ந்தகுணமெலாம்பரித்தநண்ணூல்
வகுப்பினிற்றவாதசீரவாம்பரிவருகவென்றான். (ச)

வேறு.

குலம்படுமையிருசுழியுங்கோதற
வலம்படச்சுழிந்தனமாட்சித்தாயின
பலம்படுதெய்வமாமணிபகர்ந்திடு
னலம்படுநூன்முறைநவின்றதன்னதே. (ரு)

சங்கையின்மூவகையுரைத்ததன்மையி
னங்கமூரடுநிலையறியப்பட்டது
சிங்கலுமதிகமுந்தள்ளிச்செவ்வியிற்
பொங்கியதந்தமும்புகன்றவண்ணமே. (சு)

பெருநிறக்கொய்யுளைபிறங்கிநெய்த்துவார்ந்
தொருநிறத்தமைந்துமேலொழுக்கியன்னதா
லிருநிறத்தடங்கணுமிலங்குநெற்றியு
மருநிறப்* புரோதமுமகன்றுகாட்டுமே. (எ)

எய்த்தெழுபிறையினைவளாவின்றுகநேர்
வைத்துளதெனினிகர்வகுத்தற்கொப்பதாய்ப்
புத்தழகொழுகியபோலநாசியின்
மத்திமமிலங்கியும்வலம்பட்டுள்ளதே. (அ)

---

* புரோதம்- குதிரைமூக்கு.

மாகதிமாதரார்மனனிற்பல்படப்
போகியதிருசெவியரம்பைபூத்தன
சேகமர்குறங்குகடிரண்டுநீண்டன
நாகமழ்மாந்தளிர்நவிறற்கொத்ததே. (௯)

மற்றுளவிளக்கமுமிணையமாட்சியும்
பெற்றுளவாம்பரிகொணர்ந்தபின்னரிற்
கற்றுளநான்மறைமுனிவன்கைக்கொளாச்
சொற்றுளபூசனைநல்கிச்சொல்லுமே. (௧0)

வேறு.

மேம்படுவெட்சிமூன்றின்புனைதலின்விளங்குவேள்வி
யாம்பரிகாத்தகுனேவாகையின்வாகையாமாற்
றம்பொழிமலர்ப்பூந்தாராய்நீதிலாவிதன்மேல்வென்றி
யாம்பரிசமைந்துநோக்கினமரர்க்குமரியதன்றே. (௧௧)

பெறற்கரும்பெற்றியாவனொருவனேபெறுகிலன்ன
நறற்குவிண்ணுலகுளார்க்கும்பொருமையுள்ளுடைக்குமென்க
பிறர்க்கினிபுரைப்பதென்னேபெரியவிப்புரவிகாக்கின்
மறக்கதிரயில்வேனம்பியல்லதுமற்றிலென்றான். (௧௨)

ஆர்த்தனதொடையல்வேந்தனசேந்துரைசேனாவாசம்
பார்த்தனபுளகமிஞ்சிமயிர்ப்புறம்பொடிப்பவல்லே
பார்த்தனன்பகர்தன்முன்னமப்பணிபணிந்துசென்னி
சேர்த்தனன்வலயம்விம்மித்தெறித்திடவீங்குதோளான். (௧௩)

மேதகுபுரவிதன்னைவிடுத்திடவிளங்குமுள்ளக்
காதலினிதனைச்சேனைக்கடலொடுங்காப்பான்போனான்
றூதெனவிளங்குஞ்செவ்வாய்த்தோகையர்துணைக்கணிலப்
பாதினுட்புகுந்துமின்னும்புனைமணிப்பூணினானே. (௧௪)

வேறு.

தாரோதைபெழாநூறணவாவாளிதடாமேல்
வேரோடலுறுமீதுவிளங்காளசையாமே
நேரோடலின்னவெங்குரநிமிர்தூளியினொருகாற்
றேரோனிருள்படமூந்துபுசெல்கின்றனசிலமா. (௧௫)

நிரவுங்கனையிருளூர்திசைநிமிரும்புதுவெயிலும்
விரவுங்கிரியுடனுக்கனல்விழியுங்கொலைவெய்யார்
கரவுங்கரவில்லார்கலையுணர்வும்புரைகழியா
விரவுந்திகழ்பகலுஞ்செலவேகுஞ்சிலயானை. (௧௬)

புடைகண்ணியவொளிநாழியின்வெளிபோதருபுயலின்
றடைகண்ணியநிமிர்பேருயர்வதனின்றகுதகைசா
னடைகண்ணியவகன்ஞாலமுநளிர்நாகமுமளவா
விடைகண்ணியவிரைபோயினவினைவெண்ணிலவிரதம். (௧௭)

நதியின்சுழறருமத்தெனவிடமுந்தருவலமுந்
துதியின்றிரிவனவாயினதுங்கப்பலதுரக
மிதியின்றருபலதாளவிதம்பெற்றிடவிடையின்
கதியின்றளராதேகினகவனப்பலகலிமா. (௧௮)

மாழத்தகுமிடிவெங்குரன்மலர்செங்கதிர்வருமா
வேழத்துளையொன்றுறுமுயங்காதனவேறு
மாழத்தனவலியெஞ்சிடவதிராமதமதிலெண்
வேழத்தனமதவெங்களிவிலகுஞ்சிலவேழம். (௧௯)

நிதியச்சுதிரிடைதுற்றியவுருணெட்டரமுடிமேற்
பதியக்கதிர்மணிகட்டியவழிமிக்கொளிபடரா
பொதியக்கதிரவன்விட்டொளிர்வெயிலிற்றணிபொதியு
மதியக்கதிர்மலிகிற்பனவருநித்திலவையம். (௨௰)

இகல்சென்றனதிசைசென்றனவிவுளிக்குலனெரிவா
கைகல்சென்றனவடிசென்றனவடர்சென்றனவாளின்
புகல்சென்றனமிதியின்றிடைபொலிசென்றனபடியாற்
பகல்சென்றனபரிசென்றனபடிசென்றனபலமா. (௨௧)

நிலவுங்கலைகடலும்வெளிநிலமும்புறநிலையு
முலையும்படியிருண்மண்டிடவுலகம்பொதிதுகள்போய்
மலையுந்திசைபுகுகின்றனவழியின்றெனமறுகா
வலையும்புயவொடுமெங்கணுமசையுங்கொடியடவி. (௨௨)

ஆறாயினவலையாயினவழியாமதமதனாற்
சேறாயினதிடராயினதிறலோரணிசிதற
நீறாயினவளறாயினபரிவாயுமிழ்நீரான்
மாறாயினவல்லாணிலைவழியாயினவிலையே. (௨௩)

படையெண்ணிலபரிதித்தொகைபருமுத்தணிதவளக்
குடையெண்ணிலமதிவீரர்குலக்குன்றகன்மார்பத்
தொடையெண்ணிலமின்னுக்கொடியிவைநின்றொளிர்சுடரி
னடையெண்ணிலவுளவுண்டுகொணுறுதனசுடரோ. (௨௪)

தலைநின்றனமுரசத்தொடுதகுபல்லியமெவையு
மலைநின்றனவொலியெங்குமயங்கத்திசைமருளா
நிலைநின்றனமுகிலஞ்சுபுநெடிதோதைநிரப்பா
வலைநின்றனபிறநின்றனவறையும்பரிசெவையே. (உரு)

வேறு.

துதிமுறைவழாதுசேனையின்னணந்தொடர்ந்துசெல்லக்
கதிமுறைவழாதவாசிபோதலுங்கலையின்செல்வ
மதிமுறைவழாததெய்வமுனிவரன்வளர்ப்பமாட்சி
விதிமுறைவழாதுநன்னர்விளைந்தன்வேதவேள்வி. (உசு)

பெரியகற்பகநன்னீழலினன்செவிப்புழையிற்பீடா
ரெரியழற்கொழுந்தம்வேலுய்த்திட்டெனவுறுப்பவெங்கும்
பருமணிச்சுடர்களூறிப்பாய்கதிர்ப்பரிதிநாண
விரிமகத்தலத்துநின்றுமெழுந்தனவேதவோதை. (உஎ)

வானுலாநிவந்தமேகவயின்றழீஇத்திசைகள்வெளவிக்
கானலார்கதிரைமூடிக்கலைமதிகடந்துகாமர்
மீனுலாமிடங்கண்மண்டிவியனுலகளந்துமுற்றுந்
தானலாதில்லையென்னவிரிந்ததுதூமதண்டம். (உஅ)

விரைசெலாநின்றவந்தவெம்புகைமிளிர்நாற்கோட்டுப்
பரசுமால்யானையாற்குப்பாரிற்போர்விளையுமாற்று
லுரைசெய்கீள்பதிசிப்பாலவுன்னதவரிமீத்தங்கி
யரசுவீற்றிருக்குந்தூமநிமிர்ந்ததுமனையதொன்றே. (உகூ)

விரைமதிக்கலையின்செல்வமுனிவரன்விளைப்பநீடு
புரைதபப்பொலிந்தகுண்டத்தெழுந்தொளிர்புதியசெந்தீ
யுரவயத்திகிரிச்செங்கையுபேந்திரனுந்திச்செய்ய
மரைமலர்ப்பொகுட்டிற்றோன்றுங்கடவுளைமானுமாதோ. (௩0)

களிநிலைத்தாயவெய்யோருடற்றடிகௌவியுண்டு
நளிநிலந்தாயசெந்நீர்நாறிலைநாமவேலா
னளிநிலைத்தாயவேதவறநிலைத்தென்னுமின்ன
தெளிநிலைத்தொண்ணூற்றொன்பான்யாகமுந்திருத்தினானே. ()

நட்பதினுலகங்காக்குமாதிபனயப்பினுள்ளப்
பெட்பதுபெறுதன்முன்னம்பெறுவகைபெரிதுபோகி
விட்பதியுடையவெள்ளிவெண்களிற்றண்ணலின்னே
தட்பதுதகவதென்னநுதலுபுசமைவதானான். (௩உ.)

பெருமனைவயத்தேறிப்பிறர்பெறல்பொருமையென்னு
மொருமகன்வயிரமுட்கோறொடாவினைப்புரவியொய்யச்
செருமனைநிலையிற்போவானேனுமற்றொருதிண்டேரி
னருமையினேறிப்பூராவந்தரமிழிந்திட்டானல். (௩௩)

தளநிலைமலர்த்தார்வேந்தன்றரணிபொதிந்தகீர்த்திக்
களநிலைநிமிரவாக்கங்கைவந்துகுறுகவேள்வி
வளநிலைபெருகவொன்றார்மதிநிலையருகமாட்சி
யுளநிலைமனனிற்செல்லுமொருபெரும்புரவிகண்டான். (௩௪)

வேறு.

மண்மயக்குமயக்குடைமையலா
ருண்மயக்கெனவாசியையுற்றுளார்
கண்மயக்கினுறங்குடைக்கொளா
வெண்மயக்கிவிசும்பிடையேறினான். (௩௫)

ஏணின்றோங்கியயாகவிழுப்பலன்
மாணின்றோங்கியவாம்பரிகாண்கிலார்
நாணின்றோங்கியமம்பரினண்ணினார்
கோணின்றோங்கியகொற்றவில்வீரரே. (௩௬)

குன்றந்தேடியுங்கொன்னதிகூடியுந்
துன்றுங்கான்றருவிக்கொடுதுன்னியுஞ்
சென்றெம்மாடுந்தெரித்திடைதவரா
நின்றின்னலைநீங்கலராயினார். (௩௭)

காக்கும்வாம்பரிகாண்கிலதென்றொலி
பூக்கும்வாய்மொழிக்கூற்றம்புகுந்துயிர்
தீக்குஞ்செய்கைசெயச்செயத்தேம்பினன்
வாக்கும்வாகையும்வண்மையுமாறிலான். (௩௮)

மாயமங்கதுவாதலின்மாழ்கிநின்
றேயெனுங்கணத்தேயுணர்வெய்தியே
தூயநெஞ்சிற்சுடுகனல்கண்வழி
போயிறங்கிப்புகையெழப்பொங்கினான். (௩௯)

பாழியிற்பரிகொண்டுபடர்ந்துளா
ராழிபுக்குளராயினுமக்கணத்
தூழியிற்படர்தீயினிலொண்கட
லேழுமுற்றுறவென்கணையெய்துமே. (௪0)

வஞ்சர்புக்கரம்வைகிடிற்சேடனென்
வெஞ்சரத்தினிறப்பதுமெய்மையான்
மிஞ்சுரத்துமிகுஞ்சுமையேற்றியெண்
குஞ்சரத்துயிர்கொண்டனரென்பவே. (௪௧)

கன்னமேகொடுபோயினகண்டகர்
பொன்னின்மாநகர்புக்குறைவாரெனிற்
சொன்னவானவர்துய்க்குமருந்துசே
ரன்னமாநகர்க்காக்கினராலமே. (௪௨)

காயருந்திறற்கள்வர்தயித்திய
ராயுமென்கணைக்காற்றுவதெங்ஙனே
மேய்நெருங்கியசூழலின்வெம்மைய
தீயெழுந்திடினென்கொறெரிப்பதே. (௪௩)

வெப்புறத்திகழ்விற்றிகிரிக்கிரிக்
கப்புறத்திருள்புக்குளரல்லரே
லிப்புறப்பரப்பெங்கணுமென்கணை
குப்புறத்திரிந்தாருயிர்கொள்ளுமே. (௪௪)

வேறு.

இணையனகழறிநம்பியுலகெலாமிமைப்பினேகுந்
துணையனபகழியாய்புதுணிபுகொண்டெழுமவ்வேல்வை
முணையனவிணையிற்றுயதீவினைமுற்றிற்சூழ்நல்
விணையெனவணுகிற்றந்தநந்தினிவிரைவினம்மா. (௪௫)

ஏலவங்கெதிர்ந்தவாணினீர்ம்புனலங்கையேற்றுக்
காலையங்கதிரிற்சேந்தகண்கழீஇவிசும்புபார்த்தான்
சோலையந்தாருத்தாமஞ்சூழ்தலைக்குலிசவைவேன்
மாலையங்கதிரின்மின்னவலாரிமீப்போதக்கண்டான். (௪௬)

வாம்பரிக்கள்வவேகேன்மாயஞ்செய்வஞ்சவேகேல்
கூம்புடைத்தேரவேகேல்கொடியரிற்கொடியாயேகே
லாம்பரிசறியாயேகேலவுணருக்கெளியாயேகே
றேம்பினதிறந்தாயேகேலென்றனன்செருக்கொள்வீரன். (௪௭)

கருமுகிற்பிறப்பதல்லாற்காசினிப்பிறந்துமீப்போ
முருமெனவெழுந்தவெஞ்சொலொல்லொலிசெவியிற்பாய
வருகடற்பிறப்பதல்லால்வான்வருவடவைத்தீயிற்
றிருகினன்றேரினேடுமாயிரஞ்செங்கணோனே. (௪௮)

நிசிப்பட்டவளகப்பைம்பொனிரைவளைத்தடங்கைச்செங்கட்
சசிப்பட்டமனனிற்செந்தீத்தழைத்திடத்திருகாநின்ற
வசிப்பட்டகுலிசத்தேவும்வையமும்வையத்தட்டின்
விசிப்பட்டவேள்விமாவுநோக்கினன்விளம்புகின்றான். (சகூ)

பழிப்பதுபடாதவேள்வியாதினும்பாகமுன்ன
மொழிப்பதுபடாதுகொள்ளுமுவப்புடையொருவனீயே
செழிப்பதுதிகழவெந்தையியற்றியதெய்வவேள்வி
யழிப்பதுதுணிகின்றாயாலவுணரேயளியரம்மா. (ரு0)

போதவேள்வியினையெஞ்சாதழித்திடும்புன்மையோர்சே
யேதமேயணுகாவண்ணமிசைந்தசொண்டினிதுகாக்கு
நீதகாதிழைத்தியாயினிலைக்குமோநெறிகணித்த
வேதநூலுரைத்ததொல்லைவிதியும்போயிறந்ததன்றே. (ருக)

நள்ளொத்தவுலகின்மற்றைநாட்டினனவின்றகேள்வி
தெள்ளத்தெள்ளியநன்னீர்மைச்செய்கையிற்சிறந்தசீரோய்
கள்ளத்துநிரந்தமாயவஞ்சனைகாசிலாநின்
னுள்ளத்துமுளதேயாயினுலகமுமில்லைபோலும். (ருஉ)

உலகெல்லாம்பரவப்பட்டவுனதுழியொருவிற்றாயி
னலகிலாவரியநீதியாருழிச்செல்லுமையோ
நிலைகுலாநீர்மையாரைநீணெறிநிரந்துநேடி
னிலைகொலாமிடர்செய்பாரினெனன்பிழைத்தேங்கள்யாமே. (ருங)

துண்ணெனத்தொடர்ந்துபோகித்தொல்லையோரிதயத்துள்ளே
புண்ணெனக்கிடந்துவெய்திற்புழுங்குபுபுடைப்பதல்லாற்
பெண்ணெனச்சிறந்தமாயத்தெய்தியவிழிபும்பின்னோர்க்
கண்ணெனச்சிறந்ததென்னச்சிறக்குமோகரவுமையா. (ருச)

ஆதலாற்றாரகநீகொண்டகலுதலறிவன்றன்றி
யேதிலாருலகினின்னையிகழவும்படுவதுண்டா
னீதியால்விடுத்துநேரில்கற்பகநீழற்சேறி
தீதிலாதென்னமேலோன்சிறுநகைபொடித்துச்செப்பும். (ருரு)

தெள்வலியுடையையாகத்திறத்தினுலூர்தைதேர்ந்தார்க்
கள்வழிதருவிற்சூழ்ந்தநகர்கொளக்கருத்திற்கொண்டா
னுள்வருமவாவினார்மற்றேதிலாருடைமையுள்ள
கொள்வதுதுணிந்தாராயிற்கொடுப்பரோவருந்திக்கொண்டோர். ( )

நல்லனநணுகிவெய்யதீயனநலிந்துநாளு
மெல்லைபெரியகீர்த்திவளர்ப்பதேயியற்கையெய்ப
வல்லனபகையினன்றிமற்றையோர்திறத்துநீதி
யல்லனசெயவுமுள்ளத்தமைப்பரோவரசினன்றோர். (௫௭)

பாலவற்கல்லாலின்றேவரப்புருடோத்தமப்பேர்
மேலவற்கல்லாலின்றேவிழுமியமகேசநாமஞ்
சாலவெற்கல்லாலின்றேசதக்கிரதென்னுந்தற்பே
ரேலவிப்பொருள்கண்மூன்றும்பிரிப்பரோவறத்தினோன்றோர். (௫௮)

அன்பறவினையமாற்றமறைதரும்வேள்விநாத
னென்பதுபோதந்தன்னையெண்ணிணையில்லைபோலும்
வன்பெருமதியாயென்றான்மற்றவன்வானநாடன்
றன்பெருங்கண்கடோறுந்தழலெழச்சாற்றுகின்றான். (௫௯)

மகரவாரிதிசூழ்வையத்தலத்தினின்மாட்சித்தாய
நிகரிலாவரத்தினோன்றகபிலனைநிகர்க்கின்றோனாற்
சிகரவாருவினாய்செய்யறீவினைச்செயலின்மூழ்குஞ்
சகரர்தாமடைந்தவெய்யநெறியினிற்சார்தருவே. (௬௦)

என்றவனிசைத்தலோடுமேந்தலுமெரியுமுள்ளங்
கன்றுபுகறுத்தவாளிதொடுக்குதிகடிதினென்றா
னன்றெனவிசிகம்வில்லினூட்டினனடவமுன்னே
பொன்றுவெம்பகழியன்னானுரத்தினிற்புதையவுய்த்தான். (௬௧)

*உடுபதிப்பெயரினாட்டவுறுங்கணைநுழைந்தமார்பிற்
கடுவிசைப்பகழிபாயக்கணையொன்றுகதழ்வினுய்த்தான்
றொடுகழற்குரிசில்கங்குற்சுருட்குழலியர்கண்ணென்னு
மடுதிறற்பகழிபாயுமகலம்புக்கமர்ந்ததன்றே. (௬௨)

மேக்கினன்கருகக்கண்கள்சிவந்தொருவிசிகம்வீர
னூக்கினன்பெரியன்வாளியொன்றறுத்தொன்றுசேற
வாக்கினன்குரிசின்மாற்றியைந்தின்பினைந்துபல்லம்
போக்கினன்புவனமூன்றும்புகைபுகப்புகுந்தவன்றே. (௬௩)

நெற்றியைநோக்கிற்றொன்றுநிறம்புகநிமிர்ந்ததொன்று
விற்றெறவோடிற்றொன்றுவிலோதனம்விரைந்ததொன்று
பற்றியபகழிசிந்துப்படிபடப்படர்ந்ததொன்று
மற்றையவொன்றிற்போகிவாண்முகமடுத்தவன்றே. (௬௪)

---

* உடுபதிப்பெயர் சசியென்பதை உணர்த்திற்று.

கல்லொன்றுகடலதாகக்கண்டவன்கதழ்வுகைமிக்
கெல்லொன்றுபகழிதூண்டவெதிர்ந்தவாறளவையெண்ணில்
வில்லொன்றினிரண்டுமூன்றுகோலினின்விளங்குநான்கிற் [த்தான்.
சொல்லொன்றிற்றுணித்தான்மிக்கதொடையொன்றிற்றுமித்துவீழ்

கைவினைத்தொடைபோயொல்லைக்கடைப்படுமுன்னங்காலின்
செய்வினைப்பகழிநூறுதிகிரிக்கொன்பதுதிண்டேரி
னுய்வினைப்புரவிக்கெண்பதொருபஃதுய்ப்பார்கொன்றே
யெய்வினைப்பெரியோர்க்காகவேவினானிலங்குவேலான். (சுசு)

ஞால்வந்தகணைத்தின்வீயக்கடுவிசைத்தெய்வவாசி
மேல்வந்தகொடியின்மாயமுன்முனைவிழுக்கோற்றைகயன்
பால்வந்ததுடியின்மாளப்பண்ணவன்றன்மேலாலம்
போல்வந்தவிமைப்பிற்றீயகணையொன்றுபொறித்துநின்றான். (சுஎ)

பொறித்தகைவிடாதுமாலோன்பொங்கியைஞ்ஞூறுபுங்கந்
தெறித்தனனென்றையொன்றுகௌவுபுசேறவீரன்
குறித்தனனென்றைமாற்றவொன்றெதிர்குறுகவீடா
மறித்தனனளவற்றாகவான்கணைமடுத்துமாதோ. (சுஅ)

ஆய்ந்தனபகழியெண்ணிலடுத்தடுத்தேவவேவப்
பாய்ந்தனபரந்துவானம்பரப்பெலாம்பாயப்பாய
வீந்தனவீயவீயவிடுப்பதேயல்லால்வேக
மோய்ந்தனரின்றேதம்மினூறுவலிக்குவமையொப்பார். (சுகூ)

அலைப்படப்புகுந்தபல்லமாழிபொன்றாழித்தீயி
னிலைப்படப்புகுந்தபல்லநெடுங்கடலிரண்டுகூற்றின்
கொலைப்படப்புகுந்தபல்லங்குணிப்பதோகுனித்தசாபக்
கலைப்படப்புகுந்தவாறேதிசைத்திசைகலந்தவன்றே. (எ0)

ஆலொக்குஞ்சிலகங்காளவரனொக்குஞ்சிலநீடாடற்
காலொக்குஞ்சிலவதாடங்கதமொக்குஞ்சிலவெங்கால
வேலொக்குஞ்சிலநல்லோர்நல்வினையொக்குஞ்சிலதூண்வந்த
மாலொக்குஞ்சிலவோர்சிம்புள்வடிவொக்குஞ்சிலபோர்வாளி. (எக)

நுதியொடுநுதிகடாக்கப்பிறந்தநோன்பொறியாசாய
நதியொடுகொதிப்பமாலைநளிர்சிறைவிசயகாலின்
கதியொடுகிளர்ந்தவோர்நாற்கருங்கடல்கலந்துபாயுங்
குதியொடுங்குலைந்தவாசைக்குலநெடுங்குன்றமெல்லாம். (எஉ)

வேறு.

எய்விசையின்றொடையென்னவிசைப்பா
ருய்விசைவிஞ்சையுழிப்பவமுற்றே
மொய்விசையம்புசென்மொய்ம்பிணவென்பார்
கைவிசைகாணிலர்காணுநரெல்லாம். (எ௩)

ஏகமளந்தவினத்தொடையல்லால்
வேகமளந்திலமிக்கிருசெங்கை
காகமளந்தகளத்திருகன்ன
பாகமளந்தபடித்தொழின்மாதோ. (எ௪)

ஒன்றியமாலையினிற்கணையுய்த்தே
துன்றியநாணிதுடிப்பனவல்லான்
மன்றவொருதுவளைந்தனவாறே
நின்றிலசாபநிமிர்ந்திலவன்றே. (எ௫)

காணிபுகுந்தகலைத்தொழில்வல்லோர்
பாணிபுகுந்தபடித்திறனெல்லா
நாணிபுகுந்துநடத்துவதல்லாற்
றூணிபுகுந்தமைகண்டெவர்சொல்வார். (எ௬)

தடுப்பதுமுண்டுசமர்க்கணைமுன்னர்
மடுப்பதுமுண்டுவலித்தல்வழாமே
தொடுப்பதுமுண்டுவிரற்றொடுபுங்கம்
விடுப்பதுமுண்டுகொலென்னவியப்பார். (எ௭)

வேறு.

மேயினகணைபடவிலகுபுகடிதொலிவெடிபடவிரைசேணிற்
போயினவெறிதுறவலைகடல்பருகினபொதுளினசிலவாளி
யேயினவெதிரெதிரிகலினமழைபடுமிடிகொடுவருவேகத்
தீயெனமுடுகினகடுவிசைகுறுகினதிருகினசிலபாணம். (எ௮)

மகிதலவயினிருவகிர்படவிடைபலவழிபடநுழைபோகா
வகிதலவரவினதணிமுடிமணியிடையணவினசிலவாளி
மிகுகணைமுடுகியதடியினிலெதிர்படுவிசையொடுமிசையேகி
முகிலகடுருவுபுமுதிர்கருவறலிடைமுழுகினசிலபாணம். (எ௯)

தழைசெறியடிநிலைதழல்படநெடுமுடிகடல்படவிருள்காலு
முழைசெறிமலைபலபொடிபடவிடிபடமுடுகினசிலவாளி
தழைசெறிபடவிகடுருவியவிசைகொடுதணிவிலதிசைதாவிக்
குழைசெவியிபவிருகவுள்படுமதவழிகுறுகினசிலபாணம். (அ0)

சம்பரவரியிடுதருகணையிருபுடைதழைதவொடுதரைபாயத்
தும்பைகொடொடையவன்விடுகணைகடுகியதுணையொடுமிசைபோவ
செம்பிலனுழைதருகணைவிளைகனலுடல்செறிதரவரமேவி
வெம்பினபணிசிலசிறைகொடுகடுவுகமிசைபுகுவனபோலும். (௮௧)

கலிசெழுசுடர்விடுகழலவன்விடுகணைககனமதுறவோட
நலிவறுமகபதிவிடவிடவருகணைநவையறுதரைவீழ்வ
வொலிசெழுபவனமுமுயவுறவிரைவினெடுடுமுகடுறவோடி
மலிகணையுருவியவழிவழிகருமுகின்மழைசொரிவனபோலும். (௮௨)

வேறு.

படிக்கொடிமகிழ்வெம்போர்படுதலும்வென்றிப்பைம்பூந்
தொடிக்கொடிதுலங்கும்வெய்யசுடர்முகக்கணையொன்றாய்யா
நடிக்கொடிநிசர்ப்பத்தோமினனிவிசும்பரங்கினூடு
மிடிக்கொடிவிழவெய்திட்டானிணையில்விற்றடக்கையானே. (௮௩)

திறந்தரித்துலகமூன்றும்விழுங்குபுதூமந்தேங்க
நிறந்தரித்தெவையும்பற்றிநெருப்பெழவீழ்ந்தவாணி
மறந்தரித்தனந்தனுச்சிவகிர்படப்போகிக்கூர்மப்
புறந்தரித்தங்கணூற்றுப்புனல்குடித்தாறிற்றன்றே. (௮௪)

செல்விளைகொடியோகொய்துவீட்டினன்சிறந்தவிர்தை
யல்விளையளகமென்னவமரர்கோனகத்துட்கொள்ளா
வில்விளைவினையிலெண்ணிவெஞ்சினவிசிகமுந்தி
மல்விளைவயங்குதிண்டோள்வள்ளலைமறைத்திட்டானே. (௮௫)

தீமுகப்பகழியொன்றிற்செறிகணையனைத்துந்தீத்துக்
காய்முகப்பகழியொன்றதொடுத்ததுகடியுமேல்வை
பாய்முகப்பகழியொன்றிலெண்ணிலபரப்பிப்பல்கூர்
வாய்முகப்பகழியொன்றால்வரிவினாணறுத்தான்மன்னே. (௮௬)

நீடுபேரரவநாணிவிசித்தமர்நேருநேரக்
கோடுபேராதசாபநாணறுகுமிலவோதை
பாடுபேருலகமேழுஞ்செவிடுறப்பரந்துபப்பின்
மூடுபேரண்டகூடமுகடுபுக்கடங்கிற்றன்றே. (௮௭)

ஏமச்சூட்டிசைந்தவின்னாணறுத்தலுமிவன்போர்வாகை
நாமச்சூட்டுடையவீரன்மற்றொன்றினடுங்கானென்னாத்
தாமச்சூட்டிலங்குதெய்வத்தாருவனலர்ந்ததாம
வாமச்சூட்டிசைக்கும்வள்வாய்வச்சிரப்படையையுய்த்தான். (௮௮)

பிற்படவனிலம்வெய்யபேரழற்கொழுந்துச்சும்மை
முற்படப்புறம்புசூழ்ந்தமூடுருட்பிழம்புமாய்ந்திட்
டெற்படவகிலந்தீகுற்றிடர்ப்படவிமைப்பிற்போகிக்
கொற்படவிலங்கும்வேலான்மார்பகங்குளித்ததன்றே. (௮௯)

சூழ்தந்ததானையோர்கட்டுளியொடுந்துயரிற்றேயா
வீழ்தந்துதெளிவுற்றன்னார்விரைந்துதள்ளோதையோடு
மூழ்தந்தவினைகொண்டுய்ப்பவொருகணத்தெழுந்துநெஞ்சக்
காழ்தந்தவெகுளிபொங்கக்கடுஞ்சமரதனின்மூண்டான். (௯0)

புரையகல்குலிசம்பாய்ந்தபுண்ணிழிகுருதிப்பூட்செவ்
வரையகன்மார்பின்வாகைவள்ளலைமகிழ்ந்துநோக்கா
திரையகநெடுங்கணைந்நூற்றிரட்டியானிமிருந்தீய
வுரையகன்மதுரவாய்மையின்னணமுரைப்பதானான். (௯௧)

மாண்மதிபடைத்தகல்விவரிசிலைத்தடக்கைநம்பி
கேண்மதிவிசும்புதாவுங்கிரிச்சிறையரிந்தவென்றி
நீண்மதிக்குலிசம்பாயப்பிழைத்தவர்நின்னையல்லா
லாண்மதிபுலகிற்பின்னையுண்டெனநவிற்றலாமே. (௯௨)

ஆதலானுலகமூன்றுமருவலியறிந்துதம்மிற்
காதலாற்புகழத்தக்காய்கண்டுழிமகிழ்ந்தேனின்னைத்
தீதிலாமனக்கண்வேறுதெரிந்திடல்சிறந்தவாசி
யீதலாற்பெறுகவீந்தேன்வேண்டுவவிசைத்தியென்றான். (௯௩)

அத்தலையிளவறானுமறைகுவான்யாகநூறு
முய்த்தலைவுறாதுமுற்றும்பலத்தினையுதவுவாயா
னத்தலைபழனநன்னாட்டெந்தைக்குன்னயங்கொடுநே
ரித்தலைநிகழ்வையெல்லாமியம்பவும்வேண்டுமென்றான். (௯௪)

அன்னதேயாகவென்றுவறைந்தவாறருளியையன்
பொன்னகரதனிற்புக்கான்சுதக்கலைபுதல்வன்றானு
நன்னகர்மீண்டான்றாதுநடந்தவாறுமவேற்கை
மன்னவன்முன்னர்த்தோன்றிவாழியவென்னநின்றான். (௯௫)

அன்னனவ்விடத்தனுகவரசனுமமைந்துநோக்கி
யின்னனிவ்விடத்தனென்னவுணர்புலனின்மையாலே
யென்னனெவ்விடத்தன்வந்ததென்னைகொலென்னயானே
யின்னனிவ்விடத்தனென்றுவடைந்தமையியம்புகின்றான். (௯௬)

தற்பெயரனந்தமெனுஞ்சதக்கிரதென்னுந்தாழ்வில்
சொற்பெயர்பிறராற்கொள்ளவிடான்றனித்தூதனைவேன்
றற்பெயரொடித்தியார்க்குமுடிப்பரும்யாகமுற்றிப்
பிற்பெயர்கொள்வானின்றேயடைந்தமைபெரிதுகேட்டி. (௯௭)

வரந்தருமுனதுசெம்மன்மனத்தினின்வாசிபோதப்
புரந்தொருதடையுமின்றிக்காத்தனன்போர்தானைக
வரந்தருங்கவனமாலையொருபெருந்தேவன்கொண்டு
கரந்தனன்போதவானீர்கண்கழூஉக்காணப்பட்டான். (௯௮)

முற்றொழிற்றிறத்துணைத்தோண்முரட்சமர்முடுகுமென்னும்
பிற்றொழிற்றிறத்தினுள்ளமகிழ்ச்சியைப்பிடித்துச்சொல்லுஞ்
சொற்றொழிற்றிறத்துவாசிவிடாமையிற்சுருக்கிலாத
விற்றொழிற்றிறத்துவீடாவெஞ்சமம்விளைந்ததன்றே. (௯௯)

விரிபுகழ்க்கடவுளாவான்விற்றொழிற்குடைந்துதான்கொ
ளொருதனிப்படையையேவவுரத்தூதுபுகுதலோடும்
பெரிதுறத்தளர்ந்துவீழ்ந்துகணைத்தெழீஇட்பின்னும்யாரும்
வெருவரச்சமரின்மூண்டான்விண்ணவன்மகிழ்ந்துசொல்வான். ( )

மாவிதொன்றன்றிகெட்டபெறுகெனமகமோர்நூறு
மாவதுமுடிவுகொண்டபலத்தினையருளுகென்றுன்
றேவனுமருளிப்போனானென்றனன்றேவனாவா
னேவனேவென்னைத்தூதுவிடுத்தவனென்றுபோனான். (௧௦௧)

கொந்தழற்குட்டத்திட்டபொன்னெனக்குலவுபோரின்
விந்தையிற்றிகழ்ந்தவீரன்வீங்கிசைவிளங்கவாரா
வந்தரத்தவனைவென்றிட்டரும்பலம்பெற்றவாற்றாற்
சிந்தையிற்செருக்கிநின்றதாதைதாள்சென்னிசேர்த்தான். (௧௦௨)

செங்கண்மற்றவன்றன்மார்பின்மறுவிவன்செருவிற்கொண்ட
வங்கிதத்தழகுண்டாங்கொலென்றுகொண்டகிலம்போற்றும்
பொங்கணிப்புதியமார்பந்தழுவினன்புனிதயாக
வெங்கனற்றூமநாறும்விளங்கொளிமேனியானே. (௧௦௩)

மீறுதற்கிசைந்தயாகவிழுப்பலவீக்கம்யாவுங்
கூறுதற்களவிற்றாமோசொடும்பலக்குறும்புமாய
வாறுதற்கமர்ந்தசிந்தையரசன்போய்க்கதியினார
வேறுதற்கமைத்ததோற்றத்திறைவயினின்றவன்றே. (௧௦௪)

புறப்புவியில்லையென்னப்பொதுக்கடிந்தெடுத்தபார
மிறக்குபுவள்ளன்மேருவிணைமணிப்புயத்தினேற்றி
யறத்துணையயனின்றுய்ப்பவறிவுத்தேரதனிற்போகி
மறப்பவக்குறும்பைவெல்வான்வான்றவவனத்துச்சார்ந்தார். (கOரு)

யாகப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் - ருருஎ.

---

# திக்குவிசயப்படலம்.

கனைகழல்வீரனுங்காவலான்றரு
புனைமணிமுடியொடும்பொலிந்துதோன்றினன்
றினகரன்றிவாந்தகாலத்திற்சேர்த்திய
வினவொளிகொடுகனலிலங்கிற்றென்னவே. (க)

நிமிர்தருமிசையினுன்றன்னைநோர்ந்துமு
னிமிர்தருபுகைக்கனலென்றுநோக்கிய
வமரிடுமதிபலவரசர்பின்னர்தந்
தமரொடுமெஞ்சிகைத்தழலினேக்கினர். (உ)

இச்சையாங்கட்புலப்படாளென்றெண்ணினு
நிச்சமாமன்னவனிறைந்ததேசெனுங்
கைச்சரோருகத்திடைவிளங்குங்கஞ்சமென்
பிச்சமேகொடுதிருப்பெரிதுபேணினள். (ங)

குருதிராஜெளிறுவேன்மன்னன்கொற்றமே
கருதிராவலர்தராவுறைந்துகாமரு
பரிதிநாண்மலர்ப்பொருட்டுறையும்பார்தரு
சுருதிநாயகன்மயிறுதிப்பதாயினள். (ச)

ஒருமனுமுதலியமன்னரொண்புய
மருதடைந்திடினுமோர்காலுமன்றலைப்
பெருளெனப்புதுமணம்பெற்றபெற்றியி
னருமலர்ப்புயம்புவிநங்கைநண்ணினள். (ரு)

உரப்பயோததிவரும்பருணதன்
பரப்பெலாமெல்லெனப்படர்தல்போலவே
திரப்பதாதியங்கடற்செல்வன்செய்யகோல்
புரப்பதாயெண்டிசையளவிப்போயதே. (௬)

பார்தனிலின்னணம்பருவங்கொண்டெழு
கார்தருகொடையினன்விளங்கக்காட்சியிற்
கூர்தருகலையெலாங்கொடுத்தும்வாங்கியும்
தீர்வினையிலான்றெளிபருவஞ்சேர்ந்ததே. (எ)

வேறு.

இனிப்பாலோதுமொழியோடுமேகாநிற்குமுயிரோடுந்
தனிப்பாருள்ளர்தமொறச்சாருந்தடங்கார்தணந்தேக
நனிப்பான்மையநன்னெறிகூடிநலியும்பாசவிருணூறுந்
துனிப்பாதகவல்வினைநீக்குந்தூயோர்போன்றசுடர்வானம். (அ)

தேமாலிகைமன்னவன்புகழ்வான்றீண்டநோக்கிநம்வலிமுன்
போமாறடர்த்தான்றனதளவேயொளித்தல்போன்றுபோயதுபார்
வேமாறிரவிநெடுங்கரத்தால்வெந்தீவிளைக்குமுதுவேனிற்
கோமான்வென்னிட்டொளித்தோடக்குனியும்வானக்கோதண்டம்.

களிக்கலாமிக்குளதானைக்கைவேன்மன்னன்கடன்முரசின்
றெளிக்கலாயவொலிகேட்டுச்சிலம்பறீரிந்திரன்யான
மளிக்கலாயநீர்வறந்திட்டகலாவாலைசயந்தத்தி
லொளிக்கவான்கண்டிறந்தனபோல்விளங்காநின்றவுமொலை. (௧0)

ஊனேறயில்வெஞ்சரமாரியுய்த்திட்டொல்லாவுயர்வலியாற்
றேனேறலர்க்கற்பகநீழற்றேவனேருஞ்செருமீதில்
வானேர்வெற்பின்மயில்களிப்பமன்னன்கணையான்மடிந்தன்று
தானேவீழ்ந்துபிலம்புக்கபோல்வுருமுச்சாம்பினவே. (௧௧)

வில்லார்கனகமணிப்பைம்பூண்விளங்குங்கொங்கைவேழமட
நல்லாரளகபந்தியெனவிருண்டசெவ்விநளிர்தண்கா
சொல்லார்விலைமங்கையரின்பந்துய்த்தேயூடத்தோய்பொருளொன்
றில்லாவார்வத்திளையோரிற்களியிற்றீர்ந்தவினமஞ்ஞை. (௧௨)

துறைவண்டார்கைத்திருவன்னூர்நிற்பத்துணைக்கணிழலதனை
யுறைவண்டாணந்தெளிநீருட்கயலென்றுன்னுமொளிர்வாவி
நிறைவண்டாமக்கருவிளையின்செம்மல்கரியாநிமிரறுகாற்
சிறைவண்குமுதநாறும்போதிற்செந்தீவிளைப்பசெங்காந்தள். (௧௩)

நீடிக்கேறும்புகழ்வேந்தனைராராயநிலவேந்தர்
பீடிற்றேயும்பெரும்புகழ்போலக்காநின்றபெருந்திக
ஞாடிக்காலபாசத்தினனுகித்தியகொலைநாளு
நேடிக்கூட்டுங்கொடியோர்தநெஞ்சம்போன்றநெறியெல்லாம். (கச)

வேறு.

னைதிகழ்த்திறப்பருவங்காண்டலு
நெய்திகழ்குரூஉச்சுடர்நிலவுவேலினான்
மெய்திகழ்மந்திரத்தலைவரோடும்வே
றெய்திபின்னனைமெடுத்திசைப்பதாயினான். (கரு)

கயந்தருதானைவேன்மன்னர்கைக்கொளுஞ்
சயந்தருமெய்ப்பெருஞ்சீர்த்திதன்னினும்
வியந்திடுமாதிரவிசயமெய்ப்புக
ழுயர்ந்ததென்றென்மனத்துற்றதுண்டரோ. (கசு)

மெய்ம்மனமந்திரவிதியினான்மிகைத்
தெம்மனர்விசயமுந்திருவும்வாரிநின்
றெம்மனர்க்களித்திடுமியல்பினீரிசை
நும்மனக்கருத்தினைநுவலுவீரென்றான். (கஎ)

என்றலுமதிக்கதிரிறுப்பநீர்தருந்
துன்மருங்காந்தமேயென்னச்சொன்மதிக்
குன்றிருவருளலானுளகொலென்றெதிர்
நின்றடிதொழுதிவைநிகழ்த்தன்மேயினார். (கஅ)

களம்படுபன்மதிகடிந்தொன்றாக்கிய
விளம்பருமந்திரவிதியையேதக
வுளம்பொதிமன்னவனொருவனாமெனத்
தளம்பலின்முரசறைந்துலகஞ்சாற்றுமே. (க௯)

இணந்தருசந்திவிக்கிரகம்யானமா
சனந்துவைதத்தொடாச்சிரயந்தானெனு
மனந்தகுகுணங்களோராறும்வல்லகோ
வனந்தபூபாலர்கட்கரசனாவனே. (உ௦)

சந்தியேதம்மிலொத்திருத்தலுழ்வுறு
மந்தில்விக்கிரகமேவிரோதமாகுமாற்
சிந்தைகொள்யானமேற்செல்லலாசன
முந்தியகாலமங்குணர்ந்திருத்தலே. (உக)

நடத்திருமன்னவர்தம்பின்மாறுகொண்
டிடப்பொதுவிருத்தலேதுவ்வதமென்பராற்
றிடத்தவாச்சிரயமங்கொருவன்செய்சமர்
கடக்கமற்றொருவனைநட்புக்காண்டலே. (உஉ)

விருத்திநற்றுனைநீள்கயமென்றேமிக
வுரைந்தனவுதயமோர்மூன்றுமோர்ந்துள
திருத்தகுமன்னவன்றேவர்தம்மையும்
வருத்தியதெவ்வினைவலியின்றாக்குமே. (உங)

ஏறுதன்செயல்பலிப்பெய்தமாற்றவன்
மீறுவெஞ்செயல்குறைந்திடல்விருத்தியாங்
கூறுதானஞ்சமங்கொளல்விருத்தியை
மாறிநின்றுரைப்பதேகயத்தின்வண்ணமே. (உச)

மந்திரம்பிரபுவுற்சாகமாம்வல
மூந்துறுசத்திகண்மூன்றுமங்கது
தந்திடுசித்தியுந்தரிக்குமன்னவற்
கெந்தமாநிலங்கொலோவெய்திடாதவே. (உரு)

சோகவுட்டாள்செடநூடங்கும்வெம்பகை
பாகமிட்டாழ்வினிற்பதிந்ததாயினு
மாகமுட்டாவழாவாகையோர்புக
ழாகவொட்டாதறையாணியாகுமே. (உசு)

சனந்தருபகையைவேர்களைதலின்றியே
தனந்தருபுரவலர்தழைப்பதெங்ஙனே
நனந்தலையுலகிருணலியுமாயினுந்
தினந்தொறும்பரிதியுமலைந்துசெல்லுமே. (உஎ)

எறுழ்வலிப்பெரும்பகைதாழ்ந்தவென்றுதாந்
தெறுவலியடக்குதல்சீரிதல்லவா
ஆறுதுணையடியிற்கீழ்ப்பட்டவொன்றிலாச்
சிறுதுகளெழுந்தவர்சென்னிமூடுமே. (உஅ)

புகுநிதிநிறைவெனவெறுத்தல்பொங்கெழி
ருகுகதிர்முடியினார்சூழ்ச்சித்தல்லவாற்
றகுசலநிதிநிறைதரத்ததாயினு
மிகுதிவரவினைவெறுப்பதில்லையே. (உகூ)

ஆதலின்மந்திரவிதியுமன்னதாற்
றீதிலசெய்வனசெய்யின்மிக்கதே
பேதறச்செய்வதேபெற்றித்தாயதோர்
நீதியென்றவனருள்சூடிநீங்கினார். (௩௰)

வேறு.

புனைமாமகுடவேல்வேந்தன்றிசையோரெட்டிற்போர்கடந்து
வினைமாண்வாகைதனிசூடவிரும்பாநின்றும்வீழதரச்
சினமால்யானைமிசைமுரசமறையுமாறுசெய்வீர்க
ளெனமாருதத்தின்வேகத்தார்சிலவர்போகியிதுசொன்னார். (௩௧)

நெடுங்கட்டிசையெட்டினும்விசயத்தம்பநிறுவிநிலவேந்தன், நெடுங்கைச்சரத்தாற் புகழ்பொறிப் பான் றுணிந்தான்முரச மறைகென நின்,றொடுங்கிப்பெரிதப்பணிதலைக்கொண்டுள்ளார் களிப்பான்வள்ளுவனு, மடுங்கைக்களிற்றின்பிடரேறியணிமாமுரசமறைகின்றான். ( )

கலித்தாழ்கடற்பார்பரந்துதிசைகாணுநின்றுகனற்றேற்றும்
புலித்தானையர்வின்மலையேறிப்பொன்னுடளக்கும்புகழ்வாய்ப்ப
வொலித்தாள்கழலான்றிசைவிசயங்கொள்வானொருமையுள்ளத்தே
வலித்தான்மதத்தமால்யானைமான்றேரரசர்வம்மின்கள். (௩௩)

சேகாயத்தினீங்கரிதாய்ச்செறிந்தமறுவெஞ்செருக்களத்தி
னேகாநிற்குமவ்வேலையெறிந்தோரெறிவேற்றழும்பாகி
லாகாயத்தின்வருதிங்கட்கழகன்றேவென்றமரதனின்
மா*காயத்தின்மூண்மதுகைவேட்குமறவோர்வம்மின்கள். (௩௪)

வாலப்பிறையின்கோட்டரவம்வளைத்தாலன்னகிம்புரித்திண்
கோலத்தவளமருப்பினுதியேதிகொளுத்திக்குன்றுதித்த
காலைக்கதிரோனிகரோடைபுனைந்துமலர்த்தேங்கண்ணீத்து
மாலைச்சுரும்புண்மதயானைபண்ணுயாரும்வம்மின்கள். (௩௫)

கார்ப்புல்லியவொல்லொலியுருளிற்கலியாநிற்பக்கடுஞ்சாரி
பேர்ப்பின்வயிரவச்சதனிற்றடையாகாதுபெரிதாய்ந்து
போர்ப்பல்படைசேமித்திரவிபுரைவெண்படத்தாற்புறம்போர்த்த
வார்ப்பொனுகத்திற்பரிபூட்டிமணித்தேர்புனையாவம்மின்கள். (௩௬)

அனலிற்றேய்ந்தவ்வனலையெலாமஞ்சார்க்களிக்குமடற்படையின்
கனமுற்றார்புட்டிலும்விசித்துக்கதிர்ச்சாலிகையுமணிந்துகதி
ரினவிற்றேரினிடைப்பூண்டவெழுமாவதனினிருங்காலின்
மனனிற்றாவுந்தடம்புரவியணிபாவம்மின்வம்மின்கள். (௩௭)

---

*காயப்.-கோபம்.

என்னப்பெரியவீதிதொறுமுரைத்திட்டெங்குமெங்குமொலி
துன்னத்தமரமணிமுரசமறையாநிற்பத்துணிந்தியாரு
முன்னற்கரியகடையுகத்தினுடையாரேமிவரையுடைத்துப்
பின்னப்படுத்திப்புறவாழிவரல்போல்வந்தபெருஞ்சேனை. (நஅ)

வேறு.

பலம்புரிசருவோரைந்துநேர்சொலப்படினுமிக்க
நலம்புரியற்றைநாளினன்கொடைக்குடையாநிற்பக்
குலம்புரிமகரவேலைகுழீஇக்குரைத்தெனக்கொற்ற
வலம்புரிச்சுரிசங்கார்ப்பவெழுந்தனன்மன்னர்கோமான். (நகூ)

இங்கிவனெழுந்துசெல்லுமெல்லையின்முன்னரீண்டி
மங்குன்மென்குழலார்சிந்துமங்கலப்பொரியினீட்டஞ்
சிங்கலிலரசர்சீர்த்திசின்னபின்னங்களாகிப்
பொங்கலமென்னவந்துசரண்புகல்போன்றவன்றே. (சம்)

வண்குழைப்புதியசோதிமதியிருமருங்கும்வந்த
கண்கொளற்கரியமின்னுக்குழுவினிற்கவினுநிற்ப
வொண்குலப்புடவியெங்குமொருதனிகவிக்குங்கொற்ற
வெண்குடைத்தரளராசிவெண்ணிலாவிசும்புவீங்க. (சக)

செங்கதிர்வெயிலையெல்லாமொன்றறச்செய்ததன்ன
மங்கலமகுடகோடிமணிக்கதிர்திசையைவவ்வத்
திங்கள்வெண்கதிரையெல்லாமிரண்டுறச்செய்தவன்ன
பொங்கெழிற்கவரிமென்காலிருபுடைபொலிந்துவீச. (சஉ)

சிந்துரக்கமலத்தாமச்சேவடிக்கழலிற்செவ்விச்
சந்திரப்பதுமராகத்தரளத்திற்றழைத்தசோதி
யந்தரப்புடவிவைப்பிலதிசயம்விளைப்பவொன்றாய்ச்
சுந்தரச்சுடரோர்மூன்றுந்தோற்றியதுப்பிற்றோற்ற. (சந)

வெங்களிவிந்தைக்கன்பாம்வண்டலைவிளைக்கும்வெய்ய
சங்கொளிப்படைகணுங்குமேந்தினர்மருங்குசாரத்
துங்கவெம்பதாதிவெள்ளத்தார்ப்பொலியண்டந்துன்றிப்
பங்கமில்பூதமைந்தின்பரப்பெலாம்பரவாநிற்ப. (சச)

சொல்லரிபிறக்குஞ்செங்கட்புலியனசூரர்சூழக்
கொல்லரியேறுபோன்றகொற்றவராறுமுன்னச்
சல்லரிமுழவங்கோடுதண்ணுமைதடாரிதக்கை
யெல்லரியோதைபொங்கியெழுகடலொலியைவீட்ட. (சரு)

கொழுங்கனல்வடிவோர்மூரற்கொடுங்கனல்புரங்கண்மூன்றும்
விழுங்கிடவுய்த்தநாளில்வாசுகிவிசிப்புநீங்கி
யழுங்கலிலனந்தமாகியந்தரமடைத்திட்டம்பொற்
செழுங்கிரிவழிப்பட்டாங்குத்திகிரியந்தேர்கள்செல்ல. (சசு)

புடைத்தகுசிறைகடம்மையரிந்தநம்பொலிந்தமொய்ம்பைத்
துடைத்தவன்றன்னைவென்றோனிவனெனச்சூழ்ச்சியானு
ளடைத்துலகுள்ளமற்றைக்கிரியெலாமமரைநாடிப்
படைத்துணைவந்தபோலப்படுமதக்களிறுபோத. (சஎ)

கதந்தருபுரவியேழுகொண்டுநங்கண்முன்யாவன்
மதங்கொடுவருவானென்றுவிரவியுந்தேருமாவும்
புதைந்திடவாளிபோயகுரத்தினிற்புடவிபுல்லித்
துதைந்தெழுதூளிபோக்கித்துரகதராசிசெல்ல. (சஅ)

அலங்குவாளதனிற்றோற்றுமணிநிழல்விந்தையென்னும்
பொலங்கொடியுவகைமிக்குநடஞ்செயும்பொலிவிற்றாக
வலங்கெழுவாகைசூடிவச்சிரன்றிசையைநோக்கி
யிலங்குமாமணிப்பைம்பூணுனிசையொடுமெய்திறனே. (சகூ)

வேறு.

இட்டகாலெடுத்தெய்தலாவகையளறிழைப்ப
கட்டுவார்கழல்வீரர்தமூரத்திழிகலவை
மட்டிலாவுமக்கலவையிற்குழிந்துமண்சுமக்கு
மெட்டராமுடிதொடுவதேர்போகியநெறிகள். (ருO)

இனிதினன்னெறிதொறுந்திரம்பாமிகுந்தெழுவ
புனிதவெம்பரிவிலாழிமாநதிதிசைபுடைத்து
நனிதுளும்பிநேர்பாய்தருவேகவந்நதியைத்
தனிவிழுங்குவகைம்மலைமும்மதச்சலதி. (ருக)

மலைந்தவ்வாரிதிதிரைக்கரம்புடைத்திடைவைய
முலைந்திடாவகைபருகுவவுவைவிழியுகுதீ
கலைந்தியாவையுமவ்வனல்சுடச்சுடக்கருகித்
தொலைந்திடாதவிப்பனவவைகையுமிழ்துவலை. (ருஉ)

தடைப்படாதவத்துவலைமாரியைத்தடுத்தெழாவிண்
ணிடைப்பதூளியத்தூளியைவான்மிசைக்கிளறித்
துடைப்பபல்கொடியன்றியுமேற்செல்சுருங்க
வடைப்பவெண்ணிலவாதபத்திரத்தொகையம்மா (ருங)

தொடுங்கைவேலொடுஞ்சூரமர்மதக்களிதோற்ற
நடுங்கையானனமெனவருநாந்தருசெய்ய
கடுங்கண்மாதிறன்மறவர்முன்கடாந்திறந்தூற்று
நெடுங்கைமாவெதிர்செல்லினுஞ்செல்வரோரீத்தோர். (௫௪)

அடல்செய்வாகைமுன்னெய்திடவரவம்பின்னடப்பப்
படல்செல்தூளிபின்போதரப்பின்செலும்பகுதி
கடல்செயோர்நிலைபடைத்துளதாயினுங்கணிக்கின்
மிடல்செய்நானிலைபடைத்துளபோன்றதுவிளம்பில். (௫௫)

விறன்மிகும்படைதொடர்ந்திடக்கீட்டிசைவேலை
திரணிறைக்குபுசென்றிடுந்திங்கள்வெண்குடையோன்
பெறலருந்தவட்பெற்றியின்வரந்திபின்ன
ருறநடந்திடும்பகீரதன்றன்னையுமொத்தான். (௫௬)

சூழிக்கார்வரைநிருபரையெதிருயிர்தொலைத்தும்
பாழிற்றள்ளியும்பலன்கொண்டுநன்னெறிபடர்ந்தா
னூழிற்றூர்வனத்தருந்தடையுலகெலாநூக்கு
மூழிப்பேரொலிவேகமால்யானைக்குமுளவோ. (௫௭)

உலவுநாற்படைமன்னவரூன்றவெஞ்சமத்தை
நிலவுதோற்றியவேல்கொடுகடந்துசெனிருபன்
குலவுசோற்றலர்க்கைதைவெண்புளினமென்குன்றப்
புல்வுமாற்றிடும்புணரியந்தடங்கரைபுக்கான். (௫௮)

வேறு.

நீவிடாவெரிசிறுகட்சினவேழப்பெருமேக
மோவிடாதெமைப்பருகாவொழியாவென்றுறக்கோடிச்
சேய்விடாநிமிர்தவளத்திரைக்கரத்தால்வயிறலைத்து
வாய்விடாநின்றரற்றிமறுகுதல்போன்றதுவாரி. (௫௯)

முறைகொடேநிமிர்கூம்பின்மிசைத்தொடுப்பமுதிர்காலி
னிறைகொடேவிரிபாயதிமில்சேறனீராழி
யிறைகொடேவருந்தானைக்கடற்கஞ்சியேங்குபுபல்
சிறைகொடேதிசைபறந்துசெல்வதும்போன்றுளதே. (௬0)

பந்தியால்விழுந்தெழுவெண்டிரையுடையப்படுவேலை
புந்தியாநெடுங்கோட்டுப்புள்ளுகைக்குறும்போது
சிந்தியாவெம்வயின்வந்தடைந்தோரைச்செறேலெனமுன்
வந்தியாவரசன்றாள்மரீஇயதும்போன்றதுமாதோ. (௬௧)

பேற்றுடாழ்புனன்மூழ்கியெழுந்திடும்புட்பேரொலிகள்
தேற்றுடாரவ்வேலேதேர்வேந்தனூற்புலம்பு
ளேற்றிடாவடைந்தோரையினையேனெஞ்சினையேலென்
ருற்றிடாவவர்க்கின்சொலளிப்பதும்போன்றதையம்மா. (௯௨)

சாதுரியத்திறலான்றன்றனிவேலேநிறமேற்றுக்
சாதுகீள்சமரிலுயிர்கழியாதுகடலேறு
மேதிலீரென்செய்வீரிதுசெய்வீரெனப்புதிய
போதுதூய்த்தெளிவிப்பபோன்றநறும்புன்னாகம். (௯௩)

வெம்புபோரினுக்கஞ்சும்வேல்வேந்தரெனவொளித்த
வம்புகால்மடற்றூமடத்தாழைவனச்சூழல்
கம்புளாங்கவருயிரின்றென்றுகக்கலந்துள்ள
வம்பொனுரெனவிரியல்போனமடவன்னமெல்லாம். (௯௪)

வேறு.

இன்னவாரிதியைநோக்கிக்களிகொண்டவிகல்வேன்மன்னன்
றன்னதாஞ்சிந்தைபோயநெறிதொறுஞ்சாராநின்ற
மன்னர்மாமலையைவவ்வியெடுத்தெறிதரங்கவாரிக்
கன்னிமாநதியினின்றவஞ்சியேகடுத்தார்மன்னோ. (௯௫)

முள்ளொடுதுறுமுஞ்சாயைமுண்டகத்தீரநீங்கி
வள்ளொடுமிளிரும்வேலான்மணிமுரசொலிப்பப்போகிக்
கள்ளொடுகிடந்தபைந்தேன்கணஞ்சிமிறென்னுங்காமப்
புள்ளொடுமொலிக்குஞ்சோலைப்பொங்கெழில்வங்கம்புக்கான். (௯௬)

அன்னகரரசர்தங்களிசையெலாமரத்துளிட்டுப்
பின்னரினெழாதேயாணிபெரிதுறக்கடாவியாங்குத்
தன்னதுவிசயந்நீட்டுஞ்சயத்தம்பமாகக்கங்கை
நன்னதியரங்கத்தான்றனநந்தலைநிறுவினானே. (௯௭)

வீறுபட்டுடையதானைவேந்தனல்வீயாவீயு
மூறுபட்டுடைந்துமீளவுய்ந்துளமன்னரெல்லாஞ்
சேறுபட்டடைம்பூநல்குஞ்செய்யிடைப்பறித்துமீள
நாறுபட்டனபைங்கூழினன்பலநல்கினாரே. (௯௮)

நிலக்களமுழுதும்வல்லேவிமிர்ந்திடுநேமிவேந்த
னலக்களமுடையமேகநன்கதிர்ச்சேலவைநாளும்
விலக்களமுடையவேலையிதுவெனவீழ்ந்துநீருண்
குலக்கபிசாநதித்தன்கோட்டகங்குறுகினானே. (௯௯)

மைவருமுந்நீர்ப்பாரின்வரம்பிகந்தெழுந்துவானந்
தைவருபுகழ்சேர்வென்றித்தடஞ்சுடர்ச்சமரவேலான்
கைவரையளப்பிலாதநிரைத்திட்டங்கதுவேகாட்சிச்
செய்கரையாகப்போகிச்செறுக்கருங்கலிங்கஞ்சேர்ந்தான். (௭௰)

அந்நிலையரசர்கோமானதோரணைநடக்குவான்செங்
கைத்தலத்தெடுத்தவள்வாயங்குசங்கந்துசீறும்
பித்திவர்மத்தமாவின்மத்தகம்பிறங்கிற்றென்ன
வைத்தனன்விசயச்சின்னமயேந்திரத்துச்சியாதோ. (௭௧)

கல்லெனவெழுந்தவோதைகடற்படைகரந்துகாமர்
மல்லலம்பேரூரெங்கும்வயின்வயின்றாவிமெய்ம்மை
யல்லனவறியாநல்லோரகத்தெழுசீற்றத்தாய
சொல்லனவழற்றீயூட்டிமதிற்புறஞ்சூழ்ந்ததன்றே. (௭௨)

எடுத்தனவியற்பதாதிப்பெருக்கினையியம்பலெங்கே
கடுத்தனபுரவிவெள்ளங்கடையுகக்காலின்யாவும்
படுத்தனவானைமேகம்படிந்தறல்பற்றிவாயின்
மடுத்தனதூளிதுன்னவறந்ததையகழிவாரி. (௭௩)

வார்செல்லோடுமேனிகருகியேமலிந்துதன்க
ணீர்செலவரற்றாநின்றுநிரந்தரநெருங்கிநீண்ட
கார்செலவிறந்துமீளவுயர்கொடிக்காவலிஞ்சி
தார்செலவிடிந்ததெங்குந்தழைத்ததுசமரவோதை. (௭௪)

அவ்வுழித்தூதரோடியாயுளிற்றாவதெல்லா
மிவ்வுழிநிகழ்ந்ததும்பரன்றியேயிம்பரேகி
யெவ்வுழியுறைவதென்னாவிரைத்துரைகுழறியேத்தித்
தெவ்வுழிச்செயங்கொள்வேலானடியிணைசென்னிசேர்த்தார். (௭௫)

சரத்தினிற்குலிசத்தானைவென்றவன்றானையாகீ
டுரத்தினிலெழுந்தசெந்தீமுதல்வனுக்கொல்லைநாண்முப்
புரத்தினையவுணரோடுந்தீத்தலிற்போயசீற்றம்
பரத்தினிலெமதூரெங்கும்விளைந்ததுபாழிவேலோய். (௭௬)

கானரண்கரிந்ததோங்குங்கல்லரண்பொடிந்ததெண்ணீர்
வானரண்வறந்ததும்பர்மதிலரண்மடிந்ததாகத்
தூனரண்டிறந்திட்டொன்றாருயிர்க்குவானுலகுநல்குங்
கூனரண்டருவிற்செங்கைக்கொற்றவவென்னக்கூறும். (௭௭)

ஒல்லையேயெழுந்தாஞ்சுமொருவனாலடக்கப்பட்ட
தில்லையேயென்னாக்காங்கெரியெழநோக்கிமேக்கிற்
செல்லையேய்நெடுந்தேர்மன்னன்கணத்தினிலெமதுசேனை
வல்லையேயெழுகவென்றானிமைப்பினின்மண்டிற்றன்றே. (எஅ)

மண்டுவெஞ்சேனையென்னுமதகரிக்குழாத்தினூடோ
ரொண்டிறற்சீயம்போர்வேட்டெழுந்தெனவுருமிற்சீறி
யண்டமதெங்குமோதியமரொலியடையமீறுங்
கண்டகர்நடுங்குமாறங்கெழுந்தனன்கலிங்கர்கோமான். (எகூ)

வேறு.

முகிலிடுமுருமெனவிழியிணைமுதிர்தீ
யுகுதலினிரவியுமுறுமழலெனவே
துகிலிகையொலிகொடுதுயல்வரவிடமே
மகிதலமிலையெனமதகரிவரவே. (அ0)

மாவொலிவளையொலிவயிரொலிமறவோர்
கூவொலிகரியொலிகொடியிடைமணிசேர்
நாவொலியுருளொலிமுழவொலிநனிநாண்
மேவொலியகிலமும்வெருவரமிகவே. (அக)

குடைநிழல்கெடவருகுறுகலர்நிறமீர்
படைநிழலெழமிகுபனடஞர்கள்கவசத்
திடைநிழல்கவரிகடுயல்வரவிடைபோம்
நடைநிழலவைகெடநனியுறவெழவே. (அ௨)

இசைபுகலொடுபுவிமுழுதுநமிறவா
விசைபுகலெமதறிவிலநிலையெனவே
திசைமுகமதவரைசெருவரலெனவே
திசைமுகயதுகொடுசிலரெதிர்செலவே. (அ௩)

காமரமதரளிகளிகொடுகதறுங்
காமரமலரொடுகலனுரமிலகத்
தோமரமதுகொடுகடிதருசுடர்சேர்
தோமரமதுகொடுசிலர்முனைதொகவே. (அ௪)

காந்தகவெயிறருகதிரவவுடைதன்
காந்தகவையினெறிகடிதருளெனவே
நாந்தகமிளிர்தருதெறுவலிநனிசேர்
நாந்தகமதுகொடுசிலர்செருநணுக. (அரு)



மெய்ர்த்தனுவிதுசமர்விழவிடலிமையோர்
மெய்த்தனுபவமுதவுவர்மிசையெனவே
கைத்தனுவொடுதிரிகணைபுறமிளிரக்
கைத்தனுவொடுசிலர்கடிதெதிர்செலவே. (௮௬)

பைத்தலைவளருலகமுமெரிபடவே
பைத்தலைவிலமனவலிகொடுபடரா
மொய்த்தலையனபடைபுடைவரமுனைசேர்
மொய்த்தலைதனில்விரைவினின்முடுகினனே. (௮௭)

புகலினன்மறைதரவெழுதருபொடிவான்
புகலினநிலமுழுவதுமிருள்புகவே
யிகலினகளனிடையெறிபடையெறியா
விகலினவெதிரெதிரிருபடைகளுமே. (௮௮)

எட்டினவயவரியெனவிரிதிசையோ
ரெட்டினர்மகிழ்தரவெறிபடைகளைநேர்
கட்டினர்படைகொடுகடிதுயிர்கழியக்
கட்டினர்சிலர்சிலர்புயமலைகளையே. (௮௯)

ஊறனைவயின்வருபவவினையொழியா
தூறனைவுறவிதையொழிகுவமெனவே
வேறனைவருமிரிதரவெதிர்மிதியா
வேறனைவிடுமெனமுனையிடைமிடைவார். (௯0)

மையறலளகவிண்மகளிர்கையுறவே
மையறல்பொழிவனவெனவருகணையாற்
கையறல்கருதிலர்கடிபடையெதிர்போய்க்
கையறலிலையெனநெடிதுயிர்கழிவார். (௯௧)

வேறு.

விடாதுறுபெருஞ்சமரமிவ்வகையின்விஞ்சத்
தடாதுயர்பெரும்புகழினன்படைதழைப்பக்
கெடாவமர்செய்தம்பகுதிகெட்டிடுமெவ்வேல்லைவக்
கடாசலநெடும்படைவிடுத்தனர்கலிங்கர். (௯௨)

பாற்றினமிசைப்பெரிதுபந்தரிடமுந்தா
வேற்றமொடுருத்தெதிரெதிர்ந்தவுயிரெல்லா
மாற்றன்மதவெற்பினமெனும்பெருமனந்தங்
கூற்றமெறிகைக்கயிறடர்த்தனகொதித்தே. (௯௩)

பத்திபணிமொய்த்தமருமர்துளைபடப்பா
யத்தியின்மருப்பிடைகிடந்தவுடல்வீரர்
மத்தகமிசைப்படைகொடெற்றவுதிர்மைதீர்
நித்திலநிறைந்தனநெடுங்குருதிவேலை. (௯௪)

காயுமதவேழமறவோர்கடியநெஞ்சிற்
பாயவுருவாநிலைபதிந்தநிமிர்கோடு
தீயவினைவஞ்சகர்தநெஞ்சினிடைசென்னீர்
சாயநமதூதரறைசல்லியநிகர்த்த. (௯௫)

பண்மிகுதொடைத்தரளவெண்குடைபறித்தே
கண்மிகுநிலத்திடைசிதைத்துவருகைம்மா
வெண்மதிமுகத்தெழில்சுருங்கிமெலிவெய்த
மண்மிசையரைத்தவொருவானவனையொக்கும். (௯௬)

மொய்யின்மதமாவிசயவீரரைமுருக்கிக்
கையினெடுவான்மிசையெறிந்தனகவின்றேய்
செய்யகதிரூடுநனிசெல்லுமுயிரோடே
மெய்யுமினிதேகும்வகைவீசுவனவொத்த. (௯௭)

மெய்ம்மலைபெருஞ்சிரவியன்மலைவிழுந்த
கைம்மலைநிவந்துகுவிகான்மலைமிகுந்த
விம்மலையெனப்பெருகுவெம்மதம்விடாதே
பெய்ம்மலைவிளைத்திடுபெருஞ்சமரினம்மா. (௯௮)

விளைந்தசெருவங்கதைவியந்தரகுமன்ன
னுளைந்தசினவெங்கனலுறப்புருவமோட
வளைந்தசிலைகொண்டமர்மலைந்தனன்வயப்போ
ரளைந்திடுகலிங்கருமதிர்ந்தெதிரணைந்தே. (௯௯)

விரிந்திடுதடஞ்சிறையினைத்தனிவெகுண்டே
யரிந்திடுமடற்குலிசவண்ணலவன்மீதே
கரிந்திடுமலைக்குலமெழுந்தடர்கன்மாரி
சொரிந்திடலெனப்பகழிமாரிகள்சொரிந்தார். (௧௦௦)

அங்கவர்சொரிந்தகணைமாரியினமிழ்ந்திச்
சங்கமொடுகொம்புதுடிதண்ணுமைதழங்க
மங்கலமதற்குரியமாநதியினூடே
முங்கியெழுகின்றதெனமொய்ம்பொடுமெழுந்தே. (௧௦௧)

பாயுமதவெற்பினமழுங்கவெதிர்பம்புஞ்
சீயமதெனச்சிலையினாணொலிசிறப்பக்
காயுமதுகைப்பகழியெண்ணிலகடுப்பால்
மேயதிசையெட்டுமிரியும்படிவிடுத்தான். (௧0௨)

கண்டமதறுத்தசிலவத்தலைகவர்ந்தே
யெண்டகுதிசைக்கரிமுனிட்டசிலபல்ல
மண்டமதிரச்சிலவருங்கணையினால்வீழ்
தொண்டமதனைக்கொடுநிமிர்ந்தசிலதோணி. (௧0௩)

வேளினுருவாய்வருவிசைக்கணைகள்கட்ட
தாளினொடுபோகியலையுற்றபல்சரங்க
ளாளினொடுபோயலைகடந்தனவனந்தம்
வாளிவயினீருள்வெளிபெய்தசிலவண்டு. (௧0௪)

பாரமதமாவெரிநிமிர்ந்தனபதாகை
யாரவடிவாளிபடவற்றுவிழலம்மென்
மூரலரமாதரொருவர்க்கொருவர்முந்தா
வீரருரமேவநிலமீதிழிவதொத்த. (௧0௫)

பூசன்மதமாமிசைபொலிந்தமறவோர்நீ
டாசிலகடுங்கணையடத்தரையில்வீழ்தல்
வாசமடமாதர்தமறப்பினுறுகாமப்
பாசமொழியார்கள்வரைபாய்தலைநிகர்த்த. (௧0௬)

தாடமுவுவாலதியதந்திசிலமுந்து
மோடுதருதாடுமியமுன்னர்விழலின்று
வீடுபுரிபாகினையடர்த்தெரிசினத்தாற்
கோடுமுதரேறுயநிழல்குத்துவனவொத்த. (௧0௭)

வீழ்ந்தகரிமீதொருமருப்பிறவிழுந்தே
சூழ்ந்தலகைபம்பவெளிதுஞ்சுவனவேழ
மாழ்ந்தகுரலோடலறியஞ்சனவரைக்கட்
டாழ்ந்துமுகிலோடுபிறைதங்குவனபோலும். (௧0௮)

தும்பிசிலகுற்றுயிரொடாழநிமிர்தொண்டஞ்
செம்புனன்மிசைத்தெரிவசேர்பதியையெல்லாம்
வெம்புகுருதிக்கடல்விழுங்கவெகுநாக
மம்புவிமிசைத்தலைநிமிர்த்தனவுமன்ன. (௧0௯)

சொன்னமலையிற்றனியெடுத்துவமைசொல்லி
லின்னமலைபொத்ததெனவெங்ஙனமுரைக்கேன்
முன்னமலையிற்பெரிதுபட்டுவிழுமூரிக்
கன்னமலைகின்றனகடாமலையைமாதோ. (ககo)

உய்த்தமனமெய்த்துதிரவீருளுடையோடப்
பத்தியினெருக்கிமகிழ்பாடினபல்லோரி
வைத்தவடிபற்றவெடிவான்ஞமலிமண்ணை
கைத்தலைபிடிப்பவினிதாடினகவந்தம். (ககக)

கீறுதருதுண்டமிரியும்படிகிடைத்தே
வேறுதருவெஞ்சமம்விளைத்தனவெயர்ப்பான்
மீறுகழுகுண்டனகிணைத்தசையில்வீழும்
பாறுகளுடன்கழுதைவாகினிபதாகை. (ககஉ)

துருத்திமடியின்புடைதொகைத்தலைகள்சோர
விருத்திமடிகுஞ்சரவிறும்புதொறுமேரு
வருத்திமனமிஞ்சநிமிரங்கையிளைகொட்டிக்
இருத்திமவினம்பலகுதித்தனகிளைத்தே. (ககங)

மதித்திடுதன்வெம்படைகள்முற்றமுயிர்மாயக்
கதித்திடுபெருஞ்சமர்கலிங்கர்பதிகாணு
வுதித்திடுநெடும்புகழ்பிலத்திடையுகைப்பான்
கொதித்திடுமுளத்தொடுமுரங்குலைகுலைந்தே. (ககச)

தாவிதுகிகழ்ந்ததினிவேறுதிசைதன்னின்
மேவுதுமெனிற்றிசையின்மிஞ்சுவனவன்றால்
யாவதுநினைந்துபயனன்றுசரணெய்த
லாவதெனவென்றியனலர்ப்பதமடைந்தான். (ககரு)

அங்கவனடைந்தபினரும்பதிகொடுத்தே
பொங்குசிதிகொண்டலையபூகவரைபோகித்
துங்கவுடுவின்வடிவுகொண்டுவரிதுன்றுஞ்
செங்கைமுனிதங்கியுளதென்றிசையடைந்தான். (ககசு)

வேறு.

பாடுலாம்பரியசெம்பவளச்செங்கனற்
காடுலாங்குளிர்மதுத்தடங்கடந்தெழீஇப்
பீடுலாமோதிமப்பிள்ளைக்கொள்ளையின்
கோடுலாங்காவிரிக்கூலத்தெய்தினன். (ககஎ)

தொக்செழுவெங்கயக்கவுட்டுளைப்புற
முக்கணமதமணைமுலவியோடலான்
மைக்கொளுங்கடற்பெருமகிணைரையமே
கைக்கொளவர்பதிகடந்துபோகியே. (கச௮)

கொலையொடுகூற்றினையேவல்கொள்படை
யலையொடுமேவினனரியவான்கறி
யிலைதருமிருளிலாரீதம்* புக்குலா
யுலைதருமலயவெற்பொளிருஞ்சாரலே. (கசகூ)

மிடறெருகாவுயர்பரிவெள்ளத்தின்குர
மிடறவேலஞ்‡ சிதைந்தெழுந்தநுண்பொடி
யடறவாமதமணமடங்கவானையின்
கொடிறுவார்கரடமதடைத்தல்கூடுமே. (கஉ0)

ஓய்வறவுலம்பொடியெய்தவுன்றுபு
பாய்கரிகபோலமதுரிஞ்சப்பன்முறை
தேய்வுறுங்குங்குமப்பொடிகடிண்பரி
வாய்விளைவிலாழியம்பெருக்கைமாற்றுமே. (கஉக)

ஒழிவறவிடதரத்துடலஞ்சுற்றிடக்
குழிவுறசந்தினிற்கொளீஇயசங்கிலி
யழிதரமலைதருமசலமங்கையாற்
பொழிதருநீரினலருவிபொங்குமே. (கஉஉ)

மறந்தகுபொருநர்கைக்குந்தவைந்நுதி
திறந்திடவிறுவுடைந்தொழுகுஞ்செய்யதே
னிறந்தகுதூளியாற்கொடியர்நெஞ்சினில்
வறந்தனசுனைகளைநிறைக்குமண்டியே. (கஉ௩)

தெறுகதிர்க்கடவுள்வானவனுந்தேசுதாழ்
வுறுதிசைப்பாலினிதுறைந்துமோங்கிசை
நறுமலர்த்தொடையலான்வீரநான்மடி
பெறுதலிற்பொறுக்கலாதுளத்திற்பே0 சொடே. (கஉச)

செப்பருமினியசெந்தமிழின்செஞ்சொலார்
கைப்பனவேம்பினங்காமர்கண்ணிய
ருப்பினிற்கயல்பொறித்துளபதாகையர்
மைப்புயறனைத்தளையிட்டவாகையர். (கஉரு)

---

* ஆரீதம்-பச்சைக்குருவி. ‡ ஏலம் ஆகுபெயர். 0 பே-அச்சம்.

மாறில்தமிழ்க்கடற்பெருக்கின்மாட்சியான்
மீறியகுறுமுனிவைகும்வெற்புளா
ரீறிலபரம்பொருளடைத்திடப்பெருக்
காறியநெடியனைவைகையாற்றினார். (௧௨௬)

தழலெனவிருநிலப்பரப்பிற்சந்தத
மழல்கலிபிரிதரவளிக்குநீதியார்
குழலுடைத்தாட்சரோருகங்குழீஇயலர்
பழனவண்கூடலம்பதியின்வைகுவார். (௧௨௭)

ஆயிரமொட்டகஞ்சகடமாயிரம்
பாயிரும்பகட்டினமனந்தம்பல்பொருண்
மேயினசொணர்ந்திடாவிபுலைவைப்பெலாந்
தோய்புகழ்மன்னவற்றொழுவந்தீண்டினார். (௧௨௮)

வரம்பிலவலியினார்மடித்தவாயர்கைப்
பிரம்பினர்மலையினும்பெரியர்செம்மையி
னிரம்பியகண்ணர்கஞ்சுகியர்நீடிகு
ளூரம்புகல்சொல்லினருணர்ந்துபோயினார். (௧௨௯)

தேசினிற்சிறந்துவிண்ணுயர்ந்துசெவ்வியான்
மாசறத்திகழ்படமண்டபத்தரி
யாசனத்திருந்தருளரசரேறனா
னேசநற்றுடொழாநின்றுகூறுவார். (௧௩௦)

மன்னவநம்படைக்கடலின்வான்கரைத்
தென்னவரடைந்தனர்திருவுளத்துநா
ரென்னகொலென்னலுங்கொணர்மினீண்டென
வன்னவரன்னவரயலினமுன்னினார். (௧௩௧)

நிகழ்வனதெரியலாதெண்ணிநின்றுநின்
றகமிகவயரன்மினரசரீர்பெரும்
புகழுடைமன்னவன்பொறுக்குநல்லருட்
டகையுளன்வருகுவீரென்றுசாற்றினார். (௧௩௨)

மத்தவெற்புவரியும்வயங்குகொய்யுளை
யுத்தரிச்சலதியுமொளிறுவாட்படை
வித்தகப்புணரியுங்கடந்துவெண்ணிலா
முத்தவெண்குடையினான்முன்னரெய்தினார். (௧௩௩)

நாவடித்தொழுகுசெந்தமிழினற்றுதி
பாவடித்தொடையினூற்புகன்றுபாயொளித்
தூவடிச்சமரவேலரசன்சுந்தரச்
சேவடிச்சரோருகஞ்சென்னிசேர்த்தினர். (கருச)

நிறைதருமுவகையினிமிர்ந்துபல்பொருட்
டிறைகுவைசெய்துதஞ்சென்னிமீதினின்
முறைமுறையிருகரங்குவித்துமுன்னுறக்
குறைவிலதிருவினர்கூறன்மேயினர். (கருரு)

வேறு.

எண்ணின்றுயர்பொன்மேருவிரண்டின்றென்னவிமையோர்
கண்ணின்றுள்ளங்கவைக்குங்காட்சிக்கணியதாகி
மண்ணின்றிருநாற்றிசையும்வவ்விச்செவ்விவளத்தால்
விண்ணின்ளுெளிரிச்செம்பொன்மேருவரையுங்காண்மோ. (கருசா)

மற்றைக்கிரிகளெவையுமிதனோடுவமைவருக்கிற்
பொற்றைப்படுவதல்லாற்பொருவுந்தகையுமுளவோ
வொற்றைத்திகிரித்தேரோன்வெயிலும்வெளிறவொளிருங்
கற்றைக்கதிர்பெய்வெள்ளிக்கயிலையிதுவுங்காண்மோ. (கருஎ)

எண்ணெண்டிசையுநிறையாவிலங்குமதியினிலவின்
செண்ணங்கருகப்பரந்தசேணிற்றிகழ்வெண்புகழோய்
வண்ணந்தருமாமதியமணிநின்றுெழுகும்வனத்திற்
றண்ணென்றகையசந்தத்தமிழ்வெற்பிதுவுங்காண்மோ. (கருஅ)

அசைவோவிலதாய்மிளிராவழலுந்தூபமன்றி
நசையோடெவருந்தீண்டக்குளிருநலத்ததாகி
மிசைபோமெழுமாவுடையோன்வெயிலிற்றிகழும்வில்லுந்
திசைபோய்விரிசெம்பவளச்செந்தீக்குன்றங்காண்மோ. (கருகூ)

காமக்கடவுடானுங்கையேற்றினிதேகவரும்
வாமச்சொருபமுடையோய்விலையின்வரம்புமதிக்கி
லேமப்படிவவுலகுமிலங்குங்கனகமேருத்
தாமக்கிரியும்போதாத்தரளச்சயிலங்காண்மோ. (கசா0)

பொருளிற்படுவோருள்ளம்புலமைப்பெரியோர்ச்சேரிற்
றெருளிற்படுமென்பதனைத்தெளிவித்ததையீதியாரு
மருளக்கதிர்நீலமணிச்குன்றெங்கும்வழங்கு
மிருளைப்பகல்செய்பதுமராகக்கிரியுங்காண்மோ. (கசாக)

முதிர்வாணகைவேலுரவோய்மொய்க்குங்கதிரோன்படங்க
ளிதுகாணிரவிவலயமென்னவொளிர்வதிப்பா
லதுகாணவனுடையுமல்லலைவளைப்பதப்பா
னுதுகாணவன்மாவதன்மெய்யொளியிற்றிகழ்கிற்பதுவே. (௧௪௨)

வேறு.

என்றரும்பொருள்களெல்லாமின்னணமிசைத்துக்காட்டி
நின்றவர்க்கிருபர்தங்கட்கருட்பெருநிதியமீந்து
குன்றதுகடந்துபோகித்தர்த்துரக்குவடுநீங்கி
மன்றலஞ்சோலைச்சையமால்வரைமருங்குசார்ந்தான். (௧௪௩)

கண்ணினுக்கெட்டாதென்னக்கருத்தினிற்கணித்துவேதன்
விண்ணினுக்களவாய்வைத்த*மானதண்டனையவெற்பின்
மண்ணினைச்சயத்தால்வென்றுவானையும்வெல்வனென்னு
மெண்ணுறச்செல்வான்போலவிசையொடுமேறினானே. (௧௪௪)

பொலங்குழைமகளிர்மைக்கண்பாய்தொறும்புதியநீல
மலங்கவைத்திழைத்ததென்னவவிரொளியம்பொற்றாரான்
விலங்கலினுச்சிவெய்யோன்வெம்பரியாறமெனின்
றிலங்கெழிற்கோட்டுவென்றியிலாஞ்சனைபொறித்திட்டானே. ௧௪௫

சொன்மலைபுலவர்நாவாற்சொல்லலாந்தொகைப்படாத
வின்மலையோடைநெற்றிவெம்மலையனந்தஞ்சூழப்
பொன்மலையொன்றுவல்லேபொருக்கெனவெழுந்துபோந்தோர்
கொன்மலையிழிந்ததென்னக்குன்றதுதணந்துபோனான். (௧௪௬)

வர்சத்தண்டொடையல்வாகுவாளபராந்தர்‡தம்பா
னேசத்தொடிருந்தவிந்தைநெடுமலைநோக்கத்தன்கைப்
பூசற்றிண்சரத்தைநோக்கிப்போற்றுபுகூற்றந்தன்கைப்
பாசத்தைநோக்கத்தானும்பச்சிமநோக்கினானே. (௧௪௭)

அடித்துகண்மாடமேறியடலபராந்தர்தங்கள்
வடிக்கணார்வாசச்செந்தேன்மலர்க்குழல்பிடிக்கக்கீர்த்தி
நடித்துவிண்பிடிக்கப்போகிமுரலைநன்னதியின்கூலம்
பிடித்தனனடங்காரச்சம்பிடித்திடப்பிடித்தவேலான். (௧௪௮)

மின்னகுபடைகொளொண்கைவிறன்மிகுபடைஞர்தங்கள்
பொன்னணிகவசமேல்வெண்புதுப்படாமணிந்தாலொப்பக்
கன்னியங்கைதைத்தாதுகால்வருந்தாதுசேர்த்த
வந்நதிகடந்தானென்னேரமர்க்கடல்கடந்துளானே. (௧௪௯)

---

* மானதண்டு-அளவுகோல். ‡ அபராந்தர்-மேற்றிசையினுள்ளார்.

ஈட்டிசற்பரசிராமற்கிடங்கொடுத்தகன்றமுந்நீர்
மீட்டொலிவேலையாறும்விழுத்துணையாகமீக்காய்க்
கூட்டுபுபரந்தநெதென்னக்குழூஉக்கொடுபுக்கவொற்ற
வாட்டடந்தானைநோக்கிச்சிலவருண்மருண்டுபோனார். (சரு0)

சைகுவதன்றிவேறோர்நல்லரண்டேடிச்சேமஞ்
செய்குவதன்றெம்மாவிதீர்வதேதிண்ணந்திண்ண
முய்குவதென்னுமாசையுடன்கொடுபோகியெங்கே
வைகுவமென்னேயென்னேவந்ததுகூற்றங்கூற்றம். (சருக)

குடகடற்றேட்டமெற்றைக்குணகடலளவுங்கொள்ளத்
தடவரைபடுத்துமேனுந்தடுப்பதுமல்லவல்ல
வடகடனோக்கித்தெற்கினின்றிடம்படைவைமுன்னே
விடமொடுசெலுத்தியங்தோவந்ததுவேலைவேலை. (சருஉ)

இச்சையிற்போகந்துய்த்திட்டின்னலொன்றின்றிமற்றை
நச்செயிற்றரவந்தாங்குஞாலத்தார்வாழ்கவாழ்க
வச்சமற்றழிவிலாதவாக்கம்பெற்றினிதுவாழும்
பச்சிமத்தெங்கட்கையோவிளைந்ததுபாவம்பாவம். (சருங)

கட்டுண்டவுதரச்செந்தீகனன்றிடக்கையேற்றார்கட்
கிட்டுண்டுவாழார்நம்மூரிருந்தனர்போலும்போலு
மட்டுண்டுவாழ்வேமல்லேமாருயிரதனையந்தோ
கெட்டுண்டுபடுவதாகச்சூழ்ந்ததுகேடுகேடு. (சருச)

எனவிருதுரைத்துவல்லேயெய்தியாங்கோன்றில்லாத்
தனவபராந்தரென்னுங்கேரளரடியிற்றாழா
வினையதுவிளைவதெல்லாமிக்கெடுத்துரைத்தலோடுஞ்
சினவனல்செங்கட்சிந்தச்சீறுபுசெப்புகின்றார். (சருரு)

வசைவிடாதன்றுதோற்றவச்சிரக்கரத்தினான்றன்
றிசைவிடாரோடுதென்பாற்செந்தமிழ்ப்புலவர்போல
நசைவிடாநிதியக்குன்றநற்றிறையளித்தற்காட
லிசைவிடாரகுவேந்தற்கேயாங்களுமெளியம்போலும். (சருசு)

கருதிசைப்பாழிவேற்கைக்காவலன்கடந்தவந்த
விருதிசைப்புனைந்தவாகையெம்வயினாகவிப்பாற்
பொருதிசைப்புகுந்தவாகைபுனையுமேற்புனைகபின்ன
ரொருதிசைப்புகுந்தியாமேயோங்கமர்மலைகலேமே. (சருள)

பூணித்தங்கிணையகூறிப்போர்முரசதிரப்பொற்பா
லேணிற்றங்கியபோர்விந்தையெளிதினிலிருகையேந்திச்
சேணிற்றங்கியபோர்வாகைகொணர்ந்துகைச்சேர்த்ததாகிற்
பாணித்தலென்றேவென்றுவெழுந்தனர்பாழிவேலோர். (௧௫௮)

துடிகுடமுழவுசங்கந்துந்துபிபடகம்பேரி
யிடியெனவதிரச்சேனையெழுகடன்மருங்குசூழ
வடிநுனைப்போர்வேலேந்திக்கூற்றமுமருளவார்த்துக்
கடிகையதொன்றின்வென்றிகாண்குவமென்னவந்தார். (௧௫௯)

வேறு.

ஏலவேழுலகமுமிரிதரவடதென்றிசையிருகாலும்
வேலையேழொடுங்கிளர்ந்தசலங்களைவேர்பறித்திடமேக
சாலமாமழைத்தாரைகடாக்குபுதம்மின்மிக்கெதிர்தாக்கிக்
காலவீறுறப்பெருஞ்சமர்விளைத்தெனவிளைந்ததுகடும்போரே. (௧௬0)

வரைகளேயெதிர்பொருவனமற்றிலமதியிலீர்வளர்வேலைத்
திரைகளேயெதிர்பொருவனவென்னையேசெய்யனசெழுமேக
நிரைகளேயெதிர்பொருவனவெனவுயர்நிலையவர்தடுமாற்ற
வுரைகளேயெழயானைமாத்தேர்பலவெதிர்ந்தனவுழையெல்லாம். ( )

தவ்வியோடுவதலைத்தலைப்படுப்பனதகுமுனைத்தலைதம்மிற்
கவ்விவீழ்வனகாந்தெரிகாட்டுவகளத்திடைகாணுமே
நொவ்விலாதனபொருவனவாளியேயாயினநோக்கோடா
தெவ்வியாவையுநின்றனநின்றனவிருபுடைநிமிர்ந்தம்மா. (௧௬௨)

வேனுழைந்தனவொருவரைமின்னெனவிளங்குமுத்தலைச்சூலம்
பானுழைந்தனகப்பணப்படையொடுபையவேநெடுங்குந்தக் [க்
கோனுழைந்தனவப்பெருஞ்சிலீமுகக்குறும்பொறைக்கிடைகோடை
கானுழைந்திலநீக்கறநெருக்குறிற்புகுவதெக்கணக்கம்மா. (௧௬௩)

பரிப்பிறந்தனவொன்றொடொன்றெதிர்ந்துழிப்பாய்குரப்பராகங்கிம்
புரிப்பிறந்தனமதகரிநேர்ந்துழிப்பொங்கழற்பொறியாழிச்
சுரிப்பிறந்தனவிரதமொத்திசைந்துழிச்சுழல்புகைநெடுவானிற்
சரிப்பிறந்தனதகுமுகிற்கிளையொடுதடம்பறவைகளெல்லாம். (௧௬௪)

மத்தக்குன்றத்தமத்தகத்தடத்தினுமதுகையகடுவேகப்
பித்தக்குந்தத்தநெற்றியந்தலத்தினும்பிறங்கொலிப்பெருநாண்வி
லத்தச்சிங்கத்தவகலத்துங்குளித்தனவகல்புறந்தலைநீட்டி
யெத்திற்பாய்துமென்றெண்ணினவிருந்தனவேகலாதெறிவேலை. ( )

எய்தியென்மருமெறிபடையென்மருமெறிபொழுதிதுகாத்தல்
செய்தியென்மருந்திரும்புதியென்மருஞ்சேர்திலகண்போதி
யுய்தியென்மருமுய்க்குதியென்மருமுடக்குதிசுணைமாரி
பெய்தியென்மருமல்லதுமற்றதுபேசுவார்பிறிதாமே. (சகூகூ)

கடியமால்கரிகோட்டெறிவீரர்விண்கலந்துவீழ்தரிற்றேரின்
முடிகளல்லவேலேற்பனவப்பெருமூரிமாமலைமேல
கொடிகளல்லவேற்குந்தங்களல்லவேற்கொடியவக்கொலையானை
வடிகொள்வான்பிறைமருப்பிணையல்லவேன்மண்விடாமறவேலே.()

தலைகடள்ளியுந்தாட்டுணைதள்ளியுந்தார்புனைவயவாகு
மலைகடள்ளியுமதவரைதள்ளியும்வயின்புகாகுடர்மாலை
யிலைகடள்ளியுமெய்த்த* வேயன்றிமற்றெய்த்தவோவியற்போரின்
கலைகடெள்ளியவீரர்கோளரியெனக்கலித்தெறிசுதிர்வேலே. (சகூஅ)

கைக்களிற்றனவாவுவாம்பரியனகடுந்திறற்காலாள
மெய்க்கிடைப்படாபுறத்தவாய்மற்றெதிர்பெருமையின்வெளிபோகி
யக்கணத்தழியாயுவினுடல்பலவடைந்தகலான்மாநேர்
புக்குமுத்திபெற்றிருந்தெனத்திசாமுகம்பொருந்தினபுகர்வேலே.()

இடித்தவானுருமேறெனமுழக்கிநின்றெறிந்தவே லொருவோன்றன்
றடித்தமார்பகங்குளித்ததுங்களித்திகற்றடக்கைவேறனைநேர்ந்த
மடித்தவாயவனுயிரொடும்போக்குபுமார்பகத்திடைவாங்கிப்
பிடித்தவேலொடும்வீழ்ந்தனன்மற்றையப்பெருவலிமறவோனே. ()

எஞ்சலற்றிகல்வினைத்துநின்றொருவன்மற்றொருவனுக்கெதிராகி
நெஞ்சமுய்த்தவேறடுத்தடுத்தோய்யெனநிமிர்தலைகளைபோதில்
விஞ்சுகையெடுத்துடற்குறையாடலும்வெவ்வினையுளதென்னுக்
குஞ்சிபற்றுபுகுறுந்தலைவிடுத்ததின்கூத்தொழித்தனனன்றே. (கஎக)

இடைந்திலாவமர்க்களத்திடைவெஞ்சமமியன்றவரிகல்வீர
நடந்தவாற்றினைநின்றவரியாவரேநாவெடுத்துரைக்கிற்பார்[கோட்டுக்
மிடைந்தயானைபாய்ந்தெடுத்தலும்படையொடுவலங்கைமேற்செலக்
கிடந்தவீரனுமிருந்தவப்பாகனுமிறந்தனர்கீழ்வீழ்ந்தார். (கஎஉ)

மறந்தவாதொருமாவினோன்மற்றொருமாவினோற்கெதிர்வீதி
சிறந்துபாய்வுளிவிடுத்தவேலங்கவன்செந்நிறந்திறந்தோடிப்
புறம்புபாய்தலுமண்புகாமுன்னமேபிடித்தொருபோர்வீர
னிறந்திறந்தனனெனினமர்க்கடுமைதானிகழ்த்தலாந்தகைத்தாமே.

* எய்த்தல் - அறிதல்; எனவே பின்னும்போரைக்கருதின
வென்பது கருத்து.

சந்தத்தார்ப்புயத்தறுகணர்தாக்குவாட்டடுப்பொருசார்சாரக்
குந்தக்கோற்றடக்கூர்ந்தலைக்கொடுவெலிக்குத்தொருகூறாக
வந்தத்தார்த்துவீழசனியினயிற்படையடர்ப்புமோரயலாகப்
பந்தப்பாணியம்படர்புயப்பருவரைப்பகைப்பொருபாங்கெல்லாம். ()

வேறு.

சுருதியல்லனசொல்லரிதாமமர்
பரிதியல்லனபார்த்தறிகிற்பரோ
கருதியல்லனகார்க்கடலெங்கணுங்
குருதியல்லனகொள்புனலில்லையே. (௧௭௫)

மார்துளைத்துயர்வன்சவளத்தலை
யார்திறற்பரியாளொடமைந்தமை
சார்திருக்கொள்சயமகளந்தரத்
தூர்திமேற்கொடுலாவரல்போலுமால். (௧௭௬)

பண்ணியற்கரியின்படலைப்பழு
நண்ணியற்பாகும்பரிதிப்படை
வண்ணமைப்புயல்புக்கமதிக்குறை
விண்ணினெற்றிவிளங்குவதொக்குமே. (௧௭௭)

*சிறையில்வாளிதெறும்பரிசெய்யநீர்த்
துறையிலாற்றொழுகிச்சுழிச்சுற்றுவ
நிறையவீதிநிரப்பிநிலைப்படா
முறையில்வாளிமுடுக்குவவொக்குமால். (௧௭௮)

ஒருவன்மால்கரியுச்சிபிளந்தமை
யொருவன்மாகைம்மழுப்படையொண்மலை
யொருவன்மால்சிறையுள்ளவொறுப்பமற்
றொருவன்மேல்வளராதடலொக்குமே. (௧௭௯)

வம்மினென்றிருவோரெதிரோடிமா
வெம்மின்வேல்வெந்புறப்படமெய்யுற
லெம்மினுயவிருந்திறனன்றெனாத்
தம்மின்மெச்சுந்தழீஇயதுபோலுமால். (௧௮௦)

தேர்புனைந்தசெழுங்கதிர்மண்டில
வூர்புனைந்தவொளிக்கிடையோடியே
வார்புனைந்துமதர்த்தமுலைத்தலைச்
சூர்புனைந்தசுடர்த்தொடைசூடுவார். (௧௮௧)

---

* சிறை - தடை.

பாகமேறவெறிந்தபடைக்கல
வேகமேறவிளைத்தவைமெய்க்கொளா
வாகமேறவினைத்தொடரற்றிவீழ்
காகமேறக்களித்துவிண்ணோருவார். (கஅஉ)

புகலினின்றவைபோர்வலியாயெனப்
பகலினின்றொளிர்பல்படைபாய்ந்திடயே
மிகலினின்றயிற்ப்புவெறுப்போட்ட
யிகலினின்றனரெண்ணிலவீரரே. (கஅங)

காயவண்கரைச்சூழ்கறைநீரிடைத்
தூயசெம்முகமெங்கணுந்தோற்றலாற்
சேயபங்கயத்தேமலர்ப்பொய்கைநேர்
மேயதந்தவிளாகவளாகமே. (கஅச)

எங்குங்சங்கவிரும்பறையெற்றொலி
யெங்குஞ்செங்கணரிக்குழுவேக்கமா
மெங்கும்வெம்பிணஞ்சாவெடுத்தெய்துவ
வெங்குஞ்சங்கவரிட்டவிரக்கமே. (கஅரு)

ஒற்றைப்பாணிணைமுண்டுமுவாவுடற்
பொற்றைப்பால்சடங்தோடிப்புகாகுறள்
மற்றைப்பாலவும்வெளவலின்மண்ணைமற்
றெற்றைப்பாலுமிரிந்திடுமென்பவே. (கஅசு)

வேறு.

மின்கண்டாரயில்வேலபராந்தர்தம்படையின்
முன்கண்டாரினிமுடுக்குதேரெனமுடுக்கா
வென்கண்டார்கணைமாரியால்விறற்படையினைப்போ
ரென்கண்டார்பிணக்குவையலாவிமைப்பிலரெல்லாம். (கஅஎ)

நொடிப்புமற்றனவெனவெதிர்புகுங்கரிநோன்மை
மடிப்புமற்றனமாவொடுதேர்களின்வலிகண்
ணடிப்புமற்றனநாற்றிசைபாய்கடுவேகத்
துடிப்புமற்றனசுடுசரந்துரந்தனதுரங்கம். (கஅஅ)

ஓங்கொளிக்கணையுருவியவுறுப்புமற்றுள்ள
பாங்கர்பட்டதையினதெனவுரைக்கவும்படுமே
*காங்கெயத்தொழிற்கம்மியர்பலபடக்கம்பி
வாங்குமச்செனலாயதால்வீரர்தம்மார்பம். (கஅகூ)

* காங்கேயம் - பொன்.

இரைத்துப்பாய்கணைபடப்படவிறுமதக்களிற்றின்
புரைத்துப்பாய்கதியருதிழிகின்றசெம்புலானீர்
வரைத்துப்பார்தடமார்தொறுமார்தொறுங்குலிகங்
கரைத்துப்பாய்தருகறங்கொலியருவியேகடுத்த. (௧௯௰)

உரப்பதாகையங்கானுழைந்துடுப்*பலவோடித்
துரப்பவோங்குதேர்முடிபலவீழ்ந்தமைசொல்லில்
வரப்பைபந்நாகமேன்மருத்துமாவலியெலாமெடுத்து
நிரப்புமேருவின்கொடுமுடிதெறித்தமைநிகர்த்த. (௧௯௧)

தறுகண்வெஞ்சரந்தடிந்திருதுணிபடத்தள்ளிக்
கறுவியோடவும்படைவிடாகிடந்தனகரங்க
ளுறுதியாகியவுரனெடுங்கெடத்தமக்கொருங்கே
யிறுதியெய்தினும்பிடித்ததுவிடுவரோவிறையோர். (௧௯௨)

ஒட்டுளாருடைத்திகிரியந்தேர்மிசைநின்று
பட்டுளாரையேயருங்கதியானிலப்படுத்த
கட்டுளாருரங்கலந்துளராயினுநடுவே
தட்டுளார்க்குமற்றுள்ளதோதாங்குநற்றகையே. (௧௯௩)

அனையபோதிலங்கவர்படையும்பெயர்ந்தார்க்கு
முனைமுகத்தையுமூள்சமர்முதிர்ச்சியுங்கண்டான்
வினையமென்னினிவிடுகுதிதேரெனவிரைந்தான்
றனையலாற்றனைநிகர்ப்பதொன்றிலாவொருதலைவன். (௧௯௪)

0கற்பத்திந்திரன்முதலினோரிப்படைகணாத்தி
னிற்பச்செய்தபேனேரொக்குமென்பதைநினைவார்
சிற்பத்தாகிலசெருவிதுபெரிதெனக்கணைகள்
முற்பத்தாயிரமாயிரமுகம்படவிடுத்தான். (௧௯௫)

நன்னரேதிசைமுழுதிசைநடத்துவான்றுணிந்த
வந்நரேசன்கையருந்தொடைச்சித்திரமதனை
யென்னரேயளந்தறிபவரெங்கணுமாகி
முன்னரேகணையல்லதொன்றில்லெனமுடிந்த. (௧௯௬)

விண்மறைத்தனவாயிரகோடிமெய்ம்மிடைந்து
மண்மறைத்தனவாயிரகோடியெண்மதிப்போ
ரெண்மறைத்தனவாயிரகோடிமேலிமையோர்
கண்மறைத்தனவாயிரகோடிவெங்கணைகள். (௧௯௭)

* உடு-அம்பு. 0 கற்பம்-கற்பகதரு.

நெருக்கிற்றெத்தனைநிமிர்ந்தவுமெத்தனைநேர்ந்த
முருக்கிற்றெத்தனைமுடைந்தவுமெத்தனைமுதிர்போர்
சுருக்கிற்றெத்தனைதுன்னலராருயிருண்டு
தருக்கிற்றெத்தனையெத்தனைகோடிவெஞ்சரங்கள். (௧௯௮)

பாய்ந்தசிற்சிலபாய்வனசிற்சிலபாய
வேய்ந்தசிற்சிலவிகற்கணைக்கிடையிடைநுழைந்து
தேய்ந்தசிற்சிலதிகிரிவான்கிரிப்புறத்தாழி
தோய்ந்தசிற்சிலசுருக்கிலசுடுசரத்தொகையே. (௧௯௯)

அற்றமால்கரிக்கரங்களும்பாய்சதியறுது
துற்றமாத்திரட்பதங்களுஞ்சுடுசரந்துரப்ப
மற்றமாத்தடந்தேர்மிசைவாணியுமறங்கொள்
கொற்றவீரர்தங்குலப்படைக்கைகளுமன்றே. (௨00)

பிளந்தயானையின்கும்பமும்பெருங்கதிப்போக்கி
னுளந்தடாதுசெலுத்தரிநெற்றியுமுலகை
யளந்தவாழியந்தேர்நடுப்பாருமிக்காடல்
வளந்தவாமறவீரர்தம்புயங்களுமாதோ. (௨0௧)

துணிந்தவோடியவாளியுநடந்தனதோற்றத்
திணிந்தகாத்திரத்தொகைகளுநிமிர்ந்தசீர்க்கவரி
யணிந்தவாலதியாயவும்புறக்கிடுமெதனைத்
தணிந்தவார்கழறுழ்தடந்தாள்களுமன்றே. (௨0௨)

புகைவிளைத்தனபொங்கெரிவிளைத்தனபூழித்
தொகைவிளைத்தனசூழ்கடல்விளைத்தனவதனுள்
மிகைவிளைத்தனநாகர்தமுலகத்துமேலும்
பகைவிளைத்தனபாரலாற்பகழியின்படலம். (௨0௩)

காழ்த்தகோட்டிபத்தலையரிந்தறுமுனைகவ்விச்
சூழ்த்தநீடியசுடுசரந்தொடைக்கதியிடையே
தாழ்த்தவோதிகாந்தங்கொடுபோயினதரித்து
வீழ்த்தமேலினுந்தைத்தனவாயிரம்விசிகம். (௨0௪)

பழிபட்டேகியபடைக்கணைநுழைந்தவப்பதவை
யுழிபட்டேகினபோகநின்றனபுலாலுதிரம்
வழிபட்டுள்ளகூர்ந்தலைமுற்றவகிர்படப்புங்கங்
கிழிபட்டுள்ளவுமெத்தனையாயிரங்கிளைக்கில். (௨0௫)

அடைந்தவிண்ணகமடைந்தவட்புடவியினிடையே
யிடைந்துபின்னரினேகுமக்கணைநுழைந்திழுக
முடைந்தகோனெரிப்பிறந்தனதீயினால்முளிவேய்
மிடைந்தகானகநிகர்த்தவுமளப்பிலவிசிகம். (௨௦௬)

மிடலுண்டோடியவெங்கணைநுழைந்துசெல்விசையே
படலுங்கார்க்கடற்படிதலைகாண்கிலதொன்றே
கடலந்தானையங்களத்திடையாடியகவந்த
வுடலுங்காண்கிலவுறுகணைகாண்பதேயுள்ள. (௨௦௭)

வேறு.

ககனமுகடெட்டியிடை நிலமுழுதடக்கிவிரி ககுபமளவிக்கடிது பாய், தொகையறுகணைப்படலையிடையிடையறப்பவிழுசுடர்செய்த வளக்கவிகையே, நகைமதிமிசைச்செல்கதிரவைபடவழுக்கிநிலாணி யுறணிகர்க்குமலவே, *உகமகணுதற்கணிடை யெழுதுபளிதத்திலத மொருவகைநிகர்ப்பவுளவே. (௨௦௮)

ஒருபஃதிரட்டிவலை சடலணிகமுப்பஃதொடொருபுடையிலக்கமுறவே, நிருபதிவிடுத்தகணை படநிலமிசைப்படியு நிமிர்தருகதிர்க்கவரியே, கருதியகுடக்கரசர் தமதுபுகழ்பட்டுவிழு கடிகையுநிகர்க்குமலவேற், றுருவியகணைக்கெதிரு நரைமுகில்களற்றுவிழுதுணியிலைநிகர்ப்பவுளவே. (௨௦௯)

வெடிபடுமெதிர்ப்பினொடும் வெயில்படுமெதிர்ச்சியொடும் விசைபடுவெருட்டினொடும்வீ, ழிடியனவடிக்கணையினெரியிடைதுகிற்கொடிகளெரிபடுகழைக்குறைகளே, முடிவிலநெருக்கமுறுபணையறவுயர்ச்சிபெறுமுனையினை நிகர்க்குமலவேற், கடியலைபிழைப்படுது மெனவவரெடுத்துவருகழுவினைநிகர்த்திடுமரோ. (௨௧௦)

நாறியதசைக்கிழிவினேறியுடல்முற்றுமுறநாடியொழுகிப்பொதிதரா, வூறியநிணத்தைமிக மூடிமிசையிற்குருதி யோடியபிணச்சயிலமே, நீறணிதனிக்கடவுள்வாசமலையொத்ததனைநேர்தரன்மிகப்பிழையெனு, மாறுபுகணப்பொழுதினேதனிநிகர்த்தவொளியாமணிமயச்சயிலமே. (௨௧௧)

ஒருதுசெல்வடிக்கணைகள்யாபகையெனப்பெருகியோடியமுடைக்குருதியாற், பொருதெழுதிசைப்புணரி யோரிருபுடைக்கரைபொராவெழநிரப்புமதுவோ, வருவுயிரினிற்பெரியவாமுடல்களிற்கடிகையாமவையவத்திலகல்வான், சிருநிலநிரப்பின தராதரநிரப்பினதிசாமுகநிரப்பினவரோ. (௨௧௨)

---

* உகம் - பூமி.

வேறு.

மறந்தருகதிர்கொள்வேலான்வரிசிலைவடித்தகல்வித்
திறந்தனையுளையநோக்கிச்செருத்தலைநின்றவேந்தர்
பறந்தலையிதுவேயாகிற்பலித்ததுசெருவென்றச்சம்
பிறந்துளம்பெருகமாழ்கிப்பெரிதெடுத்துரைக்கலுற்றார். (௨௧௩)

சார்ந்தெழிற்றேவரேனுங்கரமொராயிரங்களேனு
மேந்துவிலைஞ்ஞூறேனுமிருஞ்சமரிவனொடாகா
யாந்தரினுரைப்பதென்னேயளப்பிலமலர்க்கைத்தேவன்
மேந்தகவொருவன்றோன்றில்வெல்லினும்வெல்லுமன்றே. (௨௧௪)

தொடுப்பதுந்தொடுத்தவெம்போர்சுருக்கலுஞ்சுருக்கில்வீரம்
விடுப்பதும்வினையம்வேட்டவெம்மனோர்மேற்றதாக
வெடுப்பதுமெடுத்தபூசலேற்பதுமேற்றவாகை
யடுப்பதுமற்றுமெல்லாமையற்கேயாவதன்றே. (௨௧௫)

கரியெவற்றறிதல்வெய்யகடுஞ்சினத்தசுரர்வெம்போ
ரரியவற்குடைதலாற்றற்கழகன்றியல்லதுண்டே
யுரியவிற்றொழிலின்மாசறுதியிலாருடையவாகைப்
பெரியவர்க்குடைதருனுமிழிபினைப்பிடியாதன்றே. (௨௧௬)

காற்றொன்றுதீயின்மூண்டகடுஞ்சமர்க்குடைந்தபோது
மாற்றொன்றிலாதுசூரன்மயிலும்வாரணமுமான
தேற்றின்றோமுருகவேளுக்கிசைந்தின்றோவுலகிற்கேல
வேற்றொன்றிலுணர்வதென்னேசரண்புகல்விழுமிதன்றே. (௨௧௭)

ஏக்கறமணிசெய்செம்பொனாசனத்திருந்துதூரத்
தூக்கறமுன்னர்ச்சொன்னசொல்லொன்றுதுணிவொன்றாகி
நீக்கறவெடுத்துப்பல்காலின்னணநிரந்துகூறித்
தீக்கறவுருகாநிற்குமெழுகினிற்றேம்பினாரே. (௨௧௮)

சேட்படர்கலினப்பாய்மாத்திரளொடுமதமாவென்னுங்
கோட்படைக்குழுவும்பின்னரெய்தவெங்குரூரமிக்க
காட்படைநெஞ்சமெஞ்சக்கலங்குபுமுன்னரேக
வாட்படைநிறுவியேகிவரும்படைமருங்குசார்ந்தார். (௨௧௯)

அனையவர்சார்ந்துவீரரடைந்தமைவினவவன்னார்
புனைமணிப்பொலம்பூட்கோமான்பொன்னடிவணங்கப்புக்கேம்
வினையமர்க்கடந்தகொற்றவீரரீரென்னவீரர்
துனைபடப்பெயர்ந்துபோகிக்காவலற்றொழுதுசொல்வார். (௨௨௦)

பெரும்பயமென்னுமாவித்துணைவனூர்பின்னரேநின்
றரும்பிடர்பிடித்தேயுந்தவபராந்தர் * பாந்தராகி
யிருங்கடற்புடவிவேந்தேநிற்றொழவெமதுசேனை
மருங்குவந்தடைந்தாரென்னவிறைவனும்வரவுநேர்ந்தான். (உ௨௧)

பணிபதுதலைமேற்கொண்டுபடைஞருவல்லையேகி
மணிபணிந்திலங்குபூணிர்வம்மின்களென்னலோடுந்
தணிவிலகாலமேகஞ்சாதகங்கண்டாலொப்பத்
திணிபுயவரசரேற்றைக்கண்டடிசென்னிசேர்த்தார். (௨௨௨)

பார்த்திபர்தமக்குநேரோன்றொழிவுறுபகரிற்பாரிற்
பார்த்திபனிகர்ப்பரல்லான்மற்றுண்டோபணியுமன்ன
பார்த்திபர்நிகர்ப்பர்கங்கையாரியன்பதுமத்தாள்சேர்
பார்த்திபரினையன்றனைப்பார்த்திபனிகர்ப்பனன்றே. (௨௨௩)

தங்குழூவிடத்தும்வந்ததலைக்கயமதனோடெண்ணி
லங்கதிப்பரியுமன்னரருந்திறையாகநல்கப்
பொங்கருளவர்க்குநல்கிப்பூந்திரிகூடமென்னுந்
துங்கவெங்கிரியின்செல்வித்துப்புடைப்பக்கஞ்சார்ந்தான். (௨௨௪)

கனமுகிற்சேக்கையாமக்கன்னெடுவரையிற்கன்றிப்
பணிமதக்குவடுகோட்பட்டெழுந்துறப்பாய்ந்தவாற்றாற்
குனிசிலைக்கொற்றவேந்தனதனையேகுலவுசீர்த்தி
தனிபொறித்தங்கணட்டசயத்தம்பமாக்கினானே. (௨௨௫)

விருப்புறுமரவச்சூழல்காலையின்மேவிவெய்யோ
னுருப்பமதகலநாகச்சூழலினுச்சிவைகிக்
கருப்புரச்சூழற்கங்குற்கவிக்குலஞ்சேக்குமன்ன
பருப்பதமயலிட்டேகிப்பாரசீகத்திற்புக்கான். (௨௨௬)

முரியெழுபுணரிவேலைமிசைத்துயிலொழிந்துமுன்னி
யரியெழவண்டங்கொள்ளுமார்ப்பெழயமன்புரூர
னெரியெழவளப்பில்பாய்மாநிரந்தெழமிசைக்கொண்டோங்க
னெரியெழவழாவந்தீண்டியவனருமமரையேற்றார். (௨௨௭)

விடுப்பவேவினையதாகில்மிசைக்கொள்வார்வர்க்கம்‡ பற்றித்
தடுப்பவேகலினப்பாய்மாச்சண்டமாருதங்கடாமே
கடுப்பவேகதியிற்றாக்கிக்கண்ணிமைபிந்தமுந்தி
மடுப்பதேபுரிந்தவாற்றல்வன்சமரதனின்மாதோ. (௨௨௮)

---

* பாந்தர் - வழிச்செல்வோர். ‡வர்க்கம் - குதிரைவாயின்வடம்.

பரவிருதிசையின் முந்நீரோர் தலைப்பட்டுவீடா
துரவமர்புரிந்தாலொக்கவொன்றுறவோங்கிவெம்போர்
விரவிருபதாதிமுற்றும்விழுங்கியெத்திசையும்விஞ்சி
யிரவியுமிடுக்கணெய்தவெழுந்ததுபராகவீட்டம். (உஉகூ)

இடும்படையுளத்தவெய்யவெறும்வலிப்படையையேந்தி
யடும்படைவிடுச்சூராமென்றந்தரத்தயிலையுய்ப்பார்
விடும்படைதடுக்கலாதேமெய்யயர்ந்துருகிவேரா
நெடும்படைகையிற்றேனுநிராயுதராகிநிற்பார். (உகூ0)

மற்கொண்டதிண்டோள்வெற்புநெருக்கினுண்வாங்கலாது
விற்கொண்டுபயனின்றென்னுக்குறும்பிடிவிரைந்துகொள்வார்
கற்கொண்டநெஞ்சர்தம்போர்கழறுபுகனன்றுகாதுஞ்
சொற்கொண்டுதெளிந்துவாளாற்றலைபலதுமித்துநிற்பார். (உகூக)

செருவந்தமதமாநோக்கிச்செறுநவெம்மோடுசீறிப்
பொருவந்துபுறங்கொடேலென்றடற்படைபோக்கிநிற்பார்
வெருவந்துபோவாயல்லையெனப்படைவிடுத்துவீழ்ந்த
*சருவந்துகைக்கொண்டொன்னார்தலையெனநோக்குகிற்பார். உகூஉ)

முற்றினர்நெருக்கில்வீழாநிற்றலுமூரிமார்பத்
தெற்றிவான்போருக்கஞ்சியிடைந்தனிர்போலுமென்பார்
கற்றகுமார்பத்தூடுகுளித்திடுங்கதிர்வேலங்கை
பற்றுபுகள்வனெங்கேயொளித்தனன்பாருமென்பார். (உகூகூ)

சுந்தரக்கவசங்கீறச்சுடர்க்கையால்வாமவாகு
மந்தரத்தறைந்துவீரமாளமாழாந்துநிற்பார்
செந்துகிற்படைஞர்செவ்வேசெலுத்தவாம்புரவிசெல்லா
தந்தரிற்றிரியத்தாரிஞூர்ப்பெறிந்தட்டுநிற்பார். (உகூச)

பொருதிவிண்டகலேலென்னமற்கட்டித்தலையுடைத்துக்
குருதிகொண்டிருகண்ணூரக்கழீஇவெறுங்குருடராவார்
கருதியெண்டிசையுமோச்சுமாயிரங்கரமுங்கொண்டு
பரிதிமண்டலமுமெங்கேயொளித்ததுபகலினென்பார். (உகூரு)

ஊழிவெம்புணரிகாட்டற்பாலதேயுலகமுற்றப்
பூழியுங்காட்டுங்கொல்லோவென்றுளம்பொருமிநிற்பார்
பாழியினெழுந்தவிந்தவெண்டுகள்பற்றப்பற்ற
வாழியுங்கிடந்தகோவென்றதிசயமகத்துக்கொள்வார். (உகூசு)

---

* சருவந்து - தலைச்சீரா.

கருவருமுயிரின்பொம்மற்காட்சிபவண்டமெல்லாம்
வெருவருகுமிலவெம்போரின்னணம்விளையாகிற்பத்
தருவருகடகத்திண்கைத்தலத்திடைத்தனுவொன்றேந்திச்
செருவருவேலான்முன்போய்நோக்கினன்றிகைத்துநின்றான். ௨௩௭

கத்தலைப்புவனிகாக்குங்காவலன்சிலையின்கல்வி
வித்தகமிருந்தவாறுவிளம்பலாந்தகைமைத்தாமோ
வத்தலையவனர்தங்கள்*சிருங்கத்தினூர்ப்புக்கேளா
வுய்த்தனன்பகழிமாரியோடியதுதிரவாரி. (௨௩௮)

அற்றனதுகளின்பொம்மலழிந்தவர்தலைகளட்கைப்
பற்றினகூளியெங்கும்பரந்தனகழுகும்பாறு
முற்றினபுரவிவெள்ளமுதிர்கொலையவனர்தென்பா
லற்றனரன்றிமற்றோரோடினருயிர்கொண்டம்மா. (௨௩௯)

பெரும்பொருளுணர்ந்தமுன்னூற்பெரியவர்சொண்டசீற்றம்
வரும்பயமொருவிப்போற்றத்திர்வதேவழக்கதாமாற்
றிரும்பியயவனர்வந்துசேவடிவணங்கவன்ன
வரும்பொருள்விளக்குவான்போற்றனதருளளித்திட்டானே. (௨௪0)

வினைவன்சமரவன்கணிருட்கணமிரியவாகை
யானதிண்டிறல்சேர்வாளிபலர்கதிரனந்தமோச்சித்
தானைமன்னிபபோர்வேத்துத்தடம்புனல்வறப்பப்பானு
வானவன்றன்னினோக்காவடதிசைமுன்னினானே. (௨௪௧)

எள்ளலிலகிலமின்றண்மருமத்தினிகலவிட்ட
தெள்ளிருவிளிம்புமுற்றச்செம்பொனுமுத்துஞ்செய்ய
வொள்ளியமணியுஞ்சேர்த்தவுத்தரீயத்தையொத்த
கள்ளவிழ்மலர்ப்பூஞ்சிந்துமாநதிகடந்தானன்றே. (௨௪௨)

துளிநறும்பொலிந்துமென்றார்க்குங்குமத்துணர்கள்சுற்ற
வளிநல்லார்ப்பெழத்தாரோடுங்கொய்யுளையலையாநிற்ப
நளினமாப்போதுபோர்த்துப்போகுநன்னதியின்கோட்டுப்
புளினமீப்புரளாவின்புற்றுறினபுரவியெல்லாம். (௨௪௩)

காணமாபேரினூன்றனுயிர்கொளக்கறுவிவன்கற்
றூணமாட்டுதித்தவெய்யசூரனுஞ்சுழன்றிட்டுள்ள
நாணமாகதத்தினோங்குநரவரியென்னப்போகி
யூணமாநகரிற்புக்கானொருதனிக்கவிகையானே. (௨௪௪)

* சிருங்கம் - வில்; ஆகுபெயர்.

வெம்முகமதமால்யானைவேந்தர்கோனனிகமீற
வம்முதாகரோர்பட்டதறைவதெனவர்தந்நேச
மைம்முகிலளகநல்லார்தமதெழின்மாழ்கிமிக்குச்
செம்முகவனசஞ்சேப்பச்செய்தகைக்காந்தண்மாதோ. (௨௪௫)

குழைபறித்திருக்கட்பட்டார்கூவிளிகுரைக்கப்பட்டா
ரிழைநிலத்தெறியப்பட்டாரிருகணீருகுக்கப்பட்டார்
தழைமலர்க்கூந்தனுலத்தம்மினின்றயரப்பட்டார்
பிழையுடைத்தாதலாலேபின்பட்டதறிகிலேமே. (௨௪௬)

காகங்கடோடருஞ்செவ்வேலரசனுங்கங்குற்போதிற்
பாகங்கொ*ணீபசாலம்பகல்செயப்பரிந்துகூடுங்
கோகங்களெல்லைப்போதிற்றணந்திடவிருளின்கூட்டம்
பூகங்கொள்சோலைகாட்டும்பொருவில்காம்போசம்புக்கான். (௨௪௭)

வெருளினனிலைத்திணைவிமிசைவந்தவினைகளெல்லாம்
பொருளினைற்றீர்வதல்லாற்புறத்தொருபொருளுமுண்டோ
மருளினன்மறகூமன்னாகருளார்நிதியவாரி
தெருளினனல்கக்கொள்ளாவிமாசலஞ்சென்றுசேர்ந்தான். (௨௪௮)

வேறு.

நிலைமுதற்றழுவிவிண்ணிமிர்ந்துநீண்டவம்
மலைமுகட்டுச்சியையவளரப்பண்ணுமாற்
கொலைமுகக்கவனமாக்குரங்கடாக்கவே
தொலைவுறத்தாதினஞ்சிதைந்ததூளியே. (௨௪௯)

மாடுடைச்சந்தனமொடித்துவாரமா
பீடுடைத்தாகவேபெருகச்செய்யினு
மோடுடைப்பெருமதக்கரிகண்மொய்ம்பினாற்
கோடுடைத்தம்மலைகுறையச்செய்வவே. (௨௫0)

ஈட்டியசமபெலவீரரேங்கலாற்
கேட்டியனேக்கமன்னெறியிற்கேடிலா
தோட்டியகோளரிப்பார்வையொன்றுமே
காட்டியதவ்வழிக்கலக்கமின்மையே. (௨௫௧)

செடிந்திலபாகெனுஞ்சிங்கவேற்றுடைக்
கடிந்திடுமங்குசவுகிரின்காப்பலாற்
படிந்திடுமுகில்களைப்பகடென்றேயெதிர்
தடிந்துசெல்கரிக்கொருதடையுமில்லையே. (௨௫௨)

---

* நீபம் - இரவெரிமரம்.

அஞ்சலினயனநீருகுத்தரூபமாய்
விஞ்சையர்குறைபகர்ந்தென்னமேயொலி
தஞ்சவானதிச்சிறுதுளிதழீஇப்புரை
விஞ்சுவேயொலிகொடுமெல்லவீசுமே. (௨௫௩)

மண்டுவான்வரையுளீர்வல்லையாவிகொண்
டெண்டிசாமுகத்தினுமேகுமென்பபோற்
கண்டைவாயொலிகொடுகரியின்காதெழு
சண்டமாருதமிருமருங்குந்தாவுமே. (௨௫௪)

பூட்டியவாசிலைகழற்றிப்பொன்னணி
வாட்டரவதிந்தனமறவரால்வழைக்
கோட்டிழிநாவிகள்சோதிலாமண
மூட்டியபாறைகடிருவொடோங்குமே. (௨௫௫)

அறிந்தசெங்கதிர்ச்சுடர்க்கழிவொதன
பிறிந்தபல்குலைப்பனிக்கணங்கள்பேரொளி
செறிந்தபல்படைக்கலநெருக்கிற்றேய்ப்புற
மறிந்தெழுபொறிவிழவறுமையானவே. (௨௫௬)

ஆங்கொளிச்சரளத்திற்பிணித்தவானையின்
பூங்கதிர்ச்சங்கிலியதனிற்போகிய
வோங்கெரிமரத்தடஞ்சுடர்களோவற
வீங்கிருளிரவிற்கேவிளக்கமாகுமே. (௨௫௭)

வழுவிலவாரமதெங்குமன்னவர்
தொழுதிடும்பொற்குலைசுமந்துதுன்றிய
பழுதிலபண்டிகளூரப்பாங்கின்மீ
தெழுபுகைபகலெலாமிரவுச்செய்யுமே. (௨௫௮)

மற்படுதிண்ணியமருப்பினுன்மத
வெற்படுதேவதாரத்தின்மேல்வடுப்
பிற்படவருகிராதர்க்குப்பேணத
னற்புதவுன்னதத்தளவைகாட்டுமே. (௨௫௯)

காண்டகுமின்னணகாட்சித்தானைமே
லீண்டியேகேல்வையினண்டமெங்கணுந்
தாண்டுவெண்சீர்த்தியுற்சவசங்கேதரோ
டாண்டருஞ்சமர்பெரிதாயதங்கரோ. (௨௬0)

அன்னவர்விழவையச்சமரினோடழித்
துன்னியவிழவிலராக்கியொண்புகழ்
கின்னரர்பாடவுண்மகிழ்ந்துகேட்டனன்
றன்னிகரிலாவடற்றானைவீரனே. (உகூக)

சீற்றமிற்றன்னவர்திறைசொரிந்தனர்
சாற்றருமன்னற்குஞ்சயிலநாதர்க்கு
மாற்றரும்பெருந்தனவளர்வும்வெஞ்சம
ராற்றலுந்தனித்தனியறியப்பட்டவே. (உகூஉ)

வித்தகவம்மலைநின்றுவெம்முடி
பத்துளானெடுபட்டவெள்ளிவெ
ணத்திரிதனிற்புகாததற்குநாணினை
வைத்திடுவான்புகழ்வாய்ப்பமீள்வுறா. (உகூங)

அரவுலோகத்திடையாழ்ந்துமாமலை
பரவுலோகிதமலரோடும்பைம்பொனாந்
திரவுலோகத்தைமீச்சிதறுந்தெண்டிரைக்
கரவுலோகிதநதிக்கரையின்முன்னினான். (உகூச)

வேறு.

மோடுதழீஇயறுகாலிசையோடுமுயங்குகருங்குவளைத்
தோடுதழீஇயிருபோதுமறாதிருடுற்றியகற்றையெலா
மாடுதழீஇநெரிவால்வருவேய்கள்வழங்கமலிந்துதடங்
கோடுதழீஇயுலவாநிலவீனுவகொத்தொளிர்கித்திலமே. (உகூரு)

மெல்லியகொத்தலர்சந்தகில்குங்குமவேரியுமென்றுகிரின்
வல்லியுநித்திலவாரியுநாளுமயங்கிவயங்குதலாற்
புல்லிமிதித்திளவல்லிபிடித்துறுபுட்குலபுஞ்சநெடுங்
கொல்லியிசைத்திடுகுந்தளவோதியர்கொங்கையுமொப்பதுவே. ( )

அரும்புறவுந்திமடந்தையர்தங்களகத்துறுமாசையறக்
கருங்கடன்மங்கலநாயகருள்ளமருட்டுதல்காரணமாய்
மருங்குநெருங்குமலர்ப்புதுமேகலைமின்னமணம்புனையா
நெருங்குதரங்கநுதற்கொடிமெல்லநெரிந்துநடப்பதரோ. (உகூஎ)

நாரினடைந்துபடிந்திடுகேள்வரைநங்கையரையமுறச்
சேருமிடங்கடொறும்புதிதேமிகுதெய்வமணந்தருமா
ணீரினுவந்துகுடைந்திடுமும்பரரம்பையர்நீடளகக்
காரினிழிந்தநறும்பிரசந்தருகற்பகநன்மலரே. (உகூஅ)

மேயதடங்கரைதுன்றிவிசைத்துமிருந்துவகிர்ந்தறவே
தூயபெரும்புனனள்ளிடைநின்றசுழிப்பனவுஞ்சுழியோ
ரேயமுளங்கொடணைந்தவர்தங்களகத்தினைநீடிரையே
யாயசரங்கொடுசுற்றியிழுத்துளடக்குவதாகுமரோ. (௨௬௯)

ஓர்துறைமான்மதபுண்டரவாடவராடியுவப்பதுவே
யோர்துறைமான்மதவாரணமூழ்கியுழக்கிமுழக்குவதே
யோர்துறையோதிமமாமுலைமாதருவந்தினிதாடுவதே
யோர்துறையோதிமசாலமுலாவியொதுங்கியிருப்பனவே. (௨௭0)

வேறு.

எண்ணருமினையசெவ்வியீர்ம்புனல்யாறுநீங்கித்
தண்ணறவறவுமார்த்தமரவண்டுழக்குந்தாரான்
றிண்ணியபுகழ்ப்பிராச்சோதிடமெனுஞ்சிறப்பின்செல்வக்
கண்ணகர்கடந்துபோகிக்காமரூபத்திற்புக்கான். (௨௭௧)

நினைப்பருங்கரவுகொண்டநீண்முகினூருந்தேவன்
றனைப்பெரிதமர்செய்தாடற்சரங்கொடுவென்றுனென்றுன்
முனைத்திறத்தெதிர்ந்துவஞ்சமுற்றியமுரிக்கள்ள
வினைப்பெருமாயஞ்செய்யாவெல்வதின்றெங்ஙனுமே. (௨௭௨)

என்றுளத்தமைத்துமுன்னமியாவருமிட்டசெம்பொற்
குன்றனைத்தையுமோர்வைப்பிற்குவித்தெனநிதியக்குன்ற
நன்றுறக்குவித்திட்டன்னநகருளார்நளினநாணு
மின்றுணைக்கழலிற்றுழ்ந்தாரிறைவனுமெழுந்துபோனன். (௨௭௩)

திணிபுயவரசனிவ்வாறரும்புகழ்செவ்வானீண்டித்
தணிவறத்திசையோரெட்டுஞ்சயங்கொண்டுதழைத்தசெல்வப்
பணிதருபுதியகோலம்படுத்தலாற்பைம்பொனுமத்
தணிநகர்புதுக்கியன்னவயோத்திவந்தடைந்தானன்றே. (௨௭௪)

எத்திசைவைப்புநோக்கின்வறிதுறவிசைந்துகொண்ட
வித்தகநிதியமெல்லாமள்ளுபுமெல்லமெல்லத்
துய்த்திடும்பெரியதோற்றத்தொல்லைவிச்சுவசித்தென்னு
நித்தியவேள்விதன்னைநெறியொடுந்திருத்தினுனே. (௨௭௫)

வசையடு * மீற்றினின்றவான்பொருளன்றிமூன்றி
னசையொடுமிருபானல்குநடுவணின்றதனைநாடித்
திசையொடும்பெரியதானஞ்செய்வதற்கன்றேதேயா
விசையொடும்பெரியோர்யாருமின்புறவீட்டன்மாதோ. (௨௭௬)

---

* வசையொடுஎனவும்பாடம்.

வியன்றருமிரவிசூழ்ந்தவெண்மதிக்குழுவிற்றோக்க
பயன்றருபான்மைத்தாயபாரிடையரசரெல்லா
நயன்றருமினியவாய்மைநயத்தொடுநாமவேலா
னியன்றருணல்கவன்புற்றிணையடிவணங்கிப்போனார். (உஎஎ)

## திக்குவிசயப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் - அருஅ.

# அயனுதயப்படலம்.

நிலைத்தலைப்பெரியயாகத்தரசர்கோனிதியமெல்லாந்
தொலைத்தலைப்பரிதிதன்னிற்றுகடபவிளங்குநாளின்
மலைத்தலைப்பெருமானன்னவரதந்துவருளுட்கொண்ட
கலைத்தலைக்கவுற்சநாமக்கனமறைமுனிவன்வந்தான். (க)

தேசினிற்சிறந்தவன்றனெதிர்செலீஇச்செங்கைகூப்பி
மாசின்மட்கலத்துவந்தவருக்கியம்வழங்கியேத்தி
நேசநற்றனத்தெய்திநீடெழினிறைந்ததூய
வாசனத்தேற்றிப்பூசையருளொடும்வழங்கிக்கூறும். (உ)

பிறந்தவோர்காலுந்தோற்றம்பெறுதவோர்காலுநாப்பட்
சிறந்தவோர்காலுநெஞ்சிற்றெளிந்துவெம்பவத்தினீட்ட
மறந்தவோகையமெய்ஞ்ஞானவரதந்துமுனிவன்மாட்சி
சிறந்தவோதருப்பைத்தூயநதியனமதியிற்சேர்ந்தீர். (ங)

வெயிற்றவாமணிப்பூணல்லாரெனும்பெருவிடங்கொடுமை
யெயிற்றுமாகாமப்பாந்தண்முதலியவிடரைநீக்கிப்
பயிற்றுமாமனத்தால்வாக்காற்காயத்தாற்பரிவாற்பற்றி
யியற்றுமாதவத்திற்கூறொன்றில்லையேயெவ்வமில்லீர். (ச)

பொலிமுகத்தவத்தினீர்நீர்மகவினிற்றன்பொற்ப
மலிமுயற்சியினிலின்பால்வளர்த்தபாதவங்கட்கெல்லாங்
கலிமுகத்தபனவேகக்கடுந்திறற்காட்சிகாணு
வொலிமுதற்பகையால்யாதொன்றுள்ளதோவூறுமாதோ. (ரு)

ஆய்ந்தமாவேள்விக்காலமண்ணியதேனுநவ்வி
சாய்ந்தபூந்தருப்பைக்கானினின்றமென்மறியைத்தானே
வாய்ந்தநீணுபிநாளம்வற்கலைமடியிற்றாழ
வேந்துசீராட்டிற்கொன்றுமில்லையேயேதமன்றே. (சு)

நின்றுடற்றூய்மைநல்கியதீர்ப்பணங்கட்காய
தோன்றுடைப்பங்குன்றாதாறிலொன்றிட்டதூய
நன்றுடைப்பெருநீவார * நனிசெறிவாலுசத்தன்
குன்றுடைப்புனற்குமங்ஙன்குறைவின்றேகோதிலாதீர். (எ)

தோற்றதிதியர்க்குநுங்கடனுவுக்குமற்றார்துப்பே
யாற்றிடுநீவாராதிவிளைவினுக்கம்பொற்குட்டச்
சேற்றினந்தூரமேட்டின்முத்தினர்திகழும்பேரு
ரேற்றினமுதலவற்றாலீறுண்டேயிறைவனீரே. (அ)

மூதறிவுடையோர்சேராச்சிரமமூன்றிற்குமொய்ம்பா
லேதமிலுபகாரஞ்செயில்லவாச்சிரமர்தன்னைத்
தீதினும்புந்தியாங்கண்சிறப்பநற்கலைகளென்னு
மாதவமருளினோராலடைந்திர்கொலறிவுளீரே. (கூ)

அரவினுடவனிநாகத்தன்றியுமப்பாலுஞ்சொல்
விரவுமோர்தொழிலினென்னைவிடுத்திடலின்மையாலே
பரவுமாறுடையேனுள்ளத்திங்குநீர்பரிவின்வந்த
வரவினாலெழுந்தவோகைநிறைந்ததுமில்லைமாதோ. (க0)

நனிவிராயடைந்தோர்தங்கள்பவத்தினைநலியும்வேதத்
தொனிவிடாதெழுந்ததெய்வச்சுந்தரத்தரணிநீங்காக்
கனிவினுமுமதுசிந்தையதனினோகடவுட்செல்வ
முனிவனேவலினோவென்பால்வந்ததுமொழிவீரென்றான். (கக)

வெந்திறற்குருசிலிவ்வாறுரைத்தலும்வேள்விதன்னிற்
சுந்தரப்பொருள்களெல்லாந்தொலையவோர்காலுங்கொள்ளாச்
சந்தமட்கலத்தின்மீதேயருக்கியந்தகையிற்கொண்டு
வந்தவக்குறியாற்சாம்புமாமுனிவகுக்கலுற்றான். (கஉ)

கதித்திடுமகிலநீயேகாத்திடவெம்மனோர்பால்
விதித்திடுநன்னரன்றியல்லனவிளைவதுண்டே
மதித்திடுநயனந்தன்னைமறைப்பதற்குளதோபானு
வுதித்தொளிர்காலந்தன்னிலோங்குமைத்திமிரந்தானே. (கங)

தவாப்பெருங்காரைநீங்கும்புயலினீதகைமைகொண்ட
திவாத்தினின்முடிவுகாண்டற்கரியனசேமக்கைத்தி
ணவாக்கொடிங்கடைந்தேனென்னுமரந்தையொன்றிருந்ததந்த
வுவாக்கலைமதியந்தன்னிற்கறையினெனுள்புக்கம்மா. (கச)

---

* நீவாரம் - புற்றானியம்.

கோளினிற்பெரியோர்கொள்ளக்குரலளித்திடுநீவாரத்
தாளினிற்றனிநீங்கின்றதன்மையைநோக்கியென்னு
ணாளினிற்கதிர்வேல்பட்டபுண்ணிடைநாட்டுகின்ற
வாளினிற்கிடந்ததேலாவாண்பொருண்மயக்கமாதோ. (௧௫)

சேண்மதித்திடுநீபாரிற்கதிபனாயிருந்துஞ்சீரில்
லோண்மதிப்பொருளிலாரினிருத்தலுங்கிளர்ச்சித்தாமா
னீண்மதிப்புலம்வார்க்கெல்லாநெடுங்கலையீர்த்துநின்ற
நாண்மதிக்குறைவுந்தேரினன்னரினின்றதன்றே. (௧௬)

தரவலபருவந்தன்னிற்சாதகஞ்சலிலவேட்கை
வரவலமுகிலைநோக்கிவருந்துவதுண்டோபாவம்
விரவலமுனிக்குநல்கும்விழுப்பொருள்சிறிதன்றாகிற்
புரவலவாழியான்வேறிடந்தனிற்போவலென்றான். (௧௭)

என்றலுமரசர்கோமானிறைவிர்நீர்குரவற்கீயு
மொன்றரும்பொருளேதன்றியளவையேதுரையீரென்ன
மன்றலங்கருணைவேதமாமுனிமனத்தைமீட்டுத்
தன்றனிவரவையெல்லாந்தகைபெறச்சாற்றலுற்றான். (௧௮)

உதியொரேழிரண்டுந்தந்தமுனிவநிற்குதவவென்ன
நிதியமென்றறைந்தேனன்றானேசமேயமையுமென்ன
மதியிலேன்மறுத்துங்கூறமற்றவன்வெகுண்டுமானக்
கதிகொளோர்கலைக்கோர்கோடிகனநிதிதருதியென்றான். (௧௯)

தெள்கலைமுனிவன்செஞ்சொற்சிரம்பரித்தடைந்தேனீயுங்
கொள்பொருளில்லாயென்கைகுறிப்பினானோக்கச்சிந்தை
யுள்கியிங்கிரவுநின்பாலொழிந்தனனென்னவாகை
வள்ளுடைமறங்கொள்வேற்கைமன்னவன்மகிழ்ந்துகூறும். (௨0)

கலைவலான்குரவற்கீயும்பொருளினையிரப்பான்காட்சி
நிலைவலானொருவன்றான்றினிதியதுகொடானேயாவான்
றலைவனாந்தன்மையெங்கேசாருவன்யானேதந்தே
னலைவிலாவிரண்டோர்போதிங்குறையுமென்றருளிற்சொன்னான். ( )

வழுவினற்றவத்தினானுநன்றெனமன்னன்மண்மேற்
பழுதிலெப்பொருளும்வவ்விக்கொண்டனம்பரித்தேர்தூண்டி
விழுநிதிக்கோனூர்புக்குத்திருவெலாம்வாரிவேண்டுஞ்
செழுநிதியளிப்பனென்னச்சிந்தையிற்றெளிந்திட்டானே. (௨௨)

வெம்பரமிருந்தசேடன்மிளிர்பணுடவியின்மேவு
மம்பரமுடித்தபாரினரும்பரம்பொறுத்ததோளா
னெம்பரமுனிவன்வாழ்த்தித்தருப்பைநீரெறிதலாலே
யும்பரும்படரும்வான்றேரொல்லையிற்கொணர்மினென்முன். (௨௩)

வேறு.

கொம்பிற்சங்கிற்றுந்துபியிற்காகுளிதன்னிற்
பம்பிப்பம்பிப்பொங்கொலியெங்கும்படர்போத
வெம்பித்துங்கத்தோடிமிர்பன்மாவிசையாநின்
றம்பொற்றிண்கோல்பற்றுபுதேர்சாரதிதூண்ட. (௨௪)

கொண்டற்செற்றிச்சுற்றுநிவப்பிற்குலநாப்பட்
டெண்டத்தட்டிற்கட்டுமணிச்செஞ்சுடரேறிக்
கண்டப்பப்பிற்றப்புநிரப்பிக்கைபோய்நீ
டண்டப்பத்திப்பித்திகையிற்போயணிசெய்ய. (௨௫)

தொடர்செட்டச்சிற்றற்றருளிர்ரெருக்கெழுதுமம்
படர்விற்புக்குப்புக்கினனூட்கும்படிபோகி
யடர்பொய்ப்பற்றற்றற்பொடுகற்பத்தமர்வானோர்
சுடரிற்கொட்குங்கட்குமிமைக்குந்தொழினல்க. (௨௬)

ஞாலந்துக்கித்துக்கிமறுக்குற்றுடனுண
வேலுந்துக்கிற்றெருக்கபரத்தாலிடரெய்திச்
சாலுந்துந்திப்பைத்தலைநெக்கித்தகுசேட
னலங்கக்கிக்கக்கிநடுக்குற்றயர்வாக. (௨௭)

சிந்தைக்கின்பைத்தந்திடுகாசிற்றேசாலே
முந்தைக்கங்குற்போதறியாநீண்முடிசாட
வந்தத்திங்கட்கப்புறமாகுமாகாசச்
சந்தப்பந்தித்தாரகைசிந்தித்தரைவீழ. (௨௮)

வீறுர்சில்லிப்பேரொலியெங்கும்விசைபோகி
யேறுநிற்பச்செம்பொற்சயிலக்கிப்பாலா
ரூறுலோவத்தொப்பவிருப்பவுப்பாலார்
தேறுவேங்கித்திண்செவிபொத்திச்செவிடெய்த. (௨௯)

ஓகைநிரப்பப்பச்சைமணிச்செய்துளகோலப்
பூகநிரப்பும்பைங்கதிரெங்கும்பொலிவாகப்
பாகநிரப்பித்திக்குநெருக்கிப்படிமூட
மாகநிரப்பாவந்ததுதிண்டேர்வரலோடும். (௩௦)

எரிகுடதிக்கிற்கடலிடைபோகாவீழாவெம்
பரிதிகுளிக்கக்கற்கிரியற்பம்படர்வானிற்
றெரிவிசயப்பேர்யோகமடுக்குந்திகழ்வேலைப்
பெரிதுறவத்தேர்மிசையினிதுற்றான்பிறழ்வேலான். (௩௧)

வீவதுசெய்யும்வெம்பயமுற்றால்வினையாவுந்
தீவதுசெய்யுஞ்சேணுணர்வோருந்தெளிவாரோ
தாவதுசேருந்திண்புகழ்மன்னன்சமர்வேறே
யாவதுதேறாவங்கமரேசனயர்கின்றான். (௩௨)

பொருதற்கிப்பாரன்றியுமேலும்புகுபோருக்
கரிதிற்பற்றும்போர்முரசோதையதுகேளாப்
பரிதிக்கெட்டுஞ்சக்ரகிரிக்குட்படுபார
விரிதிக்கெட்டின்மன்னவர்யாரும்வெருவந்தார். (௩௩)

வைப்படைகாலைப்போதுபடைக்குமணிவாளான்
நெய்ப்படைசெம்பொற்றேர்மிசைநள்ளார்சிமிர்தட்டின்
மைப்படர்கோலக்கங்குறுரப்பான்வருகாலைக்
கைப்படைசெல்வான்கண்படைசெய்தான்கதிர்வேலான். ௩௪)

வேறு.

தூநாண்மலர்க்கணைதொடைக்குரிசிறன்போர்
வானுடைளக்குமுரசத்தொனிமடுப்ப
மேனுடியக்கர்பதிமிக்குறவியந்தே
யானுமதிப்பெருமமைச்சினினைறிந்தான். (௩௫)

சாயாவமர்க்குளமிளைத்துநிதிதன்னை
யாயாதளித்தலினடற்கெழுமுனன்னான்
றேயாநினைப்பினைமுடித்தல்செயலென்றே
மாயாமயக்கறுமுளத்திடைவலித்தான். (௩௬)

கூடாநிதிக்குவைகுறைந்திடிலெமக்கே
யீடாமெனப்பெரிதுளத்தினிடையெண்ணா
வீடாநிதிக்குவைகணத்துதவுமிக்கா
ணீடாடகப்பெயரரும்புயனினைந்தான். (௩௭)

கன்றுநினைப்பதுகடைப்படுதன்முன்னே
சென்றுதரித்ததுசிறப்பினிதுபோதின்
முன்றுவிமிக்கரகுதண்டவறைமூடப்
பொன்றுரையிற்கொடுபொழிந்தருடியென்றான். (௩௮)

அன்னானிசைத்திடுமொழிக்களிகொளாநன்
றென்னாவுவப்பினொடுமேகுபுபொழிந்தே
பொன்னாண்மலர்க்கடவுள்பொற்பினொடுதந்த
பன்னாண்மலர்க்கிறைபடுத்தியதுமாதோ. (௩௯)

வேறு.

நன்னெடுந்தருமுன்னாணமற்றையநவில்வதென்னே
பொன்னினையுதவுமாரிப்புட்கலாவர்த்தமானாற்
பன்னுசெந்தமிழ்தேர்செஞ்சொற்பரராசசேகரன்கை
யன்னதப்பொழுதின்மற்றையாணியத்தொவ்வாதன்றே. (௪௰)

கதிப்பெரும்விரைவினோடுங்கதியோடுங்காவலாளர்
துதிப்புறுசொல்லினோடுந்துன்னுபுவாராவெள்ளை
மதிக்குடையரசேமின்னுமற்றவுமன்றிமாறா
நிதிப்பெருஞ்சோனைமாரிநிதியறைமூடிற்றென்றார். (௪௧)

ஏதமிலுவகைவேந்தனியக்கர்கோனிட்டதீதென்
றோதவுதயநோக்கியணிமணித்தேரினீங்கிக்
கோதறுமுனிவன்றன்னைக்கொணர்கெனக்கொணர்ந்தபின்னர்
மாதவவலியினீரேவவ்வுதிர்நிதியமென்றான். (௪௨)

உளப்பெரும்வியப்புமல்கவொண்டவமுனிவனெய்தி
யளப்பருநிதியவைப்பைநோக்கிமீண்டரசயான்சொல்
களப்பெருநிதியமீரேழ்கோடியேகணித்தியானே
கொளத்தனிதருதிமற்றைநிதியநீகோடியென்றான். (௪௩)

செம்பொருட்டகையின்வந்தோனின்னணந்தெரிப்பவேந்தன்
வெம்பொருட்டகையிங்குற்றவியப்பினைவியந்துநோக்கி
லெம்பொருட்டன்றால்வேதவிரும்பொருளியல்பினீரே
நம்பொருட்டாதலாலேநிதியெலாநுமதேயென்றான். (௪௪)

இம்மையிற்செய்தறனேமறுமையினெய்துமன்றி
யிம்மையினெய்தறனுமுளவெனவிசைப்பர்மேலோ
ரிம்மையினுவந்துநீயேயீபொருளநந்தமாகி
யிம்மையிலெய்திற்றென்றாலெம்பொருட்டெங்ஙனாமே. (௪௫)

நுதலியசாதகங்கார்நுண்டுளிநுகருமேனு
நுதலியநுகர்வதன்றியுறையெலாநுகர்வதுண்டே
நுதலியவன்றிமிக்காய்நுவல்பொருள்வரினுநல்லோர்
நுதலியகொள்வதன்றிநுவன்றதன்மேற்கொளாரே. (௪௬)

மட்டகவளிகொள்பைந்தார்மன்னன்முனிவனையகூறி
யுட்டகவுடையவேதமுனிவரன்மறுத்தலோடுந்
தெட்டகல்வியினீர்கொள்வீரெனப்பொருடெரிந்துபண்ணூ
ரொட்டகத்தேற்றிப்பூசைமுறையினிலுதவினானே. (சஎ)

உதவலுமுரைப்பான்வேதமுனிவரனூற்றருத
மதவலித்தடக்கையானைமன்னநீகருதில்வைய
மிதமுறுகனகக்குன்றத்திறைதரலரிதோவிண்டு
புதைமுகில்கனகயாரிபொற்பொடும்பொழிந்ததன்றே. (சஅ)

எனவினிதுரைத்துத்தன்கைம்மலரினலிகல்வேன்மன்னன்
றனதொளிர்மேனிதன்னிற்றைவந்துதருவதென்யான்
கினதுயர்வலியுந்தேசுநிறைந்ததோர்மகவைநேசத்
தினிதுறப்பெறுதியென்றுங்காசிசொற்றேகினானே. (சகூ)

வேறு.

கனைநெடுங்கழற்காலமன்னவன்
றனைவியந்துளோர்தனைவியந்திட
நினைவினின்றபொன்கொண்டுநீடவன்
றனதுமாமுனிசரணமெய்தினான். (ருo)

அன்னமாதவன்வாய்மையாலடன்
மன்னனோர்சொலில்வளர்செவ்வேளலாற்
பின்னையில்லெனப்பெற்றனன்றனித்
தன்னைநேர்வதோர்தனயன்றன்னையே. (ருக)

காதன்மைந்தனைக்கண்டுகாவல
னோதுமங்கலவுதயமும்பரெண்
பேதமில்லதோர்பிரமமூர்த்தமே
யாதலாற்பெயரயனென்றோதினான். (ருஉ)

கோபமேயதோர்கொற்றமேயணி
மாபதாகைவேன்மன்னன்மைந்தனுந்
தூபமேயதோர்சுடரினிற்கொளுந்
தீபமேயெனச்சிறந்துதோன்றினான். (ருங)

உலைகொடுமையுண்டொன்னலார்கடந்
தலைகடுயவங்குமிழுந்தாமநீ
டிலைகொள்வேலினானெண்ணிலாதன
கலைகள்யாவையுங்கடந்திட்டானரோ. (ருச)

கடந்துகாமநோய்கைகடப்பவிண்
ணிடந்துதோன்றியவிந்துவந்துநேர்
கிடந்ததாநுதற்கிளர்மினார்கள்பின்
படர்ந்துகாமுறும்பருவமெய்தினான். (௩௫)

அயனுதயப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௮௮௬.

# அயனெழுச்சிப்படலம்.

புதிதுறவிளவலிங்ஙன்வளர்தலும்போசனென்னும்
விதியமைவிதர்ப்பர்வேந்தன்விளங்குதன்னுடன்றோற்றிந்து
மதிமணவினைக்குவல்லேவம்மினென்றரசர்யார்க்கு
முதியமையோலையோடுந்தூதரையுய்த்திட்டானே. (௧)

உய்த்தபின்வரவிட்டானீடுள்ளுறையோலையாசை
பத்தினினெட்டும்வென்றோனங்கதுபரிந்துகேளாத்
தத்துமாப்போசனோடுந்தமர்கொள்கைதகவென்றுணிற்
சித்திரத்திலகமன்னமைந்தநீசேறியென்றான். (௨)

ஏந்தலுமரசர்கோமானிணையடிதொழுதுபோற்றிப்
போந்தனன்றிரண்டசேனைபூத்ததுபடலதூளி
யோய்ந்தனபறவையானவொண்கிரிசுரித்திட்டேய்ந்து
சாய்ந்தனவாழியேழிற்றழைத்ததுதமரமாதோ. (௩)

ஆதரத்தசலந்துஞ்சியகல்விசும்பாற்றின்மெல்ல
மாதரத்தசைந்துபோகுமழைமுகிற்புறங்களெங்கும்
காதரத்துவரியுண்டகடியனவுருப்பமெல்லாம்
போதரத்தூளிபோர்ப்பப்போயினபுரவியீட்டம். (௪)

மேக்குலாமரசர்சீர்த்திவிடர்கொண்டாம்பிலஞ்சலிக்கப்
போக்கிவெம்மதநாற்றத்திற்றிக்கயக்கைப்பைப்பொத்தி
யாக்குமம்மதயாறுந்தியலைகடலுவரையெல்லா
நீக்கியங்கினிதிற்போனநெடுங்கரவரைகளெல்லாம். (௫)

தங்கொளியதனின்மேருச்சயிலமார்புதைத்துச்சாயாக்
கங்குல்காலறுத்துநீண்டகதலிகையாடையாலே
மங்குலின்றலையினெற்றிமணிமுடியதனின்வானத்
திங்களின்வயிறுகீறிச்சென்றனதேர்களெல்லாம். (௬)

சாரிடந்தோறுந்தாழாத்தன்மையிற்பெருக்கியெல்லாப்
பேரிடங்களையும்வவ்விப்பிறங்கொலிப்பெரியவான
வூரிடஞ்செலுத்திமற்றொன்றுண்டுகொலென்னவோங்கிப்
பாரிடம்பொறாதவண்ணம்பரந்ததுபதாதிவெள்ளம். (எ)

வன்மயப்படுத்தமேலையுலகைச்செம்மணிகளுச்சி
தன்மயப்படுப்பநாகர்தலமெலாம்வயிரவாழி
யென்மயப்படுப்பமற்றையிடைநின்றயாவுந்தன்ன
பொன்மயப்படுத்ததண்ணல்புரிந்துசெல்பொலங்கொடேரே. (அ)

காழ்படுவேலர்வாளர்குந்தத்தர்கழுமுட்கையர்
பேழ்படுகதையர்வில்லர்பிறைமழுக்கரத்தராகி
யூழ்படுமறத்தர்காத்தற்கொருவனைச்சூழ்ந்தசூழ்வங்
கேழ்கடலொக்குமற்றதெக்கடலென்னலாமே. (கூ)

பன்னிசைப்பரவையொன்றுபாடகர்பரவையொன்று
நன்னடர்பரவையொன்றுநாவலர்பரவையொன்றே
கின்னரப்பரவையொன்றுகீதயாழ்ப்பரவையொன்றங்
கின்னியப்பரவைதானென்றிவற்றினும்பரவையேழே. (க0)

நேரியலிலாததோற்றநெடும்பொருணிலைமைதன்னாற்
பேரியலுடையதத்தநகரொடும்பெயர்தல்போலச்
சூரியன்மரபில்வந்ததோன்றலைச்சூழ்ந்துவந்த
வாரியமுதலபாடையரசருமளப்பிலாரே. (கக)

துன்றியகாலமூன்றுஞ்சூழ்ந்துசெய்செயல்கள்யாவு
மன்றல்சேரிறைவற்காற்றும்வண்ணமேமனத்ததாகச்
சென்றுறுபொருள்களொன்றுந்தெளிபுலப்படாதியோகத்
தோன்றியமோனர்போலவுசாக்கையரொருங்குபோனார். (கஉ)

இயல்வருங்கழுநீர்பற்றியிடங்கையின்வலங்கைமார்பிற்
றுயல்வருந்தோறுமாலைதிருத்துதரெழிலேயாக
மயல்வருங்குழைகள்பொற்பவான்முகந்துளக்கிமார
னயல்வரும்பரிசிற்போனாராடவரனேகரம்மா. (கங)

நிரம்பினர்நெருக்கலாதுவிசைபடநிமிரவெற்றும்
பிரம்பினரழல்பெய்கண்ணர்பேரொலிபிறக்குஞ்சொல்லர்
பரம்பிடருறுத்தவைத்தவொட்டகமுதலபாங்கர்
வரம்பிலசெம்பொன்மூடைகாத்தனர்வளைந்துபோனார். (கச)

சாலுந்தண்ட்டத்தைநீத்துவிண்ணிடந்தழுவிப்பாரிற்
காலுந்திவிரிந்தசெய்யகமலங்களனந்தமுண்டேற்
போலுஞ்செங்கவிகைமாலும்பொன்னபொற்கமலமேய்க்கும்
பாலவெண்பதுமமொக்கும்பசியபச்சிலையையன்றே. (௧௫)

திருக்குலாங்கதலிகைக்கானுழைந்துமேற்சென்றவாணி
தருக்கினாலிடைந்துமீளவிறங்கவுந்தகாதிங்கென்னாச்
சுருக்கிலாவிரிந்ததோற்றச்சுடர்நெடுங்கவிகைக்கொள்ளை
நெருக்கினாலாற்றலாதுநடுங்கினநின்றவன்றே. (௧௬)

எண்பட்டதேர்களெண்ணிற்கிரண்டுபட்டனதிண்யானை
பண்பட்டபுரவியெண்ணிற்படாநனபதாதியீட்டங்
கண்பட்டவளவைகொண்டகருத்தினுக்கடங்காவேலை
மண்பட்டதெனலாஞ்சொல்லில்வாயுளார்தமக்குமாதோ. (௧௭)

தேரொலியல்லதேரிற்றிரண்மணித்திமிலம்வாசித்
தாரொலியல்லவாயிற்கனைகுரற்றமரம்யானைப்
பேரொலியல்லகண்டைநாதத்திற்பெருக்கமெண்ணி
லோரொலியல்லவானோரூர்செவிடுறுத்ததெல்லாம். (௧௮)

அல்லுண்டபகலையெல்லாமயலுண்டவாரமன்ன
வில்லுண்டவுரவ்வீரர்மிகலுண்டவேதியென்று
லெல்லுண்டதிகிரிவாளகிரிப்புறத்திருளுண்டென்னுஞ்
சொல்லுண்டதறியுங்காலைத்தொலைவுண்டுசுருங்குமன்றே. (௧௯)

எய்திடாநின்றவாசியினமணிச்சிவிகையால
மைதொடாநின்றவேழமரகதக்கொடிஞ்சித்திண்டேர்
மெய்தொடாவிரைந்தவென்னிலடிக்கொருவிலங்கலங்ஙன்
செய்திடாதேகற்குண்டேசெல்லுநர்செல்லுமாறே. (௨0)

முற்பட்டாரடியுமொய்ம்புமுரிநெருக்கஞ்சிநொய்திற்
பிற்பட்டார்பதமுநோக்கிப்பிடிப்பதுகொள்ளலல்லாற்
சொற்பட்டார்திறலென்றுசொல்லுவதன்றியுண்டே
யெற்பட்டாரணிகொள்தானையிடைப்பட்டாரியங்களுனே. (௨௧)

அழுந்தவாமதிபோய்ச்சாலவளப்பதற்காய்ந்துதாழ
விழுந்தவாவென்னின்முற்றுங்கட்புலம்விரித்துநோக்கித்
தழுந்தவாவலிகொள்சேனைதனித்தனிபிரிக்கலாதிங்
கெழுந்தவாறெளிதினாமோவெம்மனோரியம்புமாறே. (௨௨)

வேறு.

எல்லுலாந்தகையின்மணிப்பூணினான்
மல்லன்மாமணங்காண்பதொர்மாதராற்
செல்லுலாமதித்தின்கவிகைக்கழை
வில்லிசேனையெழுந்துமிடைந்ததே. (உ௩)

துற்றுமாமணிக்கச்சுடைத்தூமுலை
வெற்றிவேழமுமேதகுநாண்மலர்க்
கற்றைவார்குழற்காமருகங்குலாங்
கொற்றவேழமுங்கொண்டுநடந்ததே. (உ௪)

மண்ணுமெல்லிதழ்வார்கனகக்குழைத்
தண்ணவில்லொடுசார்பழியஞ்சிய
வெண்ணமில்லவிரும்புருவக்கழை
வண்ணவில்லும்வணக்குபுசென்றதே. (உ௫)

மாலைவம்புகமழ்ந்தெழுவண்குயக்
கோலவம்பொடுகூற்றுங்குலைந்திடச்
சாலவெம்புந்தவத்தரைவென்றக
ணீலவம்புந்திருத்திமிர்ந்ததே. (உ௬)

கள்ளுலாவுங்கடிமலர்த்தார்பொலி
கொள்ளைமாவுங்குரைகடற்றோன்றிய
தெள்ளுமாரமுதச்செழுந்தேமொழிக்
கிள்ளைமாவுங்கொடுவிரைகின்றதே. (உ௭)

நொய்திலாதெழுநோன்படையோடுதன்
செய்தியேதருசின்னமும்போதர
வெய்துறுவிளவேனிற்றலைவன்வே
றெய்துமேயுடனேகினனென்பவே. (உ௮)

வம்புலாவுமராட்டத்துமாப்பல
பம்புசேனையிதனெடும்பையயக்
கம்புசேணின்றொலிப்பக்கலந்துட
னம்பிசேனையுநன்னர்நடந்தவே. (உ௯)

வேறு.

நன்னடைப்பிடிக்குலங்கணவ்வியங்கணுரையே
வென்னிடைப்பரித்தல்செய்துமெல்லமெல்லவேகின
சொன்னடைப்பதம்வருந்திடாசுமப்பதன்றியே
சென்னடைக்குடைந்தபோதுபின்னையென்கொல்செய்வதே. (௩0)

பரவுநல்லெழிற்கோட்டபடைக்கணார்கண்மேவியே
விரவுவேலர்தம்மொடும்விளங்குவார்களாயினு
மிரவைவெல்லியற்பசும்பொனிட்டிழைத்ததட்டினு
லரவவல்குலுக்குடைந்ததேருமன்னவாமரோ. (௩க)

வல்லியற்றுரங்கமேகுகிற்பதுமனங்கொளா
ரெல்லியற்பொன்மாதர்மீதிருப்பதுமுணர்ந்திடா
வல்லியற்கதுப்பினருமாவுமாதலாற்பரி
செல்லுகிற்பதோபொன்னார்நிறத்தையோதெரிப்பதே. (௩உ)

குலப்பொன்னரையேயெடுத்தல்செய்தும்விற்குலங்கொடாள்
நிலத்துறுதுசிற்சிலர்நிரந்துதாங்கவேகலா
னலத்தியானம்யாவுமுற்றவண்ணநண்ணுமோபடிந்
தலத்தியாதினுஞ்சிறந்ததகைபடைத்தசிவிகையே. (௩௩)

கொம்பனாலத்தகங்குழைத்திடாவிடிற்படி
வெம்புபாதவைப்பினுக்குமென்மைசெய்வதெங்ஙனே
யும்பர்வேளனார்கள்மார்புகுத்தமாலையாறெலா
மம்பொன்மாலையல்லவாகிலாரமாலையாகுமே. (௩௪)

நிறையுமுள்ளவேகயானைநீலமேகமென்னவா
யறையுமுள்ளமல்லவென்றயிர்க்குமேமருப்பிணைப்
பிறையுமுள்ளமதமழைப்பிறப்புமுள்ளவோடைமின்
முறையுமுள்ளவுலகமஞ்சுமுதிர்முழக்குமுள்ளவே. (௩௫)

தென்னிரந்ததேரைமேருவென்றுசெப்பலன்றியே
முன்னியங்கலொன்றுகொண்டுமல்லவென்னமுடியுமோ
பொன்னிலங்குமுடியனந்தமுறும்விசும்புபுகுமரா
நன்னிலந்தொடும்வரத்தினாிருக்கைநண்ணுமே. (௩௬)

சினத்தியங்குமாருதச்செறிப்பினிற்சிறக்குமா
வனைத்தையுந்தெரித்ததல்லவென்னிலல்லவாகுமோ
கனத்துறுந்துகட்கிளைத்தகல்லெனக்கலித்தமா
மனத்தையுந்தணித்தசெல்கதிக்கண்மெய்ம்மறைந்தவே. (௩எ)

தகைத்திறத்தமன்னவர்தயங்குபாலசாமரை
நிகைக்கணின்றிரட்டன்மாதரார்முகங்கள்செவ்வியே
யுகைக்குலைந்தமதியிறங்கியுருகிமெய்ந்நெடுத்துரு
மிகைப்படைத்திரண்டுபாலும்வெப்பின்வீழ்தலொக்குமே. (௩அ)

முப்பெருந்திறத்துமூரிமுரசுமும்மதம்பொழி
செப்பருந்திறற்கராசலத்துவென்றெழிப்பன
வெப்பெருங்குலத்தமேகமும்விசும்பிறங்கியே
யுப்பருந்திவெற்பிருந்தொருமுழங்கலொக்குமால். (௩௯)

பரியமால்களிற்றின்மேலெடுத்தபச்சையின்றொடே
கரியசெய்யவெளியவொண்படத்தமைத்தகதலிகை
யுரியமேகதனுவிலங்கலுச்சிமேலொர்காலதாய்ப்
பெரியகூனிமிர்ந்துருப்பிறிந்துநின்றதொக்குமே. (௪0)

நற்படைக்கடைக்கணவ்வியன்னசெவ்விநங்கைமா
ரெற்பரித்திலங்குசிங்கவேறெனச்செல்வேலவர்
கற்பகத்தையொக்கிலொப்பர்காமவல்லிகான்மத
வெற்பையொக்கிலொப்பர்மென்பிடிக்குலத்தைமீளவே. (௪௧)

அனந்தவேனுலப்பில்பொன்னளப்பில்கற்பகத்தொடை
புனைந்தமாலொராறணிந்துபோவதுள்ளதாவதேல்
வனைந்தமாலையிளைஞர்மாதர்மன்னரார்திறத்துநேர்
நினைந்துகூறலாகுமல்லவென்னினேருமில்லையே. (௪௨)

வேலைசெய்தமும்மதச்செருக்கினோடிவேழநீள்
சோலைசெய்தகானெலாந்துகட்படத்துகைத்தன
மாலைசெய்தபோதுவாய்மலர்ந்துநின்றவேழிலைம்
பாலைசெய்தவஞ்சமென்கொல்பன்னிநின்றுபகர்வதே. (௪௩)

சேறணிந்தகுங்குமத்தனத்தெறிந்துசேறலா
னீறணிந்தசுண்ணமேநிலம்புனைந்துபோகுவார்
வீறணிந்தமெல்லிழைப்பரம்பொறாதுவீழ்த்துநீ
ளாறணிந்துமெல்லவேயனத்தினங்கொதுங்குவார். (௪௪)

குசைவலம்வலித்துமற்றையிடமுறக்குறுக்கியுந்
திசைமுகந்திரித்துமாவுகைத்தொர்காளைசெல்வன
விசைதருஞ்சொன்மாதராரிருங்கணம்பிரண்டுபோல்
விசைபடும்வினைத்தொழிற்குவிலகியேகல்போலுமே. (௪௫)

விடையினிற்செல்வானொராடவன்விளங்குமன்னமென்
னடையினிற்செல்வாளொர்மங்கைநாமநண்ணிவினவலுந்
தொடையினிற்குழற்கழற்றியெறியவிற்றொடைக்கைவேள்
படையினிற்பணிப்புறுபதைத்துளம்வெதும்பினான். (௪௬)

வேறு.

சேயசெங்கைச்செழுங்குழன்மாதர்கண்
மேயவோரிருநோக்கம்விளைத்தலா
லேயவன்புடனேகுவமீளுவ
வாயவவ்வுழியாடவராவியே. (சஎ)

முன்செல்வாள்குழன்முன்னர்வலித்திடப்
பின்செல்வாள்விழிபின்னரினீர்த்திட
மின்செய்வேற்கையொராடவன்வேறுபின்
னென்செய்வானடுநின்றிடரெய்தினான். (சஅ)

எஞ்சலின்றியொரேந்திழைதன்மனந்
தஞ்சமற்றொருதோகையையுள்ளினா
னெஞ்சிடம்பெறலின்மையினிட்டுரன்
கஞ்சனென்றொருகாளைவெதும்பினான். (சகூ)

மெய்யுமெல்லனிச்சம்முலைவெற்பிடை
தொய்யுமென்றதர்தொய்ந்தவோர்கோதையைக்
கையினாலெடுத்தற்கொருகாளையென்
செய்யுமென்றுதிகைத்துநின்றேங்கினான். (ரு0)

தங்சொர்மாதுதன்கேளொருதையலை
நங்கையிந்நெறிநன்னெறியென்றது
மங்கனென்னினைந்தாள்கொல்கணம்பினாற்
கொங்கையானைதனைக்குளிப்பாட்டினாள். (ருக)

தொள்ளைப்பேருணர்வோடுமோர்தோன்றறா
னள்ளற்றாமரையானமுகத்தினீர்
கள்ளத்தாமிருகண்வழிச்சென்றுநும்
முள்ளத்தாமென்னுயிர்சுகமோவென்றான். (ருஉ)

விண்புதைத்தயல்வெம்மதவேழமொன்
றெண்புதைத்துவரத்தனியென்செய்வாள்
பண்புதைத்தவொர்சொல்லிதன்பங்கயக்
கண்புதைத்துக்கடும்பயநீக்கினாள். (ருங)

வண்ணயானைவரக்களிறொன்றுபோர்
பண்ணவாகம்பதைப்பொடுபாங்கினோர்
தண்ணமாதைத்தழீஇயவடன்முலை
யண்ணல்யானையுமத்தனையாகுமே. (ருச)

கஞ்சத்தாளையன்றனையொர்காளையெ
னெஞ்சக்கோயிலுண்மேவியநீர்நெடுந்
தஞ்சத்தாமயற்றுடிறந்தேபுறம்
வஞ்சத்தேகியமாயமென்றேம்வென்றான். (ருகூ)

தேனுலாமலர்சிந்துமச்சேறெறி
போனபோனவிடந்தொறும்பொங்கிய
நானநீரெறிநன்னதியுங்கொலை
யானைமாமதவாறியுமாயதே. (ருசு)

அந்தத்தாள்பொதியத்திற்பிறந்திடு
மந்தக்கால்வரவைகியவந்நெறி
கந்தக்காவுறைகண்மலர்க்குப்பையுஞ்
சந்தச்சேறுந்தழீஇயகிடந்ததே. (ருஎ)

மெத்தும்பூமரக்காணிழன்மிக்கதாய்ச்
சித்தம்வவ்விக்கிடந்தவச்செந்நெறி
வித்தவெய்யிலிறேடும்வெண்ணித்திலப்
புத்தவெண்ணிலவோடும்பொலிந்ததே. (ருஅ)

வேறு.

நிறுத்தலில்சீதளநிரப்பித்தென்றல்வந்
திறுத்தலினந்நெறியெங்குமங்கைமார்
வெறுத்தலில்குங்குமச்சேற்றைமேதகப்
பொறுத்தலிற்புதுமணம்பொருந்திற்றென்பவே. (ருகூ)

தூநெறிதழுவுவெண்டேரிசூழ்ந்தெழ
கானெறிதருந்திறற்படைநடத்தலால்
வானெறியெங்கணுமண்ணிற்றோன்றிடக்
கானெறியெங்கணுங்கடலினின்றதே. (சு0)

கவிகையிற்கவரியிற்கதலிகைக்குழாங்
குவிகையிற்றரளவெண்கோவைகொண்டுமா
ரவிகையிற்போதையுங்குவிக்குமீர்ங்கதிர்ச்
சிவிகையிற்பொலிந்ததுசெல்லுமாறரோ. (சுக)

பெருங்குடையாதபமறைப்பப்பேதையர்
கருங்குழலிருளினைக்காட்டமன்னவர்
நெருங்குபொன்மவுலியினிறைந்தசெம்மணி
யருங்கதிருதயமேயல்லதில்லையே. (சுஉ)

நெறியெழுந்துகளினாற்றமதுநீணிறம்
பிறிதுறுபதாகையஞ்சனைபெட்புறச்
சிறியபுன்கதனிடைத்தென்றல்சீகர
மெறியுநன்மதைநதிக்கரையினெய்தினான். (௬௩)

வயற்கரும்புறழ்தருமழலையின்சொலார்
கயற்கரும்புனைவிழிக்குறியைக்கண்ணாரு
வியற்கரும்புடைமலரியங்குசேக்கைமேற்
செயற்கரும்புதுப்படமாடஞ்செய்ஞ்ஞரும். (௬௪)

சன்னுவிட்டெழுந்திதழைத்ததாண்மலர்
மன்னுவிட்டுவினாரமருவுமாதைநேர்
மின்னுவிட்டிடையவர்விளங்குமென்குழற்
பின்னுவிட்டணிமலர்மாரிபெய்ஞ்ஞரும். (௬௫)

நிறங்கிடையன்னவாயவர்சென்னேரிலுய்
திறங்கிடையாவிடையோடுஞ்செல்லலாய்ப்
பிறங்கிடையாயபொற்பெரியபூண்கவர்ந்
துறங்கிடையொருவகையுய்யவுய்ஞ்ஞரும். (௬௬)

கன்றலஞ்சுவ்தல்லல்மருங்குகாலிணை
யொன்றலங்கணிப்பினென்றொதுங்கியொண்கணார்
மின்றலம்படிந்தெனப்படஞ்செய்வேலியுண்
மன்றலம்பூவணைவதிதல்செய்ஞ்ஞரும். (௬௭)

முன்றெரியற்குறுமுலைமுகம்பொதி
குன்றெரியர்க்கனோர்குலப்பொற்றார்கொளாச்
சென்றெரியற்பிறழ்ந்தென்னச்செண்பக
மென்றெரியற்றொகைமேகம்வேய்ஞரும். (௬௮)

அலத்தகமிதிப்பினுமஞ்சுஞ்சீறடி
நிலத்தகமியைந்தகொனெடுங்கணீர்க்கெனா
நலத்தகவுட்கொடுநரந்தமப்பிவிற்
குலத்தகவரிக்குரனெகிழ்ங்கொண்ணரும். (௬௯)

நானமுற்றிமிர்ந்துசெந்தளத்துநண்ணிய
தானமுற்றியவடசயிலந்தாங்கியே
மானமுற்றியநெறிநடந்துமானனீ
ரீனமுற்றிறநுசுப்பிளைத்ததென்மரும். (௭௰)

நாமலைநித்திலாகுமென்கச்சினைத்
தேமலைதார்மலைச்சிலவர்கொள்ளவே
கோமலையிடிக்குரற்குறுங்கண்மும்மத
மாமலைமுகபடாம்வாங்குவார்களும். (௭௧)

அருங்குகச்சிலம்பணையணையவாடவ
ரொருங்குகச்சொய்யெனவொருவிநிற்பவே
மருங்குகச்சுரப்பினின்றுற்றிவாம்பரி
நெருங்குகச்சுறுவிரிநெகிழ்க்கிற்பார்களும். (௭௨)

ஆம்பரித்தனமுகிலகட்டிற்றானைநேர்
கூம்பரித்திடுநெடுங்கொடிஞ்சிநீங்கியே
தாம்பரிக்குரற்சிறுதார்கடள்ளுறு
வாம்பரிப்பிடர்நுகம்வாங்குவார்களும். (௭௩)

மாதபத்திரவியைமறைக்கும்வான்றிக
ழாதபத்திரநிழலகன்றிடாவணிப்
பாதபத்திரணறுஞ்செவ்விப்பன்மலர்ச்
சீதபத்திரநிழல்செல்கின்றார்களும். (௭௪)

தேற்றுகிற்பார்களுந்திங்கள்வேர்வினை
மாற்றுகிற்பார்களுமதுரவாசகஞ்
சாற்றுகிற்பார்களுஞ்சந்தத்தாலழ
லாற்றுகிற்பார்களுமாயினாரரோ. (௭௫)

வேறு.

பொன்னெடுங்கிரியைவிட்டுவெள்ளியம்பொருப்பிற்பொற்பா
ரன்னெடுங்குகரம்புக்கவரியிளவேற்றையொக்க
நன்னெடுந்தேரினீங்கிநடுமுளைவிசித்தநாண்கொண்
மின்னெடும்படாஞ்செய்மாடம்புக்கனன்விளங்குவேலான். (௭௬)

மூட்டினநிகளவன்கண்முரித்தனமுன்னம்யாவும்
வீட்டினவியாளமஞ்சமிதித்தனவென்கொலாமாற்
பாட்டினவடவிவேலைபடமதவருவிபாயப்
பூட்டினதருக்கடோறும்புகர்முகப்பொருப்பையெல்லாம். (௭௭)

கண்களிற்காணலாகாக்கடுங்கதிக்காலையார
வண்கையிற்பிடித்திட்டொன்றினடுக்கவும்வல்லர்போலா
மெண்கணிப்பெய்தநட்டமுளைதொறுமிறுகப்பற்று
மொண்கயிற்றார்த்தார்வல்லேயுருக்கொண்டவொலியையெல்லாம்.)

உழைமுகவுருக்கொடிங்களுச்சிக்கொண்டொளிரும்பால்வெண்
மழைமுகம்பொதிந்தவன்னமாளிகைவதிதல்செய்யுந்
தழைமுகமாலைமார்பத்தருக்களுமநேகம்பாலிற்
குழைமுகமொளிரவைகுங்கொடிகளுமநேகமன்றே. (எகூ)

கான்கெழுநீழருேறுங்கதிர்த்தலைக்கண்டத்துள்ளே
தேன்கெழுமலரஞ்செவ்விச்சேக்கையிற்சிங்கவேற்றி
னூன்கெழுகுறங்கிற்சென்னியுறுத்தியங்குறங்குகின்ற
மான்களுஞ்சிலகள்சூழ்ந்தமயில்களுஞ்சிலகளன்றே. (அ0)

இன்னறும்பனிநீராடியிருந்தளம்பொதிந்துமுக்கத்
துன்னருமிளங்கால்வீசவுலாவுவவுறைவவெல்லாம்
பொன்னவன்சிலம்பும்வீரக்கழல்களுந்தாளிற்பூண்ட
வன்னமும்விடையுமானவணிநிழருேறுமம்மா. (அக)

தளைபடமனையுமன்றுஞ்சதுக்கமுமறுகுங்கோணுங்
கிளையுறுகடையுநீளத்தாணியுங்கெழீஇயதோற்ற
மளவறுசிறப்பின்மிக்கவயோத்தியைக்கொடுவந்தார
வளநதிக்கரையினங்கண்வைத்ததும்போலுமன்றே. (அஉ)

வேறு.

ஆயவாருகியபொழுதினன்பினேர்
கூயவாறெழுந்தெதிர்குழுமிக்கூடியே
யேயவாறேகியல்காணவெய்தினர்
மேயவாறெய்தியவிழுமம்விட்டுளார். (அ௩)

உந்தியினுப்பண்மீதோங்குமொண்மதச்
சந்தமேதோன்றலொண்டரங்கமேயபாற்
சிந்துவினுல்கெலாமளந்தசேவடிச்
சுந்தரனெடிதுறத்துயிறல்போன்றதே. (அச)

அறிதரவெங்கயமமிழ்ந்தியங்கைமூச்
செறிதரப்புற்புதமெழுதறன்னுருப்
பெறுமவன்சாபமேபிரிந்துவான்செல
மறிபுனன்மேற்பதம்வைப்பபோன்றவே. (அரு)

கனைகுரலளித்தொகைக்காட்சிகாண்குவா
ரினையவுநோக்கியுள்வியக்குமெல்லையிற்
றுனைவரும்வானவர்நடுங்கத்தோற்றுநஞ்
சினவொருகரிபுனலிடையெழுந்ததே. (அசு)

மிடல்புரிகன்னபாகத்தின்வீழ்மதக்
கடல்கழுவுண்டிடக்கடையிற்றியீனச்
சுடருறவிரண்டுசெய்தொருகைமத்தூணிறத்
தடவரைவிழித்தெனத்தடங்கண்டோற்றிட. (எஎ)

சாடியசகடந்தொறுங்கன்னசாயர
நீடியதுளியிருமருங்குநீடரச்
சேடியல்வெம்முகப்புகர்கடைய்ப்பட
வோடியபொன்னினின்றழகொடோங்கிட. (அஅ)

வடிந்தனநீலநூல்வகிர்ந்துபோட்டென
விடிந்தனரேகைகளிலங்கநீண்முகில்
படிந்தெனவிருக்கவான்கிரியிற்பாய்ந்துகூர்
மடிந்தனகோட்டிளகிலவுவாய்த்திட. (அகூ)

தாவிகற்காரிமெய்க்கரியசட்டையிற்
றூவிகற்சைவலமாகஞ்சுற்றிட
மீவிசைத்தெதிரெதிர்வெடிவெண்சாமரப்
பூவினிற்புழைக்கரந்திவலைபோதர. (கூ0)

நன்செவிஞர்ப்பனமுழக்கநச்சரா
மன்செவிப்புகப்பிரவாகமேறியே
முன்செலவார்திரைகிழித்துமுந்துபு
பின்செலாநின்றதப்பெரியயானையே. (கூக)

எண்மறத்திறல்கொளக்கரியினேழ்மதக்
கண்மலர்ப்புனலினுற்கணத்தடைப்பினுந்
தண்மலர்த்தெரியலான்றனையானையி
னெண்மதச்சுவடுகொண்டுடைத்தவூற்றரோ. (கூஉ)

ஊறியமதச்சுவடுயிர்த்திட்டொண்டிற
லேறியதானைவெங்கரிகள்யாவையு
மீறியபராரைமாமரங்கள்வேரற
நூறியெண்டிசைகளினெடியிற்போயவே. (கூங)

வேறு.

பொன்னிடாநின்றவைவேலேந்துபுபுலியிற்சிறி
வென்னிடாதனையவேகவேழமாவிலங்கறன்னை
முன்னிடாநின்றுமாதர்முதிர்வடமுலைக்கொல்யானை
பின்னிடாநின்றுதத்தம்பெயரினைவிளக்குகிற்பார். (கூச)

விடங்குடித்திருண்டுகொலைவேலெனவிளங்குகண்கள்
குடங்கையினடங்குங்கொல்லோவெனக்குறித்தளப்பபோலத்
தடங்கையிற்புதைத்துநெஞ்சம்வெரீஇவருந்தையலாரை
யிடங்கையிற்றழுவிவைவேல்வலங்கைதொட்டெதிர்ந்துநிற்பார். ௯௫

கற்றையங்கூந்தறாழ்ந்துகாறடுத்தொருங்குகட்டித்
தெற்றிடவருந்திக்குஞ்செல்வியர்சிலம்பிரண்டை
மற்றடுத்துடையதோர்நுண்வல்லிமென்மருங்குலிற்ற
இற்றதென்றிரங்கியாவியேகவுமேகல்செய்வார். (௯௬)

காழ்வருமணிகடொக்ககனகநூபுரங்கள்காலிற்
சூழ்வவும்பாதம்வைக்குந்தொறுமணிக்காஞ்சியற்றுத்
தாழ்வவுங்கலசக்கொங்கைக்குங்குமத்தளங்கள்சிந்தி
வீழ்வவும்வினையேயெங்ஙனேகுவார்மின்னனாரே. (௯௭)

வெற்றிசெய்துணைக்கண்வேலும்வெம்முலைக்களிறுஞ்செய்யுங்
குற்றமிலெம்மனோரைக்கொல்லவோபடைத்ததெல்லா
மற்றிதன்மேற்செலவோமாதரீரென்னவண்கைப்
பற்றுபிடியனாரைப்பையப்பயக்கொண்டுபோவார். (௯௮)

பிடியனநடையுறாதுபெரும்பயங்கொண்டுமாழ்கித்
துடியனவிடையினோடுந்துவண்டனர்சோர்ந்துநில்லாக்
கடியனகவனமிக்ககால்பொரநடுங்கிநிற்குங்
கொடியெனலானார்வஞ்சிக்கொம்பனகோதைநல்லார். (௯௯)

கழைபுகுமின்சொனல்லார்காமருகடைக்கணோக்கத்
தழைபுகுநாட்டநோக்கியூடியவூடறீரா
மழைபுகுநடக்கைவேலர்மருங்குபோயொல்கிமார்பிற்
குழைமுகமுறுத்திநிற்பார்சிற்சிலகொடியன்னாரே. (௧00)

இலங்கிழைமடவார்நொய்தினேகலுற்றெறியப்பட்ட
கலங்களைக்கடந்துபோவதெங்ஙனேகடங்கடோறும்
பொலங்குழையிடைபொற்றோடுபுடைமணிச்சிலம்புகோவைக்
குலங்கண்முன்பின்னாரம்பொற்கோற்றொடிக்குவால்களன்றே. (௧0௧)

ஒன்றியபழுவடங்கவுலாவிசைக்கையராகி
மின்றிகழ்குதிச்சுவட்டின்பெருவிரன்மிதிப்பவோடிக்
கன்றியமுழமோர்நாலுநடந்தபின்காதமொன்று
சென்றெனவுள்ளஞ்சோர்ந்துதியங்குவார்சிந்தரெல்லாம். (௧0௨)

நடுக்குமாலந்தணீர்கணவிலுமிங்கிதனைநன்னர்
தடுக்குமாறரியவேதந்தானெனநக்குநக்காங்
கடுக்குமாறங்கைபற்றியங்கவராவிதன்னைக்
கொடுக்குமாறெண்ணிவல்லேசேட்புலங்கொண்டுபோவார். (க0௩)

கைத்தலமொன்றுநீண்டகாய்ப்புடைவெரிநிற்போட்ட
பைத்தலைபிடிப்பவொன்றுபுகாதலைப்பாகுபற்ற
மொய்த்தலைவெய்திப்பின்முன்பார்த்திடுமுகத்தராகி
யெய்த்தலினிருதாள்சோரவேகுவார்வணிகரெல்லாம். (க0௪)

துதைந்தவார்புரிநாண்கோடிதொடும்படிதுங்கவல்வி
லுதைந்தகால்வாங்கியஞ்சியோடுவாருழையராகத்
ததைந்தபாதவங்கடன்னிற்றடைசலாற்றழைத்ததட்டுச்
சிதைந்தயானங்கடம்மைநீத்தனர்செல்லுவாரும். (க0௫)

நுதலியபராரைத்தாருப்பொதும்பரைநோக்குகிற்பார்
மதலிகைமலிந்தவட்டமணிக்குடைவைத்துச்செல்வார்
புதலிடைப்படைகள்போக்கிப்போதுவார்புதியசெவ்விக்
கதலிகையோடுகற்றைக்கவரிகைவிடுத்துப்போவார். (க0௬)

குலங்கொள்பொற்றொடையினோடுகோசிகஞ்சிந்துவார்பொன்
னலங்கணிப்பேழைகைவிட்டவலிப்பாரஞ்சிநெஞ்சங்
கலங்கலிற்சரிபுகாதுகானகங்காண்பாரோடி
விலங்கலிற்பாதர்தெற்றிமெய்ந்நடுக்குற்றுவீழ்வார். (க0எ)

இனையனவினையமாகியிலங்கிழைமடவாரோடு
மனையனசேனையெல்லாமலந்தலையாயபோதில்
வினையனமதமாவெம்போர்வேட்டெழுசீயமொக்கத்
துனையனதுடிப்பினோடுமெழுந்தனன்றுங்கவேலான். (க0அ)

மணிக்கழலரற்றுமாலைபுரண்டிடாமருங்குகோடா
வணிக்குழையலம்பாகுஞ்சியசைந்திடாவங்கையாடா
தணிக்கரும்விசையினோடித்தளம்பிடாதரித்தியார்க்குங்
கணிக்கருங்கதத்தவேகக்கடாமலையதனைக்கண்டான். (க0௯)

மையதேகொண்டவண்ணவரையனவிதனைவாட்டி
நொய்யதேபிறருக்கென்றுநுனிக்குவானுதலைநொய்திற்
கையதேகொண்டவில்லின்முனம்வளைத்ததையாற்கன்றி
வெய்யதேவிளைக்குமந்தவேழத்தின்வேகமாதோ. (கக0)

வல்லவெஞ்சமத்தினன்றிமதிக்குறைமருப்புமாவைக்
கொல்லுதறிருவைவேட்டோர்குறிப்பரோவெனவுட்கொள்ளா
வொல்லெனவுரவுநோன்றாளொண்சிலைகுனிவித்துய்த்தா
னில்லெனத்தடுக்குமாறோர்நெடுங்கணையதனையன்றே. (ககக)

சிற்றிமிக்கடரேலென்னவுணர்த்துவானெறியினெற்றிக்
கொற்றொழிற்பகழியற்பங்கூர்ந்தலைகுளித்தலோடும்
பற்றியசாபவேழப்படிவம்விட்டலங்குசோதி
செற்றியவுருக்கொண்டாங்கொர்தேவினிற்றோன்றிநின்றான். ககஉ)

மாமயந்திவ்யகார்திமண்டலஞ்சூழநாப்பட்
காமருமுருவிற்றோன்றிக்காட்சியிற்றலையாய்நின்றோன்
கோமகன்றன்மேற்றன்னுணினைப்பினிற்கொண்டதண்டார்த்
தேமருதருவின்வாசச்செழுமலர்தூவிச்செப்பும். (ககங)

தந்திரகுலத்துட்டோன்றும்பிரியதரிசனனேதானென்
னெந்தையென்னுமந்தானும்பிரியம்வதனென்னலாமா
லந்தமின்மதங்கநாமமுனிவனெற்கரியசாபந்
தந்திடவவன்றன்செம்பொற்றாண்மலரிறைஞ்சியேத்தா. (ககச)

ஐயவென்மதத்தினானினகத்தெழூசீற்றமாற்ற
வையசொற்றலைமேற்கொண்டேன்மாறுமாறுரைமினென்னத்
துய்யமண்புரக்குமிக்குவாகுவின்மரபிற்றோன்றுஞ்
செய்யவனயனென்றோதுஞ்செம்மலிற்றீருமென்றான். (ககரு)

செம்மையிற்சீதநீர்வெந்தீயிலாதபத்தினென்றின்
வெம்மையுற்றொழிந்தகாலைத்தன்குணம்விளைக்குமாபோ
லம்முனியுரைத்தசொற்கொண்டன்றுதொட்டின்றுகாறு
மைம்மலர்க்கானந்தன்னில்வழுவையாய்வதிந்திட்டேனே. (ககசு)

பந்தவல்வினையின்சும்மைப்பையுள்வன்வடிவமாறி
யுய்ந்தனனின்னாற்கைம்மாறொன்றுசெய்தொழியேனேலென்
சுந்தரநிலைமையென்னாநங்குலத்தொல்லோராய
தந்திரர்க்குரியபாணந்தருகுவனென்னச்சாற்றா. (ககஎ)

ஆங்கெதிர்விடலொன்றாடலங்கையினாயகாலை
வாங்கிடலொன்றிரண்டுமந்திரத்ததுவாலாவித்
தீங்கிதுசெய்யாமோகஞ்செய்திடுஞ்செருவிற்றெவ்வ
ரீங்கிதன்பெயருஞ்சம்மோகனமெனவியம்பலாமே. (ககஅ)

சிக்குறத்திங்குசெய்யாப்பிறர்க்கின்றுசெய்தேமென்றுண்
ணெக்குளமெலியாநின்றாய்நிலைமையதன்றுநாணன் *
மிக்குறமறுப்பாயல்லையென்றியோயிரந்துமுன்னை
யிக்கணைகோடியென்றானிளவலுமிதயமொத்தான். (௧௧௯)

திருத்துமன்னுயிர்கட்கெல்லாந்தாய்முலைப்பாலிற்றெண்ணீ
ரருத்துநன்மதைநீரேந்தியாசமனஞ்செய்தன்பா
லுருத்தெரிவரியமாரனுளத்தையுமுயிர்கொள்காலன்
கருத்தையுமயக்குமோகக்கணையதுகைக்கொண்டானே. (௧௨0)

அம்பொடுவிஞ்சைதானுமளித்தவணகன்றிட்டனனன்
சம்பரனினைவாவிச்சயித்திரவிரதமென்னு
மும்பரெண்சோலைபுக்கானுலகினுக்கொருவனாய
நம்பியும்விதர்ப்பமென்னுநாமநன்னாடுசேர்ந்தான். (௧௨௧)

வேறு.

நிரம்பொளிப்பங்கயக்கானினிடையொதுங்கிநிலாமுக்கி
குரம்பொளிக்கும்வயறோறுங்குவைத்தரளக்குலக்கொடியின்
பரம்பொளிக்குமதியினிலாநலப்பாடுபருகுவான்
வரம்பொளித்துவரநாணிமடையொளிக்கும்வளையெல்லாம். (௧௨௨)

இளராமையில்வரம்பின்கிளைத்தேரையொலியோசை
தளராமேதகுமொழியுமிரங்கலுஞ்சாற்றலினாக
வுளராமைகொடுபணிலமணியீனவொருபாலின்
வளராமைசினையுளைந்துமனையிரங்குமறுபாலே. (௧௨௩)

விரியவருமயற்புலத்துவிளங்கலவன்வரவோர்ந்து
தெரியவரும்பேராசைச்சிறுகூழுமுளதாக
மரியவரும்பெருநாரைவலியப்பான்மறுத்தேகிற்
பெரியதெனவிருந்தயரவழிவிலக்கும்பெடைஞெண்டே. (௧௨௪)

மணப்பதுமப்பொகுட்டேறமதுவருந்திவருந்தியினப்
பிணக்கினெடுங்கான்மயக்குந்தலைநடுக்கும்பெரிதாக
விணக்கினிமிர்கழைக்கரும்புநனிகொடுத்தவிலைக்கரத்தின்
றணப்பறநின்றிருபாலுந்தள்ளாடுந்தடஞ்சாலி. (௧௨௫)

குழுமுதிருஞ்சுரும்பினினங்குடையமலர்க்கொழுந்தாது
கெழுமிநிலத்துகாதுபுனற்கிளர்தாரைவரம்படைப்பத்
தழைமுகவஞ்சினைபோக்கிவிசும்பளந்துதருகால
மழைமுகிலின்வயினுடைத்துமடைதிறக்குமலர்ச்சோலை. (௧௨௬)

கடிகாட்டும்பெருவளத்தினிரந்துமிகைக்கவின்காட்டப்
படிகாட்டுநிலக்குநிலமெளியவோவயற்பானற்
செடிகாட்டுஞ்சசிபதிநற்சேய்காட்டுந்திமிசுமுட
மடிகாட்டும்புனற்றேவுமால்காட்டுமலர்க்காயா. (௧௨௭)

வேறு.

கனவளத்தெழிலுங்கோட்டுக்கல்லகக்கவினுங்காமர்
வனவளத்தியலுநன்னீர்வயல்வளத்தழகும்வாய்ந்த
வினவளத்தியன்றசெவ்வியீர்ம்புனனாட்டின்செல்வம்
புனைவளத்திலங்குபூணானுக்குபுபோயினானே. (௧௨௮)

துனைதுதைந்தறுகாறம்மிற்றொழுதியிற்கொழுதிச்சூழ்ந்து
நனைதுதைந்துழக்கும்பைந்தார்நம்பிதன்வரவுகேளா
வினைதுதைந்திலங்குவெள்வேல்விதர்ப்பர்கோன்மதிக்குமுன்செல்
கனைதுதைந்தரற்றுவாவின்கடலெனவெதிர்கொண்டானே. (௧௨௯)

வந்துளோன்விதர்ப்பராசன்மற்றையவிதர்ப்பநாடா
ளிந்திரதிருவினனிவ்விளவலென்றியாருமெண்ண
வெந்திறற்போசன்றன்பாற்றிருவெலாம்வேளனாற்குச்
சிந்தைகொள்வணக்கத்தோடுஞ்சிறப்பொடும்வழங்கினானே. (௧௩0)

எண்படாக்காதலார்க்குக்காவலின்றென்பபோலக்
கண்படாமதனன்றனைக்காணியகருதிக்காவற்
றிண்படாநிமிர்ந்தவாரைகடந்துமேற்றிகழ்ந்துமேக
வெண்படாத்திடைபிறெல்கித்தோன்றினண்மாடமின்னே. (௧௩௧)

சேண்விடாதெழுந்துசெல்வமணவினைத்திருவின்செவ்வி
மாண்விடாதிலங்குமாயின்மனம்பிறவவ்வவெங்கே
யேண்விடாதிசைந்துகொள்ளக்கண்விடானியன்றுநோக்கிப்
பூண்விடாதிலங்குமார்பன்புனைநெறிப்போயினானே. (௧௩௨)

சேய்க்கொண்டவகழிக்கஞ்சத்திருமனையிருந்தகன்னி
யேய்க்கொண்டவன்னம்பாங்கரெய்திளஞ்சேவற்கின்பப்
பேய்க்கொண்டகாதல்பொங்கவகவிதழ்பிடுங்கிச்செய்ய
வாய்க்கொண்டுகூட்டநோக்கிமணிமதில்வாயில்புக்கான். (௧௩௩)

தண்மணப்பதுமவீடுதிறந்துவந்தொருதுசெம்பொற்
பெண்மணப்புடையளாகிப்பிரிகலாள்பிறங்கிவைகத்
தண்மணப்போதுசிந்திச்சந்தனந்தெளித்துமுத்த
வெண்மணற்பரப்பியிட்டவீதிவாய்வியந்துபோனான். (௧௩௪)

ஞரியங்கலர்ப்பாணந்தொட்டிருவருமறியாதேவெல்
கூரியனழகனேனுமழகினுட்குடிபுக்கென்ன
வாரியன்விதர்ப்பராசன்சிந்தையின்வழிச்சென்றாரப்
பூரியம்பற்பராகப்புதியதோர்கோயில்புக்கான். (கஙரு)

உரையொக்கவிளங்கும்வெய்யமண்டிலமுவரிவீழப்
புரையொக்கவெழுந்ததிங்கள்புழுங்கியபுணரியாற்றாத்
திரையொக்கவலறிவிண்ணின்வெடிப்பவான்சிவக்கப்பட்ட
நுரையொக்கமீன்களொத்தநுண்டுளித்தெறிப்பையம்மா. (கஙசு)

குகரந்தவாதகோட்டுக்குன்றெடுத்துடையகோலப்
பகரந்தநெடுங்கல்லோலப்பாற்கடற்பள்ளியாணி
ணிகரந்தமிறந்தசெவ்விமல்லிகைநிறைந்தவாச
மகரந்தமலர்மென்சேக்கைவதிந்தனன்மடங்கலன்னான். (கஙஎ)

பரிதிதன்கரங்கணீட்டிப்பற்றிடுந்தோறும்பாங்க
ரிருவரும்பிரியார்யான்வந்தெய்துவதெங்ஙனென்னாக்
கருவரியளகக்கங்குற்கணிகைகைகடப்பக்காமத்
தொருவரைபாய்வான்போலவுதயவெற்புற்றதன்றே. (கஙஅ)

மறுகுளக்கடிகைமாக்கள்வைகறைப்புகழவண்டார்
நறுமலர்த்துணர்ப்பூஞ்செவ்விநானநன்னலங்கொடாரான்
செறியனத்திரள்களார்ப்பச்சேக்கைமென்புளினநின்றங்
கெறுழ்வலிச்சுப்பிரதீபமெழுந்தெனத்துயிலெழுந்தான். (கஙகூ)

அயனெழுச்சிப்படலமுற்றிற்று.

ஆ_ செய்யுள் - க௦உஅ

---

# மாலையீட்டுப்படலம்.

---

தன்னறுநானநீர்படிந்துதாமமுஞ்
சுண்ணமுங்கலவையுந்துதைந்துசூழ்துகில்
வண்ணவான்கலன்பலபுனைந்துமாமணப்
பெண்ணெனப்பொலிந்ததுபெரியவீதியே. (க)

வரம்பிலவிலைமணிக்கலிங்கம்வவ்விய
வரம்பையொண்குறங்குபொன்னணிந்தநீள்கொடி
கரம்புதுமணியணிக்கவின்கொள்கந்தர
நிரம்புமுத்தரும்பியநெடியபூகமே. (உ)

பூரணமணிக்குடம்பொருமுவெம்முலை
தோரணவாசநீள்வாயில்சொன்முக
மேரணமாடமேலெழிலியீர்ங்குழல்
காரணவுவகையங்கவினுமின்னதே. (௩)

பூழியகலவையும்பூணுஞ்சுண்ணமும்
பாழியமணிகளும்பிறவும்பற்றியே
யேழிசையிமிழ்மறுகேனையாவையுந்
தோழியர்தன்மையிற்றுலங்குநீரவே. (௪)

சுருதிகொண்மங்கலமுழவந்தோற்றொலி
பெருகினவோதைபோய்ப்பெரியவெற்பினும்
பரிதியங்கிரியினும்பரிதிபோய்வரு
மிருதடங்குவட்டினுமெதிரெழுந்ததே. (௫)

மைந்தருக்கிடம்பெறுவையமாதரார்
பந்தியிற்றிரியவும்பாங்குண்டாயதா
லந்தரத்தவர்க்குமாவதுகொல்பூமியஞ்
சுந்தரத்தெய்வதநிலைமைசொல்லவே. (௬)

இடைக்கொடிமகளிருக்கிடம்பெறுநிலந்
தொடைப்புயத்தாடவர்க்கிடமுந்தொக்கதாற்
புடைப்படுமுலகெலாந்தந்தபோதவன்
படைப்பினையொருவராற்பகர்தற்பாலதோ. (௭)

பொற்றெளுபுனைந்தெழுசுண்ணம்பூசிவான்
பற்றியமணவணிப்பரிதிச்செல்வனுஞ்
சுற்றியமறையவர்துதிப்பமாடமேன்
முற்றுறத்தோற்றுபுமுகந்துளக்கினான். (௮)

துளக்கியமணமகன்சுரிசங்கார்த்தெழ
விளக்கியசெம்மணியழன்முன்வீங்கொளி
வளக்கதிர்க்கரங்கொடுமணிக்கைதீண்டலுங்
கிளைச்சிறுசிவிறிநெய்கெழுமிச்சிந்தினார். (௯)

அருமணிக்குவிமுலைக்கயரும்பைங்கதிர்
வருமணிச்சாயலின்மருளும்வான்சுடர்க்
கருமணிக்கொடிப்புரூரத்திற்காதலாந்
திருமணித்தனியுருட்டிகிரிச்செல்வனே. (௧௦)

சாந்தமொண்டெறிந்தனர்நரந்தந்தப்பினர்
பூந்தொடைநீட்டினர்சுண்ணம்போட்டனர்
காந்தெரிமணிக்கலன்கனகம்பூந்துகி
லேந்தினரீந்தனரியாரும்யாருமே. (கக)

குங்குமவாசமுமுரசின்கோடமுந்
துங்கவான்றேரணைவுயர்வுஞ்சுண்ணமும்
பொங்கிமேலுலகெலாம்பொலிந்துபொன்னக
ரெங்கணுங்கடிமணமியற்றுவித்தவே. (கஉ)

மான்முகக்கண்ணியர்வனைந்தசீறடிக்
கூன்முகச்சிலம்பயன்கொண்டவோதிமம்
பான்முகப்பெடையெனப்பற்றப்பம்பியந்
நான்முகத்தவற்குமாசுகைவிளைத்தவே. (கங)

ஒருதனியுருளினோங்கொலிமற்றோரொலி
பருகலிற்செவியிடைப்படாததன்றிவண்
வருபுடையரசர்தேரரவம்வவ்வலைக்
கருதலினுதியிற்கறங்கதீர்ந்ததே. (கச)

சரிப்படாவருபுடையரசர்தானையம்
பரிப்படாநின்றனகரியிற்பட்டவக்
கரிப்படாநின்றனதேரின்காலவிந்
நெரிப்படாநின்றனவிசும்பினின்றவே. (கரு)

வேறு.

இன்னணநகரம்பொற்பவிக்குவேளெழுந்தநாளே
யென்னனைமற்றையோர்தமழகெலாமிரிந்ததெண்ணி
லன்னணநிருபர்தங்களழகெலாமடர்ப்பானாகப்
பொன்னணிகுவவுத்தோளான்புனைகலன்வருகவென்றான். (கசு)

பைம்மணிவிளிம்புபற்றிப்பாணிலாவிரியும்வேலை
மெய்ம்மணிநடுவுவவ்விவயிரங்கீழ்மிதித்துக்கோட்டி
மைம்மணிபுறக்குநாகர்மணியிடைதுளும்பவேற்றிச்
செய்ம்மணிக்கலங்கடாங்கிவந்தது செம்பொற்பேழை. (கள)

தொடைத்தொடுத்திலங்குசோதித்தூமணிக்கலன்களெண்ணில்
படைத்தொடுத்தொளிர்வெய்யோனுமதியமும்புதியமின்னு
மிடைத்தொடுத்திலங்குவான்மீனினங்களுந்திரட்டியொன்றி
னடைத்தெடுத்தென்னக்கொள்ளாவணியினையணிதல்செய்தான். ()

உரைபுறந்தெளிப்பதாகியோங்கொளிதழீஇநீரூட்டின்
வரைபுறந்தெளிக்குநுண்ணூற்கோசிகமருங்குசேர்த்தி
நிரைபுறந்தெளிக்கும்வெய்யநெடுங்கதிரொளிவாணிப்பிற்
புரைபுறந்தெளிக்குங்கச்சின்வீக்குபுபொலியவைத்தான். (கக)

காள்புனைந்தழகுதோற்றினனையதோரிரதிநாமக்
கோள்புனைந்திருண்டகோதைகடிமணக்கிழவனுவான்
ருள்புனைந்திலங்குவில்லுங்கணையுங்கைதவிர்ந்துகாம
வேள்புனைந்தெழுந்தாலொக்கவீதிவாய்த்தோன்றினனே. (உ0)

முருகுவாய்திறக்குந்தாரான்முழுமணிக்கதிர்போய்த்திக்கிற்
செருகிவாய்திறக்கநோக்கித்தீயெனத்தியுண்புட்சேர்ந்
தருகுவாய்திறக்கவின்பநிலாவுணவருசகோரக்
குருகுவாய்திறக்குமுத்தக்குலமணித்தேரனானன். (உக)

செல்படாமுகிற்றேய்தேரூர்தேசிகமயத்தநெங்கு
மெல்படாவிரிந்தபாரின்மரகதவெறிப்பாற்காலும்
வெல்படாமாவுநோக்கிற்பசிபனவிளங்குமாழி
பல்படாவிருந்தவாகிற்பகுப்பரோவினனைப்பாரோர். (உஉ)

மழைவிரிகிரணவெய்யோன்மலர்முகந்திரியவம்பொற்
குழைவிரிகதிரின்பப்புமுற்படக்குலவுவாகு
விழைவிரிகிரணராசியிருங்குலவரைபோயேழின்
முழைவிரியிருளின்சும்மைமுளிதரமுகந்துலாவ. (உங)

வருபுடைமுரசமார்ப்பவலம்புரிதழங்கப்பிச்ச
மொருபுடைவிரியமேனின்றொளிர்மதிக்கவிகையோங்க
வொருபுடைதுதியினின்றமாகதரொலிப்பவும்ப
ரிருபுடைகவரிவீசவேறனனேகுகின்றான். (உச)

வேறு.

மாகாணின்றமணித்தேரி
னேகாநின்றவெழிற்காளை
நீகாவென்றுநெருக்கானர்
கோகாநின்றதுசுப்பாரே. (உரு)

புல்லப்போனபுணர்ப்பாரைக்
கொல்லப்போனகுழைச்சோதி
செல்லப்போமினெனச்சேணிற்
சொல்லப்போனதொடைக்கானம். (உகூ)

அள்ளுங்காதலளித்தாரத்
தள்ளும்பான்மைதரித்தாலும்
புள்ளுந்தோடுமெணிப்பூணுங்
கொள்ளுந்தோண்மொய்குலப்பூணே. (கஎ)

ஆர்விற்கொண்டவடற்காமன்
போர்விற்கொண்டுபொரக்காணுச்
சோர்விற்கொண்டதுசிற்றூசை
மார்பிற்கொண்டமணிக்கோவை. (உஅ)

மீனுணுஞ்செவ்வெயிற்சோதி
யூனுருண்சணுமிழ்ந்தாளு
மானூர்தங்கண்மனப்போதை
யானதுண்டதயற்பூணே. (உகூ)

மெய்ப்பானின்றுளமெய்ந்நாணை
யப்பானின்றுமறுத்துள்ள
திப்பாலென்சொல்வதின்றாசி
னுப்பால்வைகியவொள்வாளே. (கூ0)

ஏயுஞ்சிந்தையிடைக்கமத்
தீயுந்துஞ்செயல்செய்யாதே
யாயுங்கொன்மெலகிற்றாமம்
வேயுங்குஞ்சிவிசித்தாமம். (கூக)

வீரக்கைச்சிலைவேள்காய
வாரக்கச்சினைவவ்வாதே
தூரக்கச்செயல்சூழ்போமோ
வாரக்கச்செழுமச்சோதி. (கூஉ)

எண்ணுதின்னணமேயாகிற்
பெண்ணுவார்கள்பிழைப்பாரோ
கண்ணூர்காதல்கருத்தாகப்
புண்ணூர்நெஞ்சுபுழுக்கானூர். (கூங)

வேறு.

தணித்தலைக்கருதாநம்பிசரிப்பிடைதாழ்க்குமாகிற்
பிணித்தலைப்பெரியகாதற்பெண்பழிபெரிதுண்டென்னுக்
கணித்தலைக்கருதிவல்லேகலைவலான்புரவிமுள்ளின்
மணித்தலைக்கோல்கொண்டுய்யாவாயில்வாய்முன்னினூனே. (கூச)

படர்மணிக்கதிர்செய்செம்பொற்பாய்பரித்தேரினீங்கி
யிடர்மனக்காதலோடுமிரந்துபின்னியங்குமின்றா
ரடர்மலர்க்காற்குங்கட்குமகறலாலவர்தஞ்சிந்தை
தொடர்தரப்போகித்தூயமண்டபமருங்குநோக்கான். (௩௫)

வண்ணவாரிசத்துமேலாள்வனப்பழித்திலங்குஞ்செவ்விப்
பெண்ணவாவென்னுங்காமப்பேய்பிடித்துறவேதோரா
தெண்ணவாவாகிச்செம்மாந்தாசனத்திருந்தமன்னர்
கண்ணவாய்மனத்தவாகிக்கலந்தனன்காட்சிமிக்கான். (௩௬)

இயக்கனேயியக்கனன்றேற்பிரமனாரெழுதிநோக்கித்
தியக்கறப்படைத்துவிட்டதிவ்வியபுருடனாமான்
மயக்கறத்தெரியிலின்னேயிருத்தலின்மதியின்வாளா
பயப்பபவெழுந்துபோதலினிதெனப்பரிவுகொண்டார். (௩௭)

ஏமநாட்டகமுநாகரிருக்கையுமெமையும்வெல்வான்
காமனார்காட்சிதந்தார்பிறிதினிக்கணிப்பதென்னே
வேமநாளிரதிக்கல்லால்வெளிப்படேலென்னக்கொன்றைத்
தாமனாரெழுப்பாநின்றவுரையும்போய்த்தவறிற்றன்றே. (௩௮)

வஞ்சனைப்பாலனாகிமாசிலாவடிவுகொண்டு
விஞ்சையன்வெளிப்பட்டான்கைவீணையுங்கரந்துவைத்தா
னஞ்சனக்கருங்கண்மாதரகத்தினுமன்றிநங்க
ணெஞ்சினுநிறைந்தானென்றாலழகிதுநிகழ்ந்தவாறே. (௩௯)

ஈருழிப்போகியிவ்வாறெண்ணியமனத்தைமன்ன
ரோருழிப்படுத்திச்செவ்வேளொருவனிற்காணப்பட்டார்
சீருழிச்சிறந்ததானுமவர்தமைத்தேவர்தம்மிற்
பாருழித்தெரிந்துநோக்கிப்பருமணிப்பீடஞ்சார்ந்தான். (௪0)

வேறு.

ஆற்படுகளத்தினனிரதிக்காயெழின்
மேற்படவெழுப்பியவேளனான்வர
மாற்படுமன்னவர்மனங்கள்வார்குழற்
பாற்படுசிந்தனைப்பற்றுவிட்டவே. (௪௧)

விலங்கலின்மீமிசைவேழச்சூழலி
னிலங்கெழிற்சிங்கவேறிருந்ததாமெனப்
பொலங்கழற்காலினான்பொன்செய்மாமணி
யலங்கொளியாசனத்தவைவிளங்கினான். (௪௨)

மாசிலாவருணவண்படாத்தமாமணி
யாசனமீமிசையிருந்தவாரியன்
றேசுடைமயிலின்மேற்றிகழ்ந்துதோன்றிய
வீசனிற்பொலிந்தனனெவருமெண்ணவே. (சங)

ஓங்கொளிக்கற்பகநடுவுணும்பர்கோன்
பாங்குடைநறுமலர்ப்பாரிசாதநின்
றூங்கெழிலரசர்தம்மவைவிளங்கினான்
றேங்கமழ்ந்திலங்குபூந்தெரியன்மார்பினான். (சச)

நீர்ப்படுமலர்க்கணீத்துநீண்மதப்
போர்ப்பகட்டிடையளிக்குலங்கள்புக்கெனத்
தேர்ப்படைமன்னர்பாலுற்றுசெம்மன்மேற்
பார்ப்பவர்நயனங்களொருங்குபாய்ந்தவே. (சரு)

மகரிகைக்குழையினானேடுமன்னரைப்
பகரவைப்படுத்தவப்பான்மைவேலைதான்
புகரறப்பொலிவிதுமதிதன்பொற்புலா
நிகரிலொப்பனைக்கொருநியமதாயதே. (சசு)

வேறு.

பழகிப்பயிலுமடநல்லார்கூடிக்காமர்கமம்பயிலுங்
கழகத்தினைப்பேராரமுதைக்காட்சித்திருவைக்கணையிரண்டை
மழவிற்பிறைக்கீழ்வைத்தன்னமடநோக்கிந்துமதியெனுமோ
ரழகைப்புதுப்பித்தழகூட்டியழகுகாண்பாராயினரால். (சஎ)

செச்சைப்புதியநிறவின்பச்செவ்வித்திருமாமணித்தீர
வச்சத்தருணமலர்க்கிரணப்படிகவகத்தவலந்தையின்வா
யிச்சைப்பிலநன்னெறியேவந்திருங்கால்விசையினெழாநின்று
பச்சைக்கழைமேல்விரிந்திடும்பூம்பனிமென்விரைநீர்படிவித்தார். ()

ஒளிக்கேயிசைநித்திலக்கோவையோவம்பசும்பொனுறமுரகர்
நளிக்கேள்மணியின்றாக்கமிசைநகைமேகலைசூழ்நறுந்தூம
வளிக்கேய்நுண்ணூன்மெல்லாடையறுநூல்பொருவாவம்மருங்குல்
வெளிக்கேபுனைந்துகாண்போருள்விழையுமையம்விடுவித்தார். (சகூ)

சேகாரகிலினறுந்தூபஞ்சேர்த்துநரந்தப்பொடிசெறித்து
மாகாரளகந்திருத்தியிருண்மலியுஞ்சூற்கொண்மழைமீதில்
வாகார்பிறையுமுடுக்கணமும்வயங்கத்தோற்றுமின்மறைந்து
போகாதெதிர்நின்றெனமணிப்பூண்பொற்பிங்குசமும்பொலிவித்தார்.

பாடாநின்றங்களியறுகால்படத்தாதளவும்பணிவாசக்
கோடார்நறியமலர்ச்செவ்விக்குறுந்தோட்டமைத்தகொழுஞ்சுட்டுத்
தோடார்கமலமுடைந்தோடத்துரக்குஞ்சோதிச்சுமுகநிறை
பீடார்மதிக்குட்பிறந்தநுதற்பிள்ளைப்பிறைமேற்பிறழ்வித்தார். (ருக)

தாவார்துணைக்கட்கிருளாலந்தடம்பாற்சலதிதனியேநின்
றூவாவென்றங்ககடுடையவரற்றூநிற்பவன்றெம்மைமக்
காவானுக்கிக்காபாலிகையிற்கொடுத்தோன்கடல்விட்டுப் [டார்.
போவானினியெங் கெனவளைத்தாற் போலஞ்சனமும் பொறித்திட்

அறலார்நிறைநீர்க்கயத்தெழுந்தவம்மென்வள்ளையனகாதின்
விறலாலெதிருமமர்தோற்றுவேலைநீத்துவிண்போய
திறலார்மதனனெடுங்கொடியின்றிண்பேர்பெற்றவிவையென்ன
மறலார்மதர்க்கண்போராடமணிப்பூங்குழையும்வனைந்திட்டார்(.ருங)

வீணிற்புவியோர்மன்றலின்கண்வேட்டோர்தம்மைக்கொளலன்றி
யேணிற்றகுமாவியுங்கொள்ளவுளதோவிதியென்றியம்புமுரை
பேணிப்புகழ்மன்னவர்தங்கள்பித்தாமாவிபேதுறக்கண்
காணிற்றீயுமெனவிரங்கிக்கதிர்ப்பூண்முலைமேற்கச்சார்த்தார். (ருச)

போரீர்கொலைவேற்றடங்கண்ணாள்பொருட்டால்வந்தபுரவலர்தந்
நேரீடழிக்குங்கண்ணூறமுனிகழ்தலறியாநெடுஞ்சிந்தை
தாரீர்கருணையெனவோசைத்தலையாய்த்தாள்பூண்டனவென்ன
வாரீசப்பொற்சிறடிமேன்மணிப்பொற்சிலம்புவனைந்திட்டார். (ருரு)

சீர்வேறணிபற்பலகவினச்சேர்த்தினரச்செழுந்தரளத் [லா
தார்சேர்செம்பொற்றனக்கொடியுந்தலத்தேயிவள்பாற்றழைப்பதல்
லேர்வேறிருந்ததுளதோவென்றிணைதோற்றுள்ளமெழவெம்பிப்
போர்வேடாரமுருகநிறைப்பொன்னுமோடப்பொலிந்திட்டாள். ருசு

வேறு.

சிந்தையினெழுந்தவுவகைக்கடல்செருக்கா
ஊந்தவிடைநைந்திடருறக்கடிதுவாரா
வெந்திறல்விதர்ப்பபதியேவல்கொடுமின்னார்
வந்துரைவழங்கமடமஞ்ஞையினெழுந்தாள். (ருஎ)

தென்குலவுசந்தனநறுங்கலவைசிந்த
நன்குலவுகுங்குமநரந்தநறைவீச
வின்குலவுசந்தமகரந்தமெய்யிறைப்ப
மின்குலவலங்கலிதழ்மிஞ்சநறைவிஞ்ச. (ருஅ)

மன்னுதிருமென்பிறைகுழற்கிடைவயங்கச்
சின்னநறுநன்மலர்நுதற்றலைசிறப்ப
வன்னவிழைமின்னவிசைமந்தசுரவாதா
லன்னமதுயங்கஞெகிழும்பெரிதரற்ற. (௩௯)

மையவளிசுற்றுகுழன்மாரிநனிவல்லே
பெய்யுமலர்பெட்பினொடுபின்றனிதொடர்ந்தே
துய்யநடைகற்கவருசுந்தரவனத்தின்
செய்யவருணப்பதயுகத்துதவிசெய்ய. (௪0)

நாமளவயிற்கணிணைநன்குசெவிநாடத்
தேமளகபந்திமிசைசென்றளியரற்ற
வாமளவிலின்பமதியானனமிலங்கக்
கோமளவசந்தமதனாணைகுதிகொள்ள. (௪௧)

இந்திரைமணந்தனிலியம்பிலிடையொன்றே
யந்தரமடைந்ததெனமேகலையரற்றச்
சந்தமணிவம்பினொடைசந்திமசலத்தின்
கொந்துலவுசந்தமுறுகொங்கைகள்குலுங்க. (௪௨)

சேதகமருத்தியிடுபஞ்சியொளிசெய்யப்
பாதமலர்பெற்றெதிர்பரப்பியபயன்றேர்
மேதகுநறைச்சிறியபித்திகையின்மெத்துஞ்
சீதமலரொக்கவிரிசேயொளிபடைப்ப. (௪௩)

ஏவியன்மலர்ப்படைவிடுத்திளைஞர்தங்க
ளாவியையொறுக்குமவனங்கருகுசெல்லத்
தாவிமுகிறப்பிமெய்தழைத்திருநிலத்தே
மேவிநடைகற்பதொருமின்னெனநடந்தாள். (௪௪)

தாமவருணங்கள்விழிதட்டுணவிமைப்பக்
காமருகவின்கொள்கலவங்கதிரெறிப்பச்
சேமமொடினம்பலவளைப்பவொளிர்சேக்கை
மாமயிலிருந்தெனமணிச்சிவிகையுற்றாள். (௪௫)

கம்பொடுசலஞ்சலம்வலம்புரிகறங்கக்
கொம்புகுழல்சின்னமொடுதாரைகள்குரைப்பப்
பம்பைதுடிதுந்துபியிடக்கைபணைபம்ப
வம்பொனணியும்மதிகதந்திரியனுங்க. (௪௬)

அல்லியகடஞ்செயுமவன்றுயிலடங்கு
மெல்லியனெடுங்கடலிடும்புணரியென்ன
மல்லிகைமணங்கமழ்மலர்க்குழல்வடிக்கண்
மெல்லியர்நெருங்கிநனிவெண்கவரிவீச. (௬௭)

சங்கமொளிரத்துகிர்தயங்கவறன்மின்னச்
செங்கயல்பொரக்குனிசெழுந்திரைசிறப்பப்
பொங்குதரளத்தினிரைபொற்பவருபொற்பார்
மங்கையரெனும்புணரியெண்டிசைமயங்க. (௬௮)

தோரணவளப்பொனகர்மீதுசுடர்வெள்ளை
வாரணவிறைக்குமணமாலைபுனைவாளா
யேரணவுமெய்த்திருவொடேகுமுகவிம்பப்
பூரணமதிச்சசியெனப்பெரிதுபோனாள். (௬௯)

இன்னவளவித்திறமெனத்தெரிகலாவே
ரன்னவளமுற்றிடினுமாட்கணெதிர்காணில்
வன்னவளவட்டமுலைவாரிசமிருக்கும்
பொன்னவள்பெறத்தகுநிலத்தினிவள்பொற்பே. (௭௦)

செங்கமலவேதியன்றிலோத்தமையெனும்பேர்
நங்கையவளான்முகமொர்நாலுடையனாகின்
மங்கையிவடன்னிதுவனப்பையுறநோக்கி
லெங்குமெதிராகவுளனாவன்முகமெட்டே. (௭௧)

பொற்றிருமுதற்பலபொருட்களையளக்கர்
பெற்றுமகராலயமெனும்பெயர்பிரித்தே
யுற்றபெயரென்னிவடனைப்பெறிலுடைத்தா
மற்றையழகாலயமெனும்பெயரையம்மா. (௭௨)

ஆனதெய்வயானையையுமன்னியகுறப்பெண்
மானையும்விரும்பிமணிமார்பினணையானால்
வானினும்வனத்தினுமிம்மஞ்ஞையெதிர்வந்தால்
வேனின்மதவேள்பரவுவேன்முருகவேளே. (௭௩)

அருந்திசைகொள்மன்னரழகத்தனையுமொன்றாய்ப்
பொருந்தும்வகைசெய்திணைபுணர்ப்பினும்பொருதாற்
றிருந்துமவர்பொற்றவிசின்மீதுதனிசெம்மாந்
திருந்தெனிவடன்னழகிலெட்டிலொருகூறே. (௭௪)

தும்பிமுரல்கோதையர்தொடர்ந்துமயலாக
வெம்புரவியந்திகிரிமீமிசைவிளங்கி
யிம்பரயனென்னுமொருபேர்கொடினிதேகு
நம்பியிவனுகிலிவணற்றுடைகொள்வானே. (எரு)

நம்புநகரின்னணநவின்றிடமதன்கான்
றும்பையதுதள்ளிவிறல்வாகையதுசூடி
யம்பிகொருநாலொழியவாடல்புரியந்த
வெம்பகழிபோலரசவீதியையடைந்தாள். (எசு)

வேறு.

சூழ்ந்தளியரற்றுங்கோதைதோன்றலுமன்னர்வேத
னாழ்ந்திடுதொழிற்குப்பொற்பாலதிசயம்விளைப்பாடன்பாற்
றாழ்ந்தனகரணநான்காற்றனித்தனியோடியிங்கே
வீழ்ந்தனரிருந்தாரங்கேவேற்றுடல்கொண்டுமாதோ. (எஎ)

காக்கருங்கரணநான்காற்கடிதுபோய்வீழ்ந்தோர்சிந்தை
தாக்கணங்கனையாள்செவ்விமதுவினைச்சாலமாந்திப்
போக்கறமயக்குற்றன்னுளடிமலர்ப்புறத்துவைகக்
கோக்களிறனையான்றுனுங்கோமளக்கொடியைக்கண்டான். (எஅ)

கண்டவன்சிந்தையோடிக்காமர்கண்ணேட்டமென்னு
மொண்டடர்தேரினேறியிளமையாம்பாகனுந்தப்
புண்டரநுதலிபொற்பாம்புதுமதனலயம்போய்க்
கொண்டதுமதனவேடன்கொடுங்கணைகுறுகமாதோ. (எகூ)

விஞ்சுபூங்காமலீலாவிநோதசல்லாபவின்ப
மஞ்சுலாம்பருவச்செந்தாமரைமலரகத்துவைகுஞ்
செஞ்சவேநடந்துபோகிச்சிந்துரத்திலகத்திங்கட்
பிஞ்சின்மேல்வதியுங்கூந்தற்றண்டலையுலாவிப்பேரும். (அ0)

இறுவுமைக்குலவுபூசலிணைக்கயலெதிரநோக்கி
மறுகுநாண்டொடாதுதானேவளைந்தனசிலையின்மாடே
குறுகுமெல்லிலவத்தூறுங்கொள்ளைவாரமுதமுண்ணக்
கறுவுமென்குழையினேடுங்காமர்பொன்னூசலாடும். (அக)

மாற்றருஞ்செவ்விச்செம்பொன்மலைமுகட்டிருந்துசந்தச்
சேற்றினுட்குளித்துமோகச்செருக்குறத்துயிலுஞ்சேர்ந்து
தோற்றருநுண்ணூலோடுதுவண்டுறத்துவளுங்காஞ்சி
வீற்றிருந்திடும்போய்ச்செந்தாமரைத்துணைவீழுமாதோ. (அஉ)

சுடர்ப்பட்டமணிச்செஞ்சோதிதொக்குறச்சுடருந்தூய
மடற்பட்டதாரான்சிந்தையின்னணந்திரியமன்னே
கிடர்ப்பட்டங்கடிப்பானின்றுமெழுந்தொருவாறுபோகி
யுடற்பட்டங்கழகுசெய்வாரொருசெயல்புரிவதானார். (அங)

ஐயநுண்ணிடையாள்செவ்வியானனத்தழகுகாண்பான்
பொய்யினன்மலர்மேல்வீழ்ந்தசிந்தையும்புழுங்காநிற்பத்
துய்யபூந்தாதோர்வட்டஞ்சுடர்செயச்சுரும்போர்வட்டஞ்
செய்யவோர்மன்னன்செங்கைத்தாமரைதிரித்திட்டானே. (அச)

புரிந்தபூங்குழலீர்மன்றற்பூந்தொடைபுனைசெஞ்சோதி
சொரிந்திடச்சூட்டீரென்னக்குறிப்பினாற்சொல்வான்போலப்
பரிந்திடுமுள்ளத்தானோர்பார்த்திபனிலையைவிட்டுத்
திரிந்தெனவலயமோர்ந்தபூந்தொடைதிருத்தினானே. (அரு)

தணிவினிற்கடிமைபுக்கேன்சாதனஞ்செய்தியென்னத்
துணிவுறவுணர்த்துவான்போற்கீனோக்குந்துணைக்கனோடும்
பணிவலயத்தோர்வேந்தனுகிர்ச்சுடர்ப்பத்திபாய
மணிவிரற்குனித்துச்செம்பொற்பீடமேல்வரைந்திட்டானே. (அசு)

இந்திரையழகினோடேதனதழகெதிர்ந்தபோரிற்
புந்தியிற்கனன்றுநொய்திற்புறங்கொடுப்பானேபோலச்
செந்தனித்தவிசினோர்கையூன்றியோர்செம்மன்முத்தப்
பைந்தொடைநுடங்கப்பேர்ந்துபாங்கனைநோக்கினானே. (அஎ)

பாதகக்காமனென்பாற்கணையெலாம்பரப்பினான்வா
ளீதலாற்பின்னையில்லையென்றவட்குணர்த்துவான்போன்
மாதகைப்புகழோர்மன்னனயலினோர்மங்கைகாதிற்
கேதகைத்தோட்டைவாங்கிப்பலபடக்கிழித்திட்டானே. (அஅ)

புனமயிலனத்திற்கேதன்னாவியையொட்டிப்போர்வே
டனையொருகரியதாகநிறுவினான்போலத்தானே
குனிசிலைவிறலோர்கோமான்கொடியுடைக்கரத்தாலாழிக்
கனசுடர்நிலவுகாலக்கவறெறிந்திருந்தான்மன்னோ. (அக)

திணிபுயத்தொருபாலன்றன்முடிதிருவின்மார்பிற்
றணிவறப்புகுந்ததென்னமறவியாற்றடவுவான்போ
லணிகலஞ்சிதைந்ததென்னவல்லகொண்டாழிச்சோதி
மணிதொறுந்தழுவக்கையான்மவுலியைத்திருத்தினானே. (கூ0)

சிந்தையொன்றாகத்தங்கள்செயலொன்றதாகச்சீர்சா
லந்தவாசனத்திலிவ்வாறிருந்தனவரசையெல்லாம்
பைந்தொடிசுனந்தையென்பாள்பாங்கரிற்கொடுபோய்ப்பைம்பொற்
சுந்தரிதனக்குநேரேசொல்லியதொடங்கினாளே. (௬௧)

புரந்தரநாகநீத்துப்புரந்தரனிம்பர்நிற்ப
வரந்தருதொடர்பிற்செய்யுமியாகத்தன்மகதநாடாள்
டரந்தபனென்னுநாமப்பார்த்திபனிவற்குமேலோன்
புரந்தரன்கீழோரெண்ணிற்பூதலத்தரசரென்றாள். (௬௨)

சிறுகொடிவிழிவண்டன்னான்முகாம்புயஞ்செலாதுமீள
வுறுமடுமானசத்தினெண்டிரையுந்தாநிற்ப
நறுமலர்களினமாடேநின்றொருநளினமாடே
குறுகனப்பெடையின்மற்றோர்குரிசில்பாற்கொண்டுசென்றாள். (௬௩)

தணக்கருமரம்பைமாதர்சிந்தனைதன்பாற்பற்றி
யிணக்குறுமெழிலானுடற்றிக்கயமெல்லாஞ்சாபம்
பணைக்கவீங்கெய்தத்தானேபாலகாப்பியநூறன்னால்
வணக்கினானிவனேயங்கர்பதியெனமகிழ்ந்துசொன்னாள். (௬௪)

மாந்தளிர்மேனிநல்லாள்வரிவிழிமான்போய்வல்லே
பாய்ந்தவன்கண்ணிதன்னிற்படாதுறநிற்பத்திங்கள்
காந்தொருவீதிதன்னைக்கடந்தொருவீதிதன்னிற்
போந்தெனமற்றோர்செம்மறன்னயல்கொண்டுபோனாள். (௬௫)

அடரிருளபரபக்கமதனினுமந்திக்காலத்
திடரின்மாகாளன்சென்னியிளம்பிறைதொழுதுவாழ்வோன்
மடநல்லார்வதியுமாறுமயன்கடைந்துள்ளமாவெஞ்
சுடரனானிவனேகண்டாயவந்திகனென்னச்சொன்னாள். (௬௬)

மைதிகழ்கோதைநாட்டக்கருங்கயன்மருண்டுபோயந்
நெய்திகழ்வேலான்மார்பநெடுந்தடத்துறாதுநீப்ப
மெய்திகழிமையச்சாரனின்றொருமேருச்சார
லெய்திளமயிலின்மற்றோரேந்தல்பாற்கொண்டுபோனாள். (௬௭)

அரசடுமழுவிராமனங்கையினேந்துமாடற்
பரசின்வன்னுதியைப்பானற்றோட்டினிற்பழிக்கும்வாகை
விரசுவெம்பூசற்கார்த்தவீரியன்குலத்துட்டோன்றும்
பிரசமென்றாரான்வேழ்கைப்பிரதீபனிவனேயென்றாள். (௬௮)

மொய்வளைவிழிச்சகோரயங்கவன்முகவொண்டிங்கட்
கைவளர்நிலவையுண்ணுதொழிந்திடக்கற்பகத்தின்
மெய்வளரயலேநின்றோர்மந்தாரத்தயல்போய்மேவுந்
தெய்வமென்கிளியின்மற்றோர்செம்மல்பாற்கொண்டுபுக்காள். (கூகூ)

திமையாம்விழியார்கொங்கைச்சந்திரனிறந்திரிந்து
பாய்மையாங்களிந்தைதன்னைப்பரிவிற்கண்டுவப்போன்பாரு
வாய்மையான்சூரசேனநகரினன்மரபிரண்டுந்
தூய்மையான்றுறக்கம்போற்றுஞ்சுசேடனீங்கிவனேயென்றாள். ()

இலவிதழுட்டக்கெண்டையவனூரத்திட்டவீரஞ்
சுலவியகளபச்சேற்றிற்றுள்ளுபுவிழாமைசெய்ய
நலமிகுஞ்சுப்பிரதீபநீத்திந்திரநாகஞ்சாருங்
குலவிளம்பிடியின்மற்றோர்குமரன்பாற்கொண்டுபோனாள். (க0க)

படாக்கலிகுடக்குவேலைப்பள்ளத்துவீழச்செங்கோ
னடாப்புவிபுரப்போனேமாங்கதனெனுநாமமுள்ளோன்
விடாக்களித்தறுகட்டுங்கவெங்கதமிளிர்வெண்கோட்டுக்
கடாக்களிற்றனிகத்தானீர்கலிங்கர்கோனிவனேயென்றாள். (க0உ)

பூகஞ்செய்களத்தினாள்கட்டாமரையன்னான்பூணி
னாகுஞ்செங்கதிர்க்குழன்னேயலர்ந்திடாதொழியவப்பால்
வாகின்றங்கொருவன்றன்னைநீங்கிமற்றொருவன்மாடே
யேகுஞ்செந்திருவின்மற்றோரேந்தல்பாற்கொண்டுபோனாள். (க0௩)

உரகபாலத்தினன்றன்களம்புகாமருந்தைநேர்சொற்
றிரைகுலாந்தமிழின்செல்வச்சிறப்புளான்சேடன்போற்றும்
விரகினான்றுரகமேதஞ்செய்துளான்விண்ணோரெண்ணு
முரகமாநகரான்றென்னனிவனெனவுவந்துசொன்னாள். (க0௪)

பொன்னனாள்கருங்கணீலக்கருவிளைபுவனம்போற்று
மன்னமாமகிபன்செவ்விக்கார்க்கலராதுநிற்ப
முன்னினோர்மலையையெல்லாங்கடந்துபோய்முந்நீர்சேருங்
கன்னியாறெனப்பார்தோற்றுங்காமன்பாற்கொண்டுபோனாள். க0௫

தோடலாங்குமுதச்செவ்வாய்ச்சுந்தரியிரவிற்றெக்க
மாடுசாலரசவீதிவயின்வழிநெருவிச்செல்லும்
வீடிலாதெரிசெஞ்சோதிவிளக்கமதொத்தாள்வேந்தர்
நீடுமாலிருள்சேர்மாடநிரையினைநிகர்த்திட்டாரே. (க0௬)

மன்றுகண்டருளுங்கங்கையாரியன்விடையின்வாணி
யொன்றுகண்டுடைந்தமன்னரொளியுருமுகங்கடம்மை
யின்றுகண்டதுமவ்வேந்தரெழில்கோடுமுகங்களெல்லா
மன்றுகண்டதுமற்றெருக்குமல்லதென்னறைவதம்மா. (க0எ)

காணிமிர்கோதைகாமநம்வயிற்கலக்குங்கொல்லென்
றாணிமிர்கிரணவேலானுள்ளத்துளுதித்தவைய
மேனிமிர்வலயத்துள்ளேவிம்முறுதுடிப்பான்மேக்கு
வாணிமிர்மேருவன்னவலப்புயமாற்றிற்றன்றே. (க0அ)

சுனந்தைவாய்ச்சொற்கொண்டென்கொல்பயனினிச்சுடரிற்றெக்க
கனங்குழைவலியநோக்குங்காளைதன்மெலியநோக்கு
மினந்தழீஇயொழுகித்தம்மிலிருந்துகொண்டிசைந்துமாறி
யனங்கலீலையிற்றேய்காமவமுதளித்திட்டவன்றே. (க0கூ)

உட்புலச்சிந்தையோடியிருதலையுழலக்காண்போர்
கட்புலப்படாதுதம்மிற்கண்ணிணைப்பட்டவின்பம்
பெட்புறத்தவிசுதன்னிற்கூடினும்பெறுராலாவி
கொட்புறப்போர்செய்வேட்குங்கோதைக்குங்கூடாதன்றே. (கக0)

தேன்றிகழ்தொடையானென்னுங்களிற்றினைச்சிறிதும்விள்ளா
தேன்றுதன்னிதயந்தன்னிலிருத்தியபிடியனாட்கே
மான்றனைத்தனதுசிந்தைமரையுளேவைத்தவந்தத்
தோன்றலைவியந்துவேற்கட்சுனந்தையுஞ்சொல்வதானாள். (ககக)

வேறு.

மன்றல்சேரிக்குவாகுமரபுளோ
னன்றியுத்தரகோசலநாயக
னன்றுகாகுத்தனென்றுமரும்பெரும்
வென்றிநாமந்தரிப்பவிளங்கினோன். (ககஉ)

மாற்றுருக்கமிலாமையின்வாசவ
னேற்றுருக்கொடுநின்றிடவேறிநின்
றூற்றுருக்கமிலவ்வசுரக்குலந்
தேற்றுருக்கமைவாளியிற்றீய்த்துளான். (ககங)

பேசனத்தவனுந்தனிபெட்புற
நேசனத்ததிரோசைநிறைந்திட
மாசனத்தவவ்வாசவன்றன்னொடோ
ராசனத்திலிருந்திடுமோடலான். (ககச)

நச்சிலைச்சுலகங்கொளநாணமா
ரச்சிலைப்புயவானன்மையிஞடலான்
மெச்சிலைப்படைவேந்தரைவென்றிகொள்
கைச்சிலைத்திறலான்கருத்தன்னரோ. (கசரு)

தாகத்தன்னவன்றன்குலத்தானிட
ரேகத்தன்னிகரின்மடங்கற்குநீள்
சோகத்தன்னுயிர்சோருமொரானினுக்
காகத்தன்னையளித்தவருளினன். (கசசு)

சாதுரங்கபலத்தினன்றக்கவ
ரோதுரங்கருதும்பரென்னுறெனு
மாதுரங்கமகம்புரிகுங்குமச்
சேதுரங்கொள்மகீபன்றிலீபனே. (கசஎ)

அங்கவன்றனிமைந்தனயப்பெயர்த்
துங்கவன்றகைவேள்விசுருக்கறப்
பொங்கவன்றுவிழிபுரத்தாயிரந்
தங்கவன்றனைவென்றசயத்தினன். (கசஅ)

அரியதிக்கினின்மன்னரையன்றுவென்
றரியகைத்தினைவவ்வியொருப்பட
விரியுமட்கலமேதனிமிஞ்சுறப்
பெரியவிச்சுவசித்தினைப்பேணினன். (கசகூ)

பார்பரந்துபதலைபரந்துமுந்
நீர்பரந்துநிலத்துட்பரந்துவா
னூர்பரந்தயரொண்புகழ்கொண்டுளோ
னேர்பரந்தரகுவெனுமேந்தலே. (கரு0)

அப்பெருந்தகைதந்தவனற்புத
விப்பெருந்திறனம்பியெவற்றினு
மெப்பெருமபுவியெங்குமயனெனச்
செப்பரும்புகழ்கொண்டுசிறந்துளோன். (கருக)

வேறு.

திலத்தினுற்செய்ததன்னசெய்யமென்றுண்டச்செவ்வாய்க்
கலத்தினுற்கதிர்விட்டோங்குங்கவின்முலைமயிலேபேண்மோ
குலத்தினுற்குணத்தாற்கூறுமிளமையாற்கோலச்செவ்வி
நலத்தினுனின்னையொப்பானெனநனிநாணுக்கொண்டாள். (கருஉ)

பூமருமலங்கல்வில்வேள்போர்த்திறப்புதியமாழை
யேமருவின்பராகவிளமுலைபசலைப்பூப்பத்
தேமருமன்றன்மாலைசேர்த்தியதென்னச்செவ்விக்
காமருகுமரன்றன்னைக்கண்களால்வரித்திட்டாளே. (௧௨௩)

சூதையட்டெழுந்தகொங்கைச்சுனந்தையத்தோகையன்னாள்
காதலின்குறிப்பைநோக்கியருகுபோய்க்களித்துமெல்லப்
பேதையப்பாற்செல்வேமோவென்றிடப்பிடியனாளைக்
கோதையைப்பார்த்தபார்வைகொல்லியகிடந்ததன்றே. (௧௨௪)

வணங்குழைவருணைச்செம்பொன்மாமணிச்செப்புநீக்கிக்
கணங்குழைபிறழநோக்கிக்கள்ளுண்டுகளித்தவண்டி
னினங்குமிறலர்ப்பொற்றாமமேந்துபுநல்கியெற்றோய்
பொனங்கொடிசெவிலியாலவ்வள்ளன்மேற்புனைந்திட்டாளே. ௧௨௫

பலரினாற்புகழ்தற்கொத்தவனங்கவேள்பகழிபாயப்
புலரினாப்புறமிட்டோடப்புனைந்தவப்பொற்பூந்தாரை
யலரினாற்பொலிந்தசெம்பொற்கந்தரத்தம்பொனாள்கைம்
மலரினாற்பிணித்ததொப்பவள்ளலுமகிழ்ச்சிகொண்டான். (௧௨௬)

குறித்தவெண்ணிலவுதிங்கட்கூடியதெனவுங்கங்கை
மறித்தலைக்கடலைச்சேர்ந்ததென்னவுமதனைவாழ்த்தி
நெறித்தகைமன்னர்தங்கள்செவியிற்றீகிமிர்சலாகை
செறித்தெனநகரோரெல்லாந்தெரித்துரைவழங்கினாரே. (௧௨௭)

இன்புளோசையிற்றாய்பைந்தாரெழிற்புயரகுகுமாரற்
கன்புளோரல்லோராயவரசமண்டலங்களெல்லாம்
வன்புளேயிராதகாலைக்கமலமும்வாவிமேய
துன்புளேயிருந்தவல்லிச்சூழலும்போன்றவன்றே. (௧௨௮)

தணிவில்பொற்றிருவாற்றெய்வயானையிற்றகுவாளோடு
மணிநிறமேனிமாலோன்மருகனாமுருகனானைத்
திணிபுயவிதர்ப்பராசன்சிந்தையினுவகைபூப்ப
வணிநகர்வலஞ்செய்விப்பானமைந்தனனங்கண்மாதோ. (௧௨௯)

---

மாலையீட்டுப்படலமுற்றிற்று.

ஆக செய்யுள் - ௪௧௫௭



# கடிமணப்படலம்.



வேற்படைக்கண்ணிமேற்செல்சிந்தனைவிண்போய்வீயப்
பாற்படுகதிர்மழுங்கப்பசற்படுமதிபோற்சாம்பி
மாற்படைக்காமபாணவடுவொடுமன்னரெல்லா
நாற்படைக்குழுவிற்புக்கார்நம்பியும்வீதிபுக்கான். (க)

சீரெழச்சிறந்தமன்றல்செய்யுளித்திரண்டுசீறிப்
போரெழற்கமைந்தாரேனும்புலோமசைக்காகுமாற்றல்
வாரழற்கதிர்வேன்மன்னர்மனத்தெழுமாறுக்கோப
வாரழறம்மேற்கொள்ளவத்தலைபொடுங்கினாரே. (உ)

எங்கணுமிடும்போதின்பவாசமேலியமென்கா
லங்கசைகவரிநல்கவணிக்குடைவெயிலையாற்றச்
செங்கதிரிரவியன்னதேசினிற்சிறந்தோன்வீதி
மங்கலவணிதையிந்துமதியொடும்வருவதானான். (ங)

வேறு.

மந்தரவரைப்புயவள்ளன்மாசறு
சந்திரவதனியொடியங்குந்தாருவா
வந்தரநகரொடுமிழிந்திட்டம்புவி
யிந்திரதிருவிழாவெழுந்ததொத்ததே. (ச)

பரசிருங்கொடிப்பெருங்காஹொர்பாற்பணை
முரசெனுங்கறங்கொலிமுகிலொர்பானிரை
விரசிளம்பிடியுடைவெற்பொர்பான்மிகு
யரசிளங்குமரராமலையொர்பாலரோ. (ரு)

ஓடைமாமதந்தியொழுங்கொர்பாலதன்
மாடுவார்விலாழியம்வாஜொர்பான்மலி
பீடுசால்வாட்படைப்பெருக்கொர்பாற்பெரி
தாடன்மாவெள்ளமுமாங்கொர்பாலரோ. (சு)

போற்றிணனிறைந்தபல்புறங்கள்சுண்ணமென்
னீற்றிணனிறைந்தசின்னிலங்கள்வாசனீ
ரூற்றிணனிறைந்தபல்லுழைகள்குங்குமச்
சேற்றிணனிறைந்தனசில்லிடங்களோ. (எ)

வேறு.

தானந்துஞ்சுந்தாழ்விலர்காணுதுடையாய
பேனந்துஞ்சும்வாரிசுவற்றும்பிழைநீர
மானந்துஞ்சும்மன்மகளென்னுமயிலிதாளி
மீனந்துஞ்சும்விண்ணிடமெங்கும்வெளிமூடும். (அ)

பின்னிக்கொள்ளாவெண்படலத்தாள்பிடியாமேற்
றுன்னிக்கொள்ளாதின்றிடுவானித்தொகைபார்தன்
சென்னிக்கொள்ளுந்திண்பொறைகைம்மேன்மிசையேந்தி
முன்னிக்கொள்ளாநின்றிடைமாற்றுமுறைமானும். (கூ)

கோல்விற்கொள்ளும்வெண்குடைதம்மேற்கொடியாடை
நால்விற்கொள்ளச்சென்றனவாள்வேனகையாலே
தோல்விப்பாலாம்பன்மதிபால்வெண்சுடர்தாழா
மேல்விட்டேகுந்தன்மைநிகர்க்கும்வெளியெல்லாம். (கO)

தேசுண்சோதிச்செம்மையசுண்ணத்துகள்சேரப்
பூசுந்தோறும்வெண்குடைவெய்யோன்புறநேர
நேசந்தோயும்வெண்மதிநேரும்படிநீவும்
வீசுந்தோறும்வெண்கவரிக்கண்விளைகாலே. (கக)

சீலங்கொண்டேபன்மணிசெய்யுங்கதிர்சேரப்
பாலங்கொண்டார்வெண்கவரிப்பல்படர்வெல்லா
நீலங்கொண்டும்பைத்துநிறத்துநிமிருஞ்செங்
கோலங்கொண்டும்போதரமின்னுங்குலவாரம். (கஉ)

போதிற்செல்வார்சில்லிடைசந்தப்புனைதோய்யின்
மீதிற்செல்வார்சில்லிடையெங்கும்விரிசுண்ணத்
தூதிற்செல்வார்சில்லிடையன்றித்தரியாமே
யேதிற்செல்வாரினமறுகிற்செல்லுநரெல்லாம். (கங)

சந்தத்தொய்யற்கம்பொன்மடுப்பத்தருகாசு
கந்தத்தெண்ணீராறுநிரப்பக்கலன்மேடு
சிந்திப்போதச்செங்கதிரோரெண்டிசைநீள
மந்தத்தேகும்பைபயவள்ளன்மணித்தேரே. (கச)

போதிற்றங்கும்பொன்னையெடுத்துப்புறமாய
மாதிக்கெங்கும்பல்சுடர்செய்யாமனைவெல்லாம்
பேதித்தங்கட்பொற்சிவிகைப்பேர்பெறுமோரொண்
சோதிச்சங்கஞ்சென்றநுமின்னுத்தொகைசூழ. (கரு)

தேறுஞ்செஞ்சொற்சிற்றிடையார்தந்திகழ்மார்பிற்
கூறுங்கொங்கைப்பொற்புவிளம்பிற்கொடியேறி
மாறின்குன்றஞ்செல்வனபோலுமலைபோகில்
வேறுஞ்சொல்லற்குண்டுகொலோசெல்வெளிவீதி. (கசு)

கஞ்சப்போதுங்கொண்டொளிர்நாட்டத்திடையாரு
மஞ்சப்போதுமின்னனையார்தம்முகமாய
கஞ்சப்போதேகாண்வரும்வெல்லுங்கதிர்மாறி
யஞ்சப்போதுமங்கிருபோதுமாலோனே. (கஎ)

செவ்வாறின்பச்செவ்விபிறப்பத்திகழ்வீதி
யிவ்வாறேகுஞ்செங்கதிர்வேலோனெழில்காணு
மொவ்வாதன்றுய்மாலுறுமின்னார்நுவல்பான்மை
யவ்வாறெல்லாமந்நிலெடுத்திங்கறைவாமால். (கஅ)

வேறு.

நாணிமிராவயல்செல்லடாந்தே
பூணிமிர்கோதைபுறஞ்சரியப்போ
யேணிமிரஞ்சனவீரயில்வேலை
வாணிமிர்சாளரமெங்குமடுப்பார். (ககூ)

மேயினவிஞ்சணிசெய்தல்விலக்கிப்
போயினகண்கவர்பொன்னெறியெங்குந்
தூயனபஞ்சிதொடும்பதவைப்பின்
சேயனசெம்பதுமக்குறிசெய்வார். (உ0)

சேல்கொடுநின்றவொர்கட்குமைதீட்டி
யால்கொடுநின்றவொர்கட்கணியாமே
கோல்கொடுசிந்தைகுலைந்திடவோடி
மால்கொடுசாளரவாயிலின்மொய்ப்பார். (உக)

பல்லொளிகான்றிடக்கோவைபடுத்து
மெல்லொலிமேகலையினமணிசிந்த
வில்லொளிர்பாதவிரற்றலைசுற்று
மெல்லிழைமிஞ்சவிரைந்துநடப்பார். (உஉ)

பூமலிவண்டுபொரும்வனசத்தின்
மாமலர்கொண்டுமறைப்பதையொப்பத்
தோமறுசாளரவாயில்கடோறுந்
தேமலர்வாண்முகம்வைப்பதுசெய்வார். (உங)

உஞ்சல்விலக்கியுழைத்தனியோடிக்
கஞ்சமுகத்தியொருத்திகடைப்போய்
நஞ்சவிழிக்கிடைநம்பியையையாத்
தஞ்சமெனக்கொடுதன்மனைபுக்காள். (உச)

புக்குநடந்தவொர்பூவையையநோக்கி
நக்குநயந்திருநம்பியுமுண்டே
மைக்குழலுக்கெனவைதனளென்று
விக்குமதன்செயலென்விளையாடே. (உரு)

மறம்புகுவள்ளன்மலர்க்கணுரத்தன்
னிறம்புகுகண்கள்புதைத்தனணின்று
டிறம்புகுகண்கொளொருத்திதிரும்பிப்
புறம்புகுதாவகைபொத்தினள்போலும். (உசு)

எற்றகுவேலனையுள்ளமிருத்தி
மற்றுரையாளொருமங்கைநடந்தா
ளுற்றுளபோதினில்வள்ளலையுள்ளே
பெற்றனள்போவதுபேணினள்போலும். (உஎ)

கள்ளமிருந்தொளிர்கட்கடைகாட்டி
வள்ளன்மனத்தைவலிந்துகொளப்போ
யுள்ளமுதற்கலைநாண்வலையொக்கக்
கொள்ளைகொடுத்தொருகோதைபெயர்ந்தாள். (உஅ)

வவ்வியசிந்தைவழங்கிமுலைக்கண்
செவ்வியசெம்பொன்சிலர்சிலர்கொண்டார்
நவ்வியர்தம்மைநவிற்றுவதென்னே
திவ்வியபொன்னெவர்சிந்தைகொளாதே. (உகூ)

உய்யலின்முல்லைவழங்கியுவப்பாற்
கொய்யலில்கொன்றைதனைச்சிலர்கொண்டா
ரையமில்செம்மையொழுக்கமறிந்தாற்
செய்யரையாவர்தெரிந்துகொளாரே. (௩0)

செல்லியல்கோதையர்சிற்சிலர்மாரன்
புல்லியபோதுபுடைத்திடவீழ்ந்தார்
கல்லியல்சிந்தையரென்கைகடத்தி
மெல்லியரென்கைவிளக்கினரன்றே. (௩௧)

வேறு.

பூமனுமன்னமிசைத்தழுங்கும்பொங்கலை
தாமனுமுரசமும்பகலிற்றண்குடைச்
சோமனுங்கொண்டொருதேரிற்றோன்றிடுங்
காமனுமுளன்கொலோகாட்சியானென்பார். (௫௨)

நன்றுகொண்டனவரமகளிர்நாணலா
மன்றுகொண்டகன்றசேயவனிப்பார்மிசைத்
தொன்றுகொண்டனமுகமைந்துந்தோற்றிடா
தொன்றுகொண்டிங்ஙனமுதித்திட்டானென்பார். (௫௩)

சருக்கொடுதோன்றியபொருளின்கட்கலந்
தருக்கொடுநிற்குமந்நிலைமையல்லது
திருக்கொடுபேரழகொன்றிற்சேர்ந்திடா
தருக்கொடுதோன்றலுமுளகொலோவென்பார். (௫௪)

சூரிடைப்பிறந்துபோமுதர்துய்த்திடு
நேருடைக்கடவுளரேனுமீடிய
வேருடைப்பெருந்திருவீங்கிதேலிடர்ப்
பாரிடைப்பிறக்கினும்பழுதன்றேயென்பார். (௫௫)

மயறுறுமனங்கொடுவந்துகண்வழிப்
பயனெடுதரவுளேபுகுந்துவையயாந்
நயனுறுமிதயவாரிசத்துநண்ணலா
லயனிவனெனவறிந்துகூறுவார். (௫௬)

இயைந்தனநளினமின்கொள்ளுமீர்ந்தொடை
யயர்ந்தனநங்கள்பாலளித்திடாயென
வியந்திடுதேர்செலவெளியைநோக்குபு
நயந்துநின்றயலவர்தெளிப்பநாணுவார். (௫௭)

இனமலைநின்றவொர்கொடியிற்றின்னணிரு
தனமலைசுமந்தநந்தவத்தைநோக்கிலான்
கனமலையொன்றின்மேற்றவஞ்செய்கன்னிதன்
மனமலைதடம்புயவள்ளலோனென்பார். (௫௮)

மோகநாண்மலர்க்கணைநெருப்பின்முந்தயாம்
வேகுநாளின்றெனவிளம்பநின்வயின்
வாகினல்வந்தநம்மனத்தைவிட்டினி
தேகெனநானென்றிரைத்துக்கூறுவார். (௫௯)

அதிக்கமன்னவர்முகவனந்தமாமதி
யுதிக்கினும்வைதர்ப்பியோங்குவாண்முகப்
புதுக்கவினளினமிவ்விளவல்போன்முகக்
கதிர்க்கலதலருமோகாணுங்காலென்பார். (சO)

வேறு.

பொலங்குழைசிந்தைமற்றைப்புரவலர்தம்மேற்போதல்
விலங்கியிங்கிவன்மேற்போந்தவியப்பிதுவிழுமிதாமாந்
சலங்கிளர்திகிரிமாலைத்தற்கொப்பானென்னத்தார்மே
லிலங்கிழைவரித்தபெற்றியிங்ஙனநிகழ்ந்ததம்மா. (சக)

தீதிலாதுள்ளமாறிச்செவ்வியிற்செருக்கித்தம்மிற்
காதலாமிவர்கட்கம்மகளிபெறுமியோகமின்றே
லேதநாடாதுபாரிலழகெலாமிரண்டதாக்கி
வேதனூர்படைத்தவிந்தப்படைப்பும்பின்வீணதாமே. (சஉ)

பெரும்புகழயனுமிந்துமதியுமிப்பெருவனப்பால்
விரும்பியமதனுமந்தவிரதியுமென்கைமெய்யே
யரும்பயனுணரிற்கண்டீர்கரியிதொன்றறியின்முன்னை
வரும்பெருவினையாலன்றிமனம்பிறவவ்விடாதே. (சங)

கடுப்பொதிந்தனங்கனூர்தங்கணையினிற்பிறந்தமாவின்
வடுப்பிளவனையசெங்கண்மாதராரின்னவாறே
யெடுத்தெடுத்திரண்டுபாலுமியம்புரைசெவியிற்றேனின்
மடுத்திடவிதர்ப்பராசன்மங்கலமனையிற்புக்கான். (சச)

பெண்ணிணைப்பெரிதுகண்ணிற்றழீஇயுயிர்பிணைந்துபின்னை
யெண்ணினிற்பிரியான்மற்றோர்மண்டபவிடத்தனுக
வண்ணலைப்புதியபொற்றூர்க்கரந்தழீஇயமைந்தபின்னர்க்
கண்ணிறைபிரியாடானுங்கடிமனைப்பாலளானுள். (சரு)

உகப்புடையணிச்சமொவ்வாமெல்லியலொருத்தியென்கை
யிகப்புரைகொடியையென்னெஞ்சிருக்கின்றுயிலைக்கவில்லா
யகத்தடம்வேகின்றேனென்றனங்கவேளனற்கோலாகம்
புகப்புகவெம்பிவெம்பிப்புழுங்கினன்புகலுகின்றான். (சசு)

ஒளிகொண்டமணிசெய்கச்சினுட்புடைத்துருவியோங்கி
யளிகொண்டபாவியேன்றனுருபிரடவும்போதுங்
களிகொண்டென்கருத்தைமுற்றுங்கனங்குழைமருங்குலென்னும்
வெளிகொண்டுபோனதாகிலென்செயாகொங்கைவீக்கம். (சஎ)

செழுநிலைத்திரண்டுவீங்கியாருயிர்செருக்குஞ்செய்கை
தழுநிலைத்தகையுன்றுதோமருங்குலைத்தளம்பவைத்தான்
முழுநிலைப்படுத்தபோதின்முதல்வன்வெம்முலைக்காதாரம்
விழுநிலைப்படுத்தானுதில்விசும்பையும்விற்குமன்றே. (௪௮)

விதுக்கிடர்தனையநெற்றிமென்முகவிழிவேல்பாய்ந்து
பொதுக்கிடம்விடாதென்னுகம்புகுந்தளாயினைத்தவையோ
புதுக்குடமனையகொங்கைநெஞ்சுளேபுகுந்தேனுவி
யொதுக்கிடமிருந்தவாற்றையுணர்ந்திலபோலுமன்றே. (௪௯)

அருளிடங்கொண்டிலாதவேடனையனங்கனென்று
மருளிடங்கொண்டநெஞ்சேமதித்திடேன்மடந்தைவாசச்
சுருளிடங்கொண்டுநெய்த்துநெறித்தறச்சுழிந்தகூந்த
விருளிடங்கொண்டுநின்றுனெவ்வொதுக்கெய்துவாயே. (௫௰)

முத்தவாண்முலைக்கொல்யானைமுகபடாமணிந்துசெங்க
ணத்திரம்புருவவிற்கீழயில்படத்திருத்தியார
வைத்தவாறறிந்துமஞ்சாதுரமுறமருவிக்காமப்
பித்தருப்பாவியென்கொல்பிழைப்பதுபிடிக்கின்றேனே. (௫௧)

செம்மரைத்தவிசின்மேலாள்சிந்தைகொண்டமைந்தகாம
மம்மரிற்றுவன்றிநோகாவள்ளளுனிளையனுக
வம்மலர்த்தொடையன்மார்பனுகங்கொண்டமைந்தவந்தக்
கைம்மலர்க்காந்தளாளுங்காதலங்கடலுளானுள். (௫௨)

உள்ளத்துநிரந்தகாதலுலகறிந்துள்ளதேனுங்
கள்ளத்தினியன்றதென்னக்கரக்கினுங்கரக்கலாகா
வுள்ளத்தினியல்கொலுள்ளவன்புகொண்டொருகாற்கள்ளாக
கள்ளத்தினியல்கொலொன்றிற்கணிப்பரிதம்மவன்றே. (௫௩)

தழைப்பட்டதாரான்காதற்றனைக்கொடுதனைத்தெனைத்த
னுழைப்பட்டநெஞ்சைமுற்றுமொளித்தெதிர்தோன்றுகின்றுன்
குழைப்பட்டமுகத்தினுனுக்கெதிரொன்றுவிடவுங்கூடா
பிழைப்பட்டேனென்பதல்லாற்பிறிதென்கொல்பேசுமாறே. (௫௪)

கண்ணினைக்காவல்கொண்டான்கருத்தினைக்கட்டிவைத்தா
னெண்ணினைக்கவராநின்றுன்மதன்பொரவேவிவிட்டான்
விண்ணினைக்காணிற்றோன்றிச்சிறுநகைவிளைக்கின்றுனேர்
பெண்ணினைப்பிடித்திவ்வாறுபடுப்பரோபெரியராவார். (௫௫)

நன்னலங்கடந்தவின்னகாதலினலிவுளாரு
மின்னலங்கயிலினுனுமிதக்கலாதாழ்ந்தகாம
வின்னலங்கடலினின்றுமெழுப்புவானியைந்தான்போலக்
கன்னலங்காறுகண்டகணியிதுகழறினுனே. (ருசு)

வளங்கொணுண்மதியினுண்ணூன்மாசறவுணரப்பட்ட
விளங்கொளிமூர்த்தமாதல்விளைந்ததுவிழுமிதென்று
ளுளங்கவரோகைகைம்மிக்குடையதெவ்வெவர்க்குமொற்றைத்
துளங்கொளிச்சங்கமெங்குமுரசொடுங்தொனித்தவன்றே. (ருஎ)

பெருங்குல்மாவின்பைங்காய்காம்பருபிளந்ததன்ன
விருங்குறுங்கருவிக்கம்மத்தெழின்முகமணிந்தபின்ன
ரருங்கைமாட்பிடரின்வந்தவனந்தவான்றீர்த்தநன்னீ
ரொருங்குகொண்டாடிமுந்நீருதித்தெழும்பரிதியொத்தான். (ருஅ)

முதனிலைச்சடங்குசெல்லமுதுமறைமுழங்கநீரி
னிதநிலைச்சடங்குசெல்லவினமுளைப்பரப்பினேன்ற
விதநிலைச்சடங்குசெல்லவிழுமிதின்விதித்தமற்றைப்
புதைநிலைச்சடங்குசெல்லப்புனைதடங்காப்பும்பூண்டான். (ருகூ)

மாலொன்றுவகுளப்போதின்வடிவுடைச்சிலம்பிநூற்ற
நூலொன்றுபெரிதென்றுன்னிநுண்ணிதிற்பகிர்ந்தபங்கு
நாலொன்றினைனயவாயநல்லிழைக்கலிங்கநப்பி
பாலொன்றுகிரணம்வீங்கமருங்கினிற்பரித்தல்செய்தான். (சு0)

வெறிப்புனலுமிழுஞ்சந்தமென்னறுந்தேய்வைவிஞ்சு
மறிப்புதுவாசம்வீசவரையகன்மார்பங்கொட்டிச்
செறிப்புடைப்பளிதத்தூளியெறிந்துமேற்றுருக்கஞ்சிந்தி
யெறிப்புடைத்தாளக்கோவையிழையொடுமிலங்குவித்தான். (சுக)

வீங்குமாலிரவிச்சோதிவரவரவிழுங்கியுள்ள
பாங்குலாம்பகுவாய்ச்செம்பொன்மகரிகைபதுமந்தோற்குந்
தேங்குவான்வதனம்பொற்பவிருகுழைசெறித்துவாகு
வோங்கன்மீப்பிறழ்ந்திட்டாடியொண்சுடருலாவுவித்தான். (சுஉ)

பற்றுடைக்கரியகுஞ்சிநறும்புகைபாய்த்திச்சேந்த
கற்றொடைத்தலைப்பொன்ஞாணிற்காமனுங்கனியவீக்கித்
துற்றுடைப்புதியபூந்தார்தொழில்படச்சுருக்கித்தூய
பொற்றொடைச்சூழ்விற்செய்யபூங்கதிர்பொலியச்செய்தான். (சுங)

பெருகியமூரிவாகுப்பிறங்கல்பிற்பொழுதிற்பெட்பிற்
செருகியபுலியைத்தாங்கல்செய்குறிதெளிக்குவான்போற்
கருகியதிமிரமல்லுங்காண்பரிதென்னவல்லே
பருகியவலயநாகபடங்கொடுபாரித்திட்டான். (சுச)

திணிக்கதிர்சுமந்தசெம்பொன்மணிப்பெருங்கடகஞ்செங்கை
யணிக்கதிரிரண்டுபாலுமிடம்படவலங்கச்செய்யாப்
பணிக்கிடைதணந்தநுண்மைநுண்விலைப்படிவம்பூண்ட
மணிக்கழன்மணிப்பூந்தாளின்வலம்படவிணைந்துவைத்தான். (சுரு)

தாவரும்பரிதிச்செல்வனொருதனித்தலத்தினுள்ளா
ரேவரும்வியப்பவிண்ணின்றிலங்கினனியைந்தானென்ப
பாவரும்படியிற்றோற்றோர்பரிதியஞ்செல்வனென்னத்
தேவரும்வியந்துநோக்கச்சிறந்தனன்றிருவின்மிக்கான். (சுசு)

நான்மலர்நறியதாதுஞ்சுண்ணமுநாறுமுன்றிற்
கான்மலர்கவினப்போகிக்கைம்மலர்கடலந்தானை
வான்மலர்நெடியகீர்த்திமன்னவர்குமரரேந்தத்
தேன்மலரலங்கன்மாலைக்காவணநீழல்சேர்ந்தான். (சுஎ)

வேறு.

கடையிடைத்தோரணங்கவினப்பூங்குழை
புடையிடைப்பொலிதரப்பூகவேலியுட்
டொடியிடைதுயல்வரக்கவரித்தூக்குடை
யிடையிடைமணிக்குடமிலங்குகின்றதே. (சுஅ)

அருமணித்தர்ப்பணமறைப்பினம்பகக்
கருமணிப்பாவையிற்கவினுங்காட்சிய
திருமணித்திண்சுடருமிழுஞ்சித்திர
வுருமணிக்காணிரையொழுக்கிற்றென்பவே. (சுகூ)

கொழுங்கதிப்பரிநிரைகொண்டபூவுடை
யொழுங்குறப்பைம்மணியுருச்செய்வாழையு
மெழுங்குரக்கிணங்கள்வாலெடுத்தவன்னவாஞ்
செழுங்குலைக்கதலியுந்தெரிக்கலாததே. (எ0)

சேயனதபனியநிலையின்மேற்றிகழ்
வாயனபவளநீடாளின்வைத்தன
வேயனவயிரவொள்ளகலினேற்றிய
தூயனபாளிதச்சுடருந்தொக்கதே. (எக)

தேசிகனீள்வளைச்செறிப்பிற்றிண்படங்
கோசிகமேய்ந்துமுத்தொழுக்கிக்கொள்பழ
மாசிகந்திடவிடையணிந்திட்டம்மலர்
வாசிகநாற்றிமேல்வனையப்பட்டதே. (எஉ)

நலமலர்நெடுவளைநடுவுகூண்டநாற்
றலமலர்பேரொளிச்சதுக்கமெங்கணும்
புலமலர்தபனியத்தமைத்தபொங்கொளிக்
குலமலர்நடுமணிக்குயின்கொண்டுள்ளதே. (எங)

வரப்பெலாம்வனைந்தனவகையுமேனிலைச்
சுரப்பெலாந்தோற்றியசுடருமொன்றிய
நிரப்பெலாங்காண்வரநிருமித்திட்டகீழ்ப்
பரப்பெலாம்பாற்கதிர்ப்படிகத்துள்ளதே. (எச)

வேறு.

காசறத்திகழுமின்னகாவணநீழற்போகிப்
பாய்சுடர்த்தரளப்பந்தர்கண்மலர்பரப்பிநோக்கித்
தேசுடைப்பொருள்கடம்மிற்றிவ்வியந்தெரிந்துகொண்டு
மாசறத்திருத்தியுள்ளமணவினைத்தலத்தணுறன். (எரு)

மிளிர்மதுக்குழலிறுளைவேண்டுபவிழியினேர்ந்து
குளிர்மதிக்குடையிறைனுங்கைதொழக்கொண்டுவாரா
நளிர்மடக்கிளியின்சொல்லார்நன்மணிப்பலகைப்பொன்ஞா
ஞொளிர்வளப்பவளத்திண்காலூஞ்சலினிருத்தினரே. (எசு)

அரும்பவிழ்கதுப்பின்வண்டோடணிக்குழையூசலாடக்
கரும்பனிருந்தகோலங்கண்விடான்பருகிநம்பி
யிரும்பொருள்விதிகளங்கணியன்றபினிடத்தேயின்பக்
குரும்பைமென்முலையாளாயகுலமணிப்பலகைசேர்ந்தான். (எஎ)

வள்ளிகான்படரச்செவ்வேண்மலைபுகக்கருவேடோற்று
வெள்ளிடையொளிப்பக்காந்ளைதவிண்புகவிளங்கித்தோற்றிக்
கள்ளவிழ்குழலினுளுங்காளையுமிருந்தபின்னர்
விள்ளொளிரியோமமூந்நூல்வேதியன்விளைப்பதானுன். (எஅ)

பொன்னிலங்கடந்துவந்துவைகிடப்புனைந்தசெவ்விக்
கொன்னிலங்குலவநோக்கிக்கோமயப்பூச்சுச்செய்தே
யன்னிலந்தருப்பைகைக்கொண்டக்கிரங்கிழக்கதாக
வின்னிலம்புகழநீவிவடதிசையெறிந்தானன்றே. (எகூ)

முத்தவெண்மணறேர்ந்தேந்திமுழமொன்றுசதுரமாக
வொத்துறுவிரலோர்மூன்றினுன்னதம்பரப்பியிட்டே
யெய்த்தெழுதருப்பைதன்னாற்கிழக்குமூன்றிரேகைசெய்து
வைத்தொளிர்வடக்கின்பாலும்வரையொருமூன்றுசெய்தான். (௮௰)

அதிர்படுசுருதியோடுஞ்சோதனமுதலவைந்து
விதிபடநடந்தபின்னர்வெய்யவன்மணியின்வெந்தீ
மதிபடவாங்கிமுக்கால்வலஞ்சுற்றிமரபுகுன்று
தெதிர்படநாப்பணிட்டங்கிலங்கெரிவளர்த்திட்டானே. (௮௧)

பூந்தளவனையமூரற்பொற்கொடிபுதியசெங்கைக்
காந்தண்மேலுறவேலோன்கைக்கமலங்கீழாகவேற்ப
நாந்தகவுழவனுனவிதர்ப்பநாடாளிநன்னீ
ரீந்தனன்மறையோராசியெடுத்தெடுத்திசைப்பவன்றே. (௮௨)

நசைத்தகவடியோரேழுவலம்புரிநரலத்தெர்ப்பை
மிசைத்தகநடத்தியம்மிமிதிக்குமாசெய்தபின்னர்
வசைத்தகவிலாதபோசன்வான்பொரிமலர்க்கைநல்க
விசைத்தகுசுருதியார்ப்பவிலங்கொளியெரியினிட்டார். (௮௩)

வள்ளருன்மயிலனுடன்மணிவிரன்மலர்க்கைபற்றி
நள்ளருவங்கிசூழநடந்தபினறியதாமக்
கள்ளருக்கதுப்பினுளைக்கவின்பெறுவலத்தினுக்கி
யுள்ளருக்களியினோடிமிருத்தினருவகைமிக்கார். (௮௪)

இருந்தொழில்பின்னுமிவ்வாறிருமுறைநடந்தபின்னர்த்
தருந்தகைக்கற்பின்கோலத்தகைபெறவிசும்பினின்ற
வருந்ததிகாட்டிக்காணுவமைந்தவவ்வலையின்வாரா
மருந்தனுளோடும்வேலோன்மணவறையகத்துப்புக்கான். (௮௫)

---

கடிமணப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௧௨௪௨



# மீட்சிப்படலம்.



மணவினைமுடிந்தபின்னர்மன்னரும்வழிபாடோடு
கணமலிபொருள்களெல்லாங்காவலனருளக்கொண்டு
பணைமுதிர்காமபாணம்படப்படப்பற்றுஞ்செந்தீ
பிணையனாளிருந்தநெஞ்சிற்பிறந்திடப்பெயர்ந்துபோனார். (க)

ஏணெறிவலியிற்கொண்டசிங்கத்தையிரித்துக்கொள்ள
நாணெறிதருமான்வேட்குங்லிவலிப்புலிக்குழாத்திற்
பூணெறிநாண்கொண்மொய்ம்பிற்புரவலர்நொடிதுபோகி
நீணெறிதடுப்பநின்றார்நெறிமுறைநீக்கிநின்றார். (உ)

சூழிமால்யானையொன்றுதேரொன்றுதுரகமூன்று
பாழிவாட்படைஞரைவர்கொண்டனபதாதிகோடி
யேழினோடேழுநல்கியிளவலைவிதர்ப்பராசன்
வாழியாய்சேறியென்னவான்பொருள்பலவுமீந்தான். (௩)

கத்தினவளிகொள்பைந்தார்க்காளையோடினிதுபோகி
முத்தினமிறந்தபின்னர்க்கடையுவாமுடிவாய்நின்ற
வத்தினத்தருக்கன்றன்னைநீங்கியவாலோனென்ன
நத்தினந்துவைப்பமீண்டான்விதர்ப்பமாநகரினானே. (௪)

வானமேற்புகழைவைத்தோன்மாதிரவிசயத்தாலே
யானமேதகவினானுமரிவைதன்மணத்தினானு
மீனமேபெரியதாகவிரண்டுபட்டெழுந்தவுள்ள
மானமேதீர்ப்பாராயமன்னரும்வரவையோர்ந்தார். (௫)

விரையணிதூசிவிட்டார்விஞ்சிருமருங்கும்வென்றி
யுரையணிநிறுவியிட்டாருள்ளணிபலவுஞ்செய்தார்
வரையனதடந்தோள்வீரர்வாட்படைகறங்கமுன்னர்
நிரையணிவகுப்பமைத்தார்பேரணிநிற்கச்செய்தார். (௬)

வைப்படைப்புட்டிலார்த்தார்வான்சிலைவணக்கஞ்செய்தார்
கைப்படைதெரிந்துகொண்டார்கத்தணங்கடிதுபூண்டார்
மெய்ப்படைக்கோதைசேர்த்தார்விற்கைவேள்விளைத்தபோரா
லெய்ப்படையுளங்கறுத்தாரிணைவிழிபெரிதுசேந்தார். (௭)

தொன்னிலைப்புறத்தவாழிசூழ்தரவதனுளாறு
நன்னிலைக்கடலுஞ்சுற்றநடுவெழும்வேலைபோல
வின்னிலையிரைத்தெழாவேத்திகற்குழாநிற்பவன்னா
ரந்நிலையறிந்தவொற்றரயனொடுமறைந்திட்டாரே. (௮)

மன்னவரெவருமத்தமறித்தனரென்னும்வாய்மை
தன்னிருசெவிகடம்மிற்சார்ந்தநுசாருமுன்னம்
பின்னுறவமைச்சரோடும்பெரும்படைசூழவேற்கட்
கன்னியைநிறுவிப்போரிற்கணத்திடைவந்துமூண்டான். (௯)

வேறு.

முதிர்ந்தனகறங்கொலி திரிந்தனநெடுந்திசை முழங்கதிர்வுகொண்டுடுவெலா, முதிர்ந்தனவயின்கடலுடைந்தனபுயங்கமுமலைந்ததினுறுங்கண்மணியே, பிதிர்ந்தனபிலம்பலபிளந்தனவறந்தனபெரும்புயல்பிறந்ததுகளால், விதிர்ந்தனவிலங்கல்கண் மெலிந்தனவிருஞ்சுடர் விளைந்ததுபெருஞ்சமரமே. (க0)

சினத்தழல்விழிப்புகைகனத்தெழமருப்பொடுசெருத்தருமருப்பெதிரசீ, டனற்றனிபிறப்பவதனைச்செவிமருத்துறவடிக்கடிவளர்ப்பவருகா, மினத்துயிர்குடித்துடறடித்திடியெனக்குரலிடித்திருபடைக்கடலுளே, மனத்தெழுமதத்தொடுதனித்தனியெதிர்த்தனமதப்பெருமிதக்களிறரோ. (கக)

நளித்தமகுரத்தினிலுரத்தொடுபரத்தெழுநனிச்சிறுதுகட்கிடையிலே, யொளித்தனதிசைத்திசைவிசைக்கதியினிற்றனியுதித்தனவுடற்கறையினீர், குளித்தனநடித்தெதிர்மிதித்தனவெதிர்ப்படுகுலக்குரகதக்குழுவொடே, தெளித்தனசினத்தனசெருக்கினநெருக்கினதிறற்குரகதத்திரள்களே. (கஉ)

களந்தரு நெடுந்துவச வெண்டுகில் கருந்துகிலெனும்படி கலந்துமிசைபோய், வளந்தருபெரும்புகைநிவந்திடலினந்தரமறைந்திடநிறைந்துலகெலா, மளந்தனவெனும்படிவருந்திகிரியிற் படையடங்கலுமடங்கவடல்கூர், தளந்தருசயிந்தவரதங்களினெதிர்ந்தனசயிந்தவசயந்தனமரோ. (கங)

தரிப்பொடுதடுத்திடுபடைச்சிறுபொறித்திர ட்ரைப்படுகறைப்புனலெலா, மரிப்பொடுகுடித்திடவடர்த்தெயிறதுக்கிமுனருட்டியவெருட்டினுட்னே, வரிப்புலியெதிர்த்திடமறப்புலி யெதிர்த்தெனமனத்தெழுசினத்தழலொடே, கிரிப்புயவிறற்பொருநருக்கெதிர்மறத்தொடுகிடைத்தனர்திறற்பொருநரே. (கச)

வாளியொடு வாளிகண்மற்றைந் திடவெறிந்திடுவசிச் சுடரிலைத்தலையமா, நீளுமுரவேலினெடுவேலிடறியோடியெதிர்நின்றுமுனைதின்றிடவிடாக்,கோளினெறிசூலமொடுசூலமெதிராவனல்கொளுத்திடவெளுத்தவெயிருர், காளியொடுகூளிநடமாடநடமாடினகதித்திருபடைக்கடலுமே. (கரு)

எற்றினரிடித்தனரெடுத்தனர்படுத்தன ரிரித்தனருரத்தசிரமே, குற்றினர்கதித்தனர்கொதித்தனர்மதித்துயிர் குடித்தனர்குதித்தனர்விடா, தொற்றினருகைத்தனருறுக்கினரொருத்தரையொருத்தர்கையினோர், பற்றினர்சிதைத்தனர்பதைத்தனர் விழித்தழல்படைத்தனர்படைத்தலைவரே. (கசு)

உய்த்திடுமறத்தவர்செலுத்தியபடைக்கல்முரத்தொடுமிசைப்பொலியவே, கைத்தலவரைக்குலமெதிர்த்துளிமிகுத்தனகலிச்சமர்கணிப்பதெவனோ, வைத்தனவடிச்செயுமறத்தொழிலளப்பிலமதிக்குறைமருப்பின்மலிபோ, ரித்துணையெனற்கரிதுலப்பிலபுழைக்கரவிருப்புமுசலச்சமரமே. (கஎ)

கரத்திணையறுத்தனசரத்தொகைபதத்துணைகழித்தன கதிர்ப்பரிதிவேல், சிரத்திணையொழித்தனமழுப்படைபுயக்கிரிசிதைத்தன வடற்குலிசமீ, டுரத்திணையொடித்தனவெதிர்த்துளி யொருத்தனையொருத்தனதுடற்குநிகராம், புரத்தொகையளப்பிலபடைச்செலவை யெப்படிபொதுக்கறவுரைக்குமதுவே. (கஅ)

முந்தியதிறற்கரியின் முந்தியவிறற்பரியின் முந்திய மறப்பொருநர்மே, லுந்தியமழுப்படைகளுந்தியகழுக்கடைகளுந்தியவெழுப்படையெலாஞ், சிந்தியமுடைக்குருதிசிந்தியவிடக்கிழுது சிந்தியவுடற்குடர்முநீர், நந்தியதுறக்குருகுநந்தியதுறைப்புவருநந்தியதறற்பெயருமே.

பரந்தனபருந்தின மலிந்தனகளத்திடர் பறந்தலைபடப்பட விடாக், குரந்தறிபடுத்தின கரந்தகுதலைத்திரள்குவிந்தனகிடக்கவிடையே, நிரந்தனவகுப்பிடை நிறைந்தனர்மறத்தவர்நெருங்கின பழுக்களரியாத், துரந்தனபடைக்கலமுயர்ந்தனதசைக்குவைசுருங்கினநிவப்பசலமே.

ஆருமுரசோதையினினத்தொனிநெடுங்கடல்டங்கலுமடங்க வதிராச், சேருமுதிர்கூறிடு செயத்தொருசினத்துரை செவிப்புல னுருமையின்மரு, நேருமுரவாடலினிலைப்பரு முனைத்தம நிலைப்பெயர்பொறித்தொளிருமீ, வீருநுதிவாளிகளினிற்பெயர்விளக்கினரிருஞ்சிலைதொடுஞ்சிலவரோ. (உக)

தூநில்வுதோய்திகிரி யோடெதிர்பொருந்திகிரி விட்டெதிரிதொட்டபடையா, வீனமொடுதாமயர வேபுறகினிற்கொடுசெ லேதமிலகுதலைவையா, மேனிமிர்படாகைசுழ றேரினைநடாவிமுன் விலைச்சமர்விளைத்தவரையே, வானியடையாளமதுகண்டுபினெதிர்ந்துறவளைத்தனர்மறச்சிலவரே. (உஉ)

கைத்தலைநெடும்படைவிடுத்தெதிர் தடுத்துவருகப்பணமதைக்கடிதினே, சித்திரமுடன்றனிபிடித்தெதிரெதிர்த்தவர்சிரத்திடைசெலுத்தியிடுவார், முத்தலைநடம்புயமலைத்தலை தழற்சிதறிமுந்துவலி தந்து

கொடிதே, தைத்தனவுடம்பிடிகளைத்தனிபறித்தெதிர்சமர்த்தர்தமுரைத்துவிடுவார். (உரு)

சுற்றும்வயவீரர்கடுளக்கறவமர்த்தலை சுடர்க்கரவடற்கடுமையான் முற்றும்வலியாலினிதெடுத்தனதனுக்கலைமுதிர்ச்சியை யுரைப்பதெவனோ, கொற்றம்விளையாவெதிர்விடுத்தனகடுங்கணை கொளச்சிலசரங்கணைடுவே, யிற்றும்விசையோடுநெடி தோடினபிளந்தனவெதிர்ப்படுமிலக்கினையரோ. (உச)

எள்ளலிலபிள்ளைமதி யன்னகணைவெங்கரியிருந்தவர்களத்தை நடுவே, தள்ளவுடறுள்ளிகில னிற்கடிதுவீழமலர் தாமரைமுகத்ததகைசால், தெள்ளுநகைவாயினசிரங்கள்வளைவாய்வலிய செங்கணுறுகங்கமிசையே, வெள்ளுகிர்கொடள்ளவவையோடுதரைமீதுதகமேலைமுவிழுந்தனவரோ. (உரு)

பாறுமிசைபந்தரிடவோரிகடொடர்ந்திடுபடைக்களமிசைப்பவனநேர், மீறிவருகந்துகமிசைக்கொடுநெடும்பரிமிசைக்கொடெதிர்கின்றவரையே, மாறிவலிகுன்றவமர்செய்துணர்வுகுன்றியமயக்கமதொழிந்தமரின்மேற், றேறியெழுமவ்வளவுநின்றனர்நெடும்படை தெரிந்தெதிர்தொடாதுசிலரே. (உசு)

வேறு.

வாகையிற்சிறந்தசில்லோர்மாத்தலைமடிந்துவானி
லீகையிற்பொலிந்தசெவ்வியிந்திரவிமானமேறிப்
போகையிற்றிரும்பித்தெய்வமாதராரோடும்பொங்கு
மோகையிற்கண்ணுற்றூர்தம்முடற்குறைநடத்தையன்றே. (உஎ)

உரியவான்சிலைப்போர்முன்னுமல்லமர்ருவொன்றிப்
பெரிதுபோர்செய்திடாகின்றுவிவான்பிடித்தபின்னு
மெரியமுவிழியனுரீங்கிருவராங்கொருபூந்தெய்வ
வரிவைபால்வைத்தநேசத்தருஞ்சமர்விளைப்பாரானூர். (உஅ)

புரிந்தெழுந்திருபாற்பொங்கும்பவனமும்பொரநீள்வேலை
யிரிந்தெதிர்தரங்கமென்னவின்னணமியன்றபோரைத்
தெரிந்தெதிரங்கர்கோமான்செழுமணித்தேரொன்றேறி
யரிந்தம்ன்சேனைதன்மேலாரமர்விளைப்பவந்தான். (உகூ)

வேறு.

சிறுநாணெறிந்தனனெடுஞ்சிலையையூழி
யிறுநாணிரந்ததிரிடித்திமிலமென்ன
வுறுநாணெறிந்துயிரையுண்ணுமொருவோனு
மறுநாணெடுங்கரமெடுக்கவுளம்வைத்தான். (௩0)

ஓய்யெனவிடிக்குரலொலித்தெதிருருத்த
மையனமதக்கரியின்மாவின்மறவோரின்
கையனமுகத்தனகளத்தனவெனப்போர்
வெய்யனவடிக்கணைவிசைப்படவிடுத்தான். (௩௧)

மாலற்றவெண்ணிலவடிக்கணைகள்பாய
மேலற்றவெண்குடைவிரிந்திடுபதாகை
பாலற்றசாமரைபதைப்பற்றதோள்கள்
காலற்றவின்னனகணிப்பற்றவன்றே. (௩௨)

உளைத்தனவுயிர்த்தொகையையுண்டுருவியோடி
யிளைத்தனவெனச்சிலவிருங்கணையுமுண்டோ
கிளைத்தனநுதிக்கணைகிடைத்தனகளெல்லாந்
துளைத்தனபிறைக்கணைதுமித்தனவுமொக்கும். (௩௩)

தழைத்தகுருதிக்கடலமிழ்ந்தினர்சரத்தின்
குழைத்தகொலையெய்திலர்களக்குருதிகொல்லாப்
பிழைத்தவர்பிணக்குவைபிடித்தவர்கள்பின்னை
யிழைத்தகொலையெய்தினருமிங்கிவர்களன்றே. (௩௪)

தேரிற்களிற்றினிமிர்மாவின்மிசைசெல்வோர்
போரிற்படுங்கணைபொறுத்தபுரமெல்லாம்
பாரிற்கணித்திடல்படாவுயிர்கள்விண்ணோ
ரூரிற்றெரிந்திடலுரைப்பவுளவாமால். (௩௫)

நம்பாடல்வெற்புமுதனுலுமொரொழுங்கிற்
செம்பாதிபட்டபடியாருரைதெரிப்பார்
மொய்ம்பானிரட்டியுறுமுப்பதணியொன்றி
லம்பானிரட்டியுருவிற்றயில்கொளம்பே. (௩௬)

வேறு.

மதித்தெதிர்தெவ்வர்மார்பின்வாளியிற்குறியைவல்லே
பதித்திடுமெங்கர்கோமான்விற்றிறம்பகர்வதென்னோ
கதித்தனகணைகளோடிக்கலந்தனவொன்றோடொன்றி
யுதித்ததுசெந்தீவேலையோடியதுதிரவாரி. (௩௭)

கொன்புக்கசிலையாலின்னகொடுஞ்சமரங்காடாள்
மன்புக்குமலைதலோடுமறம்புக்கவடிவேனம்பி
முன்புக்கதானைவெள்ளம்பின்புக்கமூரிவேந்தர்
பின்புக்கதானைவெள்ளமுன்புக்குப்பெருகிற்றன்றே. (௩௮)

பாழிவான்புவனங்கொள்ளும்பௌவத்தைப்பருகத்தோன்று
மூழிவான்றீயின்வல்லேயுருத்தெழுந்துடன்றுபொங்கிச்
சூழிமால்யானையேந்தரூர்மணித்துவசச்செம்பொ
ஞழிவான்றிகிரியுய்யாவண்டமுமதிரப்புக்கான். (கூகூ)

முன்னலத்துலகமெல்லாமுடிக்குமுப்புரத்திஞேடன்
ஞென்னலர்ச்செருக்கநின்றவுருத்திரனனையதோன்றல்
சொன்னலத்துலகமேழுந்துதித்திடமேருவன்ன
வின்னலத்துரியவெம்போர்மேதகவிளைத்திட்டானே. (சo)

பூண்டகுமார்பன்வெம்போர்புகல்வதென்கணத்தின்பாதி
யாண்டவன்வலக்கைநாணுமரவமுந்திரிந்ததப்போ
வேண்டியவண்டமெல்லாஞ்செவிடுறவெடித்ததன்ஞன்
காண்டகுதிசைகளெல்லாந்நிரம்பினகவனவாளி. (சக)

கூண்டனகரிகள்வீந்தகுறையுடற்குன்றங்கோளிற்
றூண்டெதிர்செல்லும்பாய்மாப்படுபிணச்சலதியெங்கும்
வீண்டனகதிகொள்வேகவெறுழ்வலிச்சரத்தின்வான்போய்
மீண்டனசிரங்கள்மீளாதேறினவீரராவி. (சஉ)

முற்பட்டகைக்கும்பாங்கர்முனைப்பட்டகைக்குமூரிப்
பிற்பட்டகைக்கும்வாளியோர்தொடைபிடியாநின்றூன்
செற்பட்டகொடியசெந்தீச்சிந்திடுஞ்செல்லேறுண்ட
கற்பட்டவெல்லாஞ்சேனைக்கடல்பட்டகடிதின்மாதோ. (சங)

வாய்ந்தனசமரபூமியதனையேமணித்தேர்வங்க
மேய்ந்தனகுருதிவேலையாக்கியவிகற்போர்வாளி
தேய்ந்தனகுடருங்காலுஞ்செங்கையுஞ்சிரமுங்கொண்டு
பாய்ந்தனதிசைகளெல்லாம்படுகளமாக்கிற்றன்றே. (சச)

கார்கொண்டநமன்மீகானுத்தன்மிசைகலப்பச்சோரி
வார்கொண்டதமரவேலைமணந்துபோயுயிர்களென்னு
நேர்கொண்டபொருள்களெல்லாநிரப்பலாற்சரங்கடோணிப்
பேர்கொண்டவாசியெல்லாங்காட்டினபெரிதினம்மா. (சரு)

கோறலில்வருபொன்கொண்டோர்தலையொடும்பிறர்பாற்கோளி
னேறலைப்புதிதின்யாருமியம்புவதென்ஞேவோகைத்
தோறலைகிழித்துக்கொண்டசுடுசரவாயின்மூளை
யாறலைகள்வர்தம்மிலலகொடுங்கவர்ந்தசேனம். (சசு)

புக்கரிச்சுரும்புபாடமும்மதம்பொழியுமோர்வெங்
கைக்கரிப்பிணத்தினீலக்காரெனக்கருத்துமீளச்
செக்கரிற்சிவந்தவந்தச்செம்புலத்தெருவைகூடிக்
கொக்கரித்திடவெங்கூளியாடினகுரவைக்கூத்து. (சஎ)

நெய்ப்படாவரத்தின்பல்வாய்நிரைப்படாநிமிர்ந்தவாளி
வைப்படாவுடலுங்கூளிவாய்ப்படாத்தடியுங்கூற்றின்
கைப்படாவுயிருஞ்சோரிக்கடற்படாவிடமுங்கங்க
விப்படாநிழலுமின்றேவியன்களமெங்குமாதோ. (சஅ)

வாலிறப்பிறையின்கூனன்மருப்பிறப்பல்லணங்கண்
மேலிறப்பாரொடேகூவிரமிறவலவன்கைம்முட்
கோலிறக்கரியுந்தேருங்குதிரையுங்குழூஉக்கொண்டோடுங்
காலிறக்கிடந்தநின்றகவந்தத்தின்கணங்களெல்லாம். (சகூ)

உய்த்திடுதேரினேடுமுலந்துடுவென்னுநஞ்சந்
துய்த்துயிர்கக்கிமாழ்கின்றனதுரகராசி
சித்திரத்திகிரிபூண்டுநின்றனசிறப்பிற்றுகிப்
பத்தியிற்பொறித்தவோவகிகர்த்தனபகரினெங்கும். (ருo)

கறைபடுகுருதிவெள்வேற்கற்புயவீரராவி
குறைபடவிதழைவெண்பலிறுக்குபுகிடந்தகோலம்
பிறைபடுமெயிற்றுக்காலபெயர்தியோபிழைத்தியென்னுச்
சிறைபடுவலியினேடுஞ்சினப்பனசிவனுமாதோ. (ருக)

வலிச்சிலையொருவன்வல்லேயிம்முறைமறத்திற்செய்த
வொலிச்சினவம[illegible]நோக்கியொருகணத்திவனைநொய்தி
னலிச்சிவன்கூளிக்கீதுமெனநவின்றங்கநாடன்
கலிச்சினவரியேறென்னக்கடிதுவந்தெதிர்ந்தானன்றே. (ருஉ)

விண்டைத்தகுழலினுடன்விளங்கொளிவேலைவென்ற
கண்டைத்தமார்பத்தென்றன்கடுங்கணைதைப்பதுண்டா
லெண்டைத்ததொடையினுகாக்காக்கவுமியன்றதாகிற்
பண்டைத்ததிறத்திற்காத்தியெனவெழுபகழியுய்த்தான். (ருங)

தாக்கியசரங்களேழுந்தடுத்திருவிசிகமேந்திக்
காக்குதிகாக்கிலென்னுக்காமனுர்கனிந்துசெய்த
பாக்கியமுருக்கொண்டன்னபடிவத்தாள்படிவமெல்லா
நோக்கியநயனக்கென்றுவிடுத்தனனுதிகொள்வேலான். (ருச)

கைத்தொடைமுன்பினேனுங்கண்ணெனப்புகுந்தவாளிக்
குய்த்திருபகழிவள்ளல்கவசமேலுறுத்துமாறே
ரத்திரஞ்செலுத்தியம்பொராயிரமங்கர்கோமான்
வித்தினன்கணையொன்றாலேவிலக்கினனிளையவீரன். (ருரு)

தெறுகணைதடுத்துநின்றசெம்மலுந்திசையைமூடப்
பெறுகணைபரப்பியன்னபெருங்கணைதடுக்கும்போதி
லுறுகணையொன்றுநெற்றியோடைமேலூக்கிவிட்டு
மறுகணையங்கர்கோன்றன்மார்பகத்தழுத்தினானே. (ருசு)

தெரிக்குமொன்றுளதோநெற்றிபுதைதரச்சினங்கொளோரோர்
பரிக்குமொன்றொன்றுமார்பத்தழுந்திடப்பாகனென்னுங்
கரிக்குமொன்றிலங்கும்பொற்கவசத்திற்காளையாய
வரிக்குமொன்றடுகோலுய்த்திட்டார்த்தனனங்கர்கோமான். (ருஎ)

சதுரனாகானொடேபோர்தாழ்த்திடிற்சரிக்குவெம்போர்
முதிருமாலென்னாவாளிமுடுக்கியமுற்றமுற்ற
வதிருமாலியானையானுக்காயிரம்பகழியோயா
தெதிருமாறியற்றியிட்டானிரவிதன்குலத்தினானே. (ருஅ)

வியந்தனபகழிவீடாவில்க்குவான்விரைந்தவேகத்
தியைந்தனதொடைபன்னூறங்கியற்றிக்கையிலைத்தல்கானா
நயந்தவிர்ந்தடைந்ததீறுநராதிபற்கென்னச்சூதன்
சயந்தனம்பெயர்த்தான்வந்துகலிங்கர்கோன்சமரின்மூண்டான் (ருகூ)

குலக்கருமேகமன்னகுந்தளக்கொடிநல்லார்சட்
புலக்கரும்படிவக்காளைமிசைவிசைப்புரிவதாக
வுலக்கருமளவைத்தாயமன்னவரொருவராலும்
விலக்கரும்வேகவாளிவெய்யவன்விரைவினுய்த்தான். (சூ0)

கைதவமில்லாவென்றிக்கலிங்கனார்கணையுமென்று
னெய்தியதென்னிலென்னிலெளியருமில்லையென்று
னொய்தினில்விலக்கிமற்றோர்நோன்கணைவிடாதவண்ணஞ்
செய்தனன்பகழிமாலைசெலுத்துபுசிலைவலானே. (சூக)

மொய்யுழிக்கொடியவாளிமுறைமுறையாவங்கொள்ளல்
செய்யுழித்தடிந்தகோடிநாண்டொடச்செறுத்தகோடி
யெய்யுழிக்கடிந்தகோடியிம்முறையெடுப்பதெல்லாங்
கையுழித்தடுத்தான்வீரனென்செய்வான்கலிங்கர்கோமான். (சூஉ)

அன்னதேநோக்கிநின்றவவந்திகன்கலிங்கநாடன்
பின்னதேயானதென்னப்பிறங்கொலித்தேரின்வாரா
முன்னதேயானவாகைமுதிர்சமர்முனையினிப்பா
லென்னதேயென்னதேயென்றிகற்கணைவழங்கினானே. (சுங)

பாற்றியக்கற்றவாளிபாய்தலும்பறவைவான
வாற்றியக்கற்றமேகமவையியக்கற்றநீடுங்
காற்றியக்கற்றவெய்யோன்கதிரியக்கற்றகாணில்
வேற்றியக்கற்றவன்னவிரிகணையியக்கினம்மா. (சுச)

அன்னகையயில்கொள்வாளிப்பரப்பெலாமமையநோக்கிப்
புன்னகைபொடித்துவேணுப்புரிதொடைபுரளவாங்கித்
தன்னகைவிசையின்வெய்யசரம்பலதொடுத்தான்முல்லை
மென்னகைமுறுவனல்லார்வேட்டிடும்வேளனானே. (சுரு)

பங்கமொன்றில்லானுய்த்தபகழிபோய்ப்பகழியொன்றைப்
புங்கமொன்றிடிப்பவொன்றுசிறையறப்புடைப்பநாப்ப
ணங்கமொன்றடர்ப்பவெவ்வாயலகையொன்றறுப்பவாகி
யெங்குமொன்றியபோர்வாளியாவையுமிரித்தவன்றே. (சுசு)

உழுந்துருள்பொழுதினோடியுலகெலாமொருங்கினோடுங்
கழுந்துபாய்கணையைக்கண்டங்கண்டனகடுமைகாணா
விழுந்தவாவீரமென்னாவெஞ்சினவெகுளிவெந்தீ
யெழுந்துகண்ணுமிழவந்தானெறுழ்வலிச்சேனனென்பான். (சுஎ)

கைப்புடைநோக்கிமீளக்காழ்படவிசித்துச்செம்பொன்
மொய்ப்புடையாவந்தொட்டுமூரிநாண்முறையினீவி
யுப்புடைப்படைகள்யாவுமொறுத்தொறுத்தொன்னாராவித்
துப்புடைவாளியாய்ந்துசூதனைநோக்கிச்சொல்லும். (சுஅ)

ஐயருமழிக்கலாகாவிவனிலையடரினில்லா
வெய்யமாச்சாரிபேர்த்தல்விழுமிதவ்வினையந்தனைக்
கையினுமுகத்துங்கோடாக்கண்ணினுங்காண்டியன்றேற்
செய்வினையதனிற்றேர்திகருத்தினுந்தெளிதியென்றான். (சுகூ)

இறையவன்கருத்தும்போர்செயேதிலர்நினைவுமென்னன்
முறையதுகிடக்கவொன்றிற்றடைப்படாமுழுகிமார்பத்
துறவரும்பகழியென்கொல்விலகுமாறார்ந்திலேனே
னிறைகலைகெடாதெனுள்ளநின்றதுநன்றதென்றான். (எ0)

செயலினின்றிறத்தைமுன்னர்த்தெரிந்திலேனல்லேன்மன்ன
நியலினின்றுரைத்தேனென்னவிசைத்துமென்கழுநீரெங்கும்
வயலினின்றொளிருநாடன்வடிக்கணையொன்றுமாரிப்
புயலினின்றளிக்குங்கையான்றன்னெதிர்புகுவித்தானே. (எக)

விடுகணையிலக்குமுன்னம்வெங்கணைகோடியேழுய்த்
திடையினைமறைத்திட்டன்னவிடத்தினைநினைந்தான்கல்வி
வடுவறவுணர்ந்தோன்றிண்டேர்வலத்தினிற்றிரித்தான்வள்ள
லடுகணையறுக்கப்பாகனவனுமத்தொழிலானான். (எஉ)

பரவியபரியினெற்றிப்படுகணைபடுப்பான்மற்று
மிரவிசேய்வலத்தனாகவிமைப்பினினிடத்தனானான்
விரவியசிலைவலானுமின்னெனவெதிர்ப்பமீளப்
புரவிகால்பெயர்த்தவோயாப்பொருகணைபுகுந்தவன்றே. (எங)

இரிவனவெதிர்வசெந்தீயெழுப்புவவெரிவவாடல்
புரிவனபொருவதிக்கிற்புகுவனகணைகளாக
வருவனபோவநிற்பமண்டிலஞ்சுழல்வசாரி
திரிவனமறிவவானசெழுமணித்தேர்களன்றே. (எச)

பரப்புறுகலையையுள்ளம்பரித்தபாகரையோவாழி
வரப்பிலாதமையோமற்றைமாவையோபுகழுகிற்பாம்
புரப்பவர்தொடையும்வாளிப்போக்குநீள்வலவர்கையு
முரப்பரிக்காலுமற்பமோய்ந்திலமுகூர்த்தமொன்றில். (எரு)

திக்கொன்றுபுகழோர்மெய்க்குந்திறத்ததாய்த்தெளியப்பட்ட
மிக்கொன்றுகாணில்வீணைவிடுவரோவிசிகம்பாகன்
கைக்கொன்றுகடியமாவின்காற்கொன்றுகாவலான்றன்
மெய்க்கொன்றங்களித்தான்வீரன்வேந்தனும்வென்னிட்டானே. ()

வேறு.

வென்னிட்டான்முகநோக்குறாதெதிர்விரைந்தேகிப்
பின்னிட்டானிகற்பரந்தபனென்பதோர்பெயரோன்
பொன்னிட்டார்மணிப்பூங்கழற்காற்புகழோனை
முன்னிட்டான்சிலைவணக்கினானமர்மூண்டான். (எஎ)

வலிவிளைத்தவேல்வள்ளலோடொருதனிமலைந்து
கலிவிளைத்துவென்காணுமோவெனவுளங்கணியாப்
புலிவிளைத்தமர்சீயமேற்புகுதல்போற்சிறுநா
ளொலிவிளைத்தடற்றென்னனுமுருத்துவந்துடன்றான். (எஅ)

இருவருய்த்தனவிகற்கணையெரிமடுத்தெங்கு
மொருவருய்த்தெனவுருமெனவுருத்துவந்துறலுஞ்
செருவரத்தினைத்தேடுவெஞ்சிலைவலாரெவரும்
வெருவரத்தனிவாளியால்விலக்கினான்வீரன். (எ௯)

விலக்கியிங்கிவர்க்குறுசமர்வினையம்வேறாகக்
கலக்கியல்லதுகையறல்கைக்கொளாரென்று
விலக்கமம்புதொட்டிருவரிலொருவனையிகலா
லலக்கணெய்துவித்தொருவன்றிண்டேரையுமழித்தான். (அ0)

அழிந்ததில்லெனமற்றோர்தேர்புகுந்தனனவனைப்
பொழிந்தவாளியாலுளந்தடுமாறுமாபுணர்த்திக்
கழிந்தவெங்கணைப்பரப்பினுளொருகணைகடாவி
யொழிந்தவன்சிலைநாணியையிமைப்பினிலொழித்தான். (அக)

எடுத்தநாணியொன்றேற்றினனிகற்பரந்தபனுக்
கடுத்ததங்கவற்காக்கிமற்றங்கவற்கான
படுத்தினான்மதிமரபினாற்கிங்கிவர்பதறித்
தொடுத்தநாணியுமேறுதேர்களுந்தொகையின்றால். (அஉ)

துற்றுநாண்டொடேர்புகுந்தேறலேதொழிலா
யுற்றுமன்னவரலந்தலையுறுவதையோரா
நிற்றிர்நிற்றிரோவில்வலானுடன்சமர்நேர்தற்
கெற்றிர்நீரெனவெதிர்த்தனனிகற்பிரதீபன். (அஙூ)

அன்னனுடல்வெஞ்சிலையினுலரசராரெவர்க்கு
முன்னனுருவன்கணத்துநின்முதுகுகாணேனேற்
பின்னனுருவனல்லதுபிறந்தவிப்பயனு
லென்னனுருவன்யானெனவெதிரெடுத்திசைத்தான். (அச)

கரமொராயிரமுந்தையையிவ்வழிகடிதிற்
றரவும்வல்லையேற்றருகவென்றனுத்தொழில்காணிற்
பொரவுன்னலடாதுள்ளவாறமரைநீபுகுந்த
வரவுபாழ்படாதியற்றுதியென்றனன்வள்ளல். (அரு)

காயும்வேலெனவவ்வுரைசெவிப்புலங்கலப்பத்
தீயுந்தீதரவெழுந்ததுசிந்தையிற்சினத்தீ
யேயுங்கண்களிற்பிறந்தனவிரும்பொறியெரியிற்
போயதங்கெதிர்விடுகணைப்பொருசினப்பொம்மல். (அசூ)

மின்னுத்துன்னியவெவ்வயிற்றலையவவ்விசைப்
பின்னுப்பந்தியபெருந்திரண்மதலைநேர்பிடித்தான்
றன்னெப்பாயினவள்ளலுந்தலைத்தலைதடுப்ப
முன்னிற்பாய்தலேயல்லதுமுற்றிலவன்றே. (அஎ)

குவித்தவக்கணைக்குலத்திரட்டம்பமுற்கொழுந்தை
யவித்தவாளியுமவிந்தவுமந்தியமொன்றாற்
கவித்தவெண்குடையான்றொடுதொடையினுற்கடிதுற்
பவித்தபல்கணைப்பரப்பினையாவரோபகர்வார். (அஅ)

கெடலுங்கெட்டிலவெனும்படிபிற்கணைகெழீஇமுற்
படலும்வேரறிற்பணைபடுமென்பதுபற்றி
மடலந்தார்ப்புயவள்ளன்மற்றொருகணைவழங்கக்
கடலந்தானையான்சிலையொடுமற்றவக்கணைகள். (அகூ)

இகலம்பாற்சிலையழிதலுமற்றோர்வில்லேந்திப்
புகலம்பாறிரண்டிளவறன்கவசமேற்புதைத்து
விகலம்பாலுறுவெயிற்கணையேழுதேர்விடுவோ
னகலம்பாய்த்தியோரம்பினுற்கொடியையுமறுத்தான். (கூ0)

வேறு.

வீறுசெய்பதாகையற்றுவீழ்தலும்வெகுளாவீர
னூறுசெய்பகழியொன்றாலொருகொடியிரண்டதாகக்
கூறுசெய்தரசன்மார்பிற்கூர்ங்கணையைந்தாற்செந்நீ
ராறுசெய்தமையாவின்னுமழிவிலப்படவிசெய்தான். (கூக)

இராத்திரிசுடரிற்செங்கணெரியுமிழ்ந்திலங்கவேந்தன்
விராய்த்தெரிகணைகள்வெய்யவிடவிடவிரைவிற்பாயு
மராத்துகளசலமாகவறுத்தவுமவிந்தவம்பும்
பராத்தமொன்றுயபோதுமழிந்திலபகழிக்கானம். (கூஉ)

கதிமுறைக்கணைமற்றென்றூற்கணைக்கணங்கழியாவென்ன
மதிமுறையுணர்ந்துவெய்யகனற்கணைவல்லைவாங்கித்
துதிமுறைநிரப்பிநெஞ்சாற்றுகடபுதூயபூசை
விதிமுறையாற்றியாவும்வெருவுறவிடுத்தானன்றே. (கூங)

விரிந்ததுகொடியவெந்தீவெம்புறுவெயர்த்தமேக
மெரிந்ததுபகழிக்கானமெழுந்ததுதூமமென்னப்
பிரிந்ததுபொழுதுமண்டப்பித்திகைப்பரப்புமோடிக்
கரிந்ததுசிவந்ததேறக்கதிர்செய்மண்டிலமுமன்றே. (கூச)

பால்வளைந்தெழுந்தசெந்தீப்பரப்பறவருணபாண
மேல்விளைந்தெழுமாறுய்த்தான்வீரனவ்விசகமோடிச்
சூல்வளைந்திருண்டுமின்னியிடித்துவிண்சூழ்ந்துவில்லுங்
கால்வளைந்தனந்ததாரைக்கணமழைபொழிந்ததன்றே. (கூ௫)

கடைநிலைத்தொழிலான்மூளுங்கனற்பரப்பவித்தவன்ன
படைநிலைத்தொழிலின்வேலைபட்டதுபட்டவைய
மிடைநிலைப்பொருளையென்னேயெடுத்திசைப்பதுமேனின்ற
புடைநிலைப்பொருளின்வெய்யோன்புரமுமுட்குளிர்ந்ததன்றே. கூ௬

பொய்யறுமாக்கினேயமவித்தவிப்புகழோன்மற்றை
மையறுபகழியாவும்வழங்கினுமாய்க்குமென்ப
தையுறவில்லையென்னவகத்தடைத்தரசனற்பங்
கையறல்கொண்டான்வேந்தர்கண்டிவையுரைப்பதானார். (கூஎ)

நீளநாங்கற்றதெல்லாநிலத்திடையுகுப்பதல்லா
லாளநானிலத்திலேமாந்தெண்ணுவதவத்ததாமாற்
காளநாகப்பொற்பூணன்கண்ணிடைப்படாதகாட்சி
வேளனுனிவனேவெம்போர்விற்றொழிற்காசானென்றார். (கூஅ)

உன்னினுண்டாயவல்விற்கலைத்தொழிலவனோடொன்றித்
தன்னினுண்டாயதல்லாற்கற்பனதரத்ததன்றாற்
கொன்னினுண்டாயபோர்விற்றொழிலெலாமிவன்கொடுக்கு
மென்னினுண்டன்றேவின்றேயெம்மனோர்தங்கட்கெல்லாம். (கூகூ)

தாட்சியிலிவனைவென்றுதார்குழல்வெளவல்வென்றிக்
காட்சியினுருவிற்றாயகடவுளர்தமக்குமாகா
சூட்சிவேறில்லைமுன்போயமர்செயத்துணிதறன்னின்
மீட்சியேகருமமென்னமெல்லெனவிளம்பினாரே. (க00)

அங்கவர்தம்மிற்சில்லோரடுபுலித்தறுகணண்மை
வெங்கனற்கண்ணர்வீரவிசயமேயுருவாய்நின்றோர்
பொங்கினநகர்க்குப்போகிற்புழுங்கியநெஞ்சநங்கள்
மங்கையர்நகையிற்றீதோவள்ளறன்வயிரவாளி. (க0க)

நசையிலாவுலகமெல்லாநணுகியஞான்றுமன்றல்
வசையிலாமயிலையங்கேவவ்விடமாய்ந்திருந்தே
மிசையினாலொருவனாயவிவன்வயினின்னுமெங்கள்
விசையமாமயிலையிங்கேவிடுத்தலின்விளிதுமன்றே. (க0௨)

எழுமின்களொருங்குகூடியெதிர்மின்களிரவையோட்டு
முழுமின்கொள்வயிரவாளிமூரியமுனையான்முற்றச்
செழுமின்களிலங்குபைந்தார்ச்செம்மறன்செம்பொன்மார்பத்
தழுமின்களென்றுவுள்ளமொருப்படுத்துடன்றுவந்தார். (க0௩)

சதுர்முகத்தானையோடுந்தாவிமுன்னடந்துமன்னர்
கதுமெனக்கறுவிமீறிக்கடையுகமாரிபோல
விதுமுகக்கணைகள்சிந்திவீரரில்வீரன்றன்னைப்
புதுமணித்தேரினோடும்பொம்மெனப்புதைத்திட்டாரே. (க0௪)

ஒருபெருந்தேருந்தானுந்தோற்றிடாதலகமேழும்
வெருவரும்பகழிமூடும்வெஞ்சமர்ப்பட்டவீரன்
மருவரும்பொழில்கள்சூணன்மதைநதியதனின்யானை
யுருவகன்றிட்டோன்வாளிவிஞ்சையொன்றுன்னியுய்த்தான். க0௫

பாங்குலாமோகவாளிபாய்தலும்பரந்துசூழ்ந்த
நீங்கலாப்பகழியாவுநீங்கினநெடியவாளி
தாங்கலாக்கரத்தினோடுந்தரிக்கலாநிலையினோடும்
வாங்கலாச்சிலையினோடுமன்னருமயங்கிவீழ்ந்தார். (க0௬)

துயின்றனதுரகராசிதுயின்றனகழுகும்பாறுந்
துயின்றனபதாதியீட்டந்துயின்றனவலகைச்சுற்றந்
துயின்றனமுழவச்சங்கந்துயின்றனசேனநாயக
டுயின்றனதொனிக்குஞ்சங்கந்துயின்றனவோரிச்சூழல். (க0எ)

மறத்தினிற்றன்கைவாளிநுதியினுன்மன்னர்தங்க
ணிறத்தினுங்கரியின்கும்பநிலையினும்பதாகைக்கானத்
திறத்தினுங்கவனமாவின்சிரத்தினுந்தவளத்தொங்கற்
புறத்தினுந்தனதுவென்றியிலாஞ்சனைபொறித்திட்டானே. (க0அ)

ஒண்புகையுருவிற்றுகிமூடியபனியையோட்டி
விண்புகழ்கதிரினோடும்விளங்கியபரிதியன்று
னண்புகொணெஞ்சமில்லாநராதிபர்தங்கள்கொற்ற
வண்புகழ்பருகுவான்போல்வலம்புரிவாய்வைத்தானே. (க0௯)

சதுர்தருபகையைவீட்டிச்சயந்தருவாகைமேற்கொண்
டதிர்தருசங்கநாதங்கேட்டலுமடைந்தசேனை
நுதிதருவயிரவேலானருகரைநோக்கியிந்து
மதிதரவென்றனந்தமங்கையுமருங்குவந்தாள். (கக0)

போர்த்தனுவூன்றிவாமப்புயந்தனையதனிற்பொற்பிற்
சேர்த்துநீடுவகைபொங்கும்புன்னகைசிறிதுதோன்றப்
பார்த்தணிநுதலின்மீதேபருமணிமுத்தின்வேர்ப்பி
னீர்த்துளியரும்பநன்னர்நின்றிவையியம்பினானே. (கசக)

கண்ணலையுளங்கொள்செஞ்சொற்கவிஞராற்காணலாமொப்
பெண்ணலையிகந்தசெவ்வியிளமடமயிலேகாணாய்
பெண்ணலைவிடத்திற்கொண்டபித்தலையரசர்ப்பேய்க
டண்ணலைகுருதிவேலைக்கிடப்பதுதன்னையென்றான். (கசஉ)

ஊழியகமலம்போலுமொண்முகமயிலுமங்க
ணுழியநாணத்தாலங்கவனெதிரறைகலாது
வாழியவென்றுவோகைமங்கலவாழ்த்துநல்குந்
தோழியர்தங்களின்பச்சொற்களாற்றுதித்திட்டாளே. (கசரு)

ஒல்லெனமுன்னமுய்த்தகணையினைவிஞ்சையொன்றாற்
கல்லெனவளர்ந்ததோளான்வாங்கலுங்கலக்கநீங்கி
மல்லெனத்திரடோண்மன்னர்வந்தனவழியைநோக்கி
மெல்லெனவெழுந்துமிஞ்சும்படையொடுமீண்டுபோனார். (கசச)

விளம்பரும்விசும்புபூவாமேதகவுடையசெவ்வி
யிளம்பிறைநுதலியோடுமிளவலுமினிதுபோனான்
றளம்பலினிலையவேனுஞ்சையங்கடப்பதன்றே
களம்பெறுமுலகங்கொள்ளுங்கடையுகக்கடலைமாதோ. (கசரு)

காறங்குதிகிரிவெய்யோன்கைப்பட்டுக்கழிந்தகன்னிப்
பாறங்குமதியப்பிள்ளைக்கொளாப்பலகாலேங்கிச்
சூறங்குவயினவாகிச்சொரிகணீரோடுஞ்சோரா
மாறங்குசெம்பொன்மாடமணிமதிலயோத்திபுக்கான். (கசசா)

கங்கையின்றிரையைநேருங்கருமணிமுகத்தகோவை
பொங்கியதரளநுண்ணூற்பூந்துகில்தூவிநிற்பார்
மங்கலில்கிரணவெண்டாமரைமிசைமலர்ந்தசெய்ய
பங்கயமனையவள்ளப்பளிததீபங்கள்செய்வார். (கசஎ)

துலைகொழித்திட்டசெம்பொன்சுடர்மலர்சுமந்துபூமி
நிலைகொழித்திட்டதென்னவெங்கணுநிறைத்துநிற்பார்
கொலைகொழித்துமிழுநேமிக்கொண்டன்முனிரத்னராசி
யலைகொழித்தென்னநன்னீராஞ்சனங்காட்டுகிற்பார். (கசஅ)

தருதனித்திங்கண்முன்னர்த்தடங்கஞ்சபுஞ்சமென்ன
விருதனிக்கைகள்கூப்பியெங்கணுமிறைஞ்சிநிற்பார்
வருதனித்தோகைவாடைவரமகிழ்ந்தென்னநம்பி
யொருதனிச்செயலைக்கேளாவோகையினிமிர்ந்துநிற்பார். (கக௯)

நதிகொண்டுவந்தவந்தநவப்புனல்பெற்றசேலிற்
குதிகொண்டுசந்தச்சேற்றிற்குளித்துமெய்களித்துநிற்பார்
மதிகண்டுகுவிந்தவெண்டாமரைமதுப்பிலிற்றியென்னக்
கதிகொண்டுசிவிறிதன்னிற்கந்தசாரந்தெளிப்பார். (க௨0)

எயிலொத்தநகரமெல்லாமிம்முறைகளிப்பினெய்தி
மயிலொத்தசாயலாருமைந்தரும்வணங்கப்போகி
வெயிலொத்தமணிப்பூண்வாகுவோகையின்விம்மிமேருச்
சயிலத்தின்வளரநின்றதாதைதாள்சென்னிசேர்த்தான். (க௨க)

மீட்சிப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் - கஈ௬ஈ.

---

# இரகுகதியுறுபடலம்.

---

கூனேறத்தெவ்வானிற்குடியேறச்சிலைவாங்குங்குமரற்றாங்கித்
தேனேறமதுவேறத்திருவேறுமலர்மார்பிற்சேர்த்தாநின்று
ஞானேறுமுளத்திடைநல்லுணர்வேறச்சிந்தைதவத்தூக்கமேறக்
கானேறப்பவவேலைக்கரையேறநின்றருளுங்கருத்தினனே. (க)

தொடுத்தமலர்த்தொடைக்கிடையே துவண்டுதபனியப்புதியசோதிக்காசி, லடுத்தவெயிற்பரப்புறுதன்வரையகலத்துணைத்தானவன்றேயன்றே, நெடுத்தவறத்துணையோடு நிரந்தரமுந்தனதுபுய நிமிர்பொன்னகத், தெடுத்தபெரும்பொறையையிவனிரும்புயத்திண்குறும்பொறையிலிறக்கினனே. (௨)

தனமுதிர்வும்புயமெலிவுந் தவப்பேறன்னான்பருவத் தகையும்வாகும், வினைவலியும்வளைநேமிவேலியாள்பெருந்தவமும்விளங்கவாய்ந்து, முனைநெறியினெழுகுதவ முழுமுதலோன்றனதருளின் மும்நீர்மூழ்கிப், புனைமவுலியவனிவற்குப்பொன்மவுலிவிதிமுறையாற்புனைந்தானன்றே. (௩)

பகாவிசைத்தம்பெருங்குலத்தோர்பணிப்பாரைத்தனிநோற்றுப்பரிவாற்பெற்றுத், தொகாதடுத்ததவப்பயனுக்களித்தளியவருந்தவத்திற்றுறேய்வராமாற், றகாதெனப்பின்னையலாறு சாருமோசாராவெங்கலிவாய்த்தாலம், புகாதெடுத்தோன்றிருவருளும்புறம்புகாதொருநெறியேபுகுந்ததன்றே. (௪)

நிருமதிகொண்டுளநிருபர்குமாரர்நெடுநிலமதனைநீதிநீங்கிக்
கருமதிகொண்டருடாதைதன்வயினும்வன்மையினுங்கவர்வராமாற்
சிருமதியின்விளங்கியவச்சிறியோனப்பெரியோன்றன்சிறந்தமாற்ற
மருமதியின்வயங்குதிரைமலராழிப்பெரும்புவியைவரித்தானன்றே.

வேறு.

படுதிரையுவரியாடைப்பஃறலைப்பாந்தட்பார
நெடுநிலமடமான்வேட்கைநீக்கிநன்னெறியினின்றோ
னுடுமுகடணவியந்தவுடுவெலாஞ்சேப்பச்சேணின்
விடுசுடர்முடியினானைவேறுகொண்டிருந்துசொல்வான். (சு)

நந்தனவளர்த்திநன்னர்நல்லறச்சிவைகளூன்றித்
தந்திரமுதல்வாறுதடம்பணைபோக்கிமீதிச்
செந்தளிரீன்றுசாமமுதலியசிறந்தநான்கு
பைந்தருமூன்றுசித்திப்பலநனிபயக்குமன்றே. (எ)

அற்புதமிதுவொன்றாய்தியாற்றுதியானமைந்த
பொற்புதவமரர்யாருமவிகொளவுவகைபூப்ப
நற்புதவியாகசாலைநள்ளழற்சிகைநாநாறப்
புற்புதமெழவான்பொய்யாதளித்திடும்புனலையன்றே. (அ)

வெற்றியின்விழுமிதம்மவெருவினோர்மேற்செலாமை
மற்றதின்விழுமிதையவமூநரைநெறியின்மாட்டல்
சொற்றவிவ்விரண்டின்மேலும்விழுமிதுதுகடீர்நல்லா
னற்றவர்மறையோர்க்குற்றநலிவினைநலிதருனே. (கூ)

அங்கமொரேழுமங்கமானனந்தூதர்வேய்கள்
செங்கணாய்ந்தடக்கருனேதெறப்படாவரணஞ்சீர்சால்
பங்கமின்மதியேபற்றும்படையெனவுணர்ந்துகோடி
துங்கவெங்கரடவேழச்சுடர்மணிமுடியினார்க்கே. (க0)

அறம்பிறதெரிந்துபின்னரகம்புறநிறுவிநாளிற்
புறம்புறவிர்த்துச்செல்வப்பொருளுமேற்பொருளுமீட்டிச்
சிறந்துலகளிக்குந்தோற்றத்தெய்வவான்செங்கோறன்னை
யிறந்தவருயிர்போயம்மையிருக்கினுநிற்குமன்றே. (கக)

சுருதியிற்றிறம்பாவாய்மையின்னணமன்னன்சொல்ல
விருசெவிக்கமுதமாரியெனவுளங்கொண்டுநின்றோன்
பொருகடற்றோன்றாவீழாவெப்பொடுதட்பம்பூண்ட
வொருகதிர்க்கடவுளுண்டேலொப்பெனவிளங்கினானே. (கஉ)

வேறு.

மற்றவன் றிருவொடுகுணமுமாட்சியிற்
பெற்றவச்செம்மலைப்பெரியமன்னுளோ
ரற்றவவிளமையின்மறித்துமாங்கிசை
கொற்றவனெனவுளங்கொண்டுபேணினார். (கங)

உளமருநன்பொருளிரண்டினேடிரண்
டளவலாய்மங்கலத்தணைந்ததேதெனின்
வளமருநிலனுமம்மனனுமற்றவ
னிளமையோடொழுக்கமுமென்பவாமரோ. (கசு)

மாதரப்புவியினைவலியசிந்தையங்
காதரத்தணைத்திடிற்கலங்குமென்றுதோட்
பூதரத்தவிசினிற்புணர்த்திமெல்லென
வாதரத்தனுபவித்தருளினனரோ. (கரு)

பிணக்கினால்வெங்கலிப்பெருக்கைமாற்றிடுங்
கணக்கினலிவனருள்கணிக்கற்பாலதோ
விணக்கினனிலத்துளோர்தம்மையின்புற
வணக்கினனடுத்தரம்வருமென்காலினே. (கசு)

எண்ணுளமைந்தனிங்கின்னனாகவே
தண்ணுளசிந்தையமன்னன்சார்பொருண்
மண்ணுளதாயினுமறித்துமேற்பெறும்
விண்ணுளதாயினும்விருப்புநீங்கினன். (கஎ)

உன்னியாசற்றபேரொளியைத்தன்னுளக்
கன்னியாசனத்திடையிருத்திக்கைவிடா
நன்னியாசத்தருநியதிநாடிய
சன்னியாசப்பெருந்தவத்தனாயினன். (கஅ)

எழாவுளக்களியினேடினிதுநன்னெறி
வழாவருட்பெருந்தவவனத்தைநோக்கினன்
றொழாமனத்துயரொடுந்துவண்டுமண்ணிடை
விழாமலர்ப்புதர்ந்தழீஇயயன்விளம்புவான். (கசு)

எந்தையேயெற்பிரிந்தேகவெண்ணிய
சிந்தையிங்கென்னுயிர்செருக்கநின்றதான்
முந்தநீபெரிதுறமுயன்றுநோற்றிவண்
டந்தபாரபொறுக்கவோர்தனயற்காட்டியால். (உ0)

அருவனமதனைநீயடையயானுன
திருமலர்ப்பதம்பிரிந்திருப்பதெங்ஙனே
பெருவலியிரவிமுன்னேகப்பின்னுற
வொருதனிநிற்குமோவொண்கரங்களே. (உக)

போற்றுதற்குரியவிப்புவ்னவன்றுயர்
மாற்றுதற்கினிதெனைவைத்திட்டாய்வனஞ்
சாற்றுதற்குரியநீசாரிலென்றுய
ராற்றுதற்குரியரிங்கேவராவரே.. (உஉ)

கன்னலத்திகிரியுங்கடுங்கைவேழமுந்
தன்னலத்தெடுத்தவிப்புவியைத்தாழ்விலா
துன்னலத்தெடுப்பதேயன்றியொன்றிலா
வென்னலத்தெடுப்பதிங்கென்கொலாகுமே. (உங)

அவப்பெரும்பவத்தினையறுக்குநிற்குநீள்
பவப்பெரும்வலைப்படும்பாவியெற்குமே
நவப்பெரிதமுதமுநஞ்சுநந்தவுன்
றவப்பெருங்கடலுடைத்தகைமைநன்றரோ. (உச)

ஒக்கவேவிருப்பையுமுதவுதாயரின்
மிக்கினிதளித்தநீவியந்துகாணிற்கால்
வைக்கிலெவ்வுயிர்களும்வான்செலத்தலை
வைக்குமென்பதையுணர்ந்திடுதியாறிலாய். (உரு)

பூண்டபொற்றுளிணைவிடாதுபுல்லியே
யீண்டுரையின்னணமியம்பவின்புரு
வாண்டவன்சிந்தனையடவிபோனது
மீண்டதுபெருந்தவம்விடாதுநின்றதே. (உசு)

வேறு.

தொக்கவெத்தவத்தரேனுஞ்சூழ்பெருவிருப்பிற்கெல்லா
மிக்குளதனயர்காதன்மிகுதியைவிடுவதுண்டே
திக்குலவிசையினானுஞ்செய்தவத்தொன்றாய்த்தானே
யக்கதிதருமென்றுள்ளியவனுரையகத்துட்கொண்டான். (உஎ)

ஆசுணவளைவாய்க்கூர்முட்கமைந்தமால்யானைதன்னிற்
றேசுணர்வுடையமைந்தன்செஞ்சொலிற்றொடக்கின்றான்
காசுணவகற்றிவிட்டகணப்பொறியுரிப்புகாத
மாசுணமதனிற்பற்றின்மதியொடும்வைகினானே. (உஅ)

முன்னருமருவுந்தோற்றமூர்த்தமுமாகிமுன்னும்
பின்னருமிலதாய்நின்றபெருந்தகைப்பெற்றித்தாய
வுன்னரும்பரமவேதத்துட்பொருளுளத்ததாக
நன்னரின்வதிந்தானந்தநன்னகர்ப்புறத்தினன்றே. (உகூ)

மாக்குடையவனுந்தீயமறலினைக்கொடியவன்பி
னீக்குடையவனும்வைகப்பெற்றவம்மரபுநேரோ
தாக்குடைக்குணக்குவேலைத்தரணியுந்தண்ணென்சோதி
மேக்குடைமதியும்பெற்றவிண்ணினைநிகர்த்ததன்றே. (ந௦)

அருளினோர்தவவிராசமூத்திரையடைந்துதீய
விருளினோரறுத்திட்டோங்குமிருவருமெஞ்சலின்றாய்த்
தெருளுநீணிலைமைத்தாயசெல்கதிப்பொருளுஞ்செல்வப்
பொருளுமோர்சமத்திற்பார்வந்தடைந்தெனப்பொலிந்திட்டாரே. ()

வெய்திரங்கலைப்பார்நீத்தோன்விழுக்கதிகொள்வான்வெம்மை
செய்திரங்கழியயோகச்செழுந்தவரிடத்திற்சேர்ந்தா
னுய்திரங்குலவுசெங்கோலொருவனுமொல்லார்தங்கள்
பைதிரங்கொள்வான்சார்ந்தானமைச்சர்தம்பாங்கர்மன்னோ. (நஉ)

அவித்திராப்பகலுந்தீதையடர்த்துளோன்றருப்பையந்தண்
பவித்திராசனத்தினுற்றான்பகிரண்டவளாகமுட்டக்
கவித்திராநின்றவோற்றைக்கவிகையான்கருணைத்தன்மச்
செவித்திராசனத்தினுற்றானுலகெலாஞ்சிறப்பவன்றே. (நந)

ஆகநன்னிலையதானவனிலமைந்தினையுந்தன்பால்
யோகநன்னிலைப்படுத்தானொருவன்மற்றொருவன்போரிற்
காகமின்புறுவெள்வேற்கைக்காவலர்கதத்தைமாற்றிச்
சாகரஞ்சுலவுபாரிற்றன்வசப்படுத்தினனே. (நச)

நோன்றருபரமஞானநுண்டழற்பெருக்காற்கன்ம
மூன்றுநீறாக்கியிட்டான்மூதியவனினையோன்வாகை
யான்றதிண்வலித்தீயிட்டங்கதிபெலவரசருள்ளந்
தோன்றியவமர்நினைப்பைச்சுட்டனன்முட்டமன்னோ. (நரு)

அடக்கருங்குணங்கண்மூன்றுமயல்செலாதொருதன்னேரிற்
றொடக்கினன்மணிக்கிரீடந்துறந்தவன்றுறவான்மெய்மைத்
தடக்குணவிதயப்போதுட்சந்திமூற்குணங்களாறும்
படக்கணித்துலகங்காத்தான்பன்னருஞ்சிறப்பின்மன்னோ. (நசா)

செறிந்ததற்பரமெய்ச்சோதிதெரிவுறுங்காறும்யோக
மொழிந்திலன்புவனவாழ்க்கையொருவினனொருவானென்றி
னிழிந்தகவிலதாய்த்தான்செய்முயற்சியையிகவான்யாரும்
பழித்திலபலன்வந்தங்கைப்பட்டிடுங்காறுமன்றே. (௩எ)

துறக்கரும்பொருள்களைந்தின்றுவக்கறுத்திடுதலானு
மறத்தனையடக்கலானுங்கண்படைமறுப்பாராகி
யுறற்கருங்கதியின்மீதுமுலகினுந்தாஞ்செய்நேரிற்
பெறற்கருஞ்சித்திபெற்றாரிருவரும்பெரிதினம்மா. (௩அ)

உல்குடைமைந்தன்வேண்டலிம்முறையோகினின்று
சிலபகல்வைகிடுஞ்செய்தவத்திறத்தின்மிக்கோன்
மலர்தலையுலகமூன்றும்விளக்குவான்கதிரெண்ணில்லா
வலரியினனையசோதியருட்பரகதிபுக்கானே. (௩௯)

மேவியதவத்திற்றந்தைவிண்ணின்மேலவர்க்குங்கிட்டாத்
தீவியகதியிற்சேர்ந்தானெனுமுரைசெவியிற்றீண்டப்
பாவியென்றன்னைநீத்துப்படர்தியோவென்னத்தன்னு
ளாவியுங்கரையச்சோராவருங்கணீராறுசெய்தான். (௪௦)

பாண்பலார்பதஞ்செய்கின்றாய்ப்பதப்பிரிந்தறியேனின்றற்
காண்பலாயின்னவென்றாலார்கொலோகருணைப்பாலா
ரேண்பலாண்டிசைப்பநல்லோரியற்றிருந்தவமிரங்கு
மாண்பலாற்றருவதுண்டேமறத்தவன்மதியையெந்தாய். (௪௧)

ஈன்பிடித்தலைமாவெய்யவேழிலம்பாலகாறுங்
கான்பிடித்திடுமுன்னுள்ளக்கருத்தினைத்தடுத்தேனென்றே
தேன்பிடித்தலருந்தோட்டுச்செவ்வியந்தொடையாய்செல்லா
வான்பிடித்தனையியன்றேவஞ்சரின்வஞ்சன்மன்றே. (௪௨)

குளைகையார்மருத்துயானைகோட்பட்டதென்னநீகொண்
டுளைகையார்வரிவில்வாங்கவோரரைக்கணத்தினுள்ள
மிளைகயாவென்பான்போலுமிருதிச்சோனைபெய்த
வளைகையான்பெருக்கமிப்பாலார்கொலோவறிவரையா. (௪௩)

பாகைமீக்கொண்டவேழம்பயிறிசையெட்டும்வென்று
வாகைமீப்புனைந்துகொற்றம்வான்கொள்வான்வழிப்பட்டாயே
ஞாகமீச்சேறநீர்ந்தாயனந்தனைநடுக்கங்காணி
லோகைமீக்கொண்டபார்மின்னுலையுமென்றுணர்ந்தோவெந்தாய். ()

என்றுகொண்டிலையபன்னியிட்டூழந்தான்றுய்வீயக்
கன்றுகண்டிரங்குமாபோற்கலுழூவான்கலுழ்ச்சிகாணு
நன்றுகொண்டவர்கடேற்றநனியுணர்ந்துணர்வுநாறிக்
குன்றுகண்டலையதோளான்கடைமுறைக்குறைவுதீர்த்தான். (சரு)

பொய்க்கரவுடையகோபப்புன்குணக்கலியின்பொம்ம
லுக்கிரவினையைநேர்செயொருதனிக்கோலான்மாற்றி
மிக்கரவுலையாவண்ணம்விழுநிலந்தாங்கிவென்றிச்
சக்கரநடாயெண்டிக்குந்தனியரசாட்சிகொண்டான். (சசு)

தாமரைமடந்தைமார்பிற்றடங்கடன்மறந்துவைகக்
கோமகன்விளங்குநாளிற்குறைமதிநு தற்கிணின்றங்
கேமுறுமொண்கண்மான்மிக்கிலங்குசெங்கமலவின்ப
மாமலர்முகத்தவிந்துமதிக்குற்றதுரைத்துமன்றே. (சஎ)

## இரகுகதியுறுபடலமுற்றிற்று.

ஆ செய்யுள் - கசகo.

---

இந்துமதி

# பிறப்புநீங்குபடலம்.

---

சந்தார்புயப்பூபதிதன்றடங்காதனே
கொந்தாரடிப்பாலணையாப்புணர்கோலவின்ப
மந்தார்த்தலைப்பாலணையாவவன்றனகத்துப்
பைந்தாமரைமேற்றமியேநனிபள்ளிகொள்வாள். (க)

வெப்பந்தருபூங்கணைமேல்கொளவேந்தன்வேட்கை
யுப்பிற்புதையாவுணர்வற்றிடவூடுமேனுங்
கைப்பந்தனையாங்கலவிக்களியாயகன்னித்
தெப்பந்தனையேகொடுத்தாதரத்திட்டைசேர்ப்பாள். (உ)

மெய்ப்பாலகன்புக்கிருந்துந்தனப்பின்வெளியே
மைப்பாலவொண்கண்வதனத்தொடுதோற்றிமாறு
முப்பாலினீற்றுத்தலைப்பானிலையாகமுந்தி
யெப்பாலவேனுமிறைவற்கெதிராகியெய்வாள். (ங)

தேறுங்குளிர்சொல்லமுதாற்றெறுங்காதனஞ்ச
மேறும்படிசெய்திடினும்மிறைவன்னுளத்தே
யூறுங்களியாரமுதம்விளைந்தேறவொண்மை
கீறும்விழிநஞ்சதனாலுறநோக்குகிற்பாள். (ச)

இம்மாண்புறவல்லிறைவியோடுயிரொன்றினெய்தி
மைம்மாண்குழலாள்வதியாமகிழ்கின்றநாளின்
மெய்ம்மாண்கருப்பம்விளையாமிளிர்சோதிமிஞ்சப்
பெய்ம்மாண்கதிர்வேலவனின்னொருசேயைப்பெற்றாள். (ரு)

தெசகண்டனையேதெறுந்தெவ்வருள்வானுமாகித்
தெசவொண்டிசையிற்புகழ்சேர்த்திடுவானுமாகித்
தெசமிஞ்சிருபானுவினின்றொளிர்கின்றசேய்க்குத்
தெசமுந்திரதனெனவோர்பெயர்செப்பினாரே. (சா)

வேறு.

சுருதியின்மகத்திற்சந்தித்தொழிலினின்முனிவர்தேவர்
கருதியபிதிர்கட்கெல்லாங்கடன்கழித்திட்டவேந்தன்
குருதியநிறத்தசெவ்விமண்டலம்வளைந்துகொள்ளும்
பரிதியைநீங்கிநின்றபரிதியம்பரிதியொத்தான். (எ)

துளியவாய்த்தமரமேகவயின்றலைசுமக்குங்கோம்பர்
நளியவாய்த்திகழுஞ்செய்யநறியமென்றளிர்களெல்லா
மளியவாய்த்தவழுந்தோறுமம்மதிக்தேய்வுகொண்டு
வெளியவாய்த்தெரியுங்காவுகாண்குவான்விழைவுகொண்டான். (அ)

கோதறுகேள்விமிக்கதொள்கையவமைச்சர்மேலு
மாதவமைந்தன்மேலும்வைத்தபாரத்தனாகித்
தூதியலமுதச்செவ்வாய்த்துடியிடைச்சுரதமின்னார்
காதலின்மலர்கொய்கேளிர்காண்குவான்கருத்துவைத்தான். (கூ)

விசியொடுபுணரும்புட்டில்வெய்யவேற்றடக்கைவேந்த
னிசியொடுங்கிடந்தகூர்வேனெடுந்தடங்கண்ணியோடும்
வசியொடுங்காதவென்றிவச்சிரன்றருவனத்துச்
சசியொடுமேகியாங்குத்தடமலர்க்காவுபுக்கான். (க0)

வேறு.

அகனிலாவிடையதாவவனிகாலதா
முகனிமிருடுக்கணமூடிமேலதாத்
தகநனந்தலைத்திசைதழீஇயதோதனிக்
ககனவான்முகட்டையுங்கடக்குங்காவரோ. (கக)

கணங்கொளாநெட்டிலைபரப்பிக்கன்றுடும்
பிணங்கன்மேற்கொண்டிடும்பெரியவாழைக
ளணங்கனாள்குறங்கினுக்குவமையற்றழீஇ
வணங்கல்போற்பொறியொடுவளைந்தவெங்கணும். (கஉ)

தன்னைவாட்டியமதிதனைவெல்றற்கொரு
நன்னர்மாத்துணையிவளானுகிற்றென்பபோன்
முன்னர்மான்முகங்கண்டுமுகமலர்ந்திடும்
வன்னவாரிசத்தடமுள்ளமாடெலாம். (கங)

பிணிகையின்றெனினடைபிடியனாள்குயந்
தணிகையின்றடுமெனுந்தகையுணர்ந்தபோ
லணிகையொன்றலர்முகத்தருங்கனீர்தருங்
கணிகைதுன்றளப்பில்கோங்கெங்குங்காண்வரும். (கச)

மரைவிடாமயிலனாள்வாய்க்குநேர்சொலத்
தரைவிடாதுற்றனந்தக்கமென்றெறி
ருரைவிடாவளிபொடுமொடுங்குமாம்பலி
னிரைவிடாவாவியினிறைவொர்பாலெலாம். (கரு)

இறுகுறக்கச்சணிதனத்தியின்னகை
குறுகுமத்தகமிவைக்குடைந்தகொள்ளைமா
மறுகுமச்சக்குறாத்தொடுமெயங்கிய
சிறுகுநற்றளவினாற்செறிந்தசில்லிடம். (கசு)

விண்மலர்மதிமுகமின்னனாள்கருங்
கண்மலர்நோக்கியன்மலர்ந்தகாவியந்
தண்மலர்பெற்றனந்தவத்தெனமகிழ்
பண்மலர்பாட்டளியுடைத்தெப்பாங்கரும். (கஎ)

மாகவான்சசியனவதனிவண்சுடர்
யோகவான்களத்தினுக்குடைந்தநெட்டிலைப்
பாகவான்கனிகளாற்பசந்துகாட்டிய
பூகவான்குழுவினோர்புடைபொலிந்துள. (கஅ)

வின்மலிநுதலிதழ்க்குவமைமேவயா
மென்மலிதவஞ்செய்தேமெனுமகிழ்ச்சியாற்
புன்மலிமயிர்ப்புறம்பொடித்தபோலுமுட்
சன்மலிகிளைகளேதருமெத்தானமும். (கக)

தென்மலர்காவினித்திருவைநோக்குபு
வின்மலர்பூணினான்விளங்குவாரிசப்
பொன்மலர்வதனியர்தம்மைப்பொற்புலா
மின்மலர்கவருமாறினிதினைவினான். (உ0)

வேறு.

வன்னந்திலகமதன்மேன்மாகச்சிலையின்வளையீஇச்
சின்னச்சிறியமலர்சேர்திங்கட்குழவிநுதலார்
மின்னுக்குழையினுடங்காமிளிருமயிலின்விளங்கா
வன்னப்பெடையினேதுங்காவழகுப்பிடியினடந்தார். (உக)

வாணிக்கயருங்கிளைகீழ்வளைகொம்போடும்வாரா
வீணைக்கரமென்கமலவிரன்மெல்லுகிரானோக்கிச்
சேணிற்றழைதந்நகிளைமீச்சேர்ந்ததருசென்றணையப்
பாணித்தலைகொண்டிசையேபயிற்றுமாதர்பலரே. (உஉ)

பொங்கிச்சுரும்புபிழற்றும்புதியவளசப்புனிதக்
கங்குற்புயலைநோக்கிக்கார்கொல்லெனவுட்களிக்குஞ்
சங்கைக்குயில்களதுவேதலைவந்ததையென்றயர
வங்கைக்காந்தள்காட்டியலர்கொய்யுநருஞ்சிலரே. (உங)

பூசற்சுரும்பினொடும்பொறைசெய்பிரசப்போதை
யோசைக்குழன்மென்மொழியாரோருங்குவாங்கவோங்கா
வீசிப்பெரிதினிமிர்ந்தமிளிர்கொம்பவலப்பொருளோ
டாசைப்பெருக்கிட்டேகுமறிஞர்போன்றதன்றே. (உச)

நச்சினார்கட்குதவாநலிவுசெய்நற்குதவும்
வச்சைமாக்கள்மானமாகந்தடவுஞ்சிலைக
ளிச்சைமாநர்க்காகாவினவண்டிமைத்திட்டுடைப்ப
வுச்சியீக்கொள்மலரோடும்பரோங்கிற்றுளவே. (உரு)

தோற்றக்கடவுண்மதவேள்தொடுக்குந்தொல்லைக்கணையிற்
சேற்றுற்பவமும்வடுவிற்சேர்கிற்பதுவுநீக்கி
யாற்றற்கணைமற்றேந்தாவமரர்ப்பேணுமளியிற்
போற்றிப்பிறநன்மலர்மேற்புனைகிற்பாருமுளரோ. (உசா)

நறையிற்போதுகவர்ந்தநலம்பைங்கொடிகடமையே
கறையிற்கயினியவரிற்கண்ணுற்றுள்ளங்கசிந்தெம்
முறையிற்செம்பொனுண்ஞானமொய்ம்பிற்குக்கவென்வே
யிறைவர்ப்பேணிநிறைவாழ்த்திசைக்குமவரொண்ணிறரே. (உஎ)

வேறு.

இன்சுரும்பனுங்கவுமிளம்பிறையெறிப்பவுந்
தென்செய்பொன்றுளங்கவுந்திருவிளங்குகோதையாண்
மென்சிலம்பலம்பவுமேகலைமிழற்றவும்
பொன்செய்வண்டரற்றவும்போதிவர்ந்துபோயினாள். (௨அ)

தற்றுணைபழிச்சியுந்தண்சினைவணக்கியுங்
கற்றைவல்லிபற்றியுங்கவின்புதற்பொருந்தியுங்
குற்றதைப்படுத்தியுங்கொண்டகைக்கொடுத்துமே
நற்றுணர்மலரெலாநன்னர்கொண்டுநண்ணினார். (௨௯)

உண்டறாமதுக்களியுள்ளறாவொலிச்சிறு
வண்டறாமதுமலர்மாலைறாதுவாங்கலுங்
கண்டறாமொழிச்சிகைக்காந்தள்வீழ்ந்தகாந்தண்மேற்
பண்டறாதுவீழ்ந்துபோர்பண்ணறாப்பறவையே. (௩0)

இலைசுமந்தபூணினாளிடைக்குடைந்ததீதெனக்
கலைசுமந்தசிந்தையான்கைதொடாதுநிற்றலுங்
கொலைசுமந்தகண்ணினாள்கொய்திடத்துவண்டதான்
மலைசுமந்தவல்லியின்மலர்சுமந்தவல்லியே. (௩௧)

மெய்யிற்கொண்டபூண்முலைவிண்ணிற்கொண்டவார்குழற்
பொய்யிற்கொண்டநுண்ணிடைப்பொன்னிற்கொண்டபொற்பினாள்
கையிற்கொண்டவல்லவுங்கண்ணிற்கண்டவல்லவு
நெய்யிற்கொண்டவேலினானேரிற்கொண்டுலாயினான். (௩௨)

தளங்கிடந்தமாமலர்தடங்கிடந்ததாவில்சீர்
வளங்கிடந்தகாவெலாம்வறுமைசெய்தமானனார்
குளங்கிடந்தசிந்துரக்குறிகிடந்தவேருக
வுளங்கிடந்தவோகையாலொருங்குவந்துளாரரோ. (௩௩)

மருங்குமின்றலைப்படமரைமலர்நடுப்பட
விருங்கொடிகடைப்படவியானைதேரிடைப்படச்
சுருங்கலின்றொழிற்படத்தூயவன்னப்போதினா
லருந்தவிசியற்றினாரண்ணலோடுமேயினாள். (௩௪)

அம்பொற்றோடுகட்டியுமாலவட்டம்வீக்கியுங்
கம்பிக்கோவைதெற்றியுங்கந்துகஞ்சுருக்கியுஞ்
செம்பொற்றார்துவக்கியுஞ்செவ்விச்சூட்டசைத்துமே
தம்பிக்கோதைமாதரார்தொய்யிற்கேளிர்தோற்றினார். (௩௫)

மட்டவிழ்மலர்த்தொகைவழாதுகொண்டுமன்னவன்
பட்டிகைசிமிழ்த்தனும்படலைத்தார்விசித்தரோ
விட்டிடைகொடுத்தனுமேந்திமாறியீந்தனன்
கட்டியகடுங்கழற்கைவிற்செவ்விக்காமனே. (ருசு)

அன்னமாதிசூழ்தரவாரமாதியேந்துநர்
தன்னதாமருங்குறத்தண்ணதாயதாரின்மேற்
பொன்னனானுடன்புயம்பொருப்பனன்விருப்புற
வின்னவாறருங்களியெய்துகின்றவெல்லையே. (ருஎ)

வேறு.

ஆகன்னத்தானன்னசதுர்வேதநாரதனீடறல்வாய்மெல்ல
வேகந்நத்தார்முத்தந்தத்திடுந்தென்கடற்றீரத்தேய்ந்ததெய்வக்
கோகன்னத்தானத்திலிருந்தருளோர்புறம்பசுத்தகோலச்சோதி
மாகன்னத்தேறவியாழ்வாசிப்பான்வடக்கெழுந்துவாறுற்றான்.( )

மிடறீர்வற்றிடும்வர்கைத்தனியாழ்செலுத்துமிகைவெஃகார்தங்க
ளடறீரவேலேந்துமசஞ்சலமன்னவன்றுயரவாழிக்கேதாக்
கெடறீரற்பிழம்பதனைக்கிழித்திடுமாயிரங்கதிருங்கிளரக்கீழ்பாற்
கடறீரவடக்கெழுந்துதெற்கேகுமுற்பார்தக்கதிரோனொத்தான்.(ருகூ)

கடிதேகுமவன்கமலகரமுகரவீணைதனிற்கைசெய்துள்ள
வடிதேன்மஞ்சரிவாசத்தொன்றோடொன்றுறக்கொழுதும் வரிவண்டூட்டங், கொடிதேகம்பால்வருமோர்பெண்பழியென் றறிந்ததுபோற்குழைந்தவ்வீணை, நெடிதேயஞ் சனத்தோடு முகுத்திடுகண் ணீரதனைநிகர்க்குமாதோ. (சூ0)

கிட்டருமெல்லுழைமுதலசுரவீணைத்தலைமீதுகிடந்தமென்று
துட்டருபொன்னறுந்தோட்டுக்கற்பகவங்குளிர்தாரையுததியாடை
வட்டநெடும்பார்மடந்தைமகிழ்கூரத்தனக்கினிதேமகிழ்ந்துவாசங்
கட்டுமனவேட்கையினாற்கவர்ந்ததெனவனிலமதுகவர்ந்ததன்றே.()

நகைவேய்ந்தகொழும்பிரசமெல்லிதழ்ப்பூந்தாதாரந் நறுந்தார்தேசின், றொகைவேய்ந்தசெழுமின்னுக்கொடிபோல்வந்தந்தரநற் சுரத்திற்றாழாத், தகைவேய்ந்தநறைமுல்லைக்கில்லாயவிந்துமதி தனதுகாதன், மிகைவேந்தன் கண்மலர்வீழ்ந் திடும்பார முலைமுகட்டு வீழ்ந்ததன்றே. (சூஉ)

வெறிநோக்குந்தளநகில்க்கிமைப்போதினணியாயமென்பூந்தாரை
மறிநோக்கிபெருநாணமடநோக்குக்கீழ்நோக்கால்வாய்ந்துநோக்காப்
பொறிநோக்குமாருயிராம்புலனோடும்புறம்போயப்பூந்தார்வந்த
நெறிநோக்கவயர்ந்தாளங்கிலைநோக்கியிறைவனுமந்நிலையனானன்.( )

விரற்றாணன்னெடுங்கோட்டுக்குறும்பத்தற்றிரளாணிவிசிநல்யாழின்
குரற்றாழுமொழியார்களுளங்குலைந்துகுலைந்துகுழூஉக்கொள்ளாநின்
றே, யுரற்றாழ்வல்லடிவேழவிருதனத்தி தனைநோக்கியோசைப்பன்
ணிட்,டரற்றாநின்றளியிரங்குமலர்ச்சேக்கைதனைவளைஇயாவிசோர்ந்
தார். (௪௪)

உதியோடும்விளங்குதவப்பெரியோர்தம்முள்ளமெனவொளிருந்தீப
நுதியோடுஞ்சுடர்தயிலத்துளியோடும்வீழ்வதுபோனுடக்கிலாத
கதியோடங்கிருந்தவந்தக்கருவிகெட்டுமுடனீத்துக்கடைநாளிட்ட
விதியோடந்தரமடைவாள்மெய்யோடவ்வரசனையும்வீழ்வித்தாளே.

நீரேறுங்காரளகம்புறந்தாழமுன்றாழநெடுங்கண்ணீர்போ
ராரோறும்வேல்விழியாரொழியாதுவயிறலைத்திட்டழுவகேளாத்
தாரேறுகாவகத்துந்தடத்துமிருந்தேவெருக்கொள்சகுந்தவோதை
காரேறநனிதாமுமழுவனபோற்கதறினவெங்கண்ணுமாதோ. (௪௬)

கோலவட்டத்தடங்குடையான்றன்மீதுகளபாதிகுவித்துவீசு
மாலவட்டத்திளங்காலாற்பயனனபயனற்றவம்பொன்மேருத்
தூலவட்டக்களபமுலைச்சுந்தரிதன்மேல்வீசத்துவக்குமெய்யிற்
றாலவட்டத்துயிருளதாயன்றோனன்மருந்துபயன்றருதற்றானே. (௪௭)

ஊன்றேடும்வடிவேலானுண்டேநல் லுயிரொன்னவுயங்குநெஞ்சிற்
றான்றேடுஞ்சிறிதுணர்வாங் கைப்பற்றுந்தடுமாறுநோக்காற்றண்பூங்
கான்றேடு முரைகுழறுங் கைம்மலராற்றைவருமெங் கண்ணையென்
னும், வான்றேடுந்திசைதேடுமவசமெனும்பெருங்கடலின்மறித்துவீ
ழும். (௪௮)

ஏய்ந்ததுயர்ப் பெருங்கனலுளெரியமலர் வாய்புலருமேங்கும்பாங்
கிற், சாய்ந்துலையாமேனியெலாஞ் சுடும்வீழூமெழூமொய்ம்புதளரு
மாவி, தீய்ந்தயருங்கண்சிவக்கச்செழுங்கமலமுகங்கருகுந்தீண்டலா
து, காய்ந்துள்ளும்வெதும்புமந்தக்கனலுருகிவீழ்வதுபோற்கண்ணீர்
சோரும். (௪௯)

சுரும்பேறுந்தொடைவேந்தனின்னணந்தன்வலிபோகத் துயருற்
றானென், றரும்பேதைமனத்தீர்நீரிதிபுரைகூறாவிடுமினனலிற்காய்
ந்தா, லிரும்பேனுமென்மெழுகினிளகுமெனிற் கொடுமாயவிடரின்
மூழ்கி, வரும்பேதைநிலத்தர்வலியிழப்பதனை யொருபொருளாமதி
க்கற்பாற்றோ. (௫௦)

தூதாருந்துவர்வாயசெங்கான்மெல்லனமேநீதுஞ்சற்காய
வாதாரமெனதிதயகமலமலாதுளதோவென்றரற்றாநின்று
மாதாரநரம்பிகந்தமணியாழொப்பாடனையேவாடுஞ்செங்கைப்[றான்
போதார வெடாநின்று மடிமேல்வைத் தினையனசொற் புலம்பலுற்

வேறு.

எய்யாதிவளுயிரையுண்பாயெனதுயிரைத்
துய்யாயெனவத்தொடைவாங்கித்தன்மார்பில்
வையாவிறத்தலுதவாதமாண்பினா
னையாவிதுவிதியேயென்னாநடுக்குற்றான். (ருஉ)

மாலொருவர்க்காகாவியலாயிம்மாலையினை
யாலொருவர்க்காக்கியமுதொருவர்க்காக்கினையாற்
சேலுருவக்கண்ணாடிறத்தேநிகழ்ந்ததனை
மேலொருவர்க்காகாவகைசெய்வாய்மேலானாய். (ருங)

தேரிலிதிங்கென்னாகுந்தீண்டப்பொறாதசெவ்வி
நீருலவுமென்பூவும்வன்புகொடுநின்றதையாற்
பாருலகிலாகம்பல்வாயெடுத்துள்ள
வாருயிரைப்போக்கவிதிக்காகாததொன்றுண்டோ. (ருச)

மெல்லாகத்தாருயிரைவீட்டுதற்குவெங்கொடிய
வல்லாயுதமெடுக்கைமாசென்றோவானமனார்
செல்லார்பனியாற்கமலஞ்சிதைப்பனபோ
னல்லாய்நின்னாருயிரைநாண்மலராற்கொண்டாரே. (ருரு)

வேளாயுதத்தையுனைநீத்துமெய்பொறுத்த
வாளாகப்பட்டமனத்தேனெனநினைந்தோ
தோளாதமுத்தமெனுந்தூநகையாயிங்கொருகான்
மீளாவழிநீவினவாதகன்றனையே. (ருசா)

மின்னேசுரதவிளையாட்டின்வேர்வரும்பு
நின்னேர்மதிமுகத்துநீங்காதுநின்றனவாற்
பொன்னேயென்கண்மணியேபூவேபுனமயிலே
யென்னேபுவிமீதிலீதோவுயிர்வாழ்வே. (ருஎ)

கண்டேனிலமாதைக்கைப்பிடித்தேனென்னுமுரை
யுண்டேயென்வேட்கையெலாமுன்பாலொளித்தேனே
விண்டேயிதயமிரங்காதுமிக்கேது
கொண்டேநீயிவ்வஞ்சங்கொண்டாய்குலக்கொடியே. (ருஅ)

ஆர்க்குமிளங்கானினளகந்தனையசைக்கப்
பார்க்குமெனதுள்ளமகிழ்ச்சிதனைப்பற்றியதா
லேர்க்குமுயிர்ப்பெய்தியெளியேனைவன்சோகக்
சார்க்கடலினின்றுங்கரையேற்றற்கெண்ணாயோ. (ருகூ)

ஒருபோதிரவென்னுமோர்மாதுதற்பிரிய
வருபோதைநோக்கியுயிர்மாமதியம்வாழ்ந்ததையாற்
பொருபோதகமுலையாய்புல்லார்வங்கைந்நீத்திட்
டிருபோதுநீங்கினையாலெங்ஙனுயிர்வாழ்வேனே. (சு0)

கொய்யாநன்முல்லைக்குறும்போதிடையிடையே
வையாவிநோதமதியாற்றனிதொடுத்த
மெய்யார்வகுளமலர்மேகலையைநீமுற்றுச்
செய்யாதுகண்டுயின்றாயென்னோவுன்சிந்தனையே. (சுக)

என்னைவளர்மானையனத்தையிளங்கிளியை
வன்னமடவாய்த்தைமற்றைமறந்தாலுஞ்
சொன்னதுதிகைப்பிறைபோலுந்தோற்றச்சேய்
தன்னைமறந்தெவ்வாறுசென்றாய்தடந்திருவே. (சுஉ)

வேறு.

என்றுநின்றினையபன்னியிரங்குவானிரக்கங்காணு
மன்றலந்தடங்காவெல்லாமகரந்தக்கண்ணீர்வாரா
நின்றனசுற்றத்துள்ளார்நிருபனுலரிதிற்கொண்டு
சென்றவின்னுயிரினாளைத்தீக்கடன்செய்திட்டாரே. (சுங)

கற்பழித்திட்டதோளான்காசினிமடந்தைசெம்பொன்
வற்பழித்திட்டகொங்கைமரீஇக்கொள்வான்மகிழ்வுற்றன்றாற்
பொற்பழித்திட்டமின்னாளொடுமுயிர்போந்தானென்னத்
தற்பழித்திடுதனேக்கித்தனதுயிர்தாங்கினானே. (சுச)

மொய்யிருங்கடன்கண்முற்றிமுற்றிலாமூரியின்னல்
செய்யிருஞ்சோலைநீங்கிச்செறியிருளிரவைநீத்து
மையிருவிசும்பிற்பூத்தமாசுடைமதியமென்ன
வையிருதிவாவிற்பின்னரணிமணிப்புரம்புக்கானே. (சுரு)

உற்றனநிகழ்வையெல்லாமுணர்ந்துளனாகவார்வப்
பற்றுளவசிட்டனென்னும்பரமுனிதன்பாற்பன்னூல்
கற்றவோர்முனிக்குமேனாணிகழ்ந்தனகருமங்கூறிக்
கொற்றவற்குணர்வுசாலக்கொளுத்துவான்குறித்துவிட்டான். (சுசு)

வந்தவம்முனிவன்சொல்வான்மன்னகேள்வசிட்டன்யாக
மந்தமதடையாவாற்றாலணைந்திலனருகினேனை
முந்துறவிடுத்தானின்பாலங்கவன்மொழியீங்கென்றன்
சிந்தையினுளதேயென்றாவினையனசெப்பலுற்றான். (சுஎ)

அரணவிந்தியத்தினோடங்கைம்புல்ப்பகையைவாட்டிப்
புரணவிந்துவினிற்றோன்றும்புத்தமுதருந்திச்சென்ம
முரணவிந்நிடமாயோகநிலைநின்றமுனிவன்முத்தித்
திரணவிந்துவெனும்பேரான்செயற்கருந்தவஞ்செய்தானே. (௬௮)

நாளினும்பெரியயாகநலத்தினான்றவத்தைநாடிக்
கோளினின்றுணர்ந்துசிந்தைகொதித்தெமைக்குலைக்குமென்னா
வாளினும்பெரியகண்ணான்மருட்டெனமாசில்பொன்னா
டாளியங்கரிணிநாமத்தணங்கினையேவினானே. (௬௯)

மோகசாதுரியவெம்மால்விடத்தினைமுத்திச்செல்வ
யோகசாதனன்றனுள்ளத்தலைப்படவுதவுவாளாய்த்
தூகசாதகமின்பேறத்தண்டுளிதருமாலூர்திப்
பாகசாதனன்றனேவற்பணிதலைக்கொண்டுபோனாள். (௭0)

கள்வளையரவமென்றார்க்கனத்தளியரவம்பொங்க
வெள்வளையரவம்விம்மமேகலையரவம்விஞ்ச
வுள்வளையரவம்பொனூபுரமொளிரவின்பங்
கொள்வளையரவவல்குற்கோதையுங்குறுகின்றாள். (௭௧)

கஞ்சநற்றனமென்செவ்வாய்க்கருங்குழலிரதிகாந்தன்
வெஞ்சினப்பகழிக்கில்லாமென்றளவுழையினின்ற
பஞ்சிநக்கடியினாளைப்பார்த்தனன்பார்க்குமுன்னம்
வஞ்சனைப்பார்வையென்னும்வல்விடமதனையுய்த்தாள். (௭௨)

மயக்குறுபுலனாமைந்துவன்றலைமாயப்பாந்தட்
டியக்கினையறிவிற்றீக்குஞ்சித்தருந்தியங்குவாரோ
துயக்கினல்லுணர்வாமுண்மைமந்திரத்துணிவினாலே
வியக்குமவ்விடத்தையெல்லாம்பற்றறவீத்திட்டானே. (௭௩)

விண்ணயில்வெகுளிவெந்தீமிக்கெழவெகுளாநின்ற
பண்ணவனினிதினோக்கிப்பஃறலைப்பகுவாய்ச்செங்க
ணண்ணலஞ்சேடனுச்சித்துஞ்சியவாழியாடை
மண்ணவர்பவங்கொள்வாய்நீயெனவுரைவழங்கினானே. (௭௪)

வேதத்தேமுனிவவென்னேர்படர்கிலேனினதுவெஞ்சொ
லேதத்தேனொருவரிட்டவேவலினியங்கிநிற்பேன்
சாதத்தேபுக்கேனின்னாற்றவறிலேனென்னாலென்னாப்
போதத்தேயுணர்ந்தென்றோற்றம்போம்வகைபுகறியென்றாள். (௭௫)

விளைத்திடுங்கொடியசாபவெவ்வனல்விடாதுசுற்றி
வளைத்திடநாப்பணின்றுமயங்கிளங்கொடியைநோக்கித்
திளைத்திடுநெடும்பொனகச்செய்யகற்பகத்தாருன்றன்
கிளைத்தகைமெய்யிற்றீண்டிற்கெடும்பெருஞ்சாபமென்றான். (எசு)

கோதன்மொழியன்னாளேகிரதகைசிகவேந்தன்றன்
கோதறுமரபின்வந்துன்கோயிற்குவிளக்கமாகி
மேதகுதருவின்பூந்தார்மெய்ப்படவிண்ணுடுற்று
ளாதலினிதற்குநீயேனவலித்திட்டயருமாறே. (எஎ)

ஆதியொன்றுண்டேஓண்டேயந்தமுமன்னதேயா
லோதியவுடம்பெடுத்தவுயிர்க்குமிங்கிதற்குனுள்ளம்
பேதியேனீயேயுள்ளம்பேதுறிலகிலமாதுந்
நீதுறுமதனல்யாவுஞ்சிதைந்திடுந்தெரியின்மன்னா. (எஅ)

பெண்வழிச்சென்றநெஞ்சம்பின்றொடர்ந்தீமம்பற்றி
விண்வழிச்செல்வதுண்டேமேவினுமதனைமீட்டுக்
கண்வழிச்சென்றகாதற்சிறையினைக்கடந்துநல்லோ
ரெண்வழிச்செலுத்தருனேயறிவினுக்கியற்கையன்றே. (எகூ)

மானலாற்குவளையென்னும்வரிவிழிப்பவளச்செவ்வாய்த்
தூநலார்க்காகவுள்ளந்துயக்குறறுணிவன்றேயாற்
கானலாற்கெழுமுவேற்கைக்காவலர்க்கவனிமாது
தானலாற்பிறிதுமுண்டோதாரமும்பொருளுந்தானே. (அ0)

நன்பெருக்குடையசெல்வத்தோற்றத்தநணுகுநிந்தை
வன்புறத்தெழுதறன்னைமாற்றிடுமாட்சியுள்ளா
யின்புறக்கலையிற்சேரவ்வறிவினாலீண்டுவந்த
துன்பினைத்துடையாதென்னோசோர்வொடுந்துளங்கருனே. (அக)

இடைதலைதருபோர்வேற்கணிளங்கொடிபொருட்டாலுள்ள
முடைதலைகொடுநீயாவிவிடினுஞ்செய்வினையினாக்க
மிடைதலையுடையபோகவிழுக்கதிவேறுவேறா
யடைதலையன்றியுண்டேயோரிடத்தடைதருனே. (அஉ)

சதிர்ப்புலனைந்தும்வெல்வார்தம்மின்மிக்காய்நீவஞ்ச
வெதிர்ப்புடைமூடர்தம்மினினைந்திடேலியங்குகாலி
னதிர்ப்புறுவேகத்தானின்றசலமுமரனுமாற்றா
விதிர்ப்புறினுண்டேதானவ்விரண்டிற்கும்வேறுபாடே. (அங)

முருகநீமறையிற்சொன்னகிரியையான்முதிர்மைக்கோலம்
வருகணிலத்திதன்னைமயக்கறமகிழ்விப்பாயாற்
பெருகநீகலுழேனின்றுபேதுறிற்பிரேதமையோ
டிருகணீர்துய்க்குமென்னவிருக்குமொன்றிசைத்ததுண்டே. (அச)

உறைந்தனவுணர்வைமூடுமயக்குடையுளத்தாயோத
மறந்தனனின்னுங்கேண்மோவரும்பொருளிழப்புவஞ்ச
நிறைந்தவரல்லார்க்கெண்ணினினைப்புடையிதயத்தாணி
யறைந்ததுமினிநின்னெய்திற்பறித்ததுமன்னதாமால். (அரு)

செயற்பவத்தொருங்குதோன்றுந்தேகத்தைநீத்திட்டாவி
யயற்றனிபோகுமாகிலாய்ந்திடிற்புறத்தவான
மயற்கொடிமைந்தர்சுற்றமெனுமிவர்நீக்கமாண்பி
னியற்கலைதெரிந்துளோரையாவரைவருத்துமன்றே. (அசு)

மெய்த்தவநிலைமைத்தாயகுருபரன்விளம்பினானிங்
கித்திறமென்னவன்னானிசைத்தலுமன்னதேயென்
றுத்தமனுரைகளெல்லாமுட்கொடுபுவனவேந்த
னத்தவமுனிவன்மீண்டாங்கேகுமாறருளினானே. (அஎ)

தொக்கடும்வினையின்சூழற்றுவன்றியதொல்லைமாயப்
பொய்க்கொடும்பவத்தைநீங்குங்குருபரன்புகன்றவெல்லா
மிக்குடைமிகையினன்றன்வெந்துயர்நிறைந்தவுள்ளம்
புக்கிடம்பெறாதுமீண்டம்முனியொடும்போந்தவன்றே. (அஅ)

காவைத்ததளவைநோக்கிநம்வயிற்காமனூர்த
மாயத்தின்வாளிசேர்வதார்பொருட்டென்னுஞ்சோகத்
தீவைத்தகண்கடம்மாற்படங்களிற்சித்திரித்த
வோவத்தைநோக்கிநோக்கிபொருவலையுய்யாதுய்யும். (அகூ)

பணிவைத்தமதியைநோக்கிப்பழிவைத்தபாவியார்த
னணிவைத்தகலகவாட்கணவிவைத்தவதனமென்னாத்
துணிவைத்தவுள்ளத்துள்ளேசுடவைத்தசோகமெல்லாந்
தணிவைத்துநணிவான்செல்லத்தலைவைத்தவுயிரைமீட்கும். (கூ0)

வானுண்டமதியந்துஞ்சும்வளமுண்டமலர்ப்பூங்கானிற்
கூனுண்டசெவ்வாய்க்கிள்ளைகுழலுண்டகுதலைகேளாக்
கானுண்டவறுகால்வண்டுகள்ளுண்டகன்னிக்கோதை
தேனுண்டமொழியென்றுள்ளந்தெளிவுண்டுசிறிதேதேறும். (கூக)

தாய்கண்டேவிளங்குதாட்பொற்றொடிகண்டேதுயரந்தீரக்
கைகண்டேகாந்தட்போதிற்கண்கண்டேகருநீலத்தே
மெய்கண்டேமயிலிற்கூந்தல்விண்கண்டேமருங்குற்சூத்தப்
பொய்கண்டேவானமின்னுப்புடைகண்டேபொருமறீரும். (கூஉ)

புறத்தின்காணுதுசிந்தைபொருநெறிபோதவின்னை
திறத்தின்காரளகத்தாடனவயவச்செவ்விகாணு
மறத்தின்காய்சமரவேலான்வல்லுயிர்தாங்கவாய்ந்தெண்
ணறத்தின்காலளவதாகவாண்டு * சென்றகன்றவன்றே. (கூங)

மற்றருவலியினுன்றவாருவின்வையமாற்று
கற்றகையினனென்றுன்னுமைந்தனையுலகினுட்டித்
தற்றுயர்பொறுக்கலாதேசானவிசரயுவொன்றுய்ச்
செற்றியநடுவணேதன்றிருவுடைத்தேகநீத்தான். (கூச)

சிந்தையாறென்றின்மூற்றுச்செய்துளோன்றேவர்வைகு
மந்தவானுலகம்புக்காங்கணிமணிமகளிராடுங்
கொந்துலாஞ்சோலைநாப்பட்கோமளவழகிற்குன்று
விந்துமாமத்தியோடுமின்பந்துய்த்திருந்தானன்றே. (கூரு)

கலைப்பட்டவலயக்கற்றைக்கனைசுடர்மதியினுமச்
சிலைப்பட்டநுதலிவானுடடைந்தமைதெரிந்துகூறி
நிலைப்பட்டதிப்பால்யார்க்குநெடுங்களிநிமிரவந்து
தலைப்பட்டதுலகம்போற்றத்தசரதன்றிறத்ததன்றே. (கூசு)

## இந்துமதிபிறப்புநீங்குபடலமுற்றிற்று.

ஆகசெய்யுள் - கஙுஎசு.

பொதுக்காண்டமுற்றுப்பெற்றது.



* அறம் - ஙஉ; அதன்கால் அ. எனவே எட்டுவருடமென்பதாம்.

சிவமயம்.

௨ சிறப்புக்காண்டம்.

# தசரதன்

# சாபமேற்றபடலம்.

ஒன்றிற்காட்டியுமுலகெலாங்குணமொன்றிற்பரித்து
மொன்றிற்றீர்த்துமற்றொன்றினின்றொன்றுசெய்தொழிந்து
மொன்றிற்சார்வுறுவுறுபொருளாகியவொருமை
நன்றித்தேவெவனவனடிபோற்றுதுநாமே. (க)

முதியதக்கிணபூமியர்திறைகொண்டுமுடுகப்
புதியவுத்தரகோசலநாடெலாம்புரந்தா
னதிகபச்சிமதிக்கினுமரும்புகழதனை
விதிகொள்சொற்குணதிக்கினும்வித்தியவிறலோன். (உ)

தன்னிற்பார்கரந்தலைக்கொடுதாழ்ந்திடவிரவிற்
பின்னிற்பாரெலாமுன்னிற்கக்கொடைமடம்பிடித்தான்
மன்னிற்பாரவர்சரிதையினயதியின்வகுப்பின்
முன்னிற்பாரெலாம்பின்னிற்கமுன்னிற்குமுதலோன். (ங)

அறவர்க்கேய்தரவிராச்சியமதனைமுன்னளித்த
விறைவர்க்கேயுநான்மடங்கினிதளித்தனனிவற்கும்
புறவர்க்காகலாக்குணங்களைப்புதிதின்முன்புரந்த
விறைவர்க்கீதலினெண்மடங்கீந்ததவ்வேழும். (ச)

ஒருவன்மானுல்களிக்குமாமழைபதத்துதவு
மொருவனுகலினிருவரேபெருந்தகையுரவோ
ரொருவன்பாருடையிவனமருலகுடையுவனே
யொருவன்வேறிலருவமையுமாறிங்கின்றுளரால். (ரு)

தீதியாதெனநிலந்தலையெடுத்திடச்சிறுகா
வீதிவாதையுங்கையகன்றனவெனிலிணங்கார்
பேதியாவிடும்பரிபவமடியிடப்பெறுமே
நீதியாலிவன்கண்ணருள்புரிந்ததுநிலனும். (சு)

சொன்னின்றார்புகழ்திலீபன்முன்னூவரைத்தொடர்ந்து
பின்னின்றானிவன்புயவிருவரைபொறாபெற்றாள்
பொன்னின்றாரொருவரையடாப்பூமகளடைவே
யென்னின்றாளொருமடங்குமீதுறத்திருவிசைந்தாள். (௭)

சமங்கொண்ணீர்மையிற்சமனான்னிதிக்குவைதரலாற்
கயங்கொடொன்னிதிக்கிழவனுமுனைவர்மேற்கதத்தா
லிமங்கொடண்கடன்முதல்வனுமேயினன்றேசாற்
றமங்கொள்வன்பெருக்கொறுக்குமோர்தலைவனோர்தலைவன். (௮)

புன்கட்சூதவாவேட்டையினவாவெறும்பொய்யேற்
றின்கட்பேரவாமாதராரவாவிந்தவிறைவன்
றன்கட்பட்டவாதழைத்தவாவிலையெனிற்றவறி
லென்கட்பட்டவாவெய்திடுமனத்திடையிவற்கே. (௯)

நொய்ம்மையாம்வினைதத்தினுநுனிக்கிலர்மாட்டு
மைம்மைவாகனனிட்டத்துமோகினைந்திடான்மறந்தும்
பொய்ம்மைதீயசொலீவினைகடைப்படும்புரைதீர்
மெய்ம்மைசால்புமேதகவினிற்பொலிந்துளமிகையோன். (௧௦)

சினத்தெதிர்ந்தனசேரலர்சேருநர்சிறந்த
சனத்தியைந்தனவிறுதியுமுதயமுஞ்சார்ந்தா
ரினத்திரும்பினின்மெழுகினினடைத்தனனிவன்மா
மனத்துவன்மையுமென்மையுமாதலின்மாதோ. (௧௧)

குன்றனேரொருதேர்கொண்டுவில்லொன்றுகோலிச்
சென்றுமாதிரமைந்தொடைந்தையுஞ்செற்றவிவற்கே
பொன்றுமேற்கொளுமூன்றுடன்மூன்றெனுப்பலது
வென்றிமாமுரசிரிருநிலத்தெவைவேறே. (௧௨)

துன்றுங்கோள்களிற்றலைவனையினுமிருடுரப்பா
னன்றன்றேயுணர்றெழிந்திடானவனுமிங்கிவனு
மென்றும்பன்னிரண்டரசமண்டலங்கட்குமிறையாய்
நின்றுந்தன்னுணற்றெழிந்திடானீப்பினுநீக்கும். (௧௩)

தேவர்மாட்டுளதெய்வமாமகளிரீங்கெவரே
யேவர்மாட்டிருந்தாரிதுதகாதெனவிகழே
றேவர்மாட்டரிபீங்கிவனுமிவர்ச்சேர்ந்தா
ளேவர்மாட்டிருந்தாள்பிறிதம்புயத்திறையாள். (௧௪)

பிணங்குவித்துயிர்கொண்டுசெல்பெருவிதியிவன்ருள்
வணங்குவிக்குமோவாதலின்மன்னரைமாய்த்தா
னிணங்குவித் திராங்குமரரைக்கொடுசனதிருதாள்
வணங்குவித்தமாற்றவர்மடவார்க்கருள்வாய்ந்தான். (கரு)

மகதகோசலகேகயமன்னவர்மகவாந்
தொருதலாந்தொடிமகளிர்மூவருமிவற்ருெக்கார்
மிருதலாம்வரைநிகடற்சேர்ந்தனமிகவுந்
தருதலாவனநேர்சொலிற்பிறிதொன்றுதகாதே. (கசு)

மண்புரந்துளகற்பினறிவரொடும்வைகி
விண்புரந்துளகொடையினன்விளங்கினன்விளம்பில்
விண்புரந்துளன்சத்திகண்மூன்ருெடும்விளங்கி
மண்புரந்துளனெனிலொக்குமல்லதென்வகுப்பாம். (கஎ)

மரையின்மாறெடுமணிமுடிவணங்கினர்க்களித்தான்
வரையின்மாப்பெயரியாகங்களான்முடிமறுத்தான்
றரையின்மேருவேசயத்தம்பமாயுளோன்றம்மை
சரயுகன்னதிக்கரைநிறுவினன்மகத்தம்பம். (கஅ)

உளருநெஞ்சினர்வறியவரிரப்பொழிப்பதனல்
வளருநல்குரவெனமொழிவாய்மொழிகேளான்
றளருமிந்திரன்பகைக்கிவனுளனெனுத்தக்க
கிளரரம்பையர்தன்புகழ்பாடவுங்கேட்டான். (கசு)

குருச்செய்நன்மதிக்கடங்கிடாதெனவுளங்குலையா
வெருச்செயிர்திரள்பயக்கடல்சிறுகிடவிளைபோ
யுருச்செய்மாகதத்துருமெனவுருத்தெழுந்தொருங்கே
செருச்செய்தானவர்குருதிநீர்பெருகவுஞ்செய்தான். (உ0)

வேறு.

விரிக்குமுலகொருமூன்றுமிடைந்தேத்தவிளையதகை
தரிக்குமுரனுடைவேந்தன்றனைநேர்ந்துகாண்பானுப்
பரிக்குமதுமலரேந்திப்பழிச்சுவானடைந்தாங்கு
வரிக்குயில்கள்விருதூதவந்ததுவேளொடுவசந்தம். (உக)

வினைத்திறமாணுடையருணன்விடுங்கதிமென்மையதென்னுத்
தினைப்பனியட்டொளிர்தூய்மைதினமுகத்துச்செய்வானுய்க்
கனக்கதிர்மண்டலச்சுடரோன்கடிதேயேழ்கதப்புரவி
மனக்குசைநான்வலிதீர்த்துவானுறுத்தரமடைந்தான். (உஉ)

சொன்னின்றார்புகழ்திலீபன்முன்னோவரைத்தொடர்ந்து
பின்னின்றானிவன்புயவிருவரைபொறைபெற்றாள்
பொன்னின்றாரொருவரையடாப்பூமகளடைவே
யென்னின்றாளொருமடங்குமீதுறத்திருவிசைந்தாள். (௭)

சமங்கொணீர்மையிற்சமனுமன்னிதிக்குவைதரலாற்
கயங்கொடொன்னிதிக்கிழவனுமுனைவர்மேற்கதத்தா
லிமங்கொடண்கடன்முதல்வனுமேயினன்றேசாற்
றமங்கொள்வன்பெருக்கொறுக்குமோர்தலைவனோர்தலைவன். (௮)

புன்கட்சூதவாவேட்டையினவாவெறும்பொய்யேற்
றின்கட்பேரவாமாதராரவாவிந்தவிறைவன்
றன்கட்பட்டவாதழைத்தவாவிலையெனிற்றவறி
லென்கட்பட்டவாவெய்திடுமனத்திடையிவற்கே. (௯)

நொய்ம்மையாம்வினைதத்தினுநுனிக்கிலர்மாட்டு
மைமைவாகனனிடத்துமோகினைந்திடான்மறந்தும்
பொய்ம்மைதீயசொலீவினைகடைப்படும்புரைதீர்
மெய்ம்மைசால்புமேதகவினிற்பொலிந்துளமிகையோன். (௧௦)

சினத்தெதிர்ந்தனசேரலர்சேருநர்சிறந்த
சனத்தியைந்தனவிறுதியுமுதயமுஞ்சார்ந்தா
ரினத்திரும்பினின்மெழுகினினடைத்தனனிவன்மா
மனத்துவன்மையுமென்மையுமாதலின்மாதோ. (௧௧)

குன்றநேரொருதேர்கொண்டுவில்லொன்றுகோலிச்
சென்றுமாதிரமைந்தொடைந்தையுஞ்செற்றவிவற்கே
பொன்றுமேற்கொளுமூன்றுடன்மூன்றெனுப்பலது
வென்றிமாமுரசிரிருநிலத்தெவைவேறே. (௧௨)

துன்றுங்கோள்களிற்றலைவனாயினுமிருடுரப்பா
னன்றன்றேயுஞற்றொழிந்திடானவனுமிங்கிவனு
மென்றும்பன்னிரண்டரசமண்டலங்கட்குமிறையாய்
நின்றுந்தன்னுஞற்றொழிந்திடானீப்பினுநீக்கும். (௧௩)

தேவர்மாட்டுளதெய்வமாமகளிரீங்கெவரே
யேவர்மாட்டிருந்தாரிதுதகாதெனவிகழே
றேவர்மாட்டரியீங்கிவனுமிவர்ச்சேர்ந்தா
ளேவர்மாட்டிருந்தாள்பிறிதம்புயத்திறையாள். (௧௪)

பிணங்குவித்துயிர்கொண்டுசெல்பெருவிதியிவன்றாள்
வணங்குவிக்குமோவாதலின்மன்னரைமாய்த்தா
னிணங்குவித்திளங்குமரரைக்கொடுசனதிருதான்
வணங்குவித்தமாற்றவர்மடவார்க்கருள்வாய்ந்தான். (௧௫)

மகதகோசலகேகயமன்னவர்மகவாந்
தொகுதலாந்தொடிமகளிர்மூவருமிவற்றொக்கார்
மிகுதலாம்வரைநதிகடற்சேர்ந்தனமிகவுந்
தகுதலாவனரோர்சொலிற்பிறிதொன்றுதகாதே. (௧௬)

மண்புரந்துளகற்பினரிவரொடும்வைகி
விண்புரந்துளகொடையினான்விளங்கினான்விளம்பில்
விண்புரந்துளன்சத்திகண்மூன்றொடும்விளங்கி
மண்புரந்துளனெனிலொக்குமல்லதென்வகுப்பாம். (௧௭)

மரையின்மானெடுமணிமுடிவணங்கினர்க்களித்தான்
வரையின்மாப்பெயரியாகங்களான்முடிமறுத்தான்
றரையின்மேருவேசயத்தம்பமாயுளோன்றம்மை
சரயுநன்னதிக்கரைநிறுவினன்மகத்தம்பம். (௧௮)

உளருநெஞ்சினர்வறியவரிரப்பொழிப்பதனால்
வளருநல்குரவெனமொழிவாய்மொழிகேளான்
றளருமிந்திரன்பகைக்கிவனுளனெனாத்தக்க
கிளரரம்பையர்தன்புகழ்பாடவுங்கேட்டான். (௧௯)

குருச்செய்நன்மதிக்கடங்கிடாதெனவுளங்குலையா
வெருச்செயிந்திரன்பயக்கடல்சிறுகிடவிளைபோ
யுருச்செய்மாகதத்துருமெனவுருத்தெழுந்தொருங்கே
செருச்செய்தானவர்குருதிநீர்பெருகவுஞ்செய்தான். (௨0)

வேறு.

விரிக்குமுலகொருமூன்றுமிடைந்தேத்தவினையதகை
தரிக்குமரனுடைவேந்தன்றனைநேர்ந்துகாண்பானாப்
பரிக்குமதுமலரேந்திப்பழிச்சுவானடைந்தாங்கு
வரிக்குயில்கள்விருதூதவந்ததுவேளொடுவசந்தம். (௨௧)

வினைத்திறமாணுடையருணன்விடுங்கதிமென்மையதென்னாத்
தினப்பனியட்டொளிர்தூய்மைதினமுகத்துச்செய்வானாய்க்
கனக்கதிர்மண்டலச்சுடரோன்கடிதேயேழ்கதப்புரவி
மனக்குசைநாண்வலிதீர்த்துவானுறுத்தரமடைந்தான். (௨௨)

எண்டோற்றுமலர்த்தோற்றந்தளிர்த்தோற்றமினச்சுரும்பின்
பண்டோற்றங்குயிலால்கம்பலைத்தோற்றமிவையாலே
நுண்டோற்றமறப்பெரிதேநுவலேற்றமுறவசந்தன்
றண்டோற்றுங்கடிகாவிற்றன்னேற்றந்தெளிவித்தான். (உங)

தளிர்சாருமதுத்தெரியற்றடமார்பன்றனதாய
ஒளிர்சாருநிதிப்பெருக்கினனிசாருமிரவலர்போற்
களிசாருமாதபத்தாற்காடுபடுங்கமலமிசை
யளிசாரவனஞ்சாரச்சார்ந்தவறற்குருகெல்லாம். (உச)

மாணோடும்வரிக்குயில்கள்வசந்தமெழமலிவாசஞ்
சேணோடுமலர்க்காவிற்சிறிதேகூக்குரலேற்றல்
பூணோடும்விளங்குழலைப்புதுமணமங்கலமடவார்
நாணோடுஞ்சிறிதிடையேநவில்வனபோன்றனவாலோ. (உரு)

தாதுலாம்புதுவசந்தநணிதோயத்தனியொடுங்கி
மீதுலாமதிக்கதிரால்வெளிறியகோலத்தினளாய்க்
காதலாலன்புவைத்தகணவரிடத்தின்பமுறு
மாதராரென்விரவுமடக்கொடிவைகினளாலோ. (உசு)

வேறு

இருந்தவர்க்கடுத்தகாமங்காண்டொறுமிளையவேனிற்
பெருந்தகைக்கடுத்தவேட்கையினதெனப்பேசலாமே
பொருந்தியற்புதியசோலைப்பூந்திருமடந்தைநெற்றித்
திருந்தொளித்திலகம்போதிற்காட்டினதிலகமெல்லாம். (உஎ)

தூநிலாவிலையிற்றெற்றிச்சுடர்க்கொடிதுதைந்துசூழ்ந்து
தேனுலாமலரிற்றேம்பித்திருந்தியசிறப்பினாலே
வானுலாந்தகையசோலைமயின்மணிப்புயத்துத்தொய்யில்
வேனிலானெழுதியென்னவிளங்கினகுரவின்வீக்கம். (உஅ)

விஞ்சிணர்க்குரவுகாணூஉவீழ்ந்துறவிரங்கிமுற்றுந்
துஞ்சிடத்துணிந்திட்டோடிச்சூழ்ந்தனவேசூதமெல்லா
முஞ்சினப்பாவையேற்புமுதிரிலையணியைநீத்த
வஞ்சினைக்கரமுங்காணிலகல்வரோவளியராவார். (உகூ)

ஓடல்சாலிளையதென்றலொலிச்சதிவிதத்தினொல்கி
நீடல்சான்மாவின்கொம்பர்நிரைக்குயினிரந்துகாணப்
பாடல்சாலளிகள்சுற்றப்பைந்தளிரசைத்தல்பண்ணி
னூடல்சான்மகளிர்தங்களபிநயமனையவம்மா. (ஙO)

முதுமகிட்டருவையெல்லாமொய்த்தனமுருகுப்போது
கதுமெனச்சுரும்புபாய்ந்துகலக்கவுங்கண்டவென்க
புதுமலர்க்குழலார்வாயிற்புன்மதுத்தோன்றித்தம்வாய்
மதுமணப்பவர்க்குமுண்டோமாசிலாமாட்சியம்மா. (௩௧)

பெற்றுளாரின்பமென்னுமொருகுணப்பெருக்கைமுற்று
மற்றுளாரியாருமாகமதியொன்றேமணந்தார்க்கின்பு
மற்றுளார்க்கிடருநல்கிற்றாமெனிலகக்களங்கப்
பற்றுளார்தமக்குமுண்டேயொருகுணப்படுதறானே. (௩௨)

சசந்தருமதியந்துஞ்சுந்தண்ணறுஞ்சோலைதோறு
மிசைந்தணியிழையாரோடுமின்பங்கொண்டிலங்குபூணா
ணிசந்தவிர்வற்றகோலத்தின்னணநிறைந்தசெவ்வி
வசந்தநல்விழவையாற்றிமாவனவேட்டம்வேட்டான். (௩௩)

ஏவரேயேனுஞ்செய்யாவியற்கையையியற்றுமாறு
தேவரேயுழப்பாராகிற்செய்கலாத்திறனுமுண்டே
மூவரேமுடிக்குஞ்செய்கையுலகுளீர்விதியார்மோசம்
போவரேயிவனையம்மபுறம்புரைபுகல்கலீரே. (௩௪)

மறிவுத்தாரணியோர்க்கன்பாமனமனையகத்துமாயப்
பிறிவுத்தாழ்வினைதீர்தன்மப்பெரும்பொருள்பெய்துகாலச்
செறிவுத்தாழ்வினைதீர்செம்மைத்திறன்மதிக்கபாடஞ்சேர்த்தி
யறிவுத்தாழ்வீழ்க்குஞ்செய்கையமைச்சரைநோக்கினானே. (௩௫)

வினைப்படுத்துடையவேட்டைவிருப்புவன்வலைசூழ்ந்தொன்றி
யெனைப்படுத்திட்டதன்னதிறந்திடுமிசைவுமில்லேன்
றனைப்படுத்துணருந்தொன்னூண்மதியினிற்சூழ்ந்துதூய
நினைப்பெடுத்துரைமினென்றானவரிதுநிகழ்த்தலுற்றார். (௩௬)

சரிப்புடையிலக்குவீட்டுஞ்சரத்தொழிறணவாவச்சம்
விரிப்புடைவெகுளித்தன்மைவிலங்கிடைவிளங்கும்வேர்விற்
பரிப்புடையுடற்குமுண்டேகுணமெனிற்பரந்துநோக்கிற்
றெரிப்புடைவேட்டத்துண்டேகுணஞ்சிலசிறப்பின்மிக்காய். (௩௭)

ஆதலினதுசெய்வாயாலாய்ந்திடிலதுவுநின்பாற்
பேதுறப்புதிதினாயபிறிதொன்றுவிளைந்ததேனும்
போதிநீகாத்தியென்னாப்புகன்றனர்புரவிமேலாய்க்
காதலினெழுந்துபோந்தான்கனைகழற்காலினானே. (௩௮)

வேறு.

மீளிவிசிப்படகந்தொனிமுந்துறமேல்போத
ஞாளிவிசித்ததொடர்ப்படுமோதைநடுப்போத
வாளிமறத்தர்வயக்கடலிற்பிணதிர்ப்போடு
வாளிமுதற்படைகொண்ணர்மருங்குவரப்போனான். (௩கூ)

காலையுதித்தகதிர்ச்சுடரெண்டிசைகாணுமே
வேலைமிகுத்துவிரைந்துலகெங்கும்விழுங்காமே
சூலின்முதிர்ச்சிதரும்புயலின்புனல்சோராமே
மேலினுருத்துகிரந்துபரந்துவெண்டூளி. (சo)

மண்டுகொடுங்கன்மூடிப்பெருவல்லைவாரோடுங்
கொண்டுநடந்தபிடிக்குழுவின்குரல்கொண்டேநேர்
விண்டதொருங்குவெயிற்றிகிரிக்கிரிவிள்ளாதே
யண்டமிருந்ததுமூண்டுகொலன்றியடங்காதே. (சக)

தும்பைவிடாதணிபல்கணவேடுவர்சூழ்போதக்
கொம்புகுழீஇயதுடிக்குரல்கொண்டுகுலைந்தேபோர்
வெம்புதிசாமுகவேழமயர்ந்தனவிண்போது
மம்புலிமானுமயர்ந்தகொலல்லகொலாயேமே. (சஉ)

அடுக்குமிகற்கொடிதானவராதியடற்சாய
விடுக்குமமர்க்கலையொன்றுமுளம்வெருவாதேனுங்
கடுக்குமொலிக்கடவுட்டணியேறுகலக்கேயுண்
ணடுக்கமளித்ததுசிற்சிலர்விற்சிறுநாணோசை. (சங)

மாதிசையேழ்புலமன்னவர்வாணிவயங்காடற்
றீதில்வராகமடைந்தமையார்கொறெரிப்பாரே
யோதில்வராகவுருக்கொளவற்றுலகேழ்தாங்கு
மாதிவராகமலாலெவையோபெரிதஞ்சாவே. (சச)

என்னவியப்பவயப்புவியங்கதெடுப்போனுஞ்
சென்னிவணக்கவியங்குபுவன்றொழில்செய்கானின்
முன்னினன்மிக்குவளைத்திடுதிக்குமுகஞ்சூழ
மின்னுவிரித்திருளைத்தெறுசெங்கதிர்வேலோனே. (சரு)

வேறு.

வாசநீரடுத்தமென்பூங்கால்செய்வட்டத்துவண்கால்
வீசுதோறலங்கலாடவிரியுளைப்புரவிநீங்கிக்
காசிலாவம்பொனுடைநீக்குபுகாமர்பைம்பூங்
கோசிகம்புனைந்துநீலப்பட்டிகைகுலவவார்த்தான். (சசு)

பாலுடைக்கிரணச்செம்பொற்பன்மணிப்புட்டில்போர்த்த
தோலுடைச்சுரிகையம்பூங்கச்சிடைத்துவக்கிவையா
நீலுடைப்புரிநாண்வாங்கிநிறைமணிமவுலிநீக்கி
மாலுடைக்குஞ்சிவீக்கிவனமலர்த்தொடையிற்சூழ்ந்தான். (சஎ)

விரிமணிவயிரவம்பொன்மகரிகைவிலக்கியாழி
பெரிமணிசுடரயீதேயெடுத்திருங்குழையையேற்றித்
தெரிமணியாரமாதிபறித்துமெய்த்தேசுதோன்று
தரிமணியரணமொன்றேயழகெழவாகம்பூண்டான். (சஅ)

கிடையறிகடவுளாவாராயினுங்கிடைத்தபோரிற்
புடையறிவலனிற்காளுப்புறத்திடையாவம்பூட்டித்
தொடையறிபெருவிரற்கட்சூழ்ந்திடாமுன்கைசுற்றி
யிடையறிநரப்புக்கம்பிக்கைப்புடையாப்புறத்தான். (சகூ)

பொறைதரத்திரண்டதாருப்பாசடைச்செறிவிற்புக்கு
மறைதரிற்பிறிதுறுதிவ்வகையணிக்கோலங்கொண்டோன்
முறைதரற்குரியதானைவேண்டுவமுடைத்தோற்புட்டி
னிறைதரத்தரித்தநீலநிறப்பரிமேற்கொண்டானே. (ருo)

நள்ளிடையடுத்தல்செய்யாநீங்கிடாநாணிபூண்ட
வுள்ளிடையடுத்தகோட்டத்தொண்சிலையொளிரவாங்கி
வள்ளிடையடுத்தபண்சேர்வாம்பரிசேறற்காய
வெள்ளிடையடுத்தகானின்வல்லைபோய்மேயினானே. (ருக)

வேறு.

கொலைவளைத்திடுஞமலிகைக்கொடுகுறியதர்ப்புகுவார்
சிலைவளைத்தெதிர்பருமரந்தனசெறிவினிற்செறிவா
ரலைவளைத்தெனவடவிமுற்றுறவறவிளித்திடுவார்
வலைவளைத்திடைவழிமறித்துழைவரவளைத்திடுவார். (ருஉ)

செடியறிந்தொருபுடைநுழைந்திருபுடைதிரண்டிடுவார்
கடியறிந்துசெல்கலைபடும்படிகழுநிரைத்திடுவா
ரடியறிந்தொருசரிபுகுந்திருளடவிகண்டிடுவா
ரொடியெறிந்திடைநெறியறிந்தயலொளியிருந்திடுவார். (ருங)

கோலிருத்துசராசனத்தொடுகோரமுற்றெழுவார்
தோலிரித்தயலோடியுட்சிறுதூறுதொக்கிடுவார்
பாலிரைத்தடுகோளரிக்கிடைபாடெழுப்பிடுவார்
மேலிருந்திசையோடுருத்தயில்வேறிருத்திடுவார். (ருச)

நசையெழுந்துசெல்புளினர்முந்துறநவில்பெருங்குழுவான்
மிசையெழுந்தொலிபெருகவஞ்சுபுவெருளல்கொண்டரளா
விசையெழும்பெருவனவிலங்கினமெவையுமெங்கணுமே
விசையெழுந்தனதிசைபரந்தனவெளிநிரந்தனவே. (௫௫)

தெரியழுந்துசெல்கலையினந்தலைசிதறவெம்புலிதா
ணெரியவண்குடர்சரியவெண்கின்னிமிர்பெருங்கரமா
விரியலிஞ்சியமரையொடுங்கனலியினினங்கள்பழூஉ
முரியநுண்டுகள்வெளிகொளெண்டிசைமுழுதுமுண்டனவே. (௫௬)

தெறுபடைக்கணையொருமருப்பொடுதிசைபுகச்சினவா
மறுபடைக்கிடைகெடவதிர்ப்பொடுவருகயத்தினொடே
யுறுபடைக்கலவயில்விடுத்தனரொளிர்தடக்கைவிடாச்
சிறுபடைக்குயிருதவுகிற்பனசிலபுலிக்குலமே. (௫௭)

புகலின்முற்படுஞெமலிபற்பல்புறமிடச்சிலர்போய்
மிகலிமுட்டிமுனெறியுமிட்டியையிலகியுட்புகுதாப்
பகலின்முற்றியகதிர்கொளுட்சிறுபடைபடப்பதையா
விகலின்முற்றினவெதிருளிச்சிலவெயிறுளிக்குலமே. (௫௮)

பெருவலிச்சினவுருமெனப்பெயர்பெரிதுறப்பகரா
வருவலிப்பரசினையிடக்கைகொடயில்வலக்கையெடா
விருவரிப்புலியுயிர்குடித்துமுனெதிருறத்தணிபா
யொருவரிப்புலியொடுகிடைத்தனனொருமறத்தவனே. (௫௯)

சிறுகுவன்னிலையொருவன்முன்னெறிதிகிரியின்னிகலான்
மறுகுமுன்னெதிரிரலைதன்னதுவளையின்மன்னியகூர்
முறுகுநன்னெடுமுலவையின்முதல்முரியமின்னெனவே
குறுகுபின்னதுபுகலினென்னதுகுமரமன்னதுவே. (௬௦)

தோல்விழுந்திடநூறிநின்றிடுசோர்வுகண்டொருவோன்
பால்விழுந்தெதிர்பாயுமெண்கொருபாழியன்புடையே
மேல்விழுந்திடுதோமரந்தனின்மேல்கிடந்தமைநீள்
கால்விழுந்துசென்னீர்பொழிந்திடுகாருறழ்ந்தனவே. (௬௧)

ஈநுழைந்திட்வரியகானிடையாளிகண்டடுவான்
போய்நுழைந்திடுபொழுதுசீறுபுபுடையெதிர்ந்திடவே
தீநுழைந்தனவிருகணொருசெங்கைவெங்கடுவாய்
வாய்நுழைந்ததுபடையொடோர்கரம்வயினுழைந்ததுவே. (௬௨)

வேறு.

இனமிஞ்சியவனெங்கணுமினவன்றொழிலெழவே
வனமிஞ்சியகதிவெம்பரிகடவாவெதிர்வந்தான்
றனமிஞ்சியமதமிஞ்சினுமெறுழ்வெம்பகைதணியச்
சினமிஞ்சினுமதிமிஞ்சினர்செல்லாநெறிசெல்லான். (௬௩)

வசைகண்டனமடிகண்டிடுமனுவின்குலதிலக
னிசைகண்டனவிகல்கண்டுளவெறுழ்வெஞ்சிலைகுனியத்
திசைகண்டனவிடனெங்கணுமுயிரின்றலைசெருமும்
விசைகண்டனகணைகண்டனவெளிகண்டனவிலையே. (௬௪)

மரைநெற்றியவலைமுற்றியவலிதெற்றியகருமா
நிரையுச்சியவிசைதத்தியநிமிடத்தெதிர்கலைநீள்
புரையக்கியபுகல்வெற்றியபுரவுச்சிலைகுனியா
விரைகக்கியவுரவுச்சினவிசையக்கணையினமே. (௬௫)

நிலையானவலத்தானெதிர்நின்றேவுசரத்தாற்
கொலையானகுலத்தால்வெளிகொள்ளாதகுலப்பார்
தலையானகுலைவைத்தேயிருதறிவானவடித்தே
மலையானதசைத்தேகடன்மாறுகுருதித்தே. (௬௬)

பொன்பட்டனமழையேதருபுயல்பட்டனகையான்
மின்பட்டனசிலைவாயுமிழ்மிடல்பட்டனகணையான்
முன்பட்டனகருமாவினமுனைபட்டனவெல்லா
மென்பட்டனவென்றுணிகரெய்ப்பட்டனவெங்கும். (௬௭)

இருகோடுபடைத்தோடியவிரலைக்கெதிரொன்றொன்
றொருகோடுபுடைத்தோடியுருத்தேவிசையோயா
வருகோடிருகணைநெற்றிகிழித்தேபுறமமரப்
பொருகோடுபடைத்தோடுதல்போலும்புலியொன்றே. (௬௮)

மேலற்றனமின்னுத்திசைவிசையுற்றெனமிசையே
பாலற்றனநிலைவிட்டயல்பாய்கின்றனபொழுதின்
மாலற்றனவிகலான்விடுவடிவாளிமயங்கக்
காலற்றனபொழுதும்விசைகையற்றிலகலையே. (௬௯)

சொல்பாடெதிர்மிசைபாயொருகலையின்னுயிர்துய்த்தும்
பல்பாடுவிடாமேகொடுபடுவெங்கணைபடர்தல்
செல்பாடொலியாவோன்றனசினவூர்தியெனப்போய்க்
கோல்பாடுகொடாமேதிசைகொடுபோவதுபோலும். (௭௦)

சேய்வவ்வியவிழியும்விழிசிறைவவ்வியகன்றும்
வாய்வவ்வியபுதலுங்கொடுவனமானெதிர்வரலுஞ்
சாய்வவ்வியகதிரன்னதொர்தகையான்கொலையெனுமோர்
பேய்வவ்வியதேனும்பெரிதருளென்கைபிடித்தான். (எக)

தொய்யாவருகலையொன்றுதுணிப்பான்றுணிபோதி
லையாவிருவிழிபொற்பவொர்நவிவந்துமறைப்ப
வெய்யாதொளிர்மானுரிருகண்கண்டனனென்றாற்
கையானதுவிடுமோநிகர்கறுவுந்தெறுகணையே. (எஉ)

கொன்வீழ்தல்செயச்சேனுயர்பகடொன்றெதிர்குறுக
மின்வீழ்கணைநுதலிற்புகவுய்த்தான்பிடர்வெளிபோய்
முன்வீழ்தலதற்கேனிநல்கித்திசைமுற்றப்
பின்வீழ்தல்படைத்திட்டதுபிறழ்வெங்கணையம்மா. (எரு)

ஆடற்றிறலவர்மேன்மையழித்தால்வரடலின்
பீடற்றிடுமெனுமுன்னுரைபெருநெஞ்சுபிடித்தே
பாடற்சிறையறுகால்வளைபடுமாமதமாவின்
கோடிற்றிடவெய்தானுயிர்கொள்ளாதுகொடுத்தான். (எச)

பூவொத்திறுகணியின்சினைவீழ்கின்றதுபோலத்
தாவித்தனியெதிர்பாய்தருதறுகட்புலியதன்மே
லேவெத்தனையெனலாமதனிடிவெங்குரலெழுவா
யாவத்தினைநிகராமெனவடலம்பினிறைத்தான். (எரு)

வேறு.

குலங்கொளரிக்குலமடுவான்குறிக்கொள்ளா வெண்டிசையுங்கு ரங்கியுள்ளங், கலங்கவரிசிலையிறுணொலிகண்டான் புலிக்குருதிக்க றையாற் சேப்புண், டலங்குகரிப் பணைமருப்பின் குருகொடித்துவா ய்மடுக்குமாளிநாமம், விலங்கரசென்றால்விடுமோ வேத்தரியேறடுஞ் சரபவியன்புளன்னுன். (எசு)

உழையொதுக்கியடியிறுக்கியுளைசிலிர்த்திட் டுடல்சுருக்கியுபய தாரை, யழல்பிதுக்கிவான்முறுக்கியழன்றுநொடி யினைப்பிறகிட்ட திருமார்ப்பின், மழைமுழக்கினெதிர்பாயுமடங்கலுர மாவுகைத்துவ ண்டொன்றாலே, புழைபடுத்தான் பின்னுனதரியேறுசமனுன ;தடு போர்வாளி. (எஎ)

நிறப்படாமுலையவர்கட்கணங்கனுன் றெடுத்தவொருநெடியவா ளி,தெறப்படாவொருமடங்கற்பிடர்திறந்துமற்றொருபோர்ச்சியவாயி னுறப்படாவயினொளித்தலுறையுமரப்பொதும்பரைவிட் டொருவிநா கம், புறப்படாவிசையோடும்போகாமற்றொருமுழையிற்புகுதல்போ லும். (எஅ)

களியிருக்குமிகல்யானைக் கொடும்புயக்குமிடைநோக்கிக்கறுவிக் கும்பத், தொளியிருக்கு மொருமடங்க லுயிரொறுத்தா னொறுத்தா னென்றுணர்ந்துநோக்கி, னளியிருக்குமுயிர்கடந்துமந்நிலையேயுறவ தனைநலிந்தவாற்ற, லளியிருக்குமதவேழக்ககலாவன்றுயராழியளித் திட்டானே. (எகூ)

இன்றளித்திண்புயன்முழக்கின் முழக்குமிபமத்தகமீர்த்தெடுத் தசீத, நன்றளித்ததரளநிலாவொளிருமுகிர் மடங்கலெலாநலிவுகாணு த், தொன்றளித்தமாற்றரசர்தும்பைபறித்துடன்மீதுதோலாவாகை, யொன்றளித்தகுஞ்சரங்கட் குறுகடன்றீர்த்தனமென்னுவுட்கொண் டானே. (அ0)

காசிலவாயினுமுளவாயினும்வினையும் வினைமயக்கிற்கலக்குங்கா லை, யாசிலவ ராரேனு முணர்வாரோ வாதலினிவ் வரசன் றானும், பேசுகலாமதிப்புதிய வதனியர்போல்வசீகரிக்கும்பெரியவேட்டைப், பூசலவாவுறுநெறிப்பெருவனத்தினொருதமியேபுகுந்தானன்றே (அக)

மொய்த்தவிருள்விலங்கெவையுந்தென்பூமிப் பரப்பினுளமுடிய வீத்துந், தத்துபரிவேந்தனுமத்தனிவேட்டைப் பெருவிருப்புத்தவி ரானுகி, மெத்துகதிரவிருமொருவடபூமியவ்விலங்குவீப்பானுக, வத் தவரைகடந்தோடியரும்பரவைப்பெருவனத்திலடைந்தானன்றே.

உறுதுளிச்சேண்முகில்வறப்பத்துகளெழுப்பு குரத்தநுரைத்தூ றிவீழ்வாய்த், துறுதுளிச்சோனையதுகளிற்றுவன்றுமுனையுடைக்கவ னத்துரகநீங்கா, விறுதுளிச்சீகரவசந்தமெழவீசி வதனசரோருகத் தேயீண்டச், சிறுதுளிச்சாலங்கடனைநனிநீக்கத்தனிவேட்டைச்சிர மநீத்தான். (அங)

வண்சோதிமலர்ச்சோலைப்பாசடைமேல்விதானிப்பமருங்குதோ று, மொண்சோதிநறுந்தழைகட் கிடைவீழா விளங்கால்வந் துலவுந் தோறுந், தெண்சோதிமதிக்கதிர்வெண்கவரியினிற்பணிமாறத்தீபசா லந், தண்சோதிவிளக்கெடுப்பத்தடம்பாயனறுமலராய்ச் சார்ந்தான ன்றே. (அச)

மருத்துவசத்துறுந்தாதுமருங்கினோர் கைதூயவளங்கொள்வா சந், திருத்துநறும்பொடியதனிற்றிகழவிரிபெருங்கானஞ்செந்தேன் பைந்தார், விரித்தவிதட்கிடைதுளித்தல்வில்வேட்டைப்பெருஞ்சோ கம்வீயநன்னீர்த், துருத்தியினிற்சிறுதாரைச்சுகந்தநறுந்துளித்துவ லைதூற்றன்மான. (அரு)

காழேணிற்றருதுருமத்தடிவணங்குமலர்க்கொம்பர்கங்குற்கால ங், கீழேரிற்பொலிகிரணமணியாரமேந்துநரிற்கிளர்ந்துசூழத், தாழே மத்தென்மலயச்சிறுகாலாற்றலைவணங்குதண்டார்வல்லி, சூழேவற் றொழுகையரிற்றனைப்பாதமலர்நீண்டத்துயில்வதானுன். (அசு)

துதிக்குமறிவினர்பிறவிவினைக்கானந்தனிற் ருெகாச்சுழனும்பாவங், கதிக்குமிடர்ப்பெருவிலங்குதனைவீட்டும்விற்றணவாக்கரத்தூறுகி, விதிக்குமுகிலிடஞ்சூழ்ந்த வடமேருவலஞ்சூழ்ந்து வேலைநாறி, யுதிக்குமொருகலைநாட்டிவாராநின்றெழுபரியோனுதயஞ்செய்தான்.

மொய்ப்பாயமரபெவைக் குழுழுதுலகநிலைகாட்டுமுதியநேரின், வைப்பாகியக்கதிரோன்மலர்தலைப்பார்வணங்கவெதிர் வருதலாலே, கைப்பாரியனையகொடைப்பர்ராசசேகரன்றன்காவல்பூண்ட, மெய்ப்பாரெண்டிசையளக்குந்தனியாடற் பரிதியினின்விளங்கினனே. ()

கடியவிசிப்பெரும்படகத் தொனிபோலக் கரித்திரளின்கன்னதாள, மடிபடவத்தொனியதனலருந்துயினீங்கினனுகியடவிதோறு, நெடியசிறைப்புட்சாலத் தொனிவந்திமங்கலத்தினிரந்தேயார்ப்பக், கொடியதொழிற்பெருங்கானின்மகிழ்ந்தெழுந்தானிணமுட்டுங் குருதிவேலான். (அகூ)

கொலைவாரிதருங்கோட்டச்சிலையேந்திநெடுங் கணைகைக்கொள்ளாநின்ருேர், கலைவாரிகெடப்பேரா வடிநோக்கிப்பரிகடவிக் கடிதுபோகா, வலைவாரிமுகந்தெழுகாரறல்சேர்ப்பவறப்பெருகியருவிபாயுமலைவாரியிருகரையுமணிகொழிக்குந்தமசைநதிமருங்குசார்ந்தான்.

வேறு.

மிளிர்வார்சிலைமறவோனெருபுடைநின்றிடுவேலை
யொளிர்மாதவமுனிசேயவனெருவன்றனிவாராக்
குளிர்சீகரநதிபோயறல்கும்பத்திடைகொளவே
தெளிர்பேரொலியிறையோனிருசெவியுற்றதுமாதோ. (கூக)

நேராமொலியதைமால்கரிகிமிர்பேரொலியெனவே
தேராவதனுழியேயொருசினவாளிபணித்தான்
ருராமரன்முதலாயினதடையாயினதழுவா
வீராவவனகன்மார்புறவெந்தாயெனவீழ்ந்தான். (கூஉ)

அறிபோதமுனுணர்வோன்முறையறமால்கரிதனையே
பொறிபோதரவெறிபான்மைபுரிந்தானிதுபுதிதோ
குறிபோகியமதராசதருணமேவிடலறநேர்
நெறிபோதலைவிடுவார்கலைநிறைவோர்களுமாதோ. (கூங)

போதந்தருமுனிவன்சிறுபுதல்வன்றுயர்நிலையோ
டாதந்தையெனுவஞ்சியழைத்திட்டவருஞ்சொன்
ருதந்தனசெவியிற்புகநையா விதுநம்மே
லேதந்தருமெனவவ்வொலியெய்தும்வழிபோருன். (கூச)

ஆர்வஞ்சிறிதகலாவளியறுகாலுழுமலர்சேர்
நீர்வஞ்சியிருஞ்சூழலினிலைநெடுபுசெல்லாப்
பார்வஞ்சிபொருநைந்திடுபடிவந்திடுபழியின்
சார்வஞ்சியகிலையான்முனிதவமைந்தனையடைந்தான் (கூரு)

நிறனிற்படுகணையும்புனனிறைவிற்படுகடமு
மறனிற்படுகுருதிப்புனன்மலிவுங்கணைவழியே
புறனிற்படுமுயிருங்கொடுபுற்சாய்வில்விழுந்தே
யறனிற்படுமவனிப்படியயர்விற்படல்கண்டான். (கூசா)

கண்டானுளமைந்தான்செயல்காணாதுகலுழ்ந்துள்
விண்டானதுகணைதன்னுளம்விள்ளாதிருந்தெனவே
கொண்டானொருவருமஞ்சுபுகொள்ளாதவொர்கொடுநஞ்
சுண்டானினயர்ந்தானுயிரில்லானெனவுள்ளான். (கூஎ)

மற்றேவரைநோவேனவமதியார்பெருவிதியார்
குற்றேவல்புரிந்தேனிசைகொன்றேனினியின்றே
யிற்றேனெமெய்தாவழியெய்தாவிதுபழியைப்
பெற்றேனிருநிலமீதுபிறந்தேனுமிலேனே. (கூஅ)

டாற்றென்னுயிர்கேனிவண்வந்தாவிவழக்கா
லேற்றங்கொடுகொள்வாரையுமென்னேயெதிர்காணே
னாற்றுந்திறனில்லேன்கொடிதந்தோகொடிதந்தோ
வேற்றெவ்வுளியுய்கேனிதுமேலாயினையானே. (கூகூ)

கொடுவன்றொழிலொருவன்விதிகொண்டேயுயிர்கொண்டே
படுவன்கணினெம்மேலிதுபழிவைத்ததுபாவ
முடுவன்கணையதனிற்பலவுயிர்கொன்றனனதனா
னடுவன்செயல்செய்தானவனம்மேலிதுநவையே. (க00)

முன்னெய்துமெமர்க்கும்பெருமுன்னூனெறிமுறையே
பின்னெய்துமெமக்குந்தனிநடுநின்றுபிழைத்தேன்
கொன்னெய்தியபார்மேலுலகெங்கும்பகைகொண்டே
னென்னெய்தியபழிநீயெனையெங்கேவிடுவாயே. (க0க)

எய்யுஞ்செயல்கொண்டேயுயிரெறிபுன்றொழிலிழிஞர்
செய்யுஞ்செயல்செய்தேனிடர்தீராகிரயம்போய்
நையுஞ்செயல்கொண்டேனினிநவைதீர்பெரியவர்வாய்
வையுஞ்செயல்பெறலல்லதுமாறுஞ்செயலிலையே. (க0உ)

என்றென்றினையனபன்னியிவன்பூசுரனுமே
லொன்றும்வினைபெரிதாமெனவுள்ளங்குலைகுலையாச்
சென்றங்கையெடுத்தேவரைதிகழ்மார்பிடைசேரா
நன்றுன்குலமேதோவெனநைவானெதிர்நவில்வான். (க0ங)

தலனிற்றருபுகழ்விஞ்சியதகையிற்றருவணிகர்
குலனிற்றருமொருமைந்தனியானென்றுரைகுழறு
நலனிற்பெறுமனையுந்தவநற்றந்தையுநயனப்
புலனிற்றவரவர்தம்முழைகொடுபோவெனப்புகன்றான். ()

தாருஞ்சிகைவிசியும்பிணிதவறத்தளர்நடையோ
டேரும்புயவலியுங்கெடவிடரோடுமெடாநின்
றூரும்புனனிறைகும்பமுமொருகைக்கொடறத்தா
னேரும்பெருநிலமன்னனுமுறுகானெறியுற்றான். (க0ரு)

வேறு

நலிபோர்தருமாகளிற்றேடிகலாநனுகாவெம்
புலிபோர்செயலானெறிமாறியகான்புக்காயோ
கலிபோதரநீள்கான்யாறிழிநீர்கரந்தாயோ
மலிபோதகமேமதலாய்மதலாய்வாராயால். (க0சு)

செருவோடெதிர்மால்கரிநீள்கையினேசேராநின்
றுருவோடயராவுயர்வானகநீயுற்றாயோ
வொருவோயுனையேதமியேவிடாவுறைபாவ
விருவேமுயிரெயிறைவாவிறைவாவெய்தாயால். (க0எ)

வினைகோடிகன்மால்வரைபாய்தலினுன்மிளிர்தாதுப்
புனைகோடொசியாவருகோளரிவாய்ப்புக்காயோ
தனையாவொருபோதிதுபோதகலாய்தாழாதே
துனைவாரலையாலெனையோவெனையோதுணிவாமே. (க0அ)

விதியார்செயலேதெனவீதுரையேமிகவோதிக்
கொதியாவுருகாவயர்வாரருகேகொடுபோனான்
மதியால்வருபூபதிசேறலையேமகனூர்தம்
மிதியாமெனவேசெவியாலுணராவிழைவானூர். (க0கூ)

வேறு.

மைந்தாவருவாயெம்முயிர்வாழ்வேவருவாயா
லெந்தாய்வருவாயன்புடையினையாய்வருவாய்நீர்
தந்தாவியளிப்பாயெனவவனைத்தரைவையா
வந்தாரவனன்னீர்கொடசும்போடுமளித்தான். (கக0)

ஓராதிதுநீர்கொள்கலமுரையாதெதிருறவே
வாராவுறறருவாய்பெருவஞ்சத்தனைபோலும்
யாராகுவையென்னுற்றனையெனவுற்றனவெல்லாம்
பாராநிருபனுமஞ்சுப்புபயமுட்கொடுபகர்வான். (கக்க)

ஐயாவடிதொழுதேனிறையருளாயடிதொழுதேன்
செய்யாவொருபிழைசெய்திடுசிறியேனடிதொழுதே
னெய்யாதெமையேயின்றுளயாயேயடிதொழுதேன்
பொய்யாவுரைபுகல்கேனினிப்பொறுப்பீரெனப்புகலும். (கக்உ)

அருமாநிலமகண்மாமுகமதுவானவயோத்திப்
பெருமானிலமுடையேன்றசரதனென்பதொர்பெயரேன்
கருமாமுதலியகோறல்செய்கடைவேட்டையடைந்தே
னொருமாகலையதுபோகியநெறியேதனியுற்றேன். (கக்ங)

சரியிற்கலைகாணேன்விரிதமசைக்கயல்புக்கேன்
விரிவிற்புனலிடையோர்தொனிவிளையச்செவியுற்றேன்
கரியிற்குரலெனநின்றுறுகணையொன்றுபணித்தேன்
பரிவிற்குரலெழநைந்துபயங்கொண்டுபடர்ந்தேன். (கக்ச)

உருப்பாவியகணைபட்டனன்கிடந்தானுயிரோடுஞ்
செருப்பாய்தருகணையோடுகொணர்ந்தேன்றெளிபொறையி
னிருப்பாகுவிரிதுபட்டனனுஞ்சேயவனென்று
னெருப்பாறதிற்கவிழ்ந்தாரெனநெஞ்சம்பதைபதைத்தார். (கக்ரு)

புண்டேறியவுளமெய்த்தயல்புறமிட்டதொர்புலனின்
விண்டேயுறுசெயலற்றனமிகமற்றையபுலனு
மண்டேழ்கடலினுமிக்கதொர்மம்மர்க்கடன்மாழ்கி
யுண்டேயுயிருளரேயெனவோவத்தினயர்ந்தார். (கக்சு)

ஏதுந்தெளிவிலராகியிருந்தெம்முயிரோடே
போதுந்தகமிசையென்பதொர்புணையங்கைபிடித்தே
யோதும்பெருவினையுய்த்திடவுறவந்திடுதுயரத்
தீதுந்தியகடலின்கரைசேர்ந்தேயுளந்தெளியா. (கக்எ)

எய்க்கும்படியெமதாருயிரெழின்மார்பிடையிறுகத்
தைக்குஞ்சரமதைவாங்குதியெனவன்னதுதகவென்
றுய்க்கும்பழிதலைவைத்தொருகரம்வைத்துறவுதிரங்
கக்கும்படிகொண்டானதுகணையோடுமிறந்தான். (கக்அ)

தவத்தேநிலைபெறுவிரிதுபழிபெற்றதோர்தவற்றி
னவத்தேனலதாரேயுமதடிமைத்தொழில்புரிவார்
நவத்தேயொருமகவாயினுநானேயெனநவின்றான்
பவத்தேயுழலாவம்முனிபரிவோடிதுபகர்வான். (௧௧௯)

வேறு

ஆகத்தாலட்டங்காவென்னவழன்றெழுசினத்தீமீக்கொள்
வேகத்தாலிழிந்ததன்கண்வெய்யநீர்கையின்வாங்கிப்
போகத்தானெதிரேபோக்கிப்புரவலநீயுமைந்தற்
சோகத்தாலெம்போலாவிதுறக்குதியென்னச்சொன்னான். (௧௨௦)

நொய்யபுன்னிலத்தினிட்டநோன்றழனெறுங்கச்சுட்டு
நைவிலபயிர்க்காக்கஞ்செய்நன்னிலமெனச்செய்தாங்கு
வெய்யவெம்பாலதாயவெங்கட்கேவிளைந்ததேனு
மையநின்சாபத்தீயுமருவினைவிளைத்ததன்றே. (௧௨௧)

பிறந்திடுமாயவாழ்க்கைப்பெருநிலம்பிறந்துபின்னு
மிறந்தவராவர்மைந்தரின்மையாரிறவாராவ
ரறந்தருமைந்தர்ப்பேற்றையடைந்துளாரதனால்யானு
மிறந்தனனன்றேயின்றேயிருமையுமுய்ந்துளேனே. (௧௨௨)

தொன்மையாமுனதுசாபச்சொல்லினைத்தவத்தின்றோற்றத்
தன்மையாலுயர்ந்தோர்தீமைத்தாழ்வினென்றலைமேற்கொண்டே
னன்மையாறொழுகும்பான்மைநற்றவப்பெற்றிமைந்த
னின்மையாலுயங்கேன்யானிங்கென்செயத்தகுவதென்றான். ௧௨௩

கண்ணியபெறுதிமேனுமைந்தன்கைகடக்கப்பட்டிம்
மண்ணிடைவாழ்வேமாகில்வையகமென்சொலாதோ
வண்ணலேயிரந்துநின்னையழல்வளர்த்தெமக்குநல்கித்
தண்ணறுங்காவுசூழ்ந்ததடநகர்ப்போதியென்றான். (௧௨௪)

என்னலுமுனிவன்பைந்தாளிணைமலர்சென்னிசேர்த்திப்
பின்னரினடைந்தசேனையதனொடும்பெரியோன்சொன்ன
சொன்னிலைவழாதுசெய்துதுளங்கிலைச்சூர்செய்வேலா
னன்னவனுளத்தேவைத்தவரும்பொருளோடுமீண்டான். (௧௨௫)

## தசரதன்சாபமேற்றபடலமுற்றிற்று.

ஆக செய்யுள் - ௧௬௩௧.



# திருவவதாரப்படலம்.



தளிக்குநாட்பொலிமலர்வனத்துச்சாபமிற்
றெளிக்குநாட்டத்தவனுரைத்தபின்னருந்
தெளிக்குநாட்போதியவிழ்தெரியலாற்குல
களிக்குநாட்குறைகொளாண்டயுதஞ்சென்றதே. (க)

கற்றிரிமுனமணிகரந்தவாழிபோற்
சொற்றிடுமெத்துணையுந்தொலேதுவாற்
பெற்றிலன்பிதிர்க்கடனென்னும்பேருடைத்
துற்றிருள்வீக்குமோர்மைந்தற்சோதியே. (உ)

மன்னவிறகைத்திருமகவின்வாழ்தரக்
கொன்னவிறலைக்கலைக்கோட்டுமாதவன்
முன்னவிறவப்பெருமுனிவர்யாவருந்
தொன்னவிறகைப்பெருமகந்தொடங்கினர். (௩)

கவர்க்குறிப்பமைறலையரக்கன்காய்வினைக்
கெவர்க்குறித்தடைதுமென்றினையுந்தேவரார்
துவர்க்குறிக்கவுத்துவஞ்சுடருமார்புடை
யவர்க்குறித்தணிவிசும்பாறுமுன்னினர். (௪)

கழையனல்படுஞ்சுரம்படுநர்காதலாற்
றழையனநன்னிழற்றருவிற்சார்ந்தபோல்
விழையுநர்பயோததிமேவமெய்யர்நெஞ்
சுழையனும்யோகநல்லுறக்கநீங்கினன். (௫)

நடப்பரிப்பதங்கராயிரவர்நன்கதிர்
படப்படச்சுடர்கரும்பவளவோங்கல்போற்
சுடர்ப்பணிப்பருமணிச்சோதிசூழ்ந்துவில்
விடப்பணிப்பணைசனத்திருக்குமீசனே. (௬)

மருத்தடவனசமேல்வனசம்பூத்தெனக்
கருத்தியல்வன்சபீடிகையள்காஞ்சிமீ
விரித்தவெண்பட்டின்மேன்மிளிர்கைப்பங்கயத்
திருத்தியபதாம்புயத்திணையினன்றனே. (௭)

தேருநீர்மறுவெனுஞ்சின்னங்கொள்வதா
யாருநீர்த்திருமகட்காடியாபிரு
ளீருநீர்க்கவுத்துவமென்னும்பேருடை
வாரிநீர்ச்சாரமேவயங்குமார்பனே. (௮)

மாக்கடனடுவ்வணைதோன்றுமற்றுமோர்
பாக்கியமலர்ச்சினைப்பாரிசாதநேர்
பூக்கவினிமிர்புயந்தோறும்பூண்கெழு
தூக்கதிரெரிதரத்தோன்றுவான்றனை. (௯)

வெம்படைக்கட்டழலசுரர்மெல்லியர்
வம்புடைத்திலகவாண்முகத்தைவாட்டிடு
மொய்ம்புடைத்திகிரியேமுதலதாய்ப்பக
ரைம்படைத்துதியினதார்ப்புளான்றனை. (௧௦)

தெருடனுல்லனந்தனைச்சினவறீர்ந்துமெய்
யருடனுதளத்தெழவணுகிநின்பதம்
வருடநாடொறும்வரம்வளர்த்திவாய்ந்தெனக்
கருடனுதரம்புரிகடவுளான்றனை. (௧௧)

உருகுவேதப்பரானந்தயோகமே
செருகுவேளைத்துயில்சிறந்ததோவெனும்
பிருகுவேமுதலியபெரியர்க்கன்புகூர்
முருகுவேய்துழாய்முடிமூர்த்தியான்றனை. (௧௨)

பொய்யடைந்திடுங்கொலைப்புலைஞன்றெட்டதோர்
மெய்யடைந்திருந்துயருவரிமூழ்கியா
வையடைந்ததற்கொருநல்வினைப்புணை
கையடைந்ததையெனக்கண்டுபோற்றினர். (௧௩)

வேறு.

நிலநீரையலதுறுநின்முகினீரெனக்குணங்கட்
கலநீரையடையாயாயவிகாரத்தனையாதி
யலநீரையடையாயாயவிகாரத்தனையாகிற்
புலநீராராரோநின்புணர்மாயையறிவாரே. (௧௪)

கல்லாயகதிர்போலக்கலவாயுமறைகலந்து
மொல்லாவம்மறைநான்குமுணர்வரியவொளியாதி
பொல்லாவம்மறைநான்குமுணர்வரியவொருநீயே
யல்லாணின்புணர்மாயையாரோமற்றறிவாரே. (௧௫)

கற்றுவினுயிர்க்களியைக்காண்போதிற்கட்ணிற்கே
யற்றுகில்விழுமத்தாலடிதீண்டப்பெறுயாதி
யற்றுகில்விழுமத்தாலடிதீண்டப்பெறுயாகிற்
பெற்றுயிங்காரோநின்பெருமானையறிவாரே. (௧௬)

வேறு.

சவித்துதியினையகூறித்தாழ்ந்தனரெழுந்துதாமச்
செவித்தருமலரினேடும்விரித்தகைகுவித்தல்செய்யாப்
பவித்திரவடிகளைத்திப்பண்ணவர்பரிவிற்சென்னி
குவித்தகைவிரியாராகிக்குறையிவைகூறலுற்றார். (௧௭)

திரைகடந்ததிருமூழிச்சலதியுஞ்சிறுமையெய்தக்
கரைகடந்தெழுந்துசாலகடங்கடர்ச்சலதிபொங்க
வுரைகடந்தெமதுளேவந்துறியபயத்தையோட்டத்
தரைகடந்துளநின்றுளேயல்லதுசார்விலேமே. (௧௮)

கோதயந்தனையராயநிசாசரவிருண்மீக்கொண்டு
மாதபந்தருநம்மூரைவளைந்ததுமறுதேநின்ன
பாதபங்கயவெண்கோடிபானுவிற்பரித்தசோதி
யாதபம்பெறுகிலேமேலந்தரேமடியரையா. (௧௯)

மீப்படுமாலகாலவினைக்கரன்விளிகின்றேமைக்
காப்பதுகருதிக்கண்டங்கறுத்திடக்கலங்கறீர்ந்தேங்
கோப்புடைநிருதரென்னுங்கொலைவிடவினைக்குன்வாளி
சேப்பதுசெய்யாதாகிற்றேவரிற்றீர்துமன்றே. (௨௦)

வன்கணுயிரங்களாகம்பொறுத்தவன்மறங்கொண்மாயப்
புன்கணுரிட்டதோரிவ்வுறுகணுட்பொறுக்கலாது
னின்கணுறலர்த்துழாயோயிரங்கருட்டன்மையீண்டு
நின்கணேநில்லாதாகில்யார்கணேநிற்குமன்றே. (௨௧)

வேறு.

இன்னதுயரநிலைவாய்மையிமையோரிசைப்பவினிதுணரா
வின்னகருணைநிலைவாய்மையிசைத்தானுள்ளாயிருந்தானு
மின்னவுழையனிவ்வடிவனிப்பேருடையனிவனென்றே
யின்னமுதுநான்மறையாலுமுணர்தற்கரியவியல்போனே. (௨௨)

தேவீர்குணங்களோரிரண்டுமூன்றுங்குணத்தாற்செறுத்தாங்கு
மாவீரமுநும்மலிபுகழுமறவாணிருதன்கொளமருண்டீர்
நீவீரென்கைபெரிதுணர்ந்தேம்நீங்காவிழுமநெடுங்கடல்வா
யாவீரல்லீரின்றேதெவ்வடர்த்தேமென்கையறிவீரே. (௨௩)

னன்றுவயிரப்படையோற்குமெமக்குங்கருமக்குணத்தொகைக
வொன்றுகையினங்கவனிவையிங்கெம்பாலுரைக்கையொழிந்தானு
மூன்றுவியகாறுணையாதன்மூன்செங்கனலோன்முயன்றிரந்திட் [ன்
டன்றுதலினல்யாமேயிங்குமதாமவலமடர்ப்பேமே. (உச)

அட்டாரழலாடரன்மகிழவரிந்துதலையொன்பதுந்தியி
லிட்டானெழுந்ததலையெமதோரேதிக்குணவாயீடானு
னெட்டாசையினுமிசைநடவுமிகல்வாணிருதன்முடித்தலையைக்
கட்டாருயிர்விண்குடியேற்றுங்கடும்போர்வலியுங்காண்பீரே (உரு)

கொலைப்போரரக்கன்வரம்விதிபாற் கொள்போதொழியா நரரெண்
ணிலைப்பேரினரூறணுகாதுநேசத்திரந்தாணிலையிதனுற் [மே
சிலைபோதன்றன்படைதொடினுந்தீய்வானல்லன்றெசரதன்றன்
வலைப்பேரார்வமகவாகிவலைநீர்த்தரணிவருகேமே. (உசு)

பேணியாகம்புரிவார்நூல்பிழையாதமைத்தடவீடுடைநுங்
காணியாயவவிப்பாகங்கடுங்கூற்றனல்கால்கடுமுதல
வேணியாவுந்திரண்டனையகிருதன்றடுப்பதிலதாகப்
பாணியாதேயாசங்கைபடாதேகொள்ளப்படுவீர்கள். (உஎ)

வாட்டாமதுகைநிசாசரனும்வானூர்கவர்வான்வருபோதிற்
பீடார்நிதிக்கோனிடைவலியாற்பெறும்புட்பகத்தேர்பெரிதாகப்
பாடார்விசும்பாற்றிடைமேகபடலக்கிடையேகாண்டோறும்
வீடாவச்சநிலைக்கலக்கவிழுமமினிநீர்விடுவீர்கள். (உஅ)

ஓடைக்கிரணமகுடமுடியொருபதானுனெனுங்கொடிய
வேடைப்படலாற்சோர்ந்துதிருவிளைவற்றிடுமேலவராய
பீடைப்பயிர்க்கின்னனவாய்மைப்பெயலாரமுதமளித்தருளாம்
வாடைத்திருமாலெனுமோர்மின்மலிமாமேகமறைந்ததுவே. (உகூ)

தீவாளரக்கன்றனையடர்ப்பானெருப்பட்டெழுந்ததிருமார்ப
மூவாமுதலோன்றிருவருளுமுனையாயதுமுன்னினராகித்
தாவாவிமையோர்யார்யாருந்தாழாதவன்றன்றடஞ்சேனை
யாவாராகக்கவிக்குலத்தின்கூறுயவனியடைந்தாரால். (௩௰)

வேறு.

அவ்வயினம்பொற்பொற்கலமீதேயமுதேந்தித்
திவ்வியகாந்திச்செவ்வியகோலத்தொருதேவன்
கவ்வையில்வேள்விக்குண்டமதிற்செங்கதிர்காலும்
வெவ்வனனள்ளிற்கல்லெனவாராவெளிநின்றான். (௩௧)

முற்கொண்டண்டர்க்கன்புசெய்வானுமுதிர்மாலோன்
விற்கொண்டங்கட்பொங்குசருக்கைம்மிசையேந்தி
மற்கொண்டார்மெய்ச்சோதியினல்வான்மலர்பானு
வெற்கொண்டன்னனின்பொடமைத்தாணிருபாகம். (௩௨)

அயிலொக்குங்கட்கோசலைநாமத்தழகார்பைங்
குயிலுக்கும்பொற்கேகையர்கோமான்றருகோல
மயிலுக்குந்தற்பெற்றியினீந்தான்மதியீனும்
வெயிலொக்கும்விற்சுற்றியமுத்தார்மிளிர்தாரான். (௩௩)

பொன்னவிர்தொங்கற்செங்கதிர்பொங்கும்பொருவேற்கை
மன்னவனின்பச்சிந்தையுணர்ந்தேமகிழ்வோடு
மன்னவர்தங்கட்கெய்தியதிற்கூறதுவாங்கிப்
பின்னவள்செங்கைப்பங்கயமீதேபெரிதீந்தார். (௩௪)

பாவமொடொப்பார்தீயவடர்ப்பான்பயமூளுந்
தாபமொடொப்பாமாறில்கருப்பந்தனையேவே
ளாவமொடொப்பாய்மீறுகணைக்காலமுதார்சொல்
லோவமொடொப்பார்மூவருமுற்றாருலகுய்ய. (௩௫)

எம்பதியிம்பர்த்திண்பவமுற்றாரெனஞாலக்
கொம்புளம்வெம்பிக்கண்வழிசெல்லுங்குறிபோல
வம்பிவர்மஞ்சுட்கொண்டுபசந்திட்டனமாத
ரம்புயவிம்பத்தங்கண்விளங்கற்புதநீலம். (௩௬)

தூய்மையறுநீள்பாலலைதன்பாற்றுயினீத்தோன்
சேய்மைபொறாதாய்நேடுபுவந்துசெறிந்தென்ன
வோய்மையறுமேசோவெளிறுற்றவுருக்கார்வ
வாய்மையறுமானன்னவர்மேனிமணிச்சூதம். (௩௭)

நட்புக்காவற்றேமறையாநண்ணினனேனுங்
கட்புக்காணுயாதிநிறம்பைங்கதிராலே
யுட்புக்கானிங்கிங்கெனவோதுமதுபோலப்
பெட்புற்றார்பைத்துற்றனவாகம்புறநாடி. (௩௮)

தகுமாறுதிப்பரன்வயின்வந்துதலைச்செய்ய
மிகுமாறுயுளிருந்திடுபாவம்விரைந்தேவிண்
புகுமாறுகவெழுந்துபுறந்தோற்றியபோலத்
தொகுமாறம்மகரிந்தமுலைச்சூசுகமாதோ. (௩௯)

செற்றித்தாழ்பொற்றூரணிமாதர்சிறந்தேயிப்
பெற்றித்தாயகுணம்பலபெற்றுற்றுறைவேலை
வெற்றிக்காமற்கெங்கணும்வெம்போர்விளைவிக்குங்
கற்றைக்சங்குற்கண்டனரங்கோர்கனவன்றே. (சo)

வாவியதிற்றேயாதொளிர்பொற்பார்வரியோடுங்
காவியவிழ்த்தார்மேனிசிலிர்த்தார்களிகூரு
மாவிதளிர்த்தாரோகைமிகுத்தாரணிசேரு
மோவியமொப்பார்கேள்வரையுற்றூருரைசெய்வார். (சக)

வேறு.

செவ்வானந்தாங்கச்செழுமின்னடிதீண்டத்திங்கள்
வெவ்வாதபனவ்விருபாலும்விளங்கிநிற்ப
வுய்வானமீன்சுற்றிடச்சிற்றுருநான்கதாகி
மைவானமெம்முனூறத்தோன்றிவயங்கிற்றன்றே. (சஉ)

தேராழியன்னமகிழ்மஞ்சரிமாலைத்தீஞ்சொல்
வாராழிதந்தவமுதன்னவர்வாய்மைகேளாப்
பேராழியோங்கற்பரப்பெங்கணும்போயபெற்றி
யோராழியானக்கனவின்னியறேர்ந்துரைக்கும். (சங)

செவ்வானம்புள்வேந்தொளிர்மின்றிருத்திங்கள்செய்ய
வெவ்வாதபன்சங்கடனேமிவிரிந்துசூழ
மூய்வானமீன்முனிவோருருநான்கதாய
மைவானமாசின்மறுமாமணிமார்பினூனே. (சச)

அற்றூகின்மால்சிற்றுருநாலவையாகிநின்ற
தெற்றூகுமென்னவ்வவனேநும்வயின்கணின்பா
லூற்றூர்வமைந்தரெனத்தோற்றுமுருவத்தென்னச்
சொற்றூன்வற்றூதவுவகைத்தனியாழிதோய்ந்தான். (சரு)

ஆனூதவின்பவிழிநீர்சொரிந்தங்கைகூப்பிக்
கோனூர்வமென்றூடொழுதாரக்குரிசிறூனுந்
தானூகிநின்றெப்பொருளுந்தருந்தாதைதாதை
யானூயினேனென்றுளங்கொண்டுமகிழ்ச்சியேற்றூன். (சசு)

பாரீன்றபெற்றிப்பலனீன்றெனத்திங்கள்பத்தி
னீரீன்றமேகநிறனீன்றநிறத்தசேயைக்
காரீன்றமின்னுக்கதிரீன்றெனத்தோற்றுகாட்சி
யேரீன்றசெங்கேழியற்கோசலையன்பினீன்றூள். (சஎ)

பொன்பெற்றசீதப்புனல்பெற்றபுனிதக்கங்கை
முன்பெற்றபேற்றின்முறைபெற்றமுருகனுனைத்
தென்பெற்றநாட்டத்திரள்பெற்றசெழுங்கலாபம்
பின்பெற்றதோகைப்பெயர்பெற்றுளநாடிபெற்ருள். (சஅ)

மிகைதந்தகல்விவிதிதந்தவமைதிஞான
வகைதந்தவென்னமகிழ்தந்தவிரண்டுசேயை
நகைதந்தசாலிநனிதந்தநயங்கொள்கற்பின்
றகைதந்ததோற்றத்தவத்தேனையனன்னர்தந்தாள். (சகூ)

வெறிக்கின்றவேணிற்கொடும்பான்மைவிலக்குநீர்மை
செறிக்கின்றகாலமுகில்வண்ணவச்செம்மலாற்கே
குறிக்கின்றவாகத்தெழிலேகண்கவர்ந்துகொள்ளா
வெறிக்கின்றவாற்ருலிராமனெனப்பேரிசைத்தான். (ருo)

கத்தொன்றுமோதக்கருங்கண்ணவெளியகாமர்
நத்தொன்றுமுந்நீர்நிறைமாண்பினடுவினுற்கே
கொத்தொன்றுபாவங்குழீஇயனனகுணத்தர்திண்டேர்
பத்தொன்றின்வென்ருன்பரதனெனப்பேர்பகர்ந்தான். ( )

மன்வந்தசெல்வமகிழ்தந்தவிரட்டையாகிப்
பின்வந்தவரின்முதல்வந்தபெருமையாற்கே
மின்வந்தவேற்கைவினைத்தெவ்வர்விளியமெய்ப்பேர்
பொன்வந்தமேனியிலக்குமனென்றேபுகன்ருன். (ருஉ)

பூரித்தவெவ்வப்பொருமற்சிறைதீர்துமென்றே
வாரித்தலத்தோர்மகிழேனையவற்குவாய்ப்பச்
சீரித்தபான்மைத்திறற்சத்துருக்கனெனவே
பாரித்தநன்பேர்பரிவோடுபகர்ந்திட்டானே. (ருங)

சொன்னின்றதிண்டேர்தனினின்றசுருக்கிலாது
வின்னின்றபன்னூல்விதிநின்றவிளங்கியாளின்
பின்னின்றவாசியிடைநின்றபெருங்கைவேழக்
கன்னின்றதோற்றத்தொழில்யாவுங்கடந்துளாரால். (ருச)

வகைபெற்றவின்னூன்மலிவோடுவடித்தகல்வித்
தொகைபெற்றமற்றும்படித்தாய்ந்துதுளக்கிலாத
திகைபெற்றசெம்மைத்திறஞ்சேரிப்பொருளொடுஞ்சீர்
மிகைபெற்றசெல்வப்பொருளோடும்விளங்கிஞரால். (ருரு)

பொற்றாமரைமாதொழியாதுபொலியுமார்ப
வெற்றாழுமேனிரகுராமசரிதையாவுங்
கற்றார்கலியின்பெரிதாந்தமிழ்க்கம்பநாட
னுற்றாங்குரைத்தானுரையாதனவோதுகிற்பாம். (நசு)

## திருவவதாரப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் - கசுஅஎ.

---

# சீதைவனம்புகுபடலம்.

---

மான்புக்கமதியந்தாழவண்குடைநிலவுவான
மீன்புக்கமுகடுகொணவீற்றிருந்தருளினானற்
கான்புக்குமறங்கொண்மாயக்கண்டகராவிகொள்ள
வூன்புக்ககணையுய்த்தண்டருறுதுயர்துடைத்துளானே. (க)

பேற்றுறுபொருளீறன்றிமூன்றினும்பெரிதினென்று
யேற்றினிதொழுகினான்மற்றென்னவாறன்னவாறே
சாற்றருந்தகையராகித்தற்பின்னர்வந்தசால்பி
னாற்றலங்குமரர்தம்பாலன்புசெய்தமைந்தானன்றே. (உ)

புறநின்றும்பெரிதினுற்றதுண்ணின்றும்புரிந்துநோக்கின்
மறைநின்றுமெவையுந்தன்பேர்சொற்றிடமலிந்தமாய
னறநின்றவுலகமூன்றுமொழிகலாதிராமனென்றே
யிறனின்றபெயரேகூறவெளிநின்றுவிளங்கினானே. (ந)

கலித்தடந்திகிரியானைக்கம்பிதமறப்பாரோடும்
வலித்தனசிரங்களாரத்தாங்குபுமகிழ்ந்தசேடன்
பலித்தமாயோகானந்தப்பள்ளியிற்பவ்வமந்தோ
சலித்ததென்றுணர்வுநாறித்தன்னுளேசலித்தானன்றே. (ச)

குறைதவிர்த்தவனிதாங்கக்குறித்தநாட்டிடைப்பட்டன்ன
முறைதவிர்த்தகன்றானல்லன்மொய்ம்பதுபொறுமையுன்னி
மறைதவிர்த்தொழுகுமாயவஞ்சகவரக்கரென்னும்
பொறைதவிர்த்தெடுத்துநொய்தாய்ப்புயாசலத்திருத்தினானே. (ரு)

இனப்பெருமுலகமெல்லாமிவன்பெரிதியற்றினன்னர்
வினைப்பலத்துறுத்தலாற்றீவினைக்குறையுடையவான
சினைத்தருக்குலமுங்கோவுநிதிகளுஞ்சிறுமைத்தாக
நினைப்பின்மிக்களித்தலாலேநிதிப்பெருக்குடையவான. (சு)

ஏய்வனவறிவின்பாலாயிருத்தலாலெறிதன்முன்னுச்
சாய்வனகொடியவைந்துந்தாழ்வனதவிர்வவான
தீயனவிடையூறெல்லாஞ்செறுத்தலாற்செய்கலாத
தூயனகருமமெல்லாந்தொடங்குவதுணிவவான. (எ)

நேர்தருமொழுக்கினில்லாமாற்றலர்நெஞ்சமெஞ்ச
வீர்தரவெறிதலாலேயெறிபகையின்மையான
வோர்தலாலொருமைத்தாகவுறுத்திகல்லொழுக்கவாற்றிற்
சார்தரநிறுவலாலேதந்தைதயையுடையவான. (அ)

பைதலாற்பையவீழ்ந்துபடாதுநின்றறங்கள்யாவு
மொய்தலாலுய்யுமாறங்கின்னருளுக்கமாரச்
செய்தலாற்செய்யுமாற்றிற்சேர்வருஞ்செய்திமற்று
மெய்தலாலெய்தும்பேற்றினென்கொலோபெறாததொன்றே. (கூ)

மண்வந்துசனகராசன்மனையிடைவளர்ந்தரக்கன்
கண்வந்தசிறையிருந்துகனலிடைநடந்தகாதற்
பெண்வந்தவடிவுதானேபெருந்திருவடிவமென்ன
வெண்வந்தகளியினோடுமின்பந்துய்த்திருந்தானன்றே. (க0)

இன்புற்றகளிப்பின்வைகியினிதுவீற்றிருக்குமெல்லை
யன்புற்றவியனுட்குமடுதிறலரியனூற்கும்
வன்புற்றதவத்தோர்வைகுந்தண்டகவனத்தின்முன்னர்த்
துன்புற்றநினைக்குந்தோறுமின்பத்தைத்தொடங்கிற்றன்றே. (கக)

கண்ணின்றமலர்ப்பூங்கோதைகருப்பமுற்றுடைமைகாதன்
மண்ணின்றவிசையினூற்கேவாய்மொழிவழங்கலாளாய்த்
தண்ணின்றகுமுதம்பூத்ததவளவாரிசத்துவிற்கீ
ழுண்ணின்றுபசந்துகாட்டுமுற்பலத்துணர்த்தினாளே. (கஉ)

செழுந்தராதலத்தையுண்ணுஞ்சிந்துவிற்சிந்தைமுற்று
மழுந்தவாவுவரிகோப்பவன்னவாறறிந்தவண்ணல்
விழுந்தபேருவரிநோகாவிண்ணவர்வருந்தாமண்ணி
னெழுந்தபேரமுதமேநிற்கியாதுகொலிவறலென்றான். (கங)

மண்ணுலாந்தவத்தினார் தம்மகளிர்கால்விலக்கச்சங்கங்
கண்ணுலாங்கங்கையாற்றைமறித்தும்போய்க்காண்பதாகத்
தண்ணுலாம்பவளச்செய்யதகையெலாமுறுவன்முத்த
வெண்ணிலாவிழுங்கியன்னகுமுதவாய்விண்டுசொன்னாள். (கச)

அன்னவாரமுதவின்சொலகத்தமைத்தழகுசான்ற
மின்னுநீள்விசும்பினோடுவிளங்கலான்மேலதேனும்
பொன்னின்மாநகரைத்தாழ்க்கும்பொற்புடையயோத்தியென்னுங்
கன்னிமாநகரின்செல்வங்காணியகருதிப்போனான். (கரு)

வேறு.

சோதிமாமேருவைத்துணித்தனைத்தொடு
நீதியாலமைத்ததுநீர்மைத்தன்றெனப்
பேதியாவுளங்கொடுபிரதிமேருவொன்
றாதிநான்முகன்படைத்தனையமாண்பது. (கசு)

கோணெறித்திசையெலாநெருக்கிக்கொள்ளலான்
மாணெறிப்பேரொளிப்பரிதிவானவன்
சேணெறிப்போதரறிகைத்துச்சாளர
நீணெறிப்போதரநிறைந்தநீரது. (கஎ)

புக்ககாலையின்முகிற்புதியவெண்டுகி
லொக்கவாங்குடுத்துநீடுச்சியொண்கதிர்
மைக்கொளாத்திலகமாங்கணிந்துமாலையிற்
செக்கர்வான்மேகலைபுனையுஞ்சீரது. (கஅ)

அங்கொளிர்தரளவாணிலவையாதபன்
றிங்களென்றுலகுளோர்நினைப்பச்சேர்ப்பது
தங்கொளிமாமணிவெயிலிற்றண்கதிர்
செங்கதிராமெனத்தெளியச்செய்வது. (ககூ)

ஏர்தொகுந்தெற்கொடுவடக்கினெய்துகா
லூர்தொறுங்குங்குமக்கலவையொண்மண
மார்தருமிமகிரிமலயமாம்வரை
மார்தொறும்புதிதுறமணப்பவீவது. (உ௦)

நிச்சயமுலகெலாம்விளக்கநின்றிடுஞ்
செச்சையஞ்செங்கதிர்க்கடவுள்சேர்தரு
முச்சிமுன்பின்னரினேங்குதன்னிழல்
பச்சிமபூருவப்பரவைபாய்வது. (உக)

நொய்துளபல்பொறிச்சேட்ஞேன்விட்
வெய்துளபணுடவிமணியின்வெய்யிலாற்
கொய்துளபடிகவெண்சிலையிற்கோணறச்
செய்துளவடிநிலைச்செம்மைத்தாயது. (உஉ)

கணிப்பிலமதிமணிப்புனலைக்கங்குல்வாய்த்
தணிப்பிலகதிர்மணிச்சிலையிற்ருங்கியே
யணிப்பகற்கதிர்மணிக்கனலையம்புலி
மணிப்பெருஞ்சிலையிஞற்றடுத்துவைத்தது. (உங)

சுந்தரவடிநிலம்வெளிகொடேய்நிலம்
பந்திசெய்முகினிலம்பானுமாநிலஞ்
சந்திரனிலமணித்தாரகாநில
மிந்திரனிலமெனநிலமொரேழது. (உச)

மீதுறுபுறவமாங்குணவின்வேட்கையாற்
றீதறுதாரகைத்திரளைவெண்ணிறத்
தூதெனவணுகிக்கண்சோதிசுற்றலாற்
பேதுறுபெடையொடேய்ந்துபோதுமே. (உரு)

விதுமுகத்தரம்பையர்சிலம்பின்விஞ்சொலிச்
சதிவிதத்தாடுபுதளர்ந்திட்டங்கவர்
புதுவரித்தேவகீதத்திற்பொற்றரு
மதுமலர்ச்சேக்கைவாய்மயில்கண்டுஞ்சுமே. (உசு)

சாந்தொடுமரம்பையர்கலன்கடாங்கியே
போந்திடும்வானதிதிவலைபோடலாற்
சேந்தொளிர்மணிசெய்நீடுச்சிசேர்கொடிப்
பூந்துகில்புலர்வதோர்பொழுதுமில்லையே. (உஎ)

இனங்கொளுமெல்லியுமெல்லுமின்புற
மனங்கொளுந்தம்பெடைமயங்கிமாறியே
கனங்கொளுமகிற்புகைகமழ்ந்துசுற்றலா
லனங்களுங்கிளிகளுமயிர்க்குழுள்ளெலாம். (உஅ)

இனையதோர்மாடமீதியன்றவேவலின்
வினையவரருகுசேவிப்பமேயினுன்
புனைகுடப்பெருஞ்செவிப்புலைஞன்வன்றலை
கனைகடனடுவிழக்கண்டவீரனே. (உகூ)

வேறு.

மேலைத்தெண்கடன்முத்தமுங்குணகடல்விளைந்த
கோலத்தண்டுகிர்க்கொடிகளுங்கொழுந்துவிட்டெறிப்ப
மாலைத்தண்சுடரதனொடும்வான்கிழித்தெழுந்த
காலைச்செஞ்சுடர்காண்கிலதெருப்பலகண்டான் (௩0)

கொங்குகாட்டியகுழல்களுங்கொடியனார்முகமும்
பங்குகாட்டியநீலமுமாமணிப்பரப்பு
மங்குல்காட்டவுமாமதிகாட்டவுங்கணத்திற்
கங்குல்காட்டவுங்கடும்பகல்காட்டவுங்கண்டான். (௩௧)

பெரியவாண்முலையவரெறிகலன்பிடியோடு
மரியமால்கரிமிதித்தலிற்றுகளதாய்மலிந்தே
யுரியநீலஞ்செய்குலத்தையுமதன்மிசையுறங்குங்
கரியகாரையும்பொன்னிறமாக்குவகண்டான். (௩௨)

சங்கம்போதிலதம்பதிமாக்களைத்தழுவிப்
பங்கம்போகியகடைதொறுமலிந்தபல்பண்டங்
கொங்கம்போல்வதுங்குச்சரம்போல்வதுங்கொல்லங்
கங்கம்போல்வதுங்கடாரமேபோல்வதுங்கண்டான். (௩௩)

கலம்புக்காங்கெரிகடுங்கதிர்தட்பினுங்கடந்து
நலம்புக்காங்கொளிர்நறுவிரைப்பாளிதவள்ளம்
பலம்புக்காதபற்கொளிகெடாதனபஃறிங்க
ணிலம்புக்காலொக்கநிழல்செயநெடிதுறக்கண்டான். (௩௪)

பாகின்றீஞ்சொலார்நீத்தன்கலன்றடைபடுப்ப
மாகுன்றுலிழிசந்தனச்சேறுகால்வாங்க
வீகின்றேமெனவிமசலப்பெருக்கில்வீழ்ந்தெழுந்து
போகின்றாரையுநோக்கினன்குறுநகைபொடித்தான். (௩௫)

தெரித்தரைத்தபஞ்சினும்படாதொடுங்குதல்செயினு
மருத்தினைப்பெருவாய்திறந்துண்டனல்வளர்க்குந்
துருத்திபற்றியேயிடங்கையில்வலங்கைதோய்குறட்டாற்
கருத்திருத்திடுகம்மியர்சாலையுங்கண்டான். (௩௬)

தேசுவெண்மையகருமையதிகணிறத்திடையே
மாசில்செவ்வரிக்கருவரிக்கொடியினைமாட்டிப்
பேசுசித்திரப்பாவையுட்படுத்திவிற்பிறங்கக்
காசினேத்திரமமைக்குநரிருப்பையுங்கண்டான். (௩௭)

மேதைபோக்கியவிளைஞர்கொண்மினோமிகவென்
றோதைபோக்களவிறந்தனகூவிளியோடுங்
கோதைபோக்கருமதுமலர்கொடுவிலைக்குறிப்பின்
காதைபோக்கலர்விலைஞர்தங்குழுவையுங்கண்டான். (௩௮)

மிடலையுண்டுதென்னுதவியதுரங்கவெள்ளத்தின்
படலையுண்டுபாய்விலாழியினதியொடும்பாங்கே
யடலையுண்டுறத்தனையளித்திட்டபோரசலக்
கடலையுண்டதிர்கலிமதக்கடலையுங்கண்டான். (௩௯)

சேடுபாய்சிறைதெறப்பட்டாமுன்னுளஞ்செருக்கி
மோடுபாயுளிவான்வழியிழுக்கிமெண்முடுகிக்
கோடுபாய்மலையசையியநின்றெனக்குலத்தூண்
பாடுபாய்மதக்கரிபெருஞ்சேவகம்பார்த்தான் (௪௦)

அருமைசான்றனவாரியத்துள்ளனமருத்துப்
பெருமைசார்பதிப்பிறந்தனபரிதியும்பெட்ப
வொருமைமேருவுந்தாழ்தரும்படிவிலையுயர்ந்த
பருவவாம்பரிப்பங்கியின்பந்தியும்பார்த்தான். (௪௧)

புரந்தபொன்னுருளுகுதுகள்புனைந்தனபோத
நிரந்தபல்கொடிக்கரங்களைமீதுறநீட்டிப்
பரந்தமைம்முகில்வயிறுகீண்டம்புறப்பருகிக்
கரந்தநன்புனலாடுதேர்நிரைபலகண்டான். (௪௨)

கிளைக்குந்நன்புகழ்பாடுவான்கிளர்ந்தெழுந்தனந்தன்
வளைக்குமன்பொடுமாயிரம்வாய்களைத்திறந்து
திளைக்குநாகிமிர்த்திட்டெனவெங்கணுஞ்செந்தீ
விளைக்குமந்தணரிடங்களும்விருப்புறக்கண்டான். (௪௩)

நானநானமுமலையசநான்முமரவத்
தானநான்முமகிற்புகைநானமுமளாவி
வானநாடியர்மலர்முகக்குமிழிடைமடுக்குந்
தானநானவீதியுமருந்தகையுறக்கண்டான். (௪௪)

பட்கமார்த்தெழநித்தில்க்கவிகைமீப்பரந்து
சுடரமாப்பெருவீதிகடொறுந்தொறுங்கொணருங்
குடகர்பொற்றிறைதென்னர்நித்திலத்திறைகுடிசால்
கடகர்மாத்திறைகலிங்கர்வேழத்திறைகண்டான். (௪௫)

இடரிலாதபற்சேர்பொழுதலபொழுதெல்லா
மடரின்மாண்புறத்தேய்வனவளர்வனவான
படரில்வான்கலேச்சிறியமானுடைத்தடம்பால்வெண்
சுடரினேன்படிசினகரநோக்கினன்றெழுதான். (சசு)

விளங்குகார்க்கடற்றலேவரைத்தழீஇமிகுந்தீப
வுளங்கொணன்னிதியறைவறிதுறும்படிகொள்ளாத்
துளங்குபல்பொருட்டொகையினேக்கலமுகத்தளிக்கும்
வளங்கொண்மாநதிச்சரயுவைநோக்கினன்மகிழ்ந்தான். (சஎ)

தென்னயோத்தியாள்பெறுந்திருவளத்திறுற்செறுப்பாண்
மின்னுவான்கொடியிருந்தவிண்ணிருபுறம்வீசிக்
கன்னிமாநகர்மிக்குளவோவெனக்காண்பா
ளென்னமாதர்பொன்னூசலாடிடங்களுங்கண்டான். (சஅ)

மையினேர்நிறக்கடலவற்றழீவடுக்கருவுற்
றெய்யெனுமிசைப்புகுபொழுததுவுளநாணி
நைவின்வீழ்முகின்மகளேவண்டிரங்கநன்கோட்டுக்
கையினேந்திடுங்கடிமலர்ச்சோலேயுங்கண்டான். (சகூ)

முடைக்கையாய்ச்சியர்வீதியுமின்னிசைமுதிரு
நடைக்கையாழ்த்தொழிற்பாணர்தம்வீதியுநலஞ்சேர்
கொடைக்கைவேத்திளங்குமரர்தம்வீதியுங்கொடிய
படைக்கைவீரர்தம்வீதியுந்தனித்தனிபார்த்தான். (ரு0)

நீட்சித்தோரணநிரைகளுநிறைந்தபேரழகி
னேட்சிச்செம்பொனின்மாடமுநாடகவிடமு
மாட்சிக்கோபுரவாயிலுமதிலுமற்றையவுங்
காட்சிக்கின்புடைவளஞ்செயவினிதுறக்கண்டான். (ருக)

இளக்குமாநிலமனைத்துமோரடியின்கீழ்க்கிடப்ப
வளக்குமவ்வுருக்கொடுமுற்றநோக்குவதல்லால்
விளக்குமாதியம்பரமனிவ்வுருக்கொடுவிழியா
லளக்குமாங்கதற்கெளியதோவயோத்திமாநகரம். (ருஉ)

துள்ளும்பேரெழினகர்கண்டுமகிழ்ச்சியுட்டுளும்பி
யுள்ளுண்டேறமிக்குவந்தபிறெற்றரினுள்ளுந்
தெள்ளும்பத்திரநாமனைநோக்கினன்சிறந்தோர்
கொள்ளும்பேரிசையல்லதுமற்றையகொளாதான். (ருங)

வளப்பதாகைவேன்மன்னவர்மதிக்குடைவாங்கிக்
கொளப்படாநின்றவாகைமீக்கொண்டுநஞ்செங்கோ
லளப்பதாகியவையமீங்கென்னைகொலம்ம
இளப்பதென்றனனென்றலும்பத்திரன்கிளக்கும். (௫௪)

உரியதெய்வதத்தன்மையாயுலகநின்புகழைப்
பெரிதுவப்பொடுந்துதியொடும்பேசுவதல்லால்
விரியுமற்றையபுகலுமோவெனவுரைவீழ
வரிதுசொற்றனனிராமனும்பெரிதுளமயிர்த்தான். (௫௫)

இளைக்கமாநிலமிருந்தந்தையாவிநீடின்ன
றிளைக்கவான்புகக்கான்புகுந்தானெனத்தெளிந்தோ
கொளைக்கைநாண்கெடுந்தாடகைப்பெண்ணுயிர்கூற்றம்
வளைக்கவார்சிலைவளைத்துளனென்பதைமதித்தோ. (௫௬)

சாதிப்பித்திகைக்குழலொருபெண்டணிமூக்கைச்
சேதிப்பித்தவனென்பதைமனத்தினிற்றெளிந்தோ
வாதிப்பித்துறமறைநின்றுவாலியையறிந்தே
காதிப்பித்தரிற்கொன்றுளானிவனெனக்கணித்தோ. (௫௭)

என்னப்பட்டுளநெஞ்சொடும்பன்னிநின்றினைந்து
பின்னப்பட்டுளமொழியினைப்பெரிதினிவ்வுலக
முன்னப்பட்டுளதுரைக்குதியஞ்சலென்றுரைத்தான்
மின்னப்பட்டுளமேகமும்வெளுத்திடுமெய்யான். (௫௮)

நன்றலாற்பிறவிகழ்ந்திடாவரக்கன்றனுமங்
குன்றலாற்கொடுபோயினகற்பின்கோக்கொழுந்தைக்
கன்றலாற்றனிமீட்டுநீவிரும்பியகாத
லொன்றலாற்பிறிதுளவெலாந்துதிக்குமாலுலகம். (௫௯)

அடையும்வன்புடையன்னவாய்மொழியினைக்கேளா
விடையுந்துன்பினுக்கில்லெனவயருவானிதய
மிடையும்வன்பொறைக்கூடமிக்கறைதரவிள்ளா
வுடையும்வெங்கனலுண்டகாரிரும்பெனவுடைந்தான். (௬௦)

கொலைப்படாவிரிகனலையுஞ்சுடுங்கொடுங்கற்பின்
மலைப்படாமுலைமயிலையுநீக்கவும்படானாய்த்
தலைப்படாநின்றமாற்றமுந்தாங்கிடாதொன்றி
னிலைப்படாதுள்ளமூசலிற்போர்தரநின்றான். (௬௧)

பூப்பதேகொடுவெந்தவிவ்விகழ்ச்சிரம்புகழைத்
தீப்பதேகொடுநின்றதுதீப்பதன்முன்னே
காப்பதேசெயிற்கண்கொளாவெழிற்கனங்குழையை
நீப்பதேயினியாவதென்றொருமையினிலைத்தான். (௬௨)

உம்பரிற்படுபுகழலானுவந்திட்டானிங்ங
னெம்பியர்த்தருகென்றனனொருவனுங்கெய்தி
யம்புயத்தைவெல்கண்ணவனழைத்தனனென்றான்
வம்புயிர்த்ததார்மார்பருமிமைப்பினில்வந்தார். (௬௩)

சேயபங்கயச்சேவடியிறைஞ்சினர்திருவி
னாயகன்றிருமுகந்தினைநோக்கினர்நைந்தார்
தூயவெற்றையந்தினத்தினுந்தோற்பதுந்தோற்றும்
போயபங்கயம்வென்றதென்னெனப்பொலிவழிந்தார். (௬௪)

அற்றன்றாலின்னுமன்னவாறிளையரானனமு
முற்றுந்தோற்றன்வன்னவோமுருக்கிதட்சனகி
வெற்றந்தோற்றியமுகத்தையும்வீறறப்பிறகே
கொற்றம்வாங்கவுங்கிடந்ததுகெட்டகோகனதம். (௬௫)

சேரும்வீறுடைத்திருவினைநிலையென்றுசிறிதும்
யாரும்யாரையுமிகழன்மின்கமலமுமிவ்வா
றாருந்தன்மையதானதேயீங்கிதொன்றரிய
பாரின்றன்மையோநாகத்துமிம்முறைபடுமால். (௬௬)

துதிகொடேநின்றவவர்க்கெடுத்துரைத்தனன்சுரும்பின்
கதிகொடேவிரிமலர்க்குழறுயர்க்கடற்கவிழ
மதிகொடேவரும்வலியுடைப்பத்திரனென்னும்
விதிகொடேவந்தவெவ்வுரையாவையும்விறலோன். (௬௭)

விற்றவாதொளிர்தர்ப்பணங்களங்கமேகத்தி
னற்றநீடொளிகாலுறவடைந்ததுபோலப்
பெற்றசீர்மனுகுலத்திற்கும்பெரிதுறவென்னு
லுற்றதாலிதுமறுவெனிலெங்ஙனமுய்வேன். (௬௮)

அளியிற்றோன்றியவுலகிடையறலின்வீழ்தயிலத்
துளியிற்றோன்றியவிங்கிதுசுமக்கலாமையினு
னளியிற்றோன்றியமும்மதப்பெருங்கிரிகலியுங்
களியிற்றோன்றியவலிபொருக்கந்தினைக்கடுத்தேன். (௬௯)

மாற்றுந்தன்மையோமதிக்குமண்சாயையைமறுவென்
றேற்றங்கொண்டெடுத்தியாவருமியம்புவரின்று
மாற்றுந்தெய்வதக்கற்பினுடனையயிர்த்திலன்பார்
தோற்றும்வன்புடைப்பழிமொழியெங்ஙனந்துடைப்பேன். ()

கோரவெஞ்சினத்தரக்கரைச்செறுத்ததுகுறிக்கி
லீரவன்புடைப்பெண்பொருட்டென்றெண்ணலீர்க
டீரவன்பொடுமிதித்தனபகைக்கலாற்சென்னி
ராரவெண்ணியோகடிப்பதுசெய்திற்றரவம். (எக)

இறந்தகாலத்தினியன்றதீவினைசுமந்தவனி
பிறந்தபாவியைப்பிழையிலாடனைக்கற்பின்பிறப்பை
யறந்தவாதருளெந்தைதன்னேவலாலகிலந்
துறந்தவாறெனமற்றிலேன்றுறப்பதுதுணிந்தேன். (எ௨)

கல்வியென்னுளத்தறைந்தகட்டுரையபவாத
சல்லியந்தனைப்பறிப்பதேதுணிந்தனன்றடுப்ப
வல்லிரேலுயிர்வாழவெற்காண்பிர்கொலென்னச்
சொல்லினன்றிருப்பாற்கடற்பணியணைதுறந்தான். (எ௩)

கெடுத்தற்காகியபழிமொழிமேல்வரக்கிடைத்தோன்
கடுத்தற்காகியகடியசொற்கேட்டகாளையர்தாந்
தடுத்தற்காகலர்தடாதுநின்றுடன்படுந்தகையி
னடுத்தற்காகலரயர்ந்தனரோவத்தினுனர். (எச)

இன்னற்பாடுறுமவருளுமிலக்குவப்பேரோன்
றன்னைக்கூவினன்சனகியால்வெற்றியிற்றழைத்த
கன்னற்கார்முகம்வளைத்தவன்வலிகெடக்கடிதே
யுன்னற்காகலாவுரையிதொன்றுருமெனவுரைத்தான். (எரு)

எடுத்துவான்றிரையெறிகங்கைகாணியவிவர்ந்தாள்
கொடுத்தசிந்தனைமுடிப்பதாய்த்தேர்மிசைகொடுபோய்
மடுத்தமாதவமாட்சிவான்மீகிவாழ்வனத்தில்
விடுத்துமீளுதியென்றனன்பெரும்புகழ்விடாதான். (எசு)

உரியதந்தைதனேவலின்மழுப்படையுடையோ
னரியவன்னையையடுவதற்கொருப்பட்டவதுபோற்
பரிவில்வெந்தறுகண்மைசெய்வதற்கொருப்பட்டான்
பெரியர்தம்பணிமறுப்பரோசால்புடைப்பின்னோர். (எஎ)

என்னையாளுடைநாயகன்பணியிதொன்றென்மேன்
முன்னையாகியபாவத்தின்முடிந்ததென்றுயங்கிப்
பொன்னையார்மணிப்பூணினன்போயினனுலகுக்
கன்னையாயவள்கோயிலின்வாயிலையடைந்தான். (எஅ)

வேறு.

கண்ணுலாமுகத்தையொப்பக்காட்டினைகவினருவெ
னெண்ணுலாந்தோழியென்றேயிருவிசும்பெழுந்ததிங்க
டண்ணிலாக்கரங்கொடாரத்தழீஇயெனச்சனகிமேனி
வெண்ணிலாவுமிழுமென்பூஞ்சேக்கையின்மேயினாளே. (எகூ)

ஆவதோர்பொழுதிலாங்கோரஞ்சொலாடன்னைநோக்கி
யேவினனன்னையாருக்கென்வரவிசைத்தியென்னாக்
காவலன்பணித்தவந்தக்கடும்பணியென்னுமேழு
நாவழல்பருகியுள்ளம்வெந்துளைந்துளானே. (அ0)

நஞ்சினுங்கொடியதந்தோநவிற்றலீதென்பபோல
வஞ்சிலம்படியிற்பூண்டங்கரற்றிடவரிதிற்போனாள்
விஞ்சியபதுமப்போதின்விளங்கொளிமேயதிங்கட்
பிஞ்சுவந்துதித்ததென்னப்பிறங்கொளிநெற்றியாளே. (அக)

வெய்துளகொடியவாய்மையவிதரமீதுகூப்புங்
கைவளையரற்றுமாறுங்கருத்தினிற்கணியாளாகி
மைவளர்விழியாய்செம்பொன்மாமணிவயங்குவாயி
லெய்தினனிறைதாணீங்காவெம்பிரானென்னச்சொன்னாள். (அஉ)

வேறு.

விழுந்தெழுந்தளிக்குலமிரங்கமெல்லிதழ்ச்
செழுந்தகைத்தாமரைச்சேக்கைநீத்தயர்
வழுந்தியகருவுடையன்னப்பேடையொன்
றெழுந்தெனவெழுந்தனளெய்தறேர்கலாள். (அங)

திளையினப்புறவமுஞ்செவ்விநவ்விமென்
கிளைகளுந்தேமொழிக்கிள்ளைப்பிள்ளையும்
வளையனப்பேடையுமயிலுஞ்சூழ்வர
விளையவனெய்தியவாயிலெய்தினாள். (அச)

செருவுடையிந்திரன்பகைவற்செற்றுள
பெருவலிவாகையிற்பிறங்குதோளினா
யருளுதியுலகெலாமளிக்குமெம்பிரான்
றிருவருணிகழ்ந்ததையென்னச்செப்பினாள். (அரு)

அன்னையீர்கங்கையாறதனைக்காணிய
நுங்கினைவிருந்ததைமுடிப்பநோக்கினா
னென்னையாளுடையவனென்னவின்பொடும்
பொன்னனாளுவகையிற்பொலிந்துதோன்றினாள். (௮௬)

உண்ணிறைந்தடர்துயருவரியோடெழு
கண்ணிறைந்திடுபுனல்புறம்புகாட்டிடா
தெண்ணிறைந்தவன்றிண்டேரேறுவீரெனப்
பண்ணிறைந்தனமொழிபையவேறினாள். (௮௭)

பாழியஞ்சுமந்திரன்பரிமுட்கோல்கொள
வாழியந்தேர்பெரிதியங்குமவ்வயி
னாழியஞ்சரோருகவதனியொல்லைசேர்
தோழியர்தம்மைக்கூயினையசொல்லினாள். (௮௮)

வேறு.

வன்னப்பவளவிதழீரென்வாய்மைமறவீர்மறவீர்கா
ளன்னப்பேடைக்கென்போலத்தீம்பாலளிப்பீரளிப்பீர்கள்
கன்னற்றீஞ்சொற்சாரிகைக்குங்கவிர்வாய்ப்பிள்ளைக்கிள்ளைக்கும்
பின்னப்படாதேதீங்கனிகள்பெரிதீந்தருள்வீரருள்வீர்கள். (௮௯)

தினையோடியானல்கியதரளச்சிறுமென்பரலுண்டுளந்தேக்கிப்
புனையோவியமாடம்பிரியாப்புறவம்புரமின்புரமின்க
ளனையோமறந்தும்பிறந்தவில்லையகன்றும்வருந்தாக்குயிலொருபோ
தெனையோமறந்துமறியாதாலின்பாற்காமின்காமின்கள். (௯௦)

பிறிவீரென்னிற்பிழைத்தீரென்பிள்ளைத்தோகைபிணிமுகமென்
றறிவீரிருகணிமையினிற்காத்தளிப்பீரானன்களிப்பீராற்
செறிவீரினமென்பிணைக்குணவுசெவ்வாயருத்திச்சிறியபசி
யெறிவீரெனிலென்னிருகண்களேய்வீரான்மிக்கேய்வீரால். (௯௧)

வேறு.

மரையிகந்தவனிவர்தாளிம்மொழிவழங்கமாழ்கிக்
கரையிகந்தெழுந்தணைப்புக்கடலிடைக்கவிழ்ந்துமாதர்
நிரையிகந்திலராயொண்கண்வாங்கலராகிநிற்ப
வுரையிகந்தகன்றதாலவ்வொண்மணித்திகிரித்தேரே. (௯௨)

உடுப்படிகொடிஞ்சித்திண்டேரொலியதங்குவரையாற்றிற்
றடுப்பதுபோலும்பாவந்தாங்கலேனென்னச்சாற்றிக்
கடுப்பதும்போலுங்காணும்பிழையிலாடன்னைக்கானம்
விடுப்பதுங்கொடிதேயென்றுவிளம்பலும்போலும்போலும். (௯௩)

பகுத்தெறிதிரைகொண்முந்நீர்ப்பார்மிசைப்பகலோன்சோதி
தொகுத்தெரிமணிசெயாழித்துளைப்புறத்தெழுந்ததூம
மிகுத்தெழுசினத்தினோடும்வெங்கனற்கடவுள்சான்று
வகுத்துரைசெய்வானின்னும்வருவதுகாட்டல்போலும். (௬௪)

துண்ணெனவெழுந்ததூளிதோற்றுதலுலகிற்கெல்லாங்
கண்ணியசான்றதானேன்கரிபொய்த்தாலுய்யுமோவிப்
பெண்ணொனவிதுநான்காணப்பெறேனெனவெழுந்துநாணி
யொண்ணுதறன்னையீன்றாளொடுங்கிவானுறுதல்போலும். (௬௫)

குட்க்கிழிகங்கையாறுகாணியகொண்டவோகைத்
தொடக்கினுள்வலதுநாட்டந்துடிப்பினிற்றுன்பங்காட்ட
வடக்கருந்துயர்கொளன்னைகுறியினாலயர்ந்துசால
மடக்கொடிதுணைவரோடுமெம்பிரான்வாழ்கவென்றாள், (௬௬)

அம்மறிக்களபமார்பவல்லகொண்டரியகானின்
மைமறித்தடங்கணுளைவிட்டேலெனவாய்விட்டார்க்கும்
விம்மறிக்களவுஞ்சேறவிழுந்தெழுந்திரைகளென்னுங்
கைம்மறித்தனையதோற்றக்கங்கையங்கரையைச்சார்ந்தார். (௬௭)

தடங்கொடேர்நீங்கிக்கண்ணுற்றாமவேடன்கைத்தோணி
யுடைந்திடவென்றாளோடுமொல்லையிற்சவரன்றந்த
விடந்தகுமோடத்தேறியெறிதிரைக்கங்கையாற்றைக்
கடந்தனன்றுன்பவேலைகடக்கலாக்கருத்தினானே. (௬௮)

மின்மழையனையகூந்தல்விளங்கிழைக்கிருண்டகோல
நன்மழையனையமேனிநாயகன்பணித்தவெல்லாம்
பொன்மழைபொழியுமேகம்பொருந்துமுற்பாதகாலங்
கன்மழைபொழிந்தாலொக்கக்கழறினன்கலுழுங்கண்ணான். (௬௯)

பித்துடைச்சிறியோர்தம்மிற்பெரியவன்பணித்தமாற்ற
முத்துடைப்பவளச்செவ்வாய்மொய்ம்மலர்க்கோதைகேளாத்
தத்துடைத்துன்பமென்னுமருத்தினாற்றளர்ந்துசாயுங்
கொத்துடைக்கோலமென்பூங்கொடியெனக்குழைந்துவீழ்ந்தாள். ()

முன்னையாம்வினையினாலுங்கொழுநனுமுன்னையாட்குப்
பின்னையாமபராதச்சொற்பேதையுமொன்றதானா
லென்னையாவென்றுவீழுமிவடனையிரங்கியீன்ற
வன்னையாரன்றிப்பின்னையார்கொலோதாங்குவாரே. (௭௧)

சாதுயர்ப்புகுந்தாட்டன்னைத்தாங்கினாள்புகுதத்தன்னு
ளேதுகொண்டிடங்கொடுத்தாளிலையெனிலிமையோரேத்துந்
தீதில்கற்பினைநீத்துவைகுமோசிறந்தானென்னுங்
காதலைப்பிடித்தாளன்றேற்காண்பளோமகடன்கௌவை. (௧௦௨)

அழுந்தழற்செல்லின்வெம்மையுறைப்பவீழ்ந்தயர்ந்துமின்னுக்
கொழுந்துவிட்புலம்விட்டிம்பர்க்கோளொடுங்கிடந்ததேபோல்
விழுந்துமிக்கவசங்கூர்ந்துகிடப்பவண்மேனிமுற்ற
வெழுந்துகட்போர்வைசெய்தாளென்செய்வாளீன்றபாவி. (௧௦௩)

வன்பெனுங்கொடியபாவிகருணைவாரிதியின்வந்து
துன்பிதுதந்ததந்தோகொடிதெனவுள்ளஞ்சோரத்
தன்பெருங்கண்களீராயிரங்களுந்தாரைவீழ்த்த
நன்புனனுகங்கோப்பச்சேடனுநடுங்கினைந்தான். (௧௦௪)

புனங்கொடிதுயருமீன்றாள்புன்கணும்பொறுத்துநாக
மனங்குலைவுற்றதொன்றோவறன்முதன்மற்றையாவு
மினைந்திடந்திரியுங்கற்பினயிர்ப்பெண்ணானெழுசொனீப்ப
நினைந்தனனென்னத்தத்தநிலையிடைநின்றவன்றே. (௧௦௫)

நிலக்குமேனிலக்குமாசுநிறுத்தினேனிறுத்தினேனென்
றலக்கணுற்றுள்ளமாழ்கியாவியுண்டில்லையென்ன
வுலக்குமந்நிலையளன்றோபழிவந்ததென்னவுள்ளி
யிலக்குமன்றேற்றத்துன்போடெழுந்துநின்றினையசொன்னாள். ௧௦௬

நிறைவலைப்பட்டயான்புன்னெறிப்புலைநிருதன்வஞ்சச்
சிறைவலைப்பட்டவன்றேதிருவுளத்தடைத்தகொல்லோ
முறைவலைப்பட்டவேந்தற்கிடைவந்துமுடிந்ததோசொற்
றுறைவலைப்பட்டபார்மேற்சுமத்துமிச்சூதுமாதோ. (௧௦௭)

தூற்றின்வாணிருதப்பாந்தள்சூழ்ந்தபோததனினஞ்ச
வூற்றின்வாய்ப்படாதேனிந்தவுலகின்வாய்ப்பட்டேனென்றோ
காற்றின்வாய்ப்பட்டசெந்தீக்கடவுளையயிர்த்தென்கற்பைக்
கூற்றின்வாய்ப்படுத்திக்காண்பான்குறித்ததோவினையகொள்கை. ()

கல்வினைப்பெண்ணதாகக்கண்டவன்கருத்தும்விள்ளாக்
கல்லெனத்தெளிந்தேனின்றேகல்லினுங்கொடியதான
வல்லியல்வயிரந்தன்னைவயிரத்தாற்பிளந்துமாண்பி
னல்லுருப்படுத்தலல்லான்மற்றொன்றைநாட்டொணாதே. (௧௦௯)

தெரிந்துநாண்பூண்பதல்லாலென்னொடுஞ்சிறந்தவில்லு
முரிந்ததுகொடியேன்வாழ்க்கைநிலைக்கவோமுதனாட்கொள்ளப்
பரிந்தெடுத்துளகல்யாணத்துவசங்கீழ்ப்படவேவீழில்
விரிந்திடுந்தீமையல்லால்வேறென்கொல்விளைவதம்மா. (௧௧0)

முன்னையேய்விதியையன்றுமுறையிலாவுலகையன்று
பொன்னையேய்கழற்காலெங்கோன்றனையன்றுபொருந்திவந்த
நின்னையேபுகழ்ந்தேன்பின்னைநல்வினைநிலையிலாதே
னென்னையேபழித்தேனென்றென்றழுதனளேங்கிநின்றாள். (௧௧௧)

கறுத்துளங்குலைவீரல்லீர்கருணைவான்மீகியோகம்
பொறுத்துளவிடஞ்செலாறிங்கிதுவெனப்புகன்றெங்கோன்சொன்
மறுத்துரைசெய்யேன்செய்தவன்பிழையன்னையீர்நீர்
பொறுத்தருள்செய்வீரென்னப்பொன்னடிதொழுதுவீழ்ந்தான். ()

எழுகவூரென்றுமின்றிவாழ்கநின்னியற்கைதன்னைப்
பழுதறுதேவரல்லால்யாவரேபழிச்சவல்லார்
முழுதுணர்முதல்வனேவறலைக்கொண்டோயென்றுமுற்றும்
விழுமவாரிதியிற்றாழ்வாண்மீட்டுமீதுரைப்பதானாள். (௧௧௩)

புரவினிற்சிறந்தமாமன்றேவியர்தம்மைப்போற்றி
மரபினிற்றொழுதேனென்றுமுணர்த்துகமறந்திடேற்க
வுரைசெய்கேனின்னுமொன்றெனுதரத்துட்கருப்பந்தீமை
நிரைதபவளர்கவென்னாநினைகுவீர்நீர்கடாமும். (௧௧௪)

பரியுநெஞ்சயரவாவிபதைத்திடப்பற்றொன்றின்றி
யெரியினின்றனையாள்பின்னுமிருங்கலையுணர்ந்தோர்தம்மிற்
பெரியநின்னுளங்கொள்வாயாலவமதிபிடியேல்பேணு
முரியவெங்கடவுட்கென்றுலுரைப்பதுண்டென்னவோதும். (௧௧௫)

வேறு.

ஆற்றுந்தொல்லறமூர்த்தியாயிதுநின்னவகத்திற்
றோற்றுந்தன்மையதென்றுளந்துணியற்கதொல்லைப்
பேற்றின்வெங்கொடும்வினையின்றுபெரிதுறவசனி
யேற்றின்வீழ்வெனப்பலித்ததுபாவியேற்கென்க. (௧௧௬)

தன்னைப்புந்திசெய்திடாதியானுன்னொடுந்தணந்த
முன்னைச்சிந்தனைநினைந்தவோர்பெருந்தரைமுதல்வி
யுன்னைத்தன்வசமாக்கினன்மனமழன்றுருத்திட்
டென்னைத்தன்னினும்பிரித்தனன்மற்றிலையென்க. (௧௧௭)

வெய்தரக்கராற்குலைந்தனமெனத்தவமின்னூர்
பைதலோடுமென்னிடைப்புகல்புகவன்றுபரித்தல்
செய்தநீகனிவிளங்கவுஞ்சிறுமையுற்றவர்மாட்
டெய்தியான்புகல்புகுவதுமெங்ஙனமென்க. (௧௧அ)

ஆகுமிவ்வுலகிருக்கவும்படாப்பிரிவளித்தும்
வாகினின்பெருங்கருப்பத்தையென்சிறுவயினின்
வேகுநெஞ்சுடையேனுடனீத்துவிண்ணுலக
மேகவுந்தடைவைத்ததுங்கொடிதரோவென்க. (௧௧௯)

மைப்பவத்தெழுஞ்செங்கதிர்க்கெதிர்விழிமடுத்திட்
டிப்பவத்தினிற்றவஞ்செயவின்னருளீந்தாய்
செப்பவத்தினிற்சேர்த்திலைசினத்தினுஞ்சிறியேற்
கெப்பவத்தினுந்தலைவனீபிரிவுமில்லென்க. (௧௨0)

கனிகொளாச்சிரமங்கள்முற்பிறகரபாலர்
துனிவிலாதுகாத்திடுவதேவழக்கெனுந்தொடர்பாற்
கனியுமாதவரொடுஞ்சமமாகநீகாப்பி
னினிதுகாக்கவும்படுவனீதமையுமெற்கென்க. (௧௨௧)

வேறு

என்றென்றிணைவாளிதுகூறுதலு
நன்றென்றயராநவிபிற்செலுநா
ளன்றின்றெனவேயரிதிற்பெயராக்
கன்றுந்துயரான்கடிதேகினனே. (௧௨௨)

துன்றிப்புனல்கண்சொரியச்சொரிய
வென்றிச்சிலையான்விழியிற்பிரியா
நன்றித்துணைநீத்துளனைந்தயரு
மன்றிற்பெடைபோலலறுற்றனளே. (௧௨௩)

தெவ்விற்பெரியார்குணனிற்சிறியார்
நொவ்விற்பழகார்நுவல்கானுறைவார்
வெவ்விற்கணைபாய்தரவீழ்தருமென்
னவ்விப்பிணைபோலநடுங்கினளே. (௧௨௪)

கடுவெந்தறுகட்கரியிற்பிரியாச்
சுடுவன்பரலிற்றுறுவிண்டுவின்மு
ளடுவெந்தழல்சுற்றிடநள்ளதனிற்
படுமென்பிடியிற்பரிவுற்றனளே. (௧௨௫)

இரையுற்றுளநவ்வியினங்களெலாங்
கரையிற்றனவெந்துயரிற்கலுழ்வா
ஞரையிற்றளர்வுற்றனவுண்கிலவாய்
நிரையிற்புதல்கவ்வினநின்றனவே. (கஉசு)

நோவொத்தெதிர்சேர்நுவரேறுகையெல்லாம்
வீவொத்தயர்வாள்விழுமத்தொடுதோய்
பாவத்தனவாய்நடமும்பயிலா
தோவத்தனவாயுறநின்றனவே. (கஉஎ)

தகுபைங்கிளைவண்புயமின்றளராப்
புகவின்கிளையுங்கனியும்புசியா
மிகுநன்கிளையொண்குயிலும்விரவுஞ்
சுகமென்கிளையுந்தொகுசுற்றியவே. (கஉஅ)

கரியும்பிடியுங்கவியுந்துணையு
மரியும்பிணவுமளகுமனமும்
பிரியும்புலியும்பிணவும்பிறவு
மெரியுந்துயர்கொண்டிடர்மூழ்கினவே. (கஉகூ)

கையிற்சிலையான்கடலிற்கவினூர்
மெய்யிற்கருகும்விதமார்மயில்கா
ளுய்யற்கரிதாமொருதிக்குருகீர்
மையற்கொடுநீருமறத்தினிரோ. (கங0)

எண்ணுவினைநன்கிலள்கண்படவே
பொண்ணுதெனவுள்ளமுணர்ந்துகொலோ
தண்ணார்நடமுந்தவிர்வுற்றெதிர்நீர்
கண்ணாயிரமுங்கடைபொத்தியதே. (கஙக)

கல்லுங்கவைதீர்கருணைக்கடலான்
புல்லுந்திருநாடுபுகுந்தனிரேன்
மல்லுந்தியதோண்மறவேனெனவே
சொல்லுஞ்சுகமேசுகமேயிருமே. (கஙஉ)

ஊன்வந்திடுகாயமொழித்திடுசூர்
தான்வந்தழிவேன்றனைநேடுபுநங்
கோன்வந்திடுமேற்குயிலீரொருகால்
வான்வந்துளவாறுவகுத்திடுமே. (கஙங)

என்றுங்கொடியேனிடரெய்திடவே
யன்றென்றுணைகொண்டரிதேகியநீ
ரொன்றுந்துயர்போயொழியப்பிணைகா
ளின்றென்னுயிர்கொண்டெளிதேகுடுமே. (௧௩௪)

என்னப்பலபன்னியிணைந்தழுவா
ளின்னற்படுபோதினிலீனிடையே
வன்னக்குசையாதிபகொண்மதியான்
முன்னிப்புகுமாமுனிகண்டனனே. (௧௩௫)

பொன்னங்கைகொலோபுலவோர்மகளோ
மன்விஞ்சையளோவனதேவதையோ
தன்னந்தனிநின்றழுவாடவறீ
துன்னுந்தகையென்றுளமுன்னினனே. (௧௩௬)

சீலப்புலனைந்தொடுநேர்செலவே
சாலத்தருநல்லறிவிற்றழுவி
மூலத்துணர்வின்னிடைமூட்டுபுசெல்
காலப்புணரிக்கரைகண்டனனே. (௧௩௭)

வேறு.

அழுதெழுமொழியினுடன்வரவெல்லாமகத்துளுன்னும்
விழிதமாதவத்தினுனும்வேள்வியிற்கிவர்ந்துகொண்ட
சமிதையுங்குசையுமற்றுமைந்தர்கைச்சாலைபோக்கி
திமிதன்மாமரபின்வந்தநேரிழைமருங்குசார்ந்தான். (௧௩௮)

உடுத்தழூஉமதியம்விண்ணுறெருவிகல்லுடுவின்யோகம்
விடுத்துமண்ணிழிந்தாலொக்கவிளங்குவாடன்னைநோக்கிக்
கடுத்துளமயர்ந்திட்டன்னேகலுழ்ந்திடேலகலுழ்ந்திடேலென்
றடுத்ததையுணரான்போலவன்புகொண்டினையசொன்னான். (௧௩௯)

வீயொப்பாய்விண்ணிற்றோற்றுமின்னொப்பாய்விளங்குகற்பிற்
றீயொப்பாய்கமலவீட்டுத்திருவொப்பாயுலகிற்கெல்லாந்
தாயொப்பாயென்னைவந்ததவறெனவுரைத்தான்றீமை
காயப்பாய்ந்தடர்த்துஞானங்கலைகண்டகருத்தினானே. (௧௪௦)

செங்கணீராறுபோக்கித்தீரமுந்திடருங்குண்டுங்
கங்கையுங்கானுமற்றுங்கடல்படக்கலுழாநிற்பாள்
பங்கயமலர்க்கணோக்கிப்பயப்பயப்பரிவினோடுந்
தங்கியவரவையெல்லாஞ்சமைவுறச்சாற்றினாளே, (௧௪௧)

௬0

வாயிடைப்பிறந்தமாசுமனத்திடைத்தெளியுமாறு
தீயிடைத்தெரிந்துகொண்டதேசுடைச்செம்பொனொப்பாய்
சேயிடைப்பிறந்ததீச்சொலெண்ணுபுசிந்தைவைத்த
நோயிடைத்துயரேலென்றுவின்னனநுவல்வதானான். (கசஉ)

தணத்திடும்விதியின்கூட்டந்தலைவர்க்குந்தருவதேயா
மணத்தலிற்பிரிவிலாரைவானினுங்காணலாகா
குணத்திறனுடையபன்னூற்கேள்வியாய்க்குறித்திங்கென்று
ணர்த்துவதென்னைமாயவாழ்க்கையினுறுதியூக்கம். (கசங)

இல்லவன்பந்தாங்கினிறைவற்கேயீறுண்டாகு
மில்லவளினிமையெய்தினிறையவனினிதுவாழு
மில்லவளாவிக்கேற்றதியற்கையேயிறைவன்றானு
மில்லவடனக்குமெண்ணிலின்னதென்றியம்பலாமே. (கசச)

கற்புடைத்திருவினார்தங்கணவர்தம்பிரிவுங்காணிற்
பொற்புடைப்புணர்ப்பினெண்ணிப்புன்கணைவெல்வராமா
லற்புடைத்தகைமையுள்ளாயல்லலுற்றயரவேண்டாம்
பிற்படத்தலைவற்காணப்பெறுவதும்பிடிக்குமன்றே. (கசரு)

என்றவனிசைத்தலோடுமிருகரங்கூப்பியார
நன்றடிதொழுதாளந்தநங்கைதன்குறியைநோக்கித்
துன்றியவுலகமெல்லாங்காப்பதர்ந்தோன்றறன்னை
மன்றலிற்பெறுதியென்றுவினிதுறவாழ்த்தினானே. (கசசு)

சனமிகுமுலகவாய்மைக்கூற்றிற்கோடுங்கிச்சாரச்
சினமிதுசெய்தானென்கையுணர்வினுந்தெளிந்துகொண்டேன்
கனமிதுபிறிதொன்றாகக்காண்கலையடைந்ததெய்வ
வனமிதுசனகன்செல்வமனையெனமனக்கொள்வாயே. (கசஎ)

இரும்பினுங்கொடியநெஞ்சத்திராவணன்முதலினாரோ
டிரும்பயந்தவிர்த்தலானுந்தற்புகழ்ந்திடாமையானு
மரும்பியவுலகுகாத்தலானுநல்லருளினானை
விரும்பினேனீதொன்றாலேவெறுத்துளேன்வெறுத்துளேனே. ( )

நெறியினிற்றகுநின்மாமன்றனைகொளென்னனையநீரான்
செறிவினிற்றந்தைஞானச்செம்மையிற்சிறுமையில்லான்
பிறிவினிற்கற்பினாரிற்பெரியைநீயென்னிற்பேணு
மறிவினிற்றலையாய்க்கியானேவறிவையுட்புணர்த்துகேனே. (கசகூ)

அற்படுவினைமாயாவுமேவலினமையும்பின்னர்ச்
சொற்படுமைந்தற்பெற்றுத்துயரினைத்துடைப்பமின்று
ரெற்படுதவத்திருண்டியாமுளேஞ்சாதகன்ம
முற்படுசடங்கம்யாவுமுறையினின்முடிப்பமாதோ. (௧௫௰)

பெருகுசீருடையமைந்தனுதயத்துமுன்னம்பீட்டிற்
செருகுநீடமையுந்தித்தீரத்துச்சிறந்தசெவ்விக்
குருகுலாம்புளினமீதுகுலப்பெருங்கடவுட்காற்று
முருகுபூசனையாலுள்ளத்தேற்றமுமுதயமாமே. (௧௫௧)

சாகையிற்படுபைந்தாருத்தடந்துறைநீர்கொண்டார
வீகையிற்சிறந்துதோன்றுமிளமரக்கன்றினுலே
மாகயக்கன்றைநேருமைந்தனையீன்றுமாசி
லோகையிற்படுமுனந்தவுவகையும்படுவதுண்டே. (௧௫௨)

இன்னவும்பிறவுநன்மையுடைத்திதுகாணிக்கானி
னன்னரின்வதிவாயென்னநவின்றுளாயந்துதேற்றிப்
பொன்னிளங்கொடியனுளைப்புனிதவான்மீகிபொற்பார்
தன்னதாச்சிரமந்தன்னிற்றகையொடுமடைவித்தானே. (௧௫௩)

மாவலிநின்றவந்திவண்ணன்போய்வன்மைப்பால
வேவலினின்றவெல்லாமிறையவற்குரைத்தலோடு
மாவலினிருகணீர்சோர்ந்தளகைநீத்திட்டவன்றிற்
சேவலினயர்ந்துநெஞ்சந்தேம்பினன்றியங்கிவீழ்ந்தான். (௧௫௪)

பிணிமனைப்பிறப்புணர்ந்தோராயினும்பிழையிலாரத்
தணிமனைப்பிரிந்திட்டாவிவாழ்வரோசனகியாவாள்
பணிமனைப்பாயலாக்கிப்பாற்கடற்றுயின்றோன்பாச
வணிமனைப்பிரிந்தாளேனுமவன்மனம்பிரிந்திலாளே. (௧௫௫)

இருதிற்றைத்திங்கட்டிங்களென்னுமாசுறுமுகத்திற்
குருதிச்செங்கமலக்கண்கள்கொழும்புனலிறைப்பச்சோர்வான்
பெரிதிற்கொண்டிளவறேற்றவொருவகைதேறிப்பின்ன
ரரிதிற்கொண்டாவிதாங்கியனுசரோடரசுசெய்தான். (௧௫௬)

உளங்கொளுமிறைவன்றன்னையுழுந்துருள்பொழுதுநீங்காக்
களங்கவிரியனையகூந்தற்கதிர்முலைச்சனகியென்னு
மிளங்கொடிமாற்றுணீங்கமலர்மகடமியேயின்பால்
விளங்கொளிமார்பந்தன்னில்வீற்றிருந்தருளினளே. (௧௫௭)

## சீதைவனம்புகுபடலமுற்றிற்று.

ஆ செய்யுள் - ௧௲௪௪.

# இலவணன்வதைப்படலம்.



அணிசெயானனத்தழகியைநீத்தபினழகனுமழகேனுந்
தணிசெயாவொரு பெண்ணென வரினுமே சார்பின்றித் தனித்தோர்
பிணிசெய்வாரிதியுடுத்தருநவமணியாகரப்பெருந்தீப [மேற்
மணிசெய்மேகலைபுனைந்தபார்மடந்தையேமனையெனவதிகின்றான்.

அன்னபோதினிலற்புதயமுனையென்றறைந்திடுமதிசீதப்
பொன்னுலாநதித்தடங்கரைவாழ்பவர்பொற்புடைத்தவப்பாலார்
பின்னுவார்சடைமுனிவரர்கொடுங்கொலைநிசாசரன்பெரிதீந்த, வின்
னலாலிடைந்தெய்திநீடாசிசொற்றெடுத்தெடுத்திவைசொன்னார். ()

தவத்தின்பாலிலேம்வேள்வியின்றகையிலேமதுமகன்றடைதன்னு
லவத்தின்பாலினேமையநின்னருள்சிறிதளித்திலையேலின்னற்
பவத்தினீங்கலேமென்றனர்நஞ்செவிப்படப்பழையவனேனு
நவத்தின்வந்துளானென்னனென்றுரைத்தனனாயகனவில்கின்றார்.

விடமுட்டங்குவேலையைவெறிதாக்கினர்விண்ணவரெனப்பொன்று
டடவுட்பொங்குபுமீச்செல்வான்கடலிகந்தசலமொன்றுருத்தேறி
வடவைக்கொந்தழல்விரிந்தனகுஞ்சியன்வயங்குருவிரண்டாகிக் [ன்
கடவுட்செந்தழலதனெடுந்தொடர்ந்தெனக்கனன்றெரிகடுங் கண்ணு

எதிர்ந்தபோரிடையெம்படைபடப்படவிடைந்திடைந்திரிந்துள்ள
மதிர்ந்தவானவரிறக்கிலரிதனமுதருந்தியன்றேவென்று
முதிர்ந்தவாண்மதிபற்றியுண்பொழுதினின்முடைகமழ்கடைவாயிற்
பிதிர்ந்தபாகமேயாமெனவெயிற்றிணைபிறங்கியபேழ்வாயான். (ரு)

ஆலகாலமுமஞ்சனக்குன்றமுமாரிருட்பிழம்போடு
நீலமேகமுமொருவழித்திரண்டவேணிகர்த்திடுந்தோற்றத்தான்
கோலமேருவின்கொடுமுடிபறித்தரவரசுமாமணியோடுங்
காலபாசத்திற்றொடுத்தொலிவான்செலக்கட்டியகழற்காலான். (சு)

பிரிக்குமூழியிற்பிறந்திடுமோர்கலிசுவற்றிவிண்பிடித்தோடித்
தெரிக்குமண்டகோளகைமுற்றச்சுடுகினுமவிந்திடாச்சினத்தீயான்
பரிக்குநீள்சிறைகொடுவிசும்பியற்றுவான்வச்சிரப்படவாங்குத்
தரிக்கலாதுவீழ்மலையிரண்டொருமலைதரித்தனதடந்தோளான். (எ)

எண்ணுமெய்ப்பெருங்கடவுளராயினும்படையொடுமெதிர்போத
வொண்ணுமேகடலமுதினும்பெரிதுறமுறைமுறையுவந்துண்ணும்
விண்ணுளோர்வயின்குறைபடச்சதுர்மறைவேதியன்விதிவேள்வி
பண்ணுமேனுநல்லாகுதிபறித்துண்டுபெருத்தபாழுதரத்தான். (அ)

பொன்னினன்னகரிறையொடும்வெஞ்சமர்புரிகுவான்புகுபோதின்
மன்னவென்னருஞ்செறுக்கரும்வலியினுன்மண்வதிந்திடவானி
லுன்னிவந்ததென்னெனவரியுரைப்பமீண்டுருத்தெதிர்மாந்தாதா
வென்னுமன்னவனுயிர்வருதினியொடுங்குடித்தமூவிலைவேலான். கூ

போற்றுங்கண்ணுதற்பரம்பொருளளித்தவப்பொங்கயிற்றலைச்சூலஞ்
சீற்றங்கொண்டுகையிருந்திடலியாவருஞ்செறுக்கருஞ்செயலுள்ளா
னேற்றங்கொண்டிடுமாற்றலனுமமுமிகலிலவணனென்பான் [ன்.
கூற்றின்வெவ்வுயிர்வாங்குமோர்கூற்றனுன்கொடியனகுணக்குன்று

கறைபடுத்தியநெஞ்சுடைபிக்கொடுங்காலன்மேற்கடுஞ்சாப
மிறைபடுத்தியவெங்கனல்விடுத்துநம்மேதகுதவம்யாவுங்
குறைபடுத்துதல்பேணிநின்னருள்வழிகூடினங்குறையாது
நிறைபடுத்துதியென்றிடவிராமனுநெடிதுறவுரைசெய்வான். (௧௧)

கும்பசம்பவன்முதலினோர்க்கன்றுரைகொடுத்ததுநுமரோரு
நம்புநல்லுரையாவதன்றோவுளநடுங்கலீர்நனிசேர்நும்
வெம்பெரும்பகைதணித்துமென்றிளையரிலிளையனைமிகநோக்கி
யெம்பிநின்பரமெறிதலிப்பெரும்பகையென்றனனிகல்வீரன். (௧௨)

வேறு.

தடம்பகையெறிதலாலேசத்துருக்கனனென்றோது
நெடும்பெயர்சிறப்பதற்கல்லான்மற்றொன்றுநினைத்தற்குண்டோ
வடுந்திறல்வென்றிவீரரிருவருநிற்பவாய்ந்திக்
கடும்பகைநினதேயென்னக்காட்டியகருணையம்மா. (௧௩)

அலைக்கொண்டவரவப்பாயலண்ணலோனேவறன்னைத்
தலைக்கொண்டுதலைவன்பாதம்வணங்கிவெஞ்சமம்வேட்டம்பொன்
மலைக்கொண்டபுயங்கள்விம்மிவலயத்தையிரிப்பத்தேர்மே
னிலைக்கொண்டுகடிதுபோனனிரம்பியவுவகையானே. (௧௪)

தொள்ளத்தின்வளைபாய்ந்தாழுங்கடலெனச்சூழ்ந்தசேனை
வெள்ளத்தினெழுந்ததூளிவிண்ணகமறைப்பவேகிக்
கள்ளத்தினிமிர்ந்தகண்ணார்காண்டொறுமவர்தங்காத
லுள்ளத்தினீங்காதாகியொண்ணகர்நீங்கினானே. (௧௫)

திளைத்திடும்பதுமராசிச்சிறைமனைப்படுத்துநாதம்
விளைத்திடுஞ்சுரும்பின்மாலைவிடுப்பருநிகளமாக
வளைத்திடும்வளங்கள்யாவுங்காண்பவர்மனத்தைவாங்கித்
தளைத்திடும்பழனவேலிதணந்துபோய்ப்புறவஞ்சார்ந்தான். (கசு)

தடப்பெருங்கானந்தோறுங்கருவிளைத்தாதைத்தும்பி
யிடப்பவுமிடந்ததாதினிருள்புகுந்தினமான்சேணி
னடப்பவுநடந்தநவ்விநனிகொள்பாற்பெருக்கையோடிக்
கடப்பவுநோக்கிநோக்கிப்போயினன்கதிர்கொள்வேலான. (கஎ)

குழியமானினங்களெல்லாங்குலமணித்திகிரித்தேரி
னொழியபேரரவத்தாலேமேலெழீஇயிரைத்துநோக்கிக்
கெழியபூந்தருப்பைக்கானந்தொறுந்தொறுநிற்பக்கேண்மை
தழியவான்மீகியோகத்தபோவனமதனைச்சார்ந்தான். (கஅ)

குண்டிகையினன்மான்றோலின்போர்வையன்குடையனூன்று
தண்டினன்சடையன்முந்நூன்மார்பினன்றகைநால்வேதத்
தெண்டிரையுளத்தன்றேசன்மரவுரியுடையன்றெய்வப்
பண்டிதமுனிவன்றானுமவனெதிர்பரிந்துவந்தான். (ககூ)

பாற்கரன்குலத்தன்பால்வெண்மதிக்குடையுடையனானை
மேற்படுமுளத்தன்றேரினிழிந்திடும்வினையனாகிக்
காற்கழலொலிப்பப்போகிக்களியொடுஞ்சிறந்துவந்த
நாற்கவிமுனிவன்பாதநாண்மலர்சென்னிசேர்த்தான். (உ0)

கழிபலன்விளைகநன்னர்நிகழ்பலன்கழிகபின்னை
ரெழுபலன்றடையொன்றின்றியெதிர்கவென்றாசிகூறி
யழிபலந்தழுவுங்கானத்திருக்கைநன்களித்தான்யாகத்
தொழிபலன்புரவியோடுமேற்றிசையுவரியுற்றான். (உக)

விருதத்துநடித்துவட்டவெஞ்சகடுருட்டிநீண்ட
மருந்திற்சென்றடர்த்தபாதவனசநம்மணவைக்கோமான்
பரிதிச்செங்கதிர்வேலோச்சிப்பற்றலர்ச்செறுத்தவென்றிக்
குருதிச்செங்களத்தையொக்கச்சிவந்ததுகுடபாலெல்லாம். (உஉ)

கன்னியாகாயந்தாழாக்காலையிற்போதிநாளை
மின்னுலாமெயிற்றினானைவெல்வதுசரதமாமா
லென்னுமாறிளையகோவுக்கினிதெடுத்துரைக்கும்வண்ண
முன்னிவாய்விண்டாலொக்கமுளைத்ததுமுளைவெண்டிங்கள். (உ௩)

பீடுலாமதியந்தேவர்க்கருங்கலைபின்னமாக்கி
வீடிலாதளிக்குநாளிற்சிந்தியவமுதவிந்து
கூடுநாளறிந்துவந்தக்கலையொடுங்கூடுமாறு
நாடுவான்றோற்றியென்னவிளங்கினநகைமீனெல்லாம். (உ௪)

சந்தனமரவநாகம்பாளிதந்தமாலமூன்றுய்
பந்திசெய்வனத்ததாயபற்பலவளங்களாலு
மந்தமிலுபகாரஞ்செய்முனிவனதருளால்யாக
மைந்துடைமறைகொள்கானத்தொருசிறைவதிந்தான்மன்னோ. ( )

இன்னலோர்பாலதாகவொருபுடைதவத்திற்கேன்ற
மன்னியநினைப்பதாகவிராமனைமனத்துநாப்பண்
டன்னில்வைத்துடையகற்பின்றகையினுளதுபோதின்பாற்
பன்னருந்தகையமைந்தரிருவரைப்பயந்தாளன்றே. (உ௫)

மைவந்தநிறத்திராமற்கண்டெனமைந்தர்தம்மை
மெய்வந்தமுனிவனேக்கிக்குசலவங் ‡ கொண்டுமேனி
தைவந்திவ்வுலகமெல்லாம்புரமின்களென்னச்சாற்றிக்
கைவந்தகடியவிஞ்சைக்கலைமறைக்காப்புஞ்செய்தான். (உ௭)

பெருகட்லிராமற்கோநற்சந்ததிபிறந்தவென்ன
முருகடவியின்கணல்லோர்மொழிந்திடமுதிருமோகை
யொருகடலமரினேகையொருகடலுள்ளமொன்றி
யிருகடல்கோப்பதாகவிருந்தனனிளையவீரன். (உ௮)

நயக்குநங்கடவுளாயநாயகர்மைந்தர்செவ்வி
பயக்குமாமுகங்காணுதுபிரித்ததுபாவமென்னு
வுயக்குநீடின்னல்வேலையொன்றிரண்டோடுமோங்கித்
தியக்கொடுபெருகிற்றுலச்சேவடிக்கழலினுற்கே. (உ௯)

நிலைக்கடற்கருணைநெஞ்சினிரந்தறுபத்துநாலு
கலைக்கடற்பெருக்கடைத்தோற்கினையனகாதன்மும்மைத்
தலைக்கடலென்னேவாற்றித்தரித்தனன்றரிப்பமேல்பா
லலைக்கடற்குளித்தவெய்யோன்குணகடலலங்கவந்தான். (௩௰)

மைம்மலர்ப்பொய்கைத்தோன்றுவாடிட்டாவனசம்வைத்த
கைம்மலர்க்கடவுடோற்றுங்காலையிற்கடன்களாற்றிக்
கொய்ம்மலர்க்கணங்கடுவிக்கோதில்கோமுனிவன்செவ்விச்
செம்மலர்ப்பாதஞ்சென்னிதீண்டுபுதேரிற்போனன். (௩௧)

---

‡ லவம்-பசுவின்வான்மயிர்.

தூயரின்முதியோரானமுனிவரர்நெறிமுன்சொல்லத்
தீயரைவதைப்பானுகக்கானெறிச்செல்லாநின்றேன்
மாயிருந்தவத்தால்வாலகிலர்முனம்வாழ்த்தவந்து
பாயிருடுரப்பான்ருேற்றும்பரிதியங்கடவுளொத்தான். (௩௨)

செயப்படும்வினையனுகித்தேவருமுனிவர்யாரு
முயப்படும்பொருண்மேற்கொண்டுகான்பலவொருவிப்போகி
வியப்பொடுந்திரியுமாற்றன்மதகரிவேட்டம்வேட்ட
வயப்பெருஞ்சீயமென்னமதுபுரமதனைச்சார்ந்தான். (௩௩)

வேறு

வெந்தீவினையவுலகின்விளியும்யாக்கைவிழுங்கும்
கொந்தீமச்செங்கனல்போல்விளங்குங்கொள்கைக்கொடியோன்
முந்நீருலகமுழுதுமுடியக்கனலுமுதரச்
செந்தீவினைவையவிப்பான்றில்லவேட்டஞ்சென்ருன். (௩௪)

கங்கம்பற்றித்தொடரவெதிருங்கடியகளிற்றின்
சங்கம்பற்றிப்பிழிந்துகுருதிச்சாறுகொள்ளாப்
பங்கம்பற்றிப்பருகிப்பாங்கர்ப்பதுங்கிப்பாயுஞ்
சிங்கம்பற்றிச்செங்கட்டீயின்வெதுப்பித்தின்னும். (௩௫)

கையாற்கவரியினங்கள்வவ்விக்கவ்விக்கறித்து
நெய்யார்நிணமுண்டுண்டுநெஞ்சங்களித்துநிற்கு
மையார்நிறத்ததுணைத்திண்வயிரக்கோட்டுக்கவய
மையாறிரட்டிவிழுங்கியாராதாவிக்கொள்ளும். (௩௬)

கருமாவினத்தைவிழுங்குங்கடுவாய்நுகருங்கரடி
யொருமாவதனைப்பற்றியுள்வாயொருபாலொதுக்குஞ்
செருமாவருமானினமுண்டொழியுந்துதிக்கைச்சிங்க
விருமாவொருகையடக்கியெஞ்சாவயிற்றுளெறியும். (௩௭)

பிறைபாழ்படவேயெறிக்கும்பெருவெள்ளெயிற்றுப்பின்னிக்
குறையாநிணத்திற்றேயுங்குடர்வெண்மாலைகொளுவுங்
கறைவாயிருபால்வழியக்கான்வாழூன்வாய்ப்பெய்து
நிறையர்வயிற்றைத்தடவிநெடிதேயினைத்துநிற்கும். (௩௮)

வீய்ந்தேவனமாமுடியவெறிதாயினகான்முழுதுங்
காய்ந்தேபெருவாய்ப்பெய்துகன்றிச்சலித்தகையுந்
தேய்ந்தேகுறைந்தபல்லுந்தின்றேதின்றேபகுவா
யோய்ந்தேயொழிந்ததல்லாலுதரநிரம்பிற்றிலையே. (௩௯)

அத்தக்கிரியினகன்றவகலத்தெண்கின்றந்தப்
புத்தப்புதியவயிரமாலைபொலியப்போட்டு
முத்தக்கனலியெயிற்றேடரிமுள்ளெயிறுகோத்து
மத்தக்கரியின்குடரால்வன்னச்சரமுமணிந்தான் (௪௦)

காயாடரவப்பெரியகடகங்கையிற்கவினப்
பாயாவருகோளரியாமகரக்குழையும்பரித்துச்
சாயாவிறல்வல்லியத்தின்றலைப்பூங்கழல்காறயங்க
மாயாவலியினுடுப்புவாகுவலயம்புனைந்தான். (௪௧)

பாடார்புவியிலுள்ளபருமாமணிசெய்பைம்பூண்
போடாவமரர்குலப்பூண்போரிற்கொண்டுபுனைவோன்
காடார்விலங்கின்கணங்கள்கணியாவுண்டுங்கழியாப்
பீடார்பிசிதவிருப்பாற்பேயுமாயினனே. (௪௨)

களங்கம்பொதியுஞ்சினத்தீக்கதுவக்கருகிக்கன்றி
யுளங்கொள்வனமாவெவையுமுள்ளும்புறம்புஞ்சுமந்து
விளங்குஞ்சிகரமீதேவிரியுஞ்செக்கர்மிளிர
வளங்கொண்மலையொன்றியங்கிவருதல்போலவந்தான். (௪௩)

வேறு.

தொனித்திமிர்மகரவேலைநள்ளிடையுலகுசூழப்
பனித்தெழுவிடமன்னானைப்பதைத்தழன்றுருத்துப்பாரா
நனித்திறல்வீரர்யாருநாம்படநடந்துசாபங்
குனித்துவிண்வெளிபடாதுகொடுங்கணைபரப்பிவிட்டார். (௪௪)

எல்லுறுத்தியபோர்வாளியளப்பிலவெதிர்ந்தவெல்லாங்
கல்லுறுத்துறையிற்றானேபொடிபடக்காண்பதல்லான்
மல்லுறுத்தியதோளானுக்கூறொன்றும்வருத்திற்றின்றே
யல்லுறுத்திமங்கொல்வாட்டுமலர்கதிரதனையம்மா. (௪௫)

முடிகைகண்டிடுவான்பாய்ந்தமொய்கணைமுரண்களெல்லா
மொடிகைகண்டுயர்ந்ததோளானெய்யெனவுலகமெல்லா
மடிகைகொண்டயரவாங்கோர்மராமரமுரித்துநள்ளிற்
கடிகைகொண்டுருமிற்சீறிக்கடுஞ்சமரதனின்மூண்டான். (௪௬)

திண்ணெடுங்கோடுபோனசிற்சிலயானைமுத்தப்
பண்ணெடுங்கும்பம்போழ்ந்தபற்பலபகடுவீசுங்
கண்ணெடுங்கரங்களற்றவளப்பிலகரிகள்கால
விண்ணெடுஞ்சினவேறன்னான்வெய்யகைத்தண்டின்மாதோ. (௪௭)

கரிமதக்கலுழியாடிக்காலனிற்கறுத்தும்வீரர்
விரிநிணத்தசையின்மூழ்கிவருணனில்வெளுத்தும்வேகப்
பரிநிரைக்குருதிதோய்ந்துபரிதியிற்சிவந்தும்பற்பல்
வரிநிறத்தமைந்ததன்றேகணத்தினவ்வயிரத்தண்டம். (௪௮)

தெறுதலிற்கூற்றுமாகுந்திசைத்திசைசெல்லயாவு
மெறிதலிற்காலுமாகுமிருங்கரிமருப்பினெற்றி
மறிதவப்பொறிகளெங்குமடுத்தலால்வயங்குசோதி
துறுகனற்றிரளுமாகுஞ்சுடர்மரத்துண்டமொன்றே. (௪௯

பொருதலையிவர்ந்தவென்றிவெவ்வலிப்பொம்மற்பாசத்
தொருதலைகூற்றம்பற்றவுள்ளழன்றுடன்றசீற்ற
மொருதலைபிடிப்பத்தானேமந்தரகிரியையொக்கக்
கருதலருடன்றசேனைக்கடலிடைத்திரிந்தானன்றே. (௫௦

சுற்றினசுழன்றவீரரெனுமிகுஞ்சுறவஞ்சூழ
முற்றினகிடந்தபாரமுரட்கரிமகரமெல்லா
மெற்றினதிசையினன்னவிரிகடற்பெருக்கமோடித்
தெற்றினசிதைந்தவாசித்திரணெடுந்திரைகளெல்லாம். (௫௧

பேய்மடுத்தெழுந்துசூழவாருயிர்ப்பெருக்கமெல்லாம்
வாய்மடுத்தெழுந்துகுப்புற்றுடியமறங்கொள்வெய்யோன்
சேய்மடுத்தெழுந்ததோற்றச்செருவிடைச்செறுநரென்னும்
வேய்மடுத்தெழுந்தசூழல்வீங்கெரிவிரிவுமொத்தான். (௫௨

எண்வெடித்தெழுந்தகோபவுருப்பமேலிருத்தலாலே
மண்வெடித்ததையொன்னார்மொய்ம்பெனுமலைமடிந்துசாய்ந்த
விண்வெடித்தயரவோதைவெடிபடும்வேழக்கோட்டுக்
கண்வெடித்துதிர்ந்தவெங்குங்கதிர்மணிமுத்தமெல்லாம். (௫௩

குலத்தொருங்கமைந்தவேழக்குழாங்கரம்பிடித்துமேகத்
தலத்தெறிந்துதரத்துள்ளேவாய்வழிதரிக்கும்வீர
னிலத்திடனிலாதுபாய்வினிரந்தவங்கிகிதமென்னு
முலத்தலிலந்தகாரக்கொருகதிரோனுமொத்தான். (௫௪

இடைபடுபுவனமூன்றுமெரிபடவெரியுமூழிக்
கடைபடுகனலின்வெய்யகட்கதிர்கதுவலாலே
மிடைபடுசின்னமாகிவீய்ந்தனவீயவீயா
புடைபடுமுடுக்கர்தோறும்புகுந்தவவ்விருளின்பொம்மல். (௫

நலியவாக்கொண்டிட்டிவ்வாறமர்க்களத்துணவுநாடி
வலியகாற்சுழல்விற்சூழவருகுவான்றன்னைநோக்கி
மெலியவாய்த்திசைகடேம்பநாணொலிவிளைத்துவீரன்
கலியகாற்புரவித்திண்டேர்கதுமெனக்கடவிச்சென்றான். (௫௬)

கொந்தழல்விரிந்தாலன்னகுஞ்சியான்குலிசவேற்கை
யிந்திரன்பகையைவென்றோற்கிளையவற்கண்டிட்டின்னே
யந்தமில்விலங்கையார்ந்துமவிந்திடாப்பசியேற்கிங்ஙன்
றந்தனன்பயங்கொள்வேதன்றயங்குநல்லுணவையென்றா. (௫௭)

நிறுத்தனனிறுத்திட்டஞ்சாநிலையினனென்னநெஞ்சங்
கறுத்தனன்கறுத்துத்தேய்ந்தகடிகைவிட்டயலோர்தாரு
வொறுத்தனனொறுத்துக்கைக்கொண்டோடினனோடிமுன்ன
ரிறுத்தனனிறுத்துவெஞ்சொலிடியெனவிளையசொன்னன். (௫௮)

யாவனீயாதுகொள்வானெய்தினையெனதுவென்றிக்
காவனீகடந்ததென்னைகடிதுநின்னுயிரைக்காலற்
கீவனீதுறுதியென்றுவிசைத்தனனின்னற்றீய
பாவநீடுருவங்கொண்டுபடிவந்தபடிவமன்னான். (௫௯)

மடன்வந்தவஞ்சநெஞ்சத்திராவணனென்னும்வன்கட்
டிடன்வந்தகளிற்றைச்செற்றசிங்கத்திற்கிளையசிங்க
முடன்வந்தவொருவன்யானின்னுயிர்கொளுமுறுதியாய
கடன்வந்துகொள்ளநின்றேன்மற்றிலேகருமமென்றான். (௬0)

என்றலுமெயிற்றுப்பேழ்வாய்திறந்துருமேறுமேங்க
நன்றிதுநன்றிதென்னாக்குநக்கெயிறுதேயத்
தின்றுதின்றெரியிற்சீறிச்செங்கையிற்றருவைத்தீரக்
கன்றிநின்றெறிந்திட்டார்த்தான்காளைமேற்காலனன்னான். (௬௧)

பெறுகலையிளவல்சாபங்குனிந்ததும்பெரியநாணி
யிறுகியதுடிப்பும்வாளியெதிர்ந்ததும்யாவர்காண்பார்
முறுகியவிசையினன்னமுரட்டருமுடுகிமீது
குறுகியபோதிற்பாரிற்குறுந்துகள்கண்டதன்றே. (௬௨)

அக்கணதருவொன்றிற்றவளவையின்வெகுளிபொங்க
மிக்கவன்மரமுங்கல்லுமிடைவிடான்விடுத்தலோடுந்
திக்கெழுமிசையினான்வெஞ்செருமுனைப்பகழிசிந்த
வுக்கவுமனந்தமொன்றென்றெதிர்ந்தவுமொழிந்தவின்றே. (௬௩)

சூழ்ந்தனவாகைநம்பிசுடுசரந்தூண்டத்தூண்ட
வாழ்ந்தனதிறலான்கையேற்றடுத்தடுத்தெறிதலோடும்
போழ்ந்தவுமில்லைபோழாப்புகுந்தவுமில்லைவெற்பு
வீழ்ந்தவுமில்லைவீழாவொழிந்தவுமில்லையன்றே. (௬௪)

தடந்திரிந்திடவெற்பொன்றுதடக்கையாற்பறித்துமீது
மடந்திரிந்திடாதநெஞ்சன்வலந்திரித்தெறிதலோடும்
விடந்திரிந்தனையவாளிவென்றியான்விடுப்பமாறி
யிடந்திரிந்தெய்துமாற்றினிருநிலம்வீழ்ந்ததன்றே. (௬௫)

வேறு,

தீநாறிருவிழியானனிதிருகித்திசையெட்டு
மேனைக்குருமுலகெங்கணும்வெருவப்பெருவிறலா
னானைதிழிகீழ்போயினவேரோடுமடங்க
மானைக்குருமேலாய்வரவடதாருவொன்றெடுத்தான். (௬௬)

காலுய்த்தெழுதிரையுய்த்ததிர்கடலுய்த்திடுகடிய
வாலுய்த்தெனவுருமுய்த்தெனவழலுய்த்தெனவழலார்
கோலுய்த்தெனவளையுய்த்தெனவயிரத்தொடுகுந்தம்
வேலுய்த்தெனமழுவுய்த்தெனமிசையுய்த்தனன்வெய்யோன் (௬௭)

நொடிபட்டிடுபொழுதிற்பகர்நூறப்படுவீறு
விடிபட்டெனவெடிபட்டசொலிளையோன்கணையேவ
வொடிபட்டதையுதிர்பட்டதையொலிபட்டதையுடலைத்
துடிபட்டதுதுவைபட்டதுதுகள்பட்டதுதுருமம். (௬௮)

சிற்றுளியையனையானிவன்பெருவெந்திறல்செய்வான்
மற்றுன்மடிகில்லானெனமலையொன்றினைவவ்வி
யிற்றுனெனவுய்த்தான்கொலைமுதியான்சிலையினையான்
பற்றார்வெருவருமிந்திரகணையொன்றுபணித்தான். (௬௯)

மாறாய்வெளியடையாவெதிர்வருமாமலைமார்பி
னூறாயிரமுகமாநெடுநொறில்வெங்கணைநுழையக்
கூறாயதுவேறாயதுகுறையாயதுகுறுகி
நீறாயதுநிலனாயதுநெடிதம்மலைநிமிடம். (௭௦)

கரியுக்கனமரையுக்கன்கலையுக்கனகழைவா
யெரியுக்கனமரனுக்கனவிலையுக்கனவிகலா
ரரியுக்கனபுலியுக்கனவரவுக்கனவரவி
னுரியுக்கனவுழையுக்கனவுதிரம்மலையோடும். (௭௧)

குலைசிந்தினகளிசிந்தினபணைசிந்தினகுலமாத்
தலைசிந்தினகுடர்சிந்தினதாள்சிந்தினவெல்லா
மலைசிந்தினநதிசிந்தினவிடர்சிந்தினமலிபோ
யலைசிந்தினதிசைசிந்தினவதர்சிந்தினவம்மா. (எஉ)

கலித்தாருவும்வலித்தாணுவும்பொடியாயினகாணு
வொலித்தானினிவிடிற்றீதென்வுருத்தானெனதுணைவாய்ப்
பலித்தானெனமணித்தேரொடும்பற்றாவுயிர்பருக
வலித்தானெரிசினத்தீவிரிமறப்பாடுடைமனத்தான். (எந)

முதிராவுயர்தருவோர்பணைமுடிமீதுகொண்மலையொன்
றெதிராவருமதுபோலொருகரமீதிலெடுத்தே
விதிராமிகைவிசையாவழல்விழியாமனம்வெகுளா
வதிராநனியழலாவுறவடர்ந்தானெதிர்நடந்தான். (எச)

செம்பொன்றியநிறனுலொளிர்சிகையான்றிரிதலையாம்
வம்பொன்றியவயில்கைக்கொளில்வலியானெனமதியாக்
கம்பொன்றியகைக்கோகனதக்கட்டிருநெடுமா
லம்பொன்றுபணித்தானிசையல்லாலணியில்லான். (எரு)

நடியாவெதிர்புகுமப்பெருநவில்வெங்கணைநாடிக்
கொடியான்வரையகன்மார்புகுளித்திட்டதுகுன்றித்
துடியாவலிசோராவிழிசுழலாவுயிர்தொலையா
மடியாவெதிர்வீழ்ந்தான்கொலைவஞ்சம்பொதிநெஞ்சன். (எசு)

வேறு.

வஞ்சன்மேல்விழப்பாரேழுநடுங்கினதவத்தின்வாய்ப்பாற்
கஞ்சன்மேதகவன்னோர்க்குக்கழிந்தனநடுக்கங்கல்லா
நெஞ்சன்மேல்வீழ்ந்தவூனுண்பறவைபோர்நிரந்தவாகை
மஞ்சன்மேல்வீழ்ந்தவானோர்வழங்கியமலர்ப்பூமாரி. (எஎ)

நவத்தினார்திருவுநன்மைப்பழமையாரமைவுமிம்மைப்
பவத்தினார்காட்டுமாபோற்பைம்பொனார்நம்பிசென்னி
யவத்தினான்றன்னைச்செற்றகொற்றத்தாலுயர்ந்ததான்ற
தவத்தினார்புகழநாணித்தாழ்ச்சியுமுடைத்துமாதோ. (எஅ)

தென்வந்தவருணராகத்தேசிகமயத்தசெவ்வி
மின்வந்தநகரினுளைவென்றவற்செற்றவெற்றிக்
கோன்வந்தசிலைக்கைத்திண்டோட்கோளரித்திறலினாற்குப்
பின்வந்தபலன்யானின்றேபெற்றனனெனவுட்கொண்டான். (எகூ)

தாளுந்தித்தடந்தேர்வெய்யோன்றாழ்கதிரளக்குஞ்சால்பி
னீளுந்திக்கெட்டும்போற்றுநெடுநகரொன்றுநீங்கா
வாளுந்திப்பிறழுஞ்செம்பொன்மணிகொழித்தெறிகல்லோலக்
காளிந்திக்கரையிற்செய்தான்காமனார்காட்சியன்னான். (௮0)

வேறு.

நன்றுளவிந்நகர்நவிலெத்தீபமுந்
தொன்றுளவளைகையுந்துலங்குகற்பக
நின்றுளநாகமுநிரந்தநீணக
ரொன்றுளதெனினிகருரைக்கப்பட்டதே. (௮௧)

நூலினாற்பெருகியவுயர்ச்சிநோக்குபு
மாலினாற்சிற்சிலர்மதிப்பதெங்ஙனே
மேலினாற்றிசைதிகழ்வேந்தன்றேரொரு
காலினாற்கடப்பதோகனகமாடமே. (௮௨)

பாக்கமும்புறவமுமலையின்பண்ணையின்
வீக்கமும்விளைப்பனவிளைவுஞ்செந்திரு
நோக்கமும்பாரிடைநுனிக்கிலெந்நக
ராக்கமுங்காட்டுவவணிகொள்வீதியே. (௮௩)

பல்குடையிருள்செயப்பகல்செய்தெங்கணு
மிலகுடைமணியரசிருக்கைநோக்குமே
லலகுடையணிநகர்த்தருவினான்றபொன்
னுலகுடையொருவனுமுள்ளம்வைக்குமே. (௮௪)

மொய்க்குமோகையினிதுநகர்முன்னுள்ளதே
லுய்க்குமோதக்கடற்புவியையுற்றுமா
றுய்க்குமோவளக்கவுந்துணிந்துசேவடி
வைக்குமோதிலகமாய்வனைவதல்லதே. (௮௫)

செய்ப்படுபெரும்பொருட்டிறத்திற்செம்மைதீ
ரேய்ப்படுவிழுப்பொருணுட்பத்தெண்ணரும்
பாய்ப்படுவடகலைப்பரவைப்பாவலர்
வாய்ப்படுநாமமுமதுரையென்பவே. (௮௬)

வேறு.

தோமியாவையுந்தீர்மாடமிசைநின்றுஞ்சுருக்கின்மாலை
நேமிவான்புள்ளின்கூலயமுனையைநெடிதுநம்பி
பூமியாளணிகொள்கூந்தற்பின்னலிற்புரிந்துநோக்கிக்
காமியாநின்றுநின்றிக்கடிநகர்காக்குநாளில். (௮௭)

திசையினோர்தொழுந்தம்முன்னையிருவருஞ்சிறப்பினாலாங்
கசைவிலாவொருவர்மைந்தரிருவரையுடையாராக
நசையினோடறத்தின்வாய்ப்பினல்வினைநணுகலாலிங்
கிசையினோன்றானுமைந்தரிருவரையுடையனானான். (௮௮)

தவாவிசையுடையவென்றிச்சத்துருகாதிதாழ்வில்
சுவாகுவென்றினையபேரத்தோன்றலார்தமக்குநல்கி
யவானகரிதற்கும்பின்செய்விதிசைக்குமரசுநாட்டி
யுவாவுறுகடலினொற்றைவலம்புரியொலிப்பமீண்டான். (௮௯)

நணிதருந்தரங்கசாலநரலைவாயெழுந்தகஞ்சிற்
றுணிதரும்பவத்தைவீட்டுஞ்சுருதிமாமுனிவன்றானுங்
குணிதருமுகிரினாரசிங்கத்தின்குருளையன்னார்க்
கினிதருஞ்சடங்கியாவும்விதிமுறையியற்றியிட்டான். (௯0)

நசைகொண்டவடிவின்மிக்கநல்லெழிற்குமரர்மேனிப்
பசைகொண்டகருப்பவீரம்பற்றறப்பவித்திரஞ்செய்
குசைகொண்டும்பசுவின்வாலாங்குரங்கொண்டுந்துடைத்தலாலே
யிசைகொண்டபெரியநாமங்குசலவரென்றிசைத்தான். (௯௧)

கண்ணியநெறியிற்றாயகாதலாறங்கத்தோடு
நண்ணியசுருதிநான்குநவையறநன்னர்நல்காத்
தண்ணியசொற்றீர்தெய்வக்கலையினாற்றன்னாற்செய்த
புண்ணியவிராமகாதைப்பனுவலும்போதித்தானால். (௯௨)

மண்கொளாக்கற்பினன்னைமம்மரிற்றீர்ந்துவைக
விண்கொளாவிசையிற்றாமப்பனுவலைவியந்துபாடா
வெண்கொளாக்களிப்பின்மைந்தரிருவருமிசையினோடுங்
கண்கொளாக்காட்சியோடுங்கலையொடும்வளருகின்றார். (௯௩)

ஈண்டருந்தகையமைந்தரின்னணம்வளராநிற்பத்
தாண்டுவெம்புரவிவீரன்றவமுனிதன்பாற்சாரிற்
பூண்டமாதவத்தைத்தாழ்க்குமென்பதுபுந்திசெய்திட்
டாண்டுவந்தடையானாகியணிமதில்யோத்திபுக்கான். (௯௪)

கள்ளிடைமலரும்போதுங்கலவையுங்காசுங்காசி
றெள்ளிடைப்பொன்னுமுத்துஞ்சிந்துபுகிடத்தலாலே
யெள்ளிடையேனுங்காலினியங்குவாரியங்கற்கெங்கும்
வெள்ளிடைகாணாவீதிதோற்றினான்விளங்குவேலான். (௯௫)

ஆங்கழகென்னுஞ்செல்வத்துணைவனுந்தானுமாகப்
பூங்கழற்பொருவேனம்பிதோற்றலும்பொருப்பைவென்று
வீங்கியமுலையார்வீதிதொறுந்தொறுங்காணும்வேட்கைப்
பாங்கியரோடுந்தாமும்பருமணிமாடந்தொக்கார். (கூசு)

வேறு.

வேளோவல்லன்வேளிவனுவான்வேளாகி
னீளோர்செங்கைத்திண்கழையில்லானிலையாயிற்
கேளோவென்றான்கேடுறுவீர்மால்தருவானக்
கோளோனென்றேகொள்ளுமினென்பாரொருபாலார் (கூஎ)

விண்ணுளிருந்தானேயிவன்விண்ணுடுளனாகின்
மண்ணுளிருந்தாம்வான்முலைசேரான்மதிகேடீ
ரெண்ணுளிருந்தானெங்ஙனுரைக்கீரின்னேநங்
கண்ணுளிருந்தான்காணுமினென்பாரொருபாலார். (கூஅ)

போதாநின்றானிற்பதுகாணீர்போதானேற்
றூதார்பைந்தார்நல்கிலனல்குந்தருமாகி
லேதாய்நாணோடெந்துகில்கொண்டானீவார்கள்
பேதாய்கொள்ளாரோபெரிதென்பாரொருபாலார். (கூகூ)

ஐயற்குண்டேயாண்மையும்பார்க்குமரிதாய
வெய்யற்செற்றான்வேள்வலியானோவேளோபோர்
செய்யற்காகாமெய்யிலியாகிற்சிறியேமிங்
குய்யற்காமாறுண்டுகொலென்பாரொருபாலார். (கOO)

ஈரஞ்செய்யுந்தாமரையுள்ளாள்பொன்யாமுந்
தீரஞ்செய்வேடாமரையுள்ளேந்தெரியாதே
சோரஞ்செய்வாட்டோய்ந்தனனம்பாற்றோயானேல்
வாரஞ்செய்தான்வஞ்சகனென்பாரொருபாலார். (கOக)

பெண்ணாவீரிக்காளைநங்கற்புப்பெருவேலி
யெண்ணார்மாமைக்கொம்பினெறிந்ததெறிந்தேயுங்
கண்ணார்காதற்செய்வினைகாமப்பயிர்நல்கி
யுண்ணாதேகுமென்னைகொலென்பாரொருபாலார். (கOஉ)

ஆறாநின்றசிந்தையன்வீதியயல்செல்லாத்
தேறாநின்றான்சென்றுமிமைப்பிற்றிருகாநின்
றேறாநின்றகாதலினெங்கட்கெதிர்தோற்றி
மாறாநின்றான்மாயவனென்பாரொருபாலார். (கOங)

சுண்ணந்தூவித்தூளிவிளைப்பாரொருபாலார்
தண்ணெனச்சேறுஞ்சந்தமிறைப்பாரொருபாலார்
வண்ணந்தாழுமாலைபடுப்பாரொருபாலார்
பண்ணின்றீஞ்சொற்பாடல்பரிப்பாரொருபாலார். (கoச)

ஆகேமாகேமாருயிர்வில்வேளடுமேனும்
வீகேம்வீகேமேவிடிலென்பாரொருபாலார்
நோகேனோகேனோக்குதியொன்றுநுவலாதே
யேகேலேகேலென்றுதடுப்பாரொருபாலார். (கoரு)

வேறு

இன்னவாறிசைந்துதம்பினெதிருரையியம்பியெங்கும்
பொன்னனூர்மயங்காநிற்பப்புனைமூரறந்துபோகி
யன்னையாயுலகுக்கெல்லாமாருயிர்த்துணைவனுந்தன்
முன்னையான்றனதுசெவ்விமுளரியஞ்சரணந்தாழ்ந்தான். (கoசு)

தாழ்தலுமெடுத்துமார்பந்தழீஇக்கொண்டுதகையினின்பஞ்
சூழ்தருமுவகையுள்ளேதுண்ணெனவெழுந்துதுள்ள
வாழ்தலுமினியவாய்மைவழங்கினான்மறங்கொண்மூன்றே
டேழ்தருமுடியினானையெறிந்தபோரிகற்றிண்டோளான். (கoஎ)

செல்த்தகுகானத்துண்டேசெய்திமற்றென்னமுத்தீக்
குலத்தவர்குசலரென்றான்குசலவருதயம்விள்ளான்
புலத்தமைவேதவாய்மைப்பொங்கழற்புனிதச்செல்வக்
கலைத்தவமுனிவன்செஞ்சொற்கடைப்பிடித்துடைமையானே. கoஅ

## இலவணன்வதைப்படல முற்றிற்று.

ஆ செய்யுள் - கசுருஉ.

---

# சம்புகன்வதைப்படலம்.

---

தொன்னிகழ்ந்தமாமறைதிளும்பிநின்றுதுள்ளவே
யென்னிகழ்ந்தநேமியானின்னணம்விளங்கலு
மின்னிகழ்ந்தசூலவேன்மிடற்கொள்வெய்யவன்வதைப்
பின்னிகழ்ந்தயாவையும்பெரிதெடுத்துரைத்துமே. (க)

புட்டுளும்புசோலைசூழ்பொய்யிலர்நகரினான்
விட்டுளும்புமாரியும்விளைக்கும்வேதவேள்வியான்
கட்டுளும்புனீரினான்காணலாதகாட்சியா
னுட்டுளும்புமின்னலாளொருவன்றோன்றினானரோ. (௨)

ஆய்ந்தவாயரற்றொடுமெணங்குமெய்யலைவொடுந்
தேய்ந்தவாவியின்னொடுஞ்சிறுமையின்செயலொடு
மோய்ந்தமென்னடையொடுமுயிரிற்றீர்ந்தமைந்தனை
யேந்திமெல்லமெல்லவேயெழின்மறுகியங்கினான். (௩)

விண்ணெருக்குறுத்துகொங்கைமின்னனாருமைந்தரு
மெண்ணெருக்குறுத்துதீயவின்னலினிடைப்படா
மண்ணெருக்குறுத்தியெம்மருங்கினுநெருங்கியே
கண்ணெருக்குறுத்தினார்காணலாதகாண்குவார். (௪)

மம்மரீரியாமுமிங்ஙன்வாழ்வதோவருந்துமாய்க்
கொம்மைவெம்முலைவிடாக்குழவியாவிகொள்ளவுஞ்
செம்மையிற்றிறம்விடாதகூற்றுநேர்திரிந்துவந்
தம்மவிந்நகரின்மீதும்வைத்ததாலடியரோ. (௫)

கற்றுளாரினோவறங்கழிந்துளாரினோவர
சுற்றுளாரினோபடைத்துருச்செய்வானினோவுயி
செற்றுளானினோவுகஞ்செலுத்துவானினோவலாற்
பெற்றுளாரினோவிதுபெரும்பிழைபிறந்ததே. (௬)

என்றிகழ்ந்தசிந்தையோடெடுத்தெடுத்தியம்புவார்
நன்றிகழ்ந்ததாலிதுநகரெனநடுங்குவார்
மன்றிகழ்ந்தவாய்மையான்மரபெனமறுகுவார்
கன்றிகழ்ந்தவாவெனக்கதறுபுகலங்குவார். (௭)

தொள்ளியின்றரும்பெனத்துவளுவாரிருதலைக்
கொள்ளியினெறும்பெனக்குறுகியேமறுகுவார்
கள்ளியினகிற்புகைகமழுங்கூந்தல்காறொட
வள்ளியினுடங்குவார்வயிறலைத்திரங்குவார். (௮)

கணிப்படுமருத்துவன்கையிற்படாதுமீப்படும்
பிணிப்படுமொருவனிற்பெருந்துயர்பிடிக்குவா
ரணிப்படும்பெருநிலாவலங்கெழிலவிந்திடப்
பணிப்படும்மதியினிற்பரிந்துளம்பதைக்குவார். (௯)

பாவியேங்கள்காணல்பாவம்பாவமென்றுபன்னுவார்
தூவிமாய்ந்தமஞ்ஞையிற்சுழன்றுவீழ்ந்துசோருவார்
காவியங்கணீர்பொழிந்துகன்றுவாருயிர்த்தன்னையு
மாவிதாங்குமோவெனாவுறைந்துறைந்தழுங்குவார். (க0)

சேருமெம்மருங்கிறுந்தியக்கொடுந்திரண்டிவ்வா
றூருமம்மரெய்தவெய்தியர்நிலந்தவந்தனன்
பேரிபம்பைகொம்புவெம்பிணித்தடாரியின்னொடு
மூரிமாமுரசொலிமுழங்குவாயின்முன்னினான். (கக)

தொடிக்கிடந்தகைத்திருத்தலங்குமார்பமன்னவன்
படிக்கிடந்துபேரிசைப்பரப்பைவிட்டுபோதலைத்
தடிக்கிடந்திமற்றதையளக்குவானின்மைந்தனை
மடிக்கிடத்திவெய்யசொல்லிவாய்திறந்தரற்றினான். (கஉ)

வேறு.

களியூர்கின்னபெருநீதிக்காப்பூர்மற்றைக்கலங்கூரின்
வெளியூராகிமன்வாராவிடிபோய்வைத்தவடிபெயர்ப்ப
வளியூரான்கன்றினுக்கரியவொருசேயவன்றனழகாரு
மொளியூர்மார்பிற்றேருருமொருவோயிங்ஙன்வருவாயால். (கங)

நறவுக்களியோர்பொருள்போனின்னகரம்படுமோவெமர்க்குன்னி
னுறவுக்கினியாருளரோவென்னுரைகேட்டின்றேவுடனாவித்
துறவுக்கிளையாதானீர்த்திட்டமையாதுயர்ந்ததுலாத்தட்டிற்
புறவுக்கொருபாலிறைபாகப்புக்கோயிங்ஙன்புகுதாயால். (கச)

மேலாமுலகத்தொளித்தாய்கொல்சசிமாற்கடல்வாய் வீழ்ந்தாய்கொ
பாலாழியனூர்ப்பட்டாய்கொல்படியதன்றிக்கொடியாயால் [ல்
வாலாதபத்திற்சுடர்சூலவலங்கையாற்குமனுக்கொணர்ந்து
தோலாவழக்கென்றுலகறியச்சொற்றாயெங்ஙனுற்றாயால். (கரு)

கைக்கட்பாலருயிரினையுங்காவானானான்கட்டனா
னைக்கற்பால்வந்துறுமொருவற்குண்டாம்வடுமற்றாயாகிற்
செக்கர்ச்சாருஞ்சிலைக்கூற்றஞ்சேராவண்ணஞ்செய்துமது *
மக்கட்சாடிதனைவருத்தமன்னாவிரைவின்வருவாயால். (கசு)

பொதுமாநிலத்தைப் பொதுக்கடிந்த புகழ்போய்ப்பொதுமாறியாகர
பொதுவாமிதனாலதுதேர்ற்பொய்யாயிற்றாற்பொய்தீர [ம்
மதுமாலிகைத்திண்டோள்வலியின்வயிரச்செண்டாற்கிரிதிரித்து
முதுமாநிலமோர்குடைப்படுத்தமுதியோயென்முன்முளைப்பாயால்()

* முதுமக்கள் என்றும் பாடம்.

புட்டளும்புசோலைசூழ்பொய்யிலந்நகரினான்
விட்டளும்புமாரியும்விளைக்கும்வேதவேள்வியான்
கட்டளும்புகீரினான்காணலாதகாட்சியா
னுட்டளும்புமின்னலானொருவன்றோன்றினானரோ. (௨)

ஆய்ந்தவாயரற்றொடுமெணங்குமெய்யலைவொடுந்
தேய்ந்தவாவியின்னொடுஞ்சிறுமையின்செயலொடு
மோய்ந்தமென்னடையொடுமுயிரிற்றீர்ந்தமைந்தனை
யேந்திமெல்லமெல்லவேயெழின்மறுகியங்கினான். (௩)

விண்ணொருக்குறுத்துகொங்கைமின்னனாருமைந்தரு
மெண்ணொருக்குறுத்துதீயவின்னலினிடைப்படா
மண்ணொருக்குறுத்தியெம்மருங்கினுநெருங்கியே
கண்ணொருக்குறுத்தினார்காணலாதகாண்குவார். (௪)

மம்மரீரியாமுமிங்ஙன்வாழ்வதோவருந்துமாய்க்
கொம்மைவெம்முலைவிடாக்குழவியாவிகொள்ளவுஞ்
செம்மையிற்றிறம்விடாதகூற்றுநேர்திரிந்துவந்
தம்மவிந்நகரின்மீதும்வைத்ததாலடியரோ. (௫)

கற்றுளாரினோவறங்கழிந்துளாரினோவர
சுற்றுளாரினோபடைத்துருச்செய்வானினோவுயிர்
செற்றுளானினோவுகஞ்செலுத்துவானினோவலாற்
பெற்றுளாரினோவிதுபெரும்பிழைபிறந்ததே. (௬)

என்றிகழ்ந்தசிந்தையோடெடுத்தெடுத்தியம்புவார்
நன்றிகழ்ந்ததாலிதுநகரெனநடுங்குவார்
மன்றிகழ்ந்தவாய்மையான்மரபெனமறுகுவார்
கன்றிகழ்ந்தவாவெனக்கதறுபுகலங்குவார். (௭)

தொள்ளியின்றுரும்பெனத்துவளுவாரிருதலைக்
கொள்ளியினெறும்பெனக்குறுகியேமறுகுவார்
கள்ளியினகிற்புகைகமழுங்கூந்தல்காறொட
வள்ளியினுடங்குவார்வயிறலைத்திரங்குவார். (௮)

கணிப்படுமருத்துவன்கையிற்படாதுமீப்படும்
பிணிப்படுமொருவனிற்பெருந்துயர்பிடிக்குவா
ரணிப்படும்பெருநிலாவலங்கெழிலவிந்திடப்
பணிப்படும்மதியினிற்பரிந்துளம்பதைக்குவார். (௯)



பாவியேங்கள்காணல்பாவம்பாவமென்றுபன்னுவார்
தூவிமாய்ந்தமஞ்ஞையிற்சுழன்றுவீழ்ந்துசோருவார்
காவியங்கணீர்பொழிந்துகன்றுவாருய்ந்தன்னையு
மாவிதாங்குமோவெனாவறைந்தறைந்தழுங்குவார். (கo)

சேருமெம்மருங்கினுந்தியக்கொடுந்திரண்டிவ்வா
றூருமம்மரெய்தவெய்தியர்நிலந்தவந்தனன்
பேரிபம்பைகொம்புவெம்பிணித்தடாரியின்னொடு
மூரிமாமுரசொலிமுழங்குவாயின்முன்னினான். (கக)

தொடிக்கிடந்தலைத்திருந்தலங்குமார்பமன்னவன்
படிக்கிடந்துபேரிசைப்பரப்பையீபோதலைத்
தடிக்கிடந்திமற்றதையளக்குவானின்மைந்தனை
மடிக்கிடத்திவெய்யசொல்லிவாய்திறந்தரற்றினான். (கஉ)

வேறு.

களியூர்கின்னபெருநீதிக்காப்பூர்மற்றைக்கலங்கூரின்
வெளியூராகிமன்வாராவிதிபோய்வைத்தவடிபெயர்ப்ப
வளியூரான்கன்றினுக்கரியவொருசேயவன்றனழகாரு
மொளியூர்மார்பிற்றேருருமொருவோயிங்ஙன்வருவாயால். (கங)

நறவுக்களியோர்பொருள்போனின்னகரம்படுமோவெமர்க்குன்னி
லுறவுக்கினியாருளரோவென்னுரைகேட்டின்றேவுடனுவித்
துறவுக்கிளையாதானிர்ந்திட்டமையாதுயர்ந்ததுலாத்தட்டிற்
புறவுக்கொருபானிறையாகப்புக்கோயிங்ஙன்புகுதாயால். (கச)

யெல்லாமுலகத்தொளித்தாய்கொல்சசிமாற்கடல்வாய் வீழ்ந்தாய்கொ
பாலாழியனூர்ப்பட்டாய்கொல்படியதன்றிக்கொடியாயால் [ல்
வாலாதடந்திற்சுடர்சூலவலங்கையாற்குமனுக்கொணர்ந்து
தோலாவழக்கென்றுலகறியச்சொற்றாயெங்ஙனுற்றாயால். (கரு)

ஐகக்கட்பாலருயிரினையுங்காவானானன்கட்டனை
னைக்கற்பால்வந்துறுமொருவற்குண்டாம்வடுமெற்றுறாயாகிற்
செக்கர்ச்சாருஞ்சிலைக்கூற்றஞ்சேராவண்ணஞ்செய்துமது *
மக்கட்சாடிதனைவருத்தமன்னாவிரைவின்வருவாயால். (கசு)

பொறுமாநிலத்தைப் பொதுக்கடிந்த புகழ்போய்ப்பொதுமாறியநகர
பொதுவாமிதனுலதுதேர்ற்பொய்யாயிற்றாற்பொய்தீர [ம்
மதுமாலிகைத்திண்டோள்வலியின்வயிரச்செண்டாற்கிரிதிரித்து
முதுமாநிலமோர்குடைப்படுத்தமுதியோயென்முன்முனைப்பாயால்()

---

* முதுமக்கள் என்றும் பாடம்.

உடற்கேயுயிர்கொள்ளொருவோனே ருயிருக்குயிர்கொண்டுளைக்கொ
ளுயிர், விடற்கேயிசையால்விடுவான்கொ லென்னுவாய்தல்விரித்தா
யோ, மடற்கேதகுகானத்திடையோராவுக்காகமறங்கூறு
மடற்கேசரிக்கன்றுடலதனையளித்தோய்தாழா தணைவாயால். (௧௮)

செவ்வாறல்லசெயாவாறுசெப்பாதின்னல்செயுமாறங்
கிவ்வாறரற்றுநிற்குமுதுமறையாளன்றனியல்காணு
வெவ்வாறெய்திற்றிதுநொய்தின்வீடாதென்னமெய்யோனுக்
கவ்வாறுணர்ந்துமணிவாயிலவர்போய்த்தொழுதங்கறைவாரால். ()

மன்னமாழைவாயிலின்கண்வாராமாயமெனயாரு
முன்னுமாறங்கொருமறையோனுயிரிற்றீர்ந்ததனிமகவைத்
தன்னதாயமென்குறங்குதன்னிற்கிடத்தியரற்றிடுமா
லென்னவாறுமுடிந்திடுங்கொலீதொன்றிங்ஙனிசைந்ததுவே. (௨௦)

வீய்தலாயுவிதிகூடுமூப்பினுர்தமேற்றுத
லேய்தலின்றிமற்றையவரிறத்தலென்றுமிந்நகரிற்
றேய்தருனின்றிதுவடைந்ததென்னேவென்னச்சூழ்ந்தனர்க
ளாய்துநாமென்றம்மறையோனருகணுகியுரைசெய்வான். (௨௧)

கடுத்தவாய்மைமறையீர்நும்மைந்தனுவிகைகடப்பொன்
றடுத்தவாறென்னெனவரசவதுகேளுன்றனீதிதலை
யடுத்தவாறுநன்றம்மவிவன்றனேடுமிறப்பாக
நடுத்தவாதான்பிழைத்தான்பின்யாரோடிங்ஙனவில்வேமே. (௨௨)

வேறு.

என்றவனிசைப்பவிக்குவாகுவின்மரபோர்நாட்டுத்
துன்றிடாவகாலந்தன்னிற்றுன்றியமிருத்துத்தோன்றிற்
றின்றெனதறங்கொள்செங்கோலிருநிலநடந்தவாறு
நன்றெனவியந்திட்டுள்ளநடுங்குபுநாணுக்கொண்டான். (௨௩)

கரிந்ததுங்கமலந்தீயிற்சிவந்ததுங்கமலஞ்சீற்றம்
விரிந்ததுங்கமலம்பேர்ந்துமிதித்ததுங்கமலஞ்சாபம்
வரிந்ததுங்கமலம்வாங்கவுதைத்ததுங்கமலம்வாளி
தெரிந்ததுங்கமலமந்தச்செம்போகிற்கமலத்தாற்கே. (௨௪)

பிதிர்ந்ததுமிரவிதிக்குப்பிழைத்ததுமிரவிநாணின்
முதிர்ந்ததுமரவநோன்மைமுடிந்ததுமரவமுற்றும்
விதிர்ந்ததுநேமிமுன்போல்வெருண்டதுநேமிமேலே
யதிர்ந்ததுநாகங்கீழேயலைந்ததுநாகமம்மா. (௨௫)

பார்த்தன்றிசைகடோம்பரந்ததுபரந்ததூமம்
போர்த்ததுவிண்ணைவிண்ணிற்பொலிந்தமீன்புழுங்கிவீழ்ந்து
தூர்த்தனவாரிவாரிதுய்த்தநீர்சுவறிவெம்பி
வேர்த்தனமேகசாலம்விளைந்ததுகோபவெந்தீ. (உ௬)

மிடுக்குற்றவலியநொய்மைமெலியவென்றிரண்டும்யாதோ
ரிடுக்குற்றகாலத்தன்றியாவரேதெளியவல்லா
ரடுக்குற்றவகிலவண்டசராசரமனைத்துமஞ்சி
நடுக்குற்றதருமமொன்றேநடுக்குறாநின்றவன்றே. (உ௭)

வன்றொழில்வையத்தேனுமற்றையவுலகத்தேனும்
புன்றொழிலுடையனேனுமல்லனபூண்டானேனுந்
தன்றொழில்பிழைத்தான்றன்னையடுவதுசரதமென்னு
வின்றொளிநிதிக்கோன்பூந்தேர்நினைந்தனனீறிலாதான். (உ௮)

கண்ணிமைநொடிகால்சிந்தைகணந்துடிநிமிடங்காட்டை
யெண்ணியபிறவும்பிந்தவந்தவவ்விலங்குபூந்தேர்
புண்ணியவீங்கோர்மூர்த்தமிருக்கெனப்புகன்றுநல்லோர்
பண்ணியதருமமன்னான்பழிச்சொடுமேதன்மேலுற்றான். (உ௯)

தட்பமிக்குடையபைந்தார்த்தசரதராமன்றெய்வப்
புட்பகத்தேரணுகியெழுதலும்புவனவாழ்க்கை
திட்பமிக்குடையவாகப்பெறுவதுதெரிந்துசெஞ்சொல்
பெட்பமிக்ககல்வானின்றுமின்னணம்பிறந்ததன்றே. (௩0)

நொய்வினைப்பாலமற்றைநோன்வினைப்பாலயாவுஞ்
செய்வினைப்பாலராவார்தியக்கறத்தெரிந்துசெய்யி
னுய்வினைப்பாலதாகுமுணர்ந்திடாசெய்யினைய
வைவினைப்பாலதாகவிளைந்துளநலியுமன்றே. (௩க)

பொறிதுறப்பட்டநின்பொன்னாட்டிடைப்புலமைத்தாய
நெறிதுறப்பட்டதத்தநிலையிடைநிற்குநேரிற்
பிறிதுறப்பட்டதொன்றுநிகழ்ந்ததுபெரிதுநேடி
வறிதுறப்படுத்துவாயவ்வருணத்தின்பிழைப்பைமாதோ. (௩உ)

செய்வதற்குரியவின்னேசெய்கெனவெழுந்தசெஞ்சொ
லவதற்கமுதமாகிநன்செவிப்பட்டலும்பால
னுய்வதற்கிதன்மேலுண்டேயுறுதியென்றுவந்துவல்லே
தெய்வதத்தேரினேடுந்திசைதிசைநேடிச்சென்றான். (௩௩)

விரிதிசைநான்கினுமவெகுளியின்விரைவினேடித்
திரிதிசையிறந்துபோகித்தென்றிசைச்சென்முனுக
வரிதிசையளியதாருவந்தழைநுழைத்துச்சேறல்
பெரிதிசைநறியதூமமீமிசைப்பெரிதுகண்டான். (நிச)

உதிப்பினுனிமிர்ந்ததூமமொடுங்குபுநடுங்கியோட்
றுதிப்பினுற்பெருன்றன்னேடும்பெரும்பிழைசூழ்ந்ததென்று
விதிப்பினுற்பிறந்தகுண்டவிழுக்கனல்வெகுளிவெந்தீக்
கொதிப்பினுற்கொருதனச்சக்குறிப்பினைக்காட்டல்போலும். (நிரு)

முன்னின்றநறியதூமமுன்பிடித்திழுப்பமூண்டு
பின்னின்றுநேடும்வேட்கைபிழையறச்செலுத்தாநிற்பச்
சொன்னின்றவொருவன்வேறுதுணியுமோதுணிந்தவாற்றின்
வின்னின்றதேரினீங்கிக்காவென்றிவியந்துபோனுன். (நிசு)

தென்கொள்ளவிளங்குகொன்றைதெளிநறைத்தேங்கொள்போதிற்
பொன்கொள்ளறவிர்ந்துநீலமணிகொண்டுபொலியநோக்கி
மன்கொள்ளறுணிந்துவண்டின்மொய்ப்பெனமலர்க்கைவீசிப்
பின்கொள்ளறவிர்ந்திட்டுள்ளேயதிசயம்பிடித்துநின்றுன். (நிஎ)

எண்ணகையெவர்க்குமானவிறைவனுலென்பபோல
வெண்ணகைமுல்லைபாங்கர்க்கருநகைவிளையாநிற்ப
தெண்ணகைதமக்குமானவெண்மைநகைசெயப்போயென்ன
வுண்ணகைவிளைத்துநின்றுன்பிறர்நகையுறுமையுள்ளான். (நிஅ)

மரைமலர்க்கண்ணினுனைவனமுல்லைநகைக்கமாழ்கி
விரைமலர்ப்பூவைசால்மெய்ந்நிறம்வெளுக்கப்பட்ட
புரைமலர்க்கான்மாகாபுரிந்தனபொறுக்கலாது
நிரைமலர்க்கண்கள்சேந்தநிறக்கருவிளைகளெல்லாம். (நிகூ)

சாதிநாளடுத்தவண்ணமரன்கொலோதவறுந்தங்கேள்
சோதிநாள்சுடர்கண்மாறித்தோற்றுதஞெருடங்குஞ்சொல்லி
ளுதிநாளமைத்தசாதிக்கல்லனவழுதுசெய்யுந்
நீதினுலுள்ளவென்றுமனக்கொண்டுதெளிந்துபுக்கான். (சo)

செம்பெரியுருகிற்றென்னச்சேந்துகண்புகையிற்றேம்ப
வெம்பரும்வேருள்வற்றிமெலிந்துமெய்விறகினுக
வைம்பெருங்கனலும்பொங்கவதோமுகமாகியாங்கோ
ரும்பரின்கொம்பர்நாலுமொருவனையரிதினுற்றுன். (சக)

நிறந்தெரிபொருளின்றன்மையுட்கொடுநிரந்ததேனும்
புறந்தெரிநுண்ணூலாடைப்போர்வையிற்பொதிந்தாலொக்கப்
பிறந்தெரிதிமிர்ந்ததூமப்பெரும்பொதிப்பிணிப்பினூனை
யறந்தெரியருளானுள்ளத்ததிசயமமைந்துகண்டான். (௬௨)

முருந்தெனத்தெளிந்தநீருணுக்குவான்முயன்றநோக்கிற்
பருந்திரட்டுமேப்போர்வைப்படலத்துக்கிடையிற்பார்த்து
மருந்தவநிலையைவீடாவாற்றினலன்னன்யாணர்
விருந்தினைவினவானுகிமெய்த்தவவிதியனுனன். (௬௩)

கோரநீட்டனலின்வெய்யகொழுங்கொழுந்துச்சிநீண்டப்
பாரைநீத்தெழுந்ததூமம்பருகுவான்றன்னைக்கூவி
யாரைநீவருணமியான்கினிசைந்தவெக்குலத்தையாது
பேரைநீபேசுகென்முன்பெருமகேளென்னப்பேசும். (௬௪)

காயெரிக்குரியதெய்வக்காட்சியமுதலமும்மைத்
தூயருக்கேவல்பூண்டசூத்திரகுலத்தேன்றந்தை
தாயரிற்றரிந்தபேருஞ்சம்புகனென்பேனென்று
ஞேயரிற்றிரங்கிவற்றிநுடங்கியயாக்கையானே. (௬௫)

நிலைகொய்யப்படுநீள்சாதிப்பிழைப்பினுனிவனேநீப்பாற்
கலைகொய்யப்படுந்தவத்தாலுயிர்க்கெலாங்கவ்வையீந்தான்
றலைகொய்யப்படுவானென்னத்தனதுளத்தமைத்துச்செந்தீ
யுலைகொய்யப்படுநீடாரையுரங்கொள்வாளுறைகழித்தான். (௬௬)

வாணிடைப்பட்டமெய்யானவன்றனைவதைத்தலோடு
மூணிடைப்பட்டவன்றானுயிர்தனியொருவிப்போகி
வானிடைப்பட்டதிங்கேவானிடைப்பட்டவாவி
யூனிடைப்பட்டதங்கேயுயர்மறைப்பாலற்கம்மா. (௬௭)

உறத்தகுந்தவத்தாலன்றுபெற்றதங்குருதுசெய்து
நெறத்தகுதெண்டம்பெற்றுன்றெண்டிக்குமரசர்கையா
லிறத்தகுங்கதியுண்டென்னவிசைத்தவாறிசைந்துநல்லோர்
பெறத்தகும்பெற்றிபெற்முன்வருணத்தின்பிழைப்பினுனே. (௬௮)

மண்ணுண்டகருணைவள்ளன்மீட்லும்வளங்கொட்டென்பாற்
கண்ணுண்டபொதியவெற்புக்கடலுண்டமுனிவற்காணுத்
தண்ணுண்டவளியினேடுங்கூடினன்றயங்குசோதி
விண்ணுண்டமதியிற்கூடும்வியன்சரற்காலம்போன்முன். (௬௯)

துளித்ததேங்கமலச்செங்கட்டோன்றலுக்கினிதுநெஞ்சங்
குளித்தபேருவகையோடுங்குடங்கைக்கொண்டயின்றஞான்று
விளித்தபேருவரிதன்னைவிடுவிப்பான்விலையிற்போல
வளித்தபூணென்றுங்கைக்கொண்டளித்தனனளியிஞனே. (ருo)

மலையொன்றின்விடைபெற்றேருங்குமலையொன்றையடக்கிவான்றே
மலையொன்றினிருந்தோனல்கும்வளரொளியணியைவாங்கா [ய்
மலையொன்றையெடுத்துளோனைவதைத்துளோன்வில்லாமேரு[றே
மலையொன்றைமுரித்ததிண்டோண் மலையொன்றின்வனைந்தான்மன்

நலங்கிளரினியவாய்மைநவையறநவின்றுநன்ன
ரிலங்கெழிற்குறியன்போதநெடியனுமிந்திரநீல
விலங்கலொன்றுதித்தசெங்கேள்விரிகதிர்க்கடவுளென்ன
வலங்கணிசோதிகாலவயோத்திவந்தடைந்தானன்றே. (ருஉ)

ஓலத்தண்கடலிஞகவொருதனிச்சேக்கைநீத்து
ஞாலத்தனூன்றன்னைநான்மறையாளன்முந்நீ
ராலத்தையளித்ததீமையமுதத்தினவித்திட்டாங்குச்
சீலத்தின்றுதியான்முன்சொல்வன்சொலின்றீமைதீர்த்தான். (ருங)

சம்புகன்வதைப்படலமுற்றிற்று.

ஆ_செய்யுள்-உ௦௦ரு.



# அவதார நீங்குபடலம்.



கன்றுவொருமூர்த்தத்திடையாகங்கைவிட்டாகடந்திட்டாவி
சென்றுனெடிதுய்ந்தானெனவுரைப்பவின்னவாசெய்தானென்று
னன்றுந்தொழின்மூன்றினடுநின்றுமிடைவிடாநடத்தியொன்றுய்
நின்றுன்பெருஞ்செயலைநெடிதேத்தியென்கொலோநிகழ்த்துமாறே.

சங்கோலிடும்வேலைத்தரணிதழீஇவானுலாய்த்தருமமோங்கச்
செங்கோறிசையளந்திட்டிம்முறையேமாசொரீஇச்சிறக்குநாளிற்
கொங்கோடுலாம்பிரசநறுந்துளபமாலையான்கோதிறுய்மைப்
பொங்கோர்பெருந்துரகமாமேதமியற்றுவான்புந்திசெய்தான். (உ)

நீங்காநிலைத்தாய்நீணிலையினிற்புருநெடியவாகி
யோங்காவிளங்குபெருமாதிரத்தானமும்விடாவுண்மைவாய்மை
தாங்காநிரந்தமறைமாமுனிவோர்காண்குவார்தயங்குகண்கள்
வாங்காவயங்குமுடுவன்பதமுந்தாமொரீஇவந்துசூழ்ந்தார். (௩)

நீக்காவுயர்நிலையுங்கீழ்நிலையுநடுவணுநிலையுமொன்றாய்த்
தாக்காவினைத்திறத்திற்றட்பினுமோர்தட்புறுத்தகையின்வாசி
போக்காவருமுனிவர்புராதனத்தின்வேதநூற்பொருளையாய்ந்து
தூக்காச்சுடர்வேள்விதொன்னெறியேதூயதாய்த்தொடங்கினரே. ()

வெவ்வாய்க்கொடுங்கூற்றுக்குண்ணடுங்கிவெய்யகான்விடுத்தருணு
மவ்வாயிழைக்கழகேயாயிடுமாறன்னபேரமுதவாய்மைச்
செவ்வாய்மடச்சீதைதன்வடிவிற்செம்பொனாற்செய்தோர்பாவை
மைவானிறத்தழகன்றன்னருகேபாரியாய்வைத்தாரன்றே. (௫)

பேறுப்பிறழ்கல்ப்பைவிதிகடந்துபெருகலாற்பெரியவானிற்
றேறுக்கிளர்மதியிற்றினங்கடந்துதூய்மையாற்கெழீஇயவேள்வி
சீறுத்தடுப்பாருங்காப்பாராய்ச்சேர்தலாற்சீர்சால்சித்தி
மாறுத்தகையோடுமறையோடும்பெரிதுறுவளர்ந்ததன்றே. (௬)

வேறு.

நனிமகம்வளர்தலுமிதிலைநாடித
னினியனசேயவர்முனிவனேவலா
லனுபவராகவசரிதையாரியப்
பனுவலையெங்கணும்பரந்துபாடினார். (௭)

வளைத்தமானவர்கடமனத்தைமைந்தர்சொற்
கிளைத்ததேம்பாடலேகீதநான்கொடு
திளைத்துவான்கதைப்பொருட்சிலையிற்றிண்ணிதிற்
றளைத்தெழாதின்பசாகரத்திற்றாழ்த்ததே. (௮)

விரும்பிசையொருவழியிழுப்பமெய்ந்நெறி
யரும்பொருளொருவழியயல்கொண்டேகவும்
பெரும்பயனொருநிலைபிடிப்பதெங்ஙனே
திரும்பிலராயசிற்சிலர்தஞ்சிந்தையே. (௯)

அடுக்குறுவிரியுமாரியவிறல்விளை
மிடுக்குறுவரும்பொருண்மதுரமெய்தழீஉ
மிடுக்குறுவின்னிசைத்தேனுண்டேதலை
நடுக்குறாதவர்களந்நகரத்தில்லையே. (௧௦)

முயக்கிசையாழ்கரம்விட்டுமுட்டற
நயக்கள்த்தடைத்திசைநவிற்றன்மேயினார்
மயக்கறும்பல்பெரும்விஞ்சைவல்லரா
மியக்கர்தம்மைந்தரேயிவரென்பார்சிலர். (௧௧)

நல்த்துறுதேவரேயிவர்நங்கட்கெல்லாந்
தலத்தடிவைப்பர்போற்சார்வராயினும்
புலத்தறிவுறினவம்புனிதத்தாளுரு
நிலத்தெனச்சுவடுகாணியநெருங்குவார். (௧௨)

உட்படுசிந்தையினாதிக்குவானரன்
கட்படுமுன்னாருக்காணவேட்டிரேற்
பெட்பொடுமுன்னனைக்காணும்பின்னனை
நட்பொடுமற்றவற்காணுநன்கென்பார். (௧௩)

பார்த்தனர்கண்களைப்பனுவற்பண்செவி
சேர்த்தனர்மனநெடுஞ்செவ்விப்பாசம்விட்
டார்த்திசைநாண்டொடுத்தடையுமாறெலா
மீர்த்துமெல்லெனமகச்சாலையெய்தினார். (௧௪)

வேறு.

மந்தமந்தமனமுருக்குமந்தமதுரமந்தமா
மந்தவுச்சமதுபிறப்பித்தல்லவிசையுமனையவா
றுந்திமூன்றுமும்மூன்றாயுறந்ழ்தேநரம்புங்களத்தினே
முந்தவடைத்தாலெனப்பனுவன்முறையினடைத்தும்பாடினார். ()

கோலக்குறிஞ்சியந்தாளிக்குறிஞ்சிவியாழக்குறிஞ்சிபிற
சீலக்குறிஞ்சிகுறிஞ்சியாழ்த்திருத்தியாங்குத்தெரித்தமையாப்
பாலைப்பாலைசெவ்வழித்தீம்பாலைவிளரிப்பாலையினாற்
பாலைத்தேம்பண்பாலயாழ்ப்பண்ணாற்பனுவல்பண்ணினார். (௧௬)

தீம்பாநீர்த்தேன்றீங்கரும்புதெள்ளாரமுதமயின்றனபோ
லாம்பாடலினின்புற்றுவகைக்கண்ணீரரும்புமவையினார்
தாம்பாய்பவனமில்வுதயந்தன்னிற்பனிநீர்த்துளிதழூஉந்
தேம்பாமலர்த்தண்பொழில்போலச்சீர்சாலவையிற்சிறந்துளார் (௧௭)

திருகிநாகம்புகவெழுந்தவமுதைமீளத்திரைவிடாப்
பருகியாங்குத்தன்சரிதைப்பாடல்கேளாப்பரிவினா
லுருகியாங்கட்டுணைவரொடுமுள்ளத்துவகையொழிவுறப்
பெருகினான்வின்மிதிலையிற்கைப்பிடித்துமயில்கைப்பிடித்துளான். ()

ஆமாண்வேட்ம்வயதுபிறிதல்லாற்ருனுமயலாளுய்த்
தோமாறிசைக்காவியத்தொடையாற்றன்னைத்தானேதுதிக்குவான்
கோமானுய்கருமேனிக்குரிசிலொருவனிருவரே
தாமாய்நின்ருன்கண்டீரிங்கென்னவியந்தசனங்களே. (௧௯)

யாரேசெய்தார்யார்தந்தாரிவ்வையிரிக்காவியமென்னுப்
பாரேழுடையான்வினவுதலும்பாரேழுடையாய்பாரினே
சீரேபனுவல்செய்தானுந்தெளிவித்தானும்வன்மீகப்
பேரேகொண்டபெருமுனிவனிவனேயென்னப்பேசினுர். (௨0)

கள்வாய்மலர்ப்பூந்துழாய்க்கமல்க்கண்ணன்றெய்வக்கலையினுற்
றெள்வாய்முனிவன்றனைநோக்கிச்செய்மாறறியேன்றெளிவினு
லெள்வாயல்லையீங்தேனிங்கிப்பார்முழுதுமிறைவனீ
கொள்வாயென்னக்கொடுத்தானக்குலமாமுனியுங்கூறுவான். (௨௧)

மைக்கொண்டொளிர்மேனியையிவர்நின்மைந்தரிவரைவருந்தியே
மெய்க்கொண்டன்றகுலக்கொடியைமிதிலைத்திருவைமெலிவோடே
பொய்க்கொண்டொசியுநசுப்பாளைக்கற்பின்பொலிவைப்பொருந்திநீ
கைக்கொண்டருடியிதுவேநின்கைம்மாறென்னக்கழறுமே. (௨௨)

கற்பாலனலையவித்தெமதுகண்முன்பொலிந்தகாசிலா
நற்பாலினளைவடுப்பாலாயுலகநவின்றநவையினு
லிற்பாலொழித்ததின்னுநிறைதெளிவிப்பாளேலெந்தைநின்றன்
சொற்பாலியையகேனெனமுனியுந்துணிவுற்றுவகைதுளும்பினுன். ()

வேறு.

பெருமாதவமேபிழையாநெறியே
தருமாபலமேதருமாறெனவே
யருமாமயில்போலியையாரணரால்
வருமாறருண்மேயினன்மாதவனே. (௨௪)

அற்றைத்தினமின்னனமேயகல
மற்றைத்தினமேவரும்வம்மினெனக்
கொற்றத்தனிவெண்குடைநின்றொளிரச்
சுற்றத்தொடுமோரிழைதுன்னினளே. (௨௫)

பசையுந்தொருவன்பதபங்கயமே
னசையுந்திடவவ்வுழிநன்னெறியா
லிசையுந்தகையின்னியனுமுலகுந்
திசையுந்தகவந்துதிரண்டனவே. (௨௬)

வம்மின்னெனவேவலினர்வரலும்
வெம்மின்ணிசைவேலவன்மெய்ம்முனியைத்
தம்மின்னெனவேதகவத்தவனு
மம்மின்னவளோடுமடைந்தன்னே. (உஎ)

துவராடையடோமறுசோதியெழிற்
பவராரடிவைத்தனபார்வையளாய்
நவராகவகாவியமேநவில்செய்
யவரோடயலேயவைநின்றனளே. (உஅ)

சீலத்தவடன்செயலைத்தெளியா
ஞாலத்திடைபாய்நயனத்தினராய்க்
காலத்துவிளைந்திடுநெற்கதிரி
னேலத்தலைசாய்த்தனரேவருமே. (உகூ)

செய்யுந்தவநஞ்சிறுமிச்சிறியாய்
வையம்புகணின்மகிணற்கெதிரே
யுய்யுஞ்செயலாலுலகோர்நினையு
மையந்தெறுகென்றனன்மாமுனியே. (௩0)

வேறு.

நீந்தருந்தகையராம்னிறைபுகழ்ச்சரிதையாமோர்
மேந்திரைப்பயந்தநாவானிம்மொழிவிளம்பலோடுங்
காந்தெரிவேள்வியன்னன்கைக்கமண்டலநீர்கையி
னேந்தியாசமித்துக்கற்பினிறைவியுமினையகூறும். (௩௧)

மன்னையேயிவர்ந்தவாக்காற்காயத்தான்மனத்தாற்கற்புத்
தன்னையேதவறிலேனேலுயிர்க்கெலாஞ்சான்றதாய
பொன்னையேநிறத்தபூமிப்பொருவிறெய்வதமேயென்னை
யன்னையேயிடந்தந்துன்னுளடக்கிக்கொண்டருடியென்றாள். (௩௨)

குண்டலங்கவினும்வள்ளைக்குழையினளெதிரினக
வெண்டலம்பிளந்துநாகரிரும்பிலவழியதாக
விண்டலம்விளங்குமின்னுக்குழுவினின்விளங்கோர்சோதி
மண்டலங்கண்கள்வவ்வியெழுந்ததுகணத்தின்மாதோ. (௩௩)

எரிமணிச்சுடிகைப்பாந்தளிலங்கொளியுச்சியேந்தும்
விரிமணிக்கனகசிங்காசனத்திடைவிளங்கிச்சேய
வரிமணிக்கண்ணீர்மல்கவெளிவந்துவயங்குமன்ன
புரிமணிச்சோதிநாப்பட்டோன்றினள்புவனத்தையல். (௩௪)

மெல்லொலிச்சுரும்புண்மாலைமின்றனையெடுத்துக்காஞ்சி
யொல்லொலிப்புளிதவாடைக்குறங்கிடையொளிரவையா
வெல்லொளிக்கழலானேகலைகளியெனவுமுந்நீர்த்
தொல்லொலிக்கலையாள்கொண்டுசுடர்ப்பிலம்புக்காளன்றே. (௩௫)

படிகடந்துடையநாகப்பண்ணவரேனுமென்சொ
னெடிகடந்தறியார்பூமிமென்கொடியென்னுநுண்பொற்
றொடிகடந்திடுமோவென்னவெகுளியிற்றுளும்பித்துன்னார்
கடிகடந்துடையதிஸ்சொற்காற்றடஞ்சிலைகைக்கொண்டான். (௩௬)

பாரொடுபுயங்கத்தேவுங்கமட்டும்பறைதத்துவெம்பி
வேரொடுமிறப்பதாகவிளைந்திடுவெகுளித்தீயைச்
சீரொடுந்தெரிந்ததெய்வக்குருபரன்விதியின்செய்கை
நேரொடுநிகழ்த்துஞ்செஞ்சொனீர்மையினவித்திட்டானே. (௩௭)

கான்றிசைகடந்துபூமியிலொடுங்கலந்துநாகத்
தேன்றிசைமான்மேல்வைத்தவிவற்லைத்தன்யராய
தோன்றிசைத்துதிக்கைநீட்டித்திசைமுற்றுந்துழாய்ச்சுருக்கில்
வான்றிசைதொடுவானின்றமழகளிற்றிணைவைத்தானே. (௩௮)

தொன்னிதிச்சுருதியாகமுடிவினிற்றூயோர்க்கின்சொ
னன்னிதிப்பெருக்குநல்கிநவையறுநலங்கொண்டற்பு
மென்னிதிக்கவிவேந்தோடுவீடணுதியர்க்குவேண்டும்
பன்னிதிக்குவையுநல்கிப்பரிவொடுவிடையுமீந்தான். (௩௯)

முந்துவிற்புங்கவாளித்தூதுவர்மொழியின்வண்ண
முந்துவிற்பிற்ழும்வேற்கைப்பரதனுக்கொளிர்வானுற்றி
னிந்துவிற்கொழுங்கோடேன்றவிணரிழிதேனைத்தென்கால்
சிந்துவிற்சிந்துஞ்சோலைச்சிந்துமாநகரமீந்தான். (௪0)

வார்முகங்குலாவுங்கொங்கைமங்கையர்வரிக்கண்வண்டு
தார்முகங்குலாவுமார்பன்றடம்படைக்கடலோடேகிச்
சீர்முகங்குலாவும்விஞ்சைத்தந்திரர்சமரந்தீயக்
கார்முகங்குலாவவந்தக்கடிநகர்கைக்கொண்டானே. (௪௧)

இருந்திக்கெண்கதிர்வேற்றக்கன்புட்கலனென்னுநாமப்
பெருந்தக்கதனையர்க்கன்றன்பின்செய்தநகரமாய
தருந்தக்கசிலைமாமூதூர்தக்கற்கேதக்கதாகப்
பொருந்திப்புட்கலநாமற்கேபுட்கலாவதியுமீந்தான். (௪௨)

நட்த்துவெம்புரவிப்பூமிநாதனேவலினாற்செந்தேன்
றட்த்துமென்கழுநீர்சிந்துந்தாரகாபதப்பேர்மூதூர்
திடத்தவங்கதனேசந்திரகேதுவாஞ்சிறுவர்க்கீந்தா
னிடத்துவெம்புகழ்சேர்வென்றியிலக்குவப்பேரினானே. (சந)

சொன்னயப்புதல்வர்க்கிவ்வாறணிநகர்தொகுத்துநல்கிப்
பின்னையத்துணைவரோடும்பெரும்புகழ்ப்பெரியபூணா
னன்னயத்தலைவர்போயகற்பதமதனிற்புக்க
வன்னையர்க்குறுதிவேள்விவிதிமுறையாற்றினானே. (சச)

யாவர்க்குங்கருணைகூருமிராகவனிமையாநாட்டத்
தேவர்க்குஞ்சிறப்பின்மும்மைத்திறத்தர்க்குஞ்சிறந்தமற்றை
மூவர்க்குமிளையர்க்காற்றுமுதல்வர்க்குமொழியப்பட்ட
வேவர்க்குந்துணையாய்நின்றிங்கின்னணம்விளங்குநாளில். (சரு)

வேறு.

தூக்கியகமண்டலமுந்தோளினுழைத்தோலுந்
தாக்குவெயில்காக்கவொர்தனிக்குடையுமாகி
நோக்குதவவேடமொடுமந்தகனுநொய்தின்
மாக்கவினயோத்திமணிவாயிலையடைந்தான். (சசு)

உற்றுயர்தவத்தவரொழுக்கநிலையெல்லா
மற்றிரண்மணிக்கிரணவாயிலவர்காணு
வெற்றிர்வரவென்னையிரெனப்பெரிதுநன்னர்
சொற்றிரிதுகேண்மினினிதென்னநனிசொல்லும். (சஎ)

தூய்மையிலவாகியுழறாய்விலுயிர்செய்யுந்
தீமைதெரியாவுளம்பதைத்திடுசினத்தேன்
றூய்மைகொடுமற்றையவுயிர்க்கருடரிப்பேன்
வாய்மைமறையேனலைவ்றென்றிசையில்வாழ்வேன். (சஅ)

வெய்யவனளித்தொர்விழுப்புதல்வன்மேன்மைச்
செய்யவனெனப்புலவர்சேப்புமொருபேரே
னெய்யனநனித்துவருவேனுமல்லுங்க
ளையனதடித்தொழுதறைந்திடுமினென்றான். (சகூ)

கைத்தவர்பவத்தைவிரிகல்வியர்க்ணிக்கி
லித்தவர்நிகர்க்குமவர்யாருமிலரென்றே
மெய்த்தவரெனக்கொடுவிருப்பமுடனேத்திப்
பொய்த்தவனைவைத்துமணிவாயிலவர்போனார். (ருய)

வந்தணர்தவத்தொருவர்வாயிலிடைமன்று
புந்தியினினைப்பும்பெரிதேயுடையர்போலுஞ்
சிந்தையினிகழ்ச்சிவகைசெய்தருடியென்று
ருய்ந்தனனெனப்பெரிதுகந்தெதிர்நடந்தான். (ருக)

அன்னவனடித்தொழுதமைந்துகொடுபோகா
மன்னுமணியிற்றிகழொர்மண்டபமதெய்திப்
பொன்னினியலாசனமிருத்திவிதிபோல்வீ
ரென்னைவரவென்னலுமெடுத்திவையியம்பும். (ருஉ)

வெவ்வழியடற்றிகிரியாயினியவேலை
யிவ்வழியடைந்தவரைநீத்தல்கடனென்றான்
றெவ்வழிவிறற்சிலையினுனுமதுதேரா
தவ்வழியிலக்குவனைவாயிலினமைத்தான். (ருங)

நண்ணலுறுவேட்மதொழிந்துநமனுவான்
கண்ணலுறுதன்வடிவுகைதொழுதுகாட்டி
யண்ணலயனேவல்கொடணைந்துடையனையா
வெண்ணல்பிறிதீறிலுலகம்வருகவென்றான். (ருச)

நொய்தினதுபோதுமிசைநோன்புயனுடங்கு
மைதவிர்பெருங்கிரணமாமணிசெய்வாயில்
வெய்திலமரேசன்வளம்யாவுமொலிவேலை
யெய்தவுரைவைதமுனியின்பமொடணைந்தான். (ருரு)

வள்ளறலைவற்குரைவகுக்கவும்பட்டானுய்த்
தெள்ளுமுனிவற்றடைசெயற்குமிசையாறு
யெள்ளிருதலைக்கொளியெறும்பினடுநின்று
னுள்ளுருகிடப்பெரியவாயினிலையுற்றான். (ருசு)

ஆற்றன்முனிசீற்றமொடறைந்திடுமெனற்கொள்
கூற்றமுதறியநங்குலத்தொட்டற்ன்னி
னேற்றமுறவெம்முயிரிழப்பதினிதென்னுந்
தேற்றமுளனாகியமராமரெதிர்சென்றான். (ருஎ)

இன்னகுணனின்னபெயரிந்நிலையனென்றே
யன்னமுனிவன்வரவடித்தொழுதுகூறிப்
பின்னுரைகொடாதடிபிரிந்துதனிபோகா
வன்னவனைசேர்சரயுவண்கரையடைந்தான். (ருஅ)

வேறு.

புக்கமாமுனியிராகவனெதிர்கொளப்புகுந்து
தக்கதாயதன்வரவெலாந்தகவெடுத்தியம்பி
நெக்கபான்மையநிலையனைநீங்கினன்போனான்
செக்கர்வான்சிகைநமனும்போய்த்தென்றிசைசேர்ந்தான். (௫௯)

நிலைப்பட்டோங்கியநெடுமுடிப்பேரெழிலிமைய
மலைப்பட்டம்புவியிடைப்பரப்பறிகுவான்வாரா
வலைப்பட்டாறியநதிக்கரையடைந்துளோன்யோகிற்
றலைப்பட்டந்தவனுடலினைப்பெரிதுறத்தணந்தான். (௬0)

தோன்றுகாற்றனைநாலிலோர்கூறதாந்தோன்ற
லென்றகாட்சிவான்புகத்திரேதாயுகவிசைவி
ஞான்றுகாற்றுணையொன்றலாதுயங்குபுநின்ற
மூன்றுகாற்பெருந்தருமமேநிகர்த்தனன்முதலோன். (௬௧)

தாமப்பொன்னவிண்மார்புடைக்குசலவர்தமக்கே
யேமப்பொன்னணிகுசாவதிசராவதியென்னு
நாமப்பொன்னகரளித்தன்பசுந்துழாய்நாறுஞ்
சேமப்பொன்னகலத்திடைத்திருவைத்ததிருவோன். (௬௨)

தருப்பையன்னநுண்மதியுடைப்பரதனுந்தகையி
னிருப்பையன்னதோர்நம்பியும்பின்வரவெழுந்தே
நெருப்பையன்னசெந்தாமரைமலர்ந்ததோர்நீலப்
பொருப்பையன்னவன்வடதிசைநோக்கினன்போனான். (௬௩)

உட்புலர்ந்தநல்லுணர்வொடுநகரம்பினுலகி
னட்புலந்தனவாய்வரநடந்துளோன்முன்னே
கட்புலந்தனைக்கவரொளிதிசையெலாங்கவின
விட்புலந்தணந்தடைந்ததுசுரரொடும்விமானம். (௬௪)

சொன்னவூர்தியிற்றொகுத்தருட்பெரியவற்காவ
தின்னவூர்தியொன்றுள்ளதோவுற்றுளியியம்பிற்
றன்னவூர்திவெங்கலுழனேயாயினுந்தகையா
லன்னவூர்தியனாகிவண்சரயுவையடைந்தான். (௬௫)

கருட்பெரும்புரவீட்டணக்குரிசிலுங்கவியின்
றெருட்பெருங்குலத்திறைமுதலியாவருந்தேராப்
பொருட்பெருந்திரைச்சரயுவின்றடங்கரைப்புக்க
வருட்பெருங்கடறன்னைவந்தளியொடுமடைந்தார். (௬௬)

விண்டரங்கவெவ்வினையறத்தனைத்தொடாவிழைவோ
ரண்டரங்கமாயணைந்திடுமெக்கதிசெலற்கே
மண்டரங்கவெவ்விடர்தொறுமணிகொழித்தெறியும்
வெண்டரங்கவெண்சரயுவேயேணியாய்விதித்தான். (சுஎ)

பூங்கரும்புடைநித்திலப்புதுநிலாமேலும்
பாங்கரும்பொலியந்நதிப்படிந்துவெவ்வினையின்
நீங்கரும்பெழுமையுமற்றுத்தேவராயினர்க்கே
யாங்கரும்பெறற்சுவர்க்கபேதங்களையளித்தான். (சுஅ)

மிக்கினேவளர்விளங்கிசைவீடணன்றனையுந்
தக்கமாருதியவனையுஞ்சயத்தம்பமெனவே
தெக்கினேதிரிகூடத்தும்வடக்கினேதிரண்டு
நெக்குநீள்பனிக்கிரியினுநிலைபெறச்சேர்த்தான். (சுகூ)

இரியவந்தரநின்றகூறிரண்டொடுமுன்போ
மூரியவந்தவோர்கூறொடுமொன்றியேநாலிற்
றெரியவந்தவோர்கூறதாந்தானும்போய்த்தெரிதற்
கரியவந்தமிலருட்டனமூர்த்தத்திலடைந்தான். (எ0)

ஆறிநின்றிலநிசாசரக்கொடுந்தழலழலு
மூறுநின்றவான்முதலியவுலகெலாமுய்யத்
தேறிநின்றருடிருவவதாரநீங்கினமை
கூறிநின்றதுநின்றதுகுசன்றிறமன்றே. (எக)

## அவதாரநீங்குபடலமுற்றிற்று.

ஆ செய்யுள்-உ0எசு.



## சிறப்புக்காண்டமுற்றிற்று.

பொதுச்சிறப்புக்காண்டம்.



# குசனயோத்திசெல்படலம்.



உன்னதேயிதென்னதேயெனுரையடங்கவுலகெலாந்
தன்னதேயெனக்கடைத்தனிப்பரித்துளானெவ
னன்னதேவனவிர்மலர்ப்பதம்பரத்தினங்ஙனே
யென்னதேனுமன்னதேயிகத்திலென்னகத்ததே. (க)

பாரின்மண்டுசோலையின்பரப்பெலாம்படுமெல்ர்த்
தாரின்மண்டிநிசியுதித்தசசியுதிப்பமீதெலாந்
தேரினுண்டுணர்ச்சினைத்திறத்தினூடொதுங்கியே
வாரிமொண்டெழுந்துதூயமங்குல்கண்படுக்குமால். (உ)

கனமலர்த்திறத்திறுகாறுழாவுகஞ்சநீ
டனவயற்றடத்துவாரணங்கள்விம்மவருகெலா
மினமுகிற்கலிப்பெறுவெழுந்துகூயிரைத்துநீள்
புனமயிற்குலங்கடொங்கல்புடைவிரித்துநிற்குமால். (ங)

நீர்வளைத்தவிபுதர்காவெரித்ததெவ்வைநேடிவா
னூர்வளைப்பமென்றளிர்த்திறத்தனுனுருக்கொளாக்
கார்வளைத்தழுந்துமெய்யகைதிலக்கலிப்பொடே
போர்வளைத்தெழுந்துநின்றபோலுமாவனங்களே. (ச)

நீதளாவிமைப்பினஞ்சுமமுதுமேதெரிக்குநீள்
காதளாவுகண்ணினார்கள்கண்ணதோகணத்துநீர்
மீதளாவுநளினமாவிரண்டுபோதுமெய்யுறத்
தாதளாவுதேனுமிந்திரசாலமேவிளைக்குமே. (ரு)

சொற்பிறங்கிருட்குழற்றொடிக்கையார்நகைநிலா
வுற்றலர்ந்தநீலராசியுட்சிறந்தபங்கயம்
விற்பரந்தெழப்புறம்விடாதுகாலைவேலைவா
யற்பிழம்பினுட்பொதிந்தவர்க்கனன்னதாமரோ. (சு)

வாரியோடுறத்தயங்குவாரிசங்கள்வண்டுறும்
வேரியோடிதழ்க்குவிப்பதெங்ஙன்வைகல்வேலைவாய்ப்
பேரியோகவமளியிற்பிறங்கனங்கள்செம்மணிச்
சூரியோதயத்துமிக்கசுடர்விளக்கெடுக்குமால். (எ)

செறியகட்டினிரைபெருதுசேறுரந்துசெல்கலா
நெறியைவிட்டுமேதியம்பயத்தழுந்திநின்றுசெங்
குறியநெட்டையடியுரங்குலைந்துவாரிசத்துவீ
ணறியமட்டின்மறியவுண்ணடப்பகன்னிநாரையே. (அ)

காவியிற்றுயின்றுவைகல்கண்டவண்டுகாமர்மா
றேவியிங்கிருக்குமென்கைதேறியம்புயமெலா
மேவியின்றுணர்த்துகட்பதத்துழக்கிமெல்லவே
தூவியிற்றுடிப்பநற்றெருழிற்றிறந்தொடக்குமால். (கூ)

கழிமணப்பகைதைசெங்கடுங்கண்மேதிகால்படும்
வழிமணப்பதாமரைவயங்கறைக்குறுஞ்சுனைக்
குழிமணப்பகாவியோதைகொண்டுகானயாறுசெல்
லுழிமணப்பதேனுலாவுமொண்மலர்க்கடுக்கையே. (க0)

சோலையல்லவம்புயத்தடந்தொனிச்சுரும்புவீ
ழாலையல்லமாதராடிடங்களங்கவரெறி
மாலையல்லதீங்கனிமயங்குசாறுமண்டுதேன்
வேலையல்லபாளைவாய்விளைந்ததேறல்வெள்ளமே. (கக)

வேறு.

நாணின்றவினையசெவ்விநாடுடுத்தலரிநாண
வாணின்றமணிசெய்மாடவான்கலன்வனைந்துவீதிச்
சேணின்றதெரியல்பூண்டகுசாவதியிதனிற்றெம்மேற்
கோணின்றகதிர்வேற்கொற்றக்குசனுலகளிக்குநாளில். (கஉ)

கொற்றப்போர்த்துணைவராவாரெழுவருந்துதியிற்கூடிச்
சுற்றப்போதிரண்டினீதித்துறைதெரிந்திலங்குபானு
வற்றைப்போதகலவான்த்தம்மதிவிளங்காநிற்கு
மற்றைப்போதணுகவின்பவான்றுயிற்சாலைசார்ந்தான். (கந)

காப்புடைய்யுல்கங்காக்குங்காப்பினைக்கருதியன்ன
வாய்ப்புடைநிலையைப்பல்கான்மனக்கொண்டுதுயிலின்மாய
நீப்புடைவிழியனுகிநிரந்தவொண்பட்டாத்தசெவ்விப்
பூப்புடைப்பள்ளித்தாமப்பொலியணைக்கிடந்தகாலை. (கச)

பரிவலையறிவினெய்திமீளுவார்பரிசிற்றீப
வெரிவலையிலங்குசோதிகுறைபடுமிடையாமத்தி
லரிவலைநறுந்தார்க்காந்தர்ப்பிரிவினோர்வேடத்தாகிப்
புரிவலையொருத்திதோன்றிப்புரவலன்விழிமுன்னின்றாள். (௧௫)

உதியொடுந்தொடர்ந்தநுண்ணூலவர்க்கெலாம்பொதுவாயுள்ள
நிதியொடுஞ்சிறந்தோன்றன்னைநெடிதுறநோக்கியின்னா
மதியொடுமிதயஞ்சேர்த்தவஞ்சலிமலர்க்கையோடுந்
துதியொடும்பெரிதுநின்றாடோன்றியதோகையன்னாள். (௧௬)

நயப்பொடுங்காணுங்காட்சிநவத்தொடுநவைதீர்நன்மைப்
பயப்பொடுமொளிவட்டத்துப்பாவையினெதிர்நின்றாளை
யுயப்படுமுலகங்காக்குமொருவனுமெதிர்கண்டுள்ள
வியப்பொடுந்துடியும்பிந்தும்விரைவொடுமெழுந்துசொல்வான் (௧௭)

முறுக்கியபொறியவாரைக்காப்பொரீஇமுரட்கபாடத்
திறுக்கியதாழிற்றாயமனையகத்தெய்தாநின்றாய்
குறுக்கியவுரையாலிக்குவாகுவின்குலத்தோருள்ள
மறுக்கியபிறதாரத்தைமணக்கொளார்மதித்தியென்னா. (௧௮)

நங்கைநீயாரையென்றானப்பிரானகருக்காய
வங்கமோரேழுங்குன்றாவயோத்திமாதெய்வமென்பேன்
றங்கணார்ப்பிரிந்தோர்வேடந்தரித்தனனிக்குவாகு
மங்கலமரபினார்தம்வழிவராவகையினென்றாள். (௧௯)

என்னைநின்வரவிராமனகரொடுமெழுந்துபோய
பின்னைநன்னகரம்பாழ்பட்டிருத்தலாலென்னப்பேசிப்
பொன்னகரதுவுமற்றையளகையும்பொருவாச்செல்வ
வந்நகர்கிடந்ததன்மைகேட்டியென்றறையலுற்றாள். (௨௦)

கைம்முகிற்றலைவர்ச்சேராதிடிந்தமாடமும்வேல்கக்கும்
வெம்மதிற்சிதைவுந்தாங்கென்விழுநிலைமேக்குவேலைச்
செம்மலர்க்கதிர்போய்வீழச்செருக்கியகாலாற்சிந்து
மம்முகிற்குலங்கொண்மாலையந்தியொத்திருந்ததன்றே. (௨௧)

விடைக்கொள்ளுநடையகாந்தர்ச்சேர்விடநேடிமின்னார்
புடைக்கொள்ளுஞெகிழம்விம்மப்போதருமரசவீதி
முடைக்கொள்ளுமுதிரவூன்செம்முகக்கொள்ளிகொண்டுநேடி
நடைக்கொள்ளும்விளிவாய்த்தீயநரிக்கணமுடைத்துமாதோ. (௨௨)

வாட்டலைக்கண்ணிஞர்கைம்மலர்புடைத்தாடவோதை
பூட்டலைப்பொருந்தும்வள்வார்முரசெனப்பொங்கும்வாவி
மோட்டலைத்தழலின்செங்கண்முரண்கொள்கான்பகட்டுமூரிக்
கோட்டலைப்பதனுற்கல்லெனெல்லொலிக்குரைப்பிற்றன்றே. (உ௩)

சயவரித்தடங்கணல்லார்பஞ்சிதோய்தளிர்மென்பாதத்
துயவரிச்சுவட்டிற்சேர்ந்தசுடர்க்குறிப்படிகளெல்லா
நயவரிப்பொறிமான்கொன்றுநகக்கறையொழுகச்செல்லும்
வயவரிப்புலிச்செம்பாதவடுக்குறிமலிந்தவன்றே. (உ௪)

பெருக்கிற்றண்கமலக்கானிற்புகுந்துளபிடிகளுளஞ்
செருக்கிற்றுய்ப்பனவாய்ச்செய்தசித்திரக்கரிகளெல்லா
முருக்கிற்கொண்டியற்றியன்னவயிரவள்ளுகிராற்சியந்
தருக்கிற்சென்றிடறவிண்டதலையினவானவன்றே. (உ௫)

கொல்லிப்பாவையினிற்றுருவமைத்தமென்குறுநுசுப்பு
வல்லிப்பாவையின்மென்கொங்கைமலைக்கெலாம்வடகமாக
வெல்லிப்பாயிருளவன்னநிறத்ததாயெழுப்பல்லூடு
கல்லிப்பாய்விடவராவினுரிகளேகலந்ததன்றே. (உ௬)

நலம்புக்கமகளிர்செவ்விநளிர்முகக்குடைந்திட்டிந்து
பிலம்புக்குக்கிடந்தாலொக்கத்தோன்றிடும்பிரதிவிம்பங்
குலம்புக்கபசும்புற்கொள்ளைவெள்ளையங்குரத்தாற்கூண்ட
கலம்புக்கமுன்றிற்றுறுங்காண்டலுக்கரிதுமாதோ. (உ௭)

உருகப்பட்டுள்ளமின்னுரோய்யெனக்கொழுந்துதாழ்த்துச்
செருகப்பட்டுள்ளபூக்கொய்தேம்பொழிற்கொடிகளெல்லாங்
கருகப்பட்டுள்ளவேடர்தன்மையிற்கவியின்பாய்ச்சற்
பெருகப்பட்டுள்ளதாக்காற்பின்னப்பட்டுள்ளவன்றே. (உ௮)

எண்கட்செஞ்சிலைவேளன்னூர்மனம்படவின்பமின்று
ருண்கட்செம்முகராகத்தினுளிருஞ்சாலேகராசி
நுண்கட்பைஞ்சிறையவீயினினம்படச்சிலம்பிநூற்ற
வண்கட்சின்னூலின்பின்னுவலையினின்மறைந்தவன்றே. (உ௯)

நிரையொடுங்கடவுட்பேணும்பொருளொடும்படிவார்நீத்த
விரையொடுந்துவரநூதசரயுவின்விளங்குதீரம்
புரையொடும்பணிகள்சுற்றிநிமிர்ந்திடப்புல்வாய்கக்கு
மிரையொடுங்குரைவரயோரியிரைப்பொடுங்கிடந்தவன்றே. (௩௰)

கான்படுமகில்கலாபங்கமழ்ந்திட்முரசினார்ப்பை
வான்படுமுழக்கென்றாடிமாடத்திற்றுயிலுமஞ்ஞை
தேன்படுமதமாவார்ப்பினாடுபுதில்லத்தீயிற்
றான்படுசுறுமேனாறத்தருக்களிற்றுயிலுமன்றே. (௩௧)

வின்மயவழகின்மிக்கவளத்தினாலியக்கர்வேந்தன்
றென்மயவளகைக்கென்றுஞ்சிறுமையீந்துள்ளேனின்ன
தன்மையநிலையதானேனன்றக்கதோதலைவனீயே
பொன்மயமேருவென்னவிளங்கவும்புவியின்மாதோ. (௩௨)

இறைவநின்றந்தைமாந்தரியாக்கையிற்றீர்ந்துதெய்வ
முறைவருந்தனதுதொன்மைமூர்த்தத்திலடைந்தாற்போல்
நறைவருஞ்சோலைசூழிக்குசாவதிநகரைநீத்து
நிறைவளந்தருமயோத்திவருகெனநெடிதுசொன்னாள். (௩௩)

புரப்பினிற்றலைமையானபுரதெய்வமானாடன்சொ
லிரப்பினிற்பெரியவாகமகிழ்ச்சிகொண்டினையநேர்ந்தான்
சுரப்பினிற்களிகொளுள்ளமலர்ச்சியிற்றுவன்றியொண்கட்
கரப்பினிற்புகமறைந்தாள்கட்புலக்காட்சியாளே. (௩௪)

மிடற்றலைத்தமங்கள்வீயவெயிற்றலைக்கரங்கணீட்டிக்
கடற்றலைப்பரிதிதோன்றக்களித்தலைக்கருத்தினோடு
மடற்றலைக்கதிர்கொள்வேலானருட்டலைநியதியாற்றி
மடற்றலைத்தாமம்வேய்ந்தமண்டபமதனின்வந்தான். (௩௫)

சொற்படுசுருதிவல்லோர்தொன்னிலைத்துறையுஞ்சூழ்ந்த
விற்படுகடவுட்காற்றும்விதியையுமுணர்ந்தபின்னர்த்
தற்படுநிலையினொற்றைத்தினத்தினும்புதுமைசான்ற
வற்படுநிகழ்ச்சியெல்லாமந்தணர்க்கறியச்சொன்னான். (௩௬)

மன்னெறித்தகையிற்றானேவரித்துளவயோத்தியாடன்
சொன்னெறிப்புகுதிபுக்காற்றுயக்கறநிலைத்திநின்றா
லந்நெறித்தகையினெல்லாவுலகையுமளித்தியின்ன
நன்னெறிப்பெறுதியென்னாவாழ்த்தினர்நவையிலாதார். (௩௭)

பெருநிலைப்படுத்தபெற்றிநுண்மதிபிடித்துநோக்கி
யிருநிலைப்படுத்தநெஞ்சைக்குசாவதிநகரையெஞ்சா
வருநிலைப்படுத்தமெய்யர்க்களித்துநன்கயோத்தியெய்து
மொருநிலைப்படுத்தான்சால்பினுத்தமநிலையினானே. (௩௮)

மண்பெரிதாகுங்கொல்லோபல்சனமியங்கமாட்டா
விண்பெரிதாகுங்கொல்லோவெண்டுகள்வெளிகண்டோடா
கண்பெரிதாகுங்கொல்லோகாட்சிபோய்க்கழியாவென்ன
வெண்பெரிதாகக்காண்போர்வியப்புறவெழுந்துபோனான். (௩௯)

வேறு.

மண்டட்க்குமாந்தரா
ரெண்டடக்கெழிலினால்
விண்டட்க்குவாணியே
கண்டடக்குகாவரோ. (௪0)

முத்துடைமருப்பினால்
வித்தகவியப்பின
கைத்திறற்களிறரோ
சித்திரச்செய்குன்றமே. (௪௧)

பணிநலத்தபாசுடர்
மணிநலத்தமாமைய
திணிநலத்ததேர்களே
யணிநிலத்தகங்களே. (௪௨)

பண்ணிரைப்பரிகள்வாய்
வெண்ணுரைவிலாழியங்
தண்ணிரைத்தடநதி
தெண்ணிரைத்தெருக்களே. ௪௩

நாட்படுமதநதி
யாட்படுமகழியாக்
காட்படுகடிமதில்
வாட்படைவளைவரோ. (௪௪)

ஏதில்யாவுமின்னவா
முதலாலயோத்திவாய்க்
கோதிலாக்குசாவதி
போதல்போற்பொலிந்ததே. ( )

வேறு.

காய்நிறத்தவேற்காளையர்
தூய்நிறத்தபொற்றுங்கலாற்
பாய்நிறத்தனபல்கதிர்
தீய்நிறத்தனசெக்கரே. (௪௬)

உறங்குமின்னுவினெல்கிடைக்
கறங்குவெள்வளைக்கையினு
ரிறங்குமென்குழலிந்துவே
பிறங்குவெண்மதிப்பிஞ்சரோ. ()

மையவாட்கணின்மாதரார்
துய்யையூட்டியதுணைப்பதச்
செய்யநூபுரச்சிலம்பரோ
சையவாய்ப்புளின்றமரமே. ௪அ

எள்ளத்தாழ்தருமிளையர்கைக்
கொள்ளைத்தாமரைகுவிதலும்
வள்ளைக்காதினார்வாணித்தேன்
வெள்ளத்தாம்பலும்விள்ளுமே.

நிரக்குமாலையினேரின்மா
லுரக்குமாலயருள்ளுறக்
கரக்குமாலயங்கைவிலான்
புரக்குமாலயும்போன்றதே. ௫0

வேறு.

தவற்றின்மாய்தறாட்
கெவற்றினேயெனிற்
சுவற்றியாதினுக்
கவற்றினையதே. (௫௧)

செருக்கொண்மாக்களிற்
றருக்கொளார்ப்பெழுக்
கருக்களியாவைகொ
லுருக்கொளாதவே. (௫௨)

தனிப்பதாமறத்
தொனிப்பகாகளம்
பணிப்பியார்ப்பவா
மினிப்பிலாரதே. (௫௩)

கடைப்பிறப்பவ
லடைப்பிறப்படுந்
தடைப்பிறப்புறு
படைப்பிறப்பவே. (நிச)

வளிபடாமுகி
றெளிபடாகைபி
னளிபடாதவே
வெளிபடாதவே. (நிரு)

பாரின்மன்னதே
மேருவன்னதே
பேருமன்னதேற்
றேருமன்னதே. (நிசு)

பண்ணிற்றும்பரி
வெண்ணிற்றுநில
மெண்ணிற்றுள்ளமேல்
விண்ணிற்றுள்ளுமே. (நிஎ)

முந்திமானுடைப்
பந்திபல்குழா
முந்தியேசெலீஇ
விந்தமேயினன். (நிஅ)

வேறு.

போகமேமிடைந்தவுச்சியிழிந்துரம்பொருந்திச்சாரற்
பாகமேவிரிந்துபாயுமருவியப்பரியகுன்றம்
யோகமேவிளங்கும்கும்பமுனிவனன்றெளிர்கையூன்ற
வாகமேநெரிந்திட்டின்றுமழுவதுபோன்றதன்றே. (நிகு)

பரிப்பினுலிலங்குபானுப்பருச்சுடர்பரந்துபாயு
மெரிப்பினல்வெடித்தசெய்யவினமணிவிடர்களன்று
னெரிப்பினுலிருக்குமாகிழிருந்தராமுடிநிலைத்த
தரிப்பினுற்கிழியவெற்பின்றசைப்பிளப்பனையவன்றே. (சு0)

இனம்பெறுவரிமானுள்புக்குழக்கலான்முழைகளெங்கும்
வனம்பெறுவிரிசெஞ்சோதிமணித்திரளுகுவமாண்டோன்
சினம்பொருவுடைந்திட்டுள்ளேயுறைந்திடுங்குருதிசேனைக்
கனம்பொருததுவேவாயாற்கக்குவபோலுமன்றே. (சுக)

சேணியல்சுனையினீலமலர்ந்தனசேனைப்பாரம்
பூணியல்பொருதுநாகம்புதைந்திடாக்குறையுந்தீரப்
பாணியினமைப்பான்வந்தான்கொல்லெனப்பழையோன்றன்னைக்
காணியகருதிவெற்புக்கண்விழித்தனையதன்றே. (சுஉ)

பொகில்பிடித்தல்ருஞ்சந்தப்பொதும்பர்சூழ்புனிதவெற்பின்
செகில்பிடித்தெழுவேய்மேகந்தீண்டுவசுரித்தறீர
வகில்பிடித்திருளக்குன்றமளப்பிலகரமேனீட்டி
முகில்பிடித்தெழுவான்வல்லேமுயல்வதுபோலுமன்றே. (சுங)

நான்றுபோதருவிநீத்தநனிகழீஇநடந்தநன்கி
னேன்றுபோதழுக்கிற்றாயவிலங்கொளிப்பளிக்குப்பாறை
யான்றபோதவையினூரவ்வசலத்தமுனிவனங்கை
யூன்றுபோதுரியொரீஇயவுறுப்பினையொக்குமன்றே. (சுச)

நீங்குலாவினைமாயாவுமுண்டிழபுகாதிருகியாரப்
பாங்கெலாமுழங்காநிற்பபழமுனிபரித்தநீங்கா
னீங்கலாநோயிற்றாயநெடுமலைநிரந்தசேனை
தாங்கலாதரற்றாநிற்குந்தன்மையைநிகர்க்குமன்றே. (சுரு)

சம்பகத்தருவின்கிள்ளைதடந்திரைதளிர்மென்றும்பிக்
கொம்பர்காலெடுக்கக்காலக்கூவிளிகுயில்கள்கூறப்
பம்பிமாபதங்கம்யாவும்பரவல்போற்றுவைப்பமேகக்
கம்பலநிழற்கீழ்வைகுங்கடவுளர்தம்மின்மாதோ. (சுசு)

மீவிளங்கிசையதும்பியாயத்தின்விளைவிற்சூழக்
கூவிளங்குயின்மென்பேடைகுளிர்மதிதாதிற்கூட்
மாவிளங்கிளைக்கண்டத்துமலர்த்தவிசுறைவசந்தக்
கோவிளங்குமரியான்றகுடம்பைவீற்றிருக்குமன்னோ. (சுஎ)

வவ்விடமுணர்ந்துபுல்வாய்பிணித்திடும்பணிவாயூற்றும்
வெவ்விடந்துறுகன்மாடேவிலகியூர்ந்தணுகிப்பாகங்
கவ்விடமணிகள்செய்யகதிர்த்தலைநீட்டல்காள
வவ்விடதரநாநீட்டல்போன்றனவறையின்மாதோ. (சுஅ)

தெண்மணிக்கதிராற்பொன்னின்செம்பொன்மால்வரையுநீலத்
தண்மணிக்கதிரானீலசயிலமுந்தழைவேயீன்ற
வெண்மணிக்கதிரால்வெள்ளைவெள்ளியங்கிரியுஞ்செய்ய
வொண்மணிக்கதிராற்காலையுதயமால்வரையுமொக்கும். (சுகூ)

குயில்களக்கிளையதேமாக்கொழுந்தளிற்றுவருங்குன்று
மயில்சிறைக்கசோகின்றுதுமலைக்குறமகளிர்செங்கை
யயினகக்கிலந்தைக்கூட்டுமருதமும்வருடையாரப்
பயில்பதக்கெரிபொற்றாளுமூட்டுவபான்மைத்தன்றே. (எ0)

வேறு.

வீரந்துஞ்சுவவெண்மதிவெண்மதி, வீரந்துஞ்சுவவெங்கயவெங்கய, வாரம்புல்லுவவஞ்சுகவஞ்சுக, மாரம்புல்லுவவங்கதவங்கதம். (எக)

எண்படுப்பன வின்கனியின்கனி, கண்படுப்பனகந்தரகந்தர மண்படுப்பனமாமணிமாமணி பண்படுப்பனபாட்டளிபாட்டளி.

கரந்தசிந்துர சிந்துரக் காஞெடே, பரந்தபாடலப்பாடலம்பாங்கரிற், புரந்தபைங்கிளைப் பைங்கிளைபோந்துலா, நிரந்ததண்டலைதண்டலைநேருமே. (எங)

முருகுதேக்குவமொய்ந்நறைத்தேக்கினங், குருகுகாட்டுவகொய்ம்மலர்க்கூட்டிட, மருகுஞ்க்குவவாரமென் பூக்களே, பருகுமாக்களிபற்றுவமாக்களே. (எச)

வானவானதி நீர்கொடுவாழைதா
தீனவீனமிலின்கனியின்மண
நானநானமொடேறுபுநாகர
மானமானகரெங்குமயங்குமே.

கண்டகச்சிறுகண்டகநின்ளுெளிர், விண்டுமுத்துகவிண்டுமிகுந்தொலி, யுண்டுமிக்கொலி யுண்டுகொலோவென, மண்டியக்குறமண்டியிரைக்குமே. (எசு)

ஆலமேசெறிவெங்கணுமாலமே
நீலமேதிடரெங்கணுநீலமே [மே
கோலமேசுனையெங்கணுங்கோல
யேலமேயுளுமெங்கணுமேலமே.

கைவளத்தன பண்ணுடைநல்லியா, ழிவ்வளத்தனிவெற்பையிகந்துபோய்ப், பொய்வளத்தவர் நெஞ்சிற்புழுங்கிய, வெவ்வளத்தகடுஞ்சுரமேயினுன். (எஅ)

வாகையும்வெதிருமிலவும்வறுங், கூகையுங்குரவுங்குடையுந்தருவீகைகொண்டிலே யற்றவெறுஞ்சினைச், சாகையுந்தழலும்முளசாரெலாம். (எகூ)

இடனெரிந்தவிதன்றழ லல்லவோ, சடைவிழுந்துதடம்பிலமூடுபோய்க், கடலிறங்கிமிர்ந்துகடுஞ்சிகை, வடவையென்றுலகஞ்சுடவைகுமே. (அ0)

இக்கடுஞ்சுர மூளெரியேறவே மிக்கவண்டம்வெதும்பலி னல்லவோ, தொக்கவெண்ணிற் சுருக்கறமேற்றிசை, செக்கரென்றெருசெம்மைபிறப்பதே. (அக)

விச்சைவெங்கதிரென்ன விளக்குவா, ணிச்சமும்வயினெங்குநிரம்பவே, யுச்சியாதப ஞெண்கரம்வைத்தெரி, நச்சியிங்கிதி னுண்டுநடக்குமே. (அஉ)

உசிதமொன்றுரைக் கேனுதின்றீக்கடை, யசிதவெங்கடலுண்டவியாதெழ, விசிதமாகமண்வெந்தையல்லவோ, பசிதமென்றரன்மேனிபரித்தவே. (அங)

பப்புற்றொங்குமிதன்றழல்பற்றவே, தப்புற்றேய்ந்துதளர்ந்தயர்மாணிலம், வெப்புற்றேடியவேர்வினையல்லவோ,வுப்புற்றேங்கியவொண்கடலென்பதே. ()

விரியும்வெந்தழல் வெந்தழன்மேற்பட, வெரியும் பைங்கழைபைங்கழையெங்கணுஞ்,சொரியுநித்திலநித்திலந்துள்ளிவீழ், பொரிவுமல்லனவல்லனபுல்லுமோ.

விள்ளப்பட்டனநிற்பன வெம்பியே, துள்ளப்பட்டனமற்றையசொற்றிடி, லெள்ளப்பட்டனவன்றியிரும்பொருள், கொள்ளப்பட்டனவில்லைகுணங்களே. (அசு)

இலைப்படாவெயிற்கீண்டொளி
த்தேகுபா, றலைப்படாவசையாசி
னையின்னிழ, றலைப்படாநிலந்தக்
கதிலோடுவா,னிலைப்படாதிடநே
டுவயோலுமே. (அஎ)

முன்செய்போதினன்முன்கழிந்
தோடுமே, பின்செய்போதிற்பெ
யர்ந்துறவோடுமான், மின்செயு
ச்சிமெலிந்தடப் பாந்தமங், கெ
ன்செயும்பின்னரெய்தருநீழலே.

நன்னிலத்திலொரெட்டுநறும்வன
மன்னிலத்தொரு நாலுமலைத்துற
கன்னிலத்திலிரண்டுமென்காவத
மிந்நிலத்திலொர்விற்கிடையேயுமே. (அகூ)

வேறு.

சிதைத்தேகுஞ்சேப்பருந்துபுடைபோதச்சினச்சூறை
யுதைத்தேகுஞ்சருகுநிழலுறப்பெடையையொருங்குசிறை
புதைத்தேகும்புகைப்புறவம்புழுங்கிநிழற்புடைகாணுப்
பதைத்தேகும்வன்கரியினிழலேகும்பன்மாவே. (கூ0)

விதமேவுங்கருங்கள்ளிவாய்பிளப்பமிடைவேரல்
பதமேவுகண்வெடிப்பப்படர்வேம்புதலையெரியக்
கதமேவுங்கொடுந்தீயாற்செவியழிந்தகடும்பாலை
யிதன்மேலுமுளவோவெங்கலைமோடிக்கினிதிடமே. (கூக)

தெள்ளியபல்லியாண்டொறுத்தசெழுமேகத்தலைத்தூற்றற்
றுள்ளிபெறவாய்திறக்குந்தொடர்வேட்கைச்சாதகம்போற்
கள்ளியெரிநிழற்புழுங்குங்களிறுகரங்கொடுவாயி
னள்ளியெறிதிவலைதனக்கங்காக்குங்கலையினமே. (கூஉ)

வேறு.

இனையவன்னிலமெங்கணுமின்னறும்பொடியும்
புனையுஞ்சந்தனத்தேய்வையுநெறியெலாம்புதைப்ப
வனையும்பீலியுங்கவரியுந்தழையுமேன்மயங்க
நனையும்பைந்தொடையாதபத்திரநிழனடந்தான். (கூங)

கொந்துலாந்தகையாலவட்டத்திளங்குளிர்கால்
மந்தமாருதவாயுவின்மருங்கெலாம்வளர்வ
சிந்துநீர்த்தடஞ்சிவிறியிற்சொரிசிறுதாரைக்
கந்தசாரமும்மாரியுமொருவகைகாட்டும். (கூச)

விரனுழைத்திடவரியனவிலோதனக்காணிற்
சிரனுழைத்துறவொருவகைநோக்குதல்செயினு
முரனுழைத்தளப்பிலகுடைப்படலத்தினூடே
கரனுழைத்தலுக்கரிதெனநின்றனன்கதிரோன். (கூரு)

போற்றொடும்பதர்கினிசெலப்புரவிவாய்விலாழி
யாற்றொடும்புனைமலரொடுமடுசரித்தானச்
சேற்றொடுந்திகழ்மணியொடுஞ்சிறந்தசீர்மருதப்
பேற்றொடுங்கிடந்ததுகொடும்பெருந்தழற்பாலை. (௯௬)

பாங்கரிற்பொலிதயிரெறிமத்தொலிபரப்பத்
தீங்குழற்படுதெள்ளிசையொருபுடைசிலம்ப
வாங்கெழிற்சிறுதாம்புறநின்றுநின்றான்கன்
றேங்கொலிப்பெருமுல்லையினெல்லைபோயிறுத்தான். (௯௭)

கடனென்றாங்கயற்கருவிளைகாணமென்காந்த
டடமென்றார்க்கரம்விரிப்பவஞ்சனிதலையசைப்ப
வுடனின்றார்பதம்பண்ணிசையுறுத்தவூரணில
நடனன்பாங்குறநடிப்பதுமுல்லைமென்னடணி. (௯௮)

வம்புலாமலரணிக்கணிக்கணிகையாம்வஞ்சிக்
கொம்பின்மாட்டளிபாண்குலத்துதினைவடுத்தே
நம்புநீர்மையிற்றடஞ்சினைநறுங்கரநீட்டிச்
செம்பொனீவவுஞ்செவ்வியஞ்செழுமலர்க்கொன்றை. ௯௯

முன்றழைத்திடுமுதிரிலைக்கெடுதியுமுளவாய்
நன்றுழைத்திடுங்குயில்களானல்லுரைநவிற்றி
மின்றழைத்திடுமந்நிலத்திருவுக்குவிழைவா
லின்றழைப்பெருங்கையுறையளிப்பனவினமா, (௧௦௦)

மறாதுமாவினமலர்க்கருவிளைக்கண்கள்புதைப்பச்
செறாதுகாந்தளம்போதுகைமறித்திடச்சில்லா
நிறாதுபாளிதவற்கலைநெகிழ்ப்பனகாணாப்
பொறாதுகாக்கியமலர்முகங்கறுப்பனபூவை. (௧௦௧)

விடுங்கொல்பாரிடைவிண்மிசைவிதப்புகுந்தொளிக்கி
லடுங்கண்வான்முகமம்மதியதனொடுமென்றா
வொடுங்குநுண்ணிடையிடைச்சியர்மதர்விழிக்குடைந்து
நடுங்கல்கொண்டுபுற்கவ்வுவசேட்டிளநவ்வி. (௧௦௨)

பவரும்வெற்பெலாம்பறித்தலிற்பதலையஞ்செவ்வி
கவரும்கானியாறுடைப்பெருங்கானொரீஇப்போகி
யிவரும்பஃறிணைப்படுபொருள்பறித்தலையிட்டுத்
துவருஞ்சங்கமுங்கவருமாநதிக்கரைதொக்கான். (௧௦௩)

துளக்கில்பார்மகடனதொருசுடர்க்கையிற்சங்கங்
கிளக்குநீடிரைக்கங்கையைக்கடந்துபோய்க்கிரணந்
திளைக்குமாரமொத்தொளிர்மருதஞ்செலீஇமற்றை
வளைக்கைநேர்தருசரயுவின்றடங்கரைவந்தான். (கoச)

விதுக்கொள்வாண்முகவணிதையர்விழிமிடைந்துலாவுஞ்
சதுக்கமாகியதணிவரைமார்பிடைத்தயங்கு
மதுக்கொடாரிஞன்ருடலைவைத்துமாநகரம்
புதுக்குவான்ரெழிற்கைவலாரளப்பிலர்புகுந்தார். (கoரு)

தேங்குதேம்பொழிற்றருக்குலஞ்சூழ்தருசிறப்பி
ஞேங்குபேரெழிற்றபணியநாகர்தம்மூலகை
யாங்குமாசுடைக்காளிமவரும்படாம்போர்த்து
வாங்கியாங்கெனப்புதுக்கினர்வல்லையின்மாதோ. (கoசு)

நாற்றிசைப்பரப்பன்றியுமுலகெலாநணுகித்
தோற்றிசைப்பராசசேகரன்கழறுதியா
மாற்றிசைப்பவர்நகரெனக்கிடந்ததுமறுகாற்
போற்றிசைப்பவர்நகரெனச்சிறந்ததப்புரியே. (கoஎ)

மிக்கமாமுனிவெகுளியாற்புணரிபோய்வீழ்ந்த
தக்கவான்பொருள்யாவையுந்தடங்கிரிதிரித்திட்
டொக்கவாங்குபுகொண்டமரேசன்வானுலகம்
புக்கபோன்மெனவிதிவழாதயோத்தியிற்புக்கான். (கoஅ)

குசனயோத்திசெல்படலமுற்றிற்று.

ஆ செய்யுள் - உகஅச.

---

# வாகுவலயப்படலம்.

---

குணதரனுகியகுசனுங்கோதில்சீ
ரிணையிலனுகிநற்பொலிவினெய்தினன்
றுணைகொளுமயோத்தியாந்திருவுஞ்சுந்தர
மணமகடன்மையின்மலிந்துவைகினள். (க)

பூங்கழற்பொருவில்வேலவனும்பொற்புடைத்
தீங்கிலகடிநகர்தந்திருவுஞ்செவ்வியிற்
றூங்கியதருக்கொடுதம்மிற்கண்டுகண்
டோங்கியவுவகையவுவரிமூழ்கினர். (உ)

மன்னனையுடைமையான்மங்கைதானுமப்
பொன்னகரரசையும்புந்திசெய்திடாண்
மின்னினையுடைமையால்வேந்தன்றானுமந்
நன்னகரதனையுநயந்திலானரோ. (௩)

நங்கையைக்காப்பதுநம்பிநம்பியை
மங்கையேகாப்பதுமற்றென்றல்லவாற்
பொங்கியவுடலுநல்லுயிரும்போன்றன
ரிங்கிதநிலைமையுமியம்பினெக்குமே. (௪)

ஏற்றகவிளங்குபொன்னணிந்திடம்படட்
மூற்றியமதில்கொலோமுயங்கயோத்தியாள்
பொற்றொடிக்கைகளைவளைத்துப்பொங்கிசைக்
கொற்றவன்றனைத்தழீஇக்கொள்வதொக்குமால். (௫)

விண்படுகடிமதில்வளைந்துவீறொடு
மெண்படுதடம்புனலகழுமெண்ணுமேன்
மண்படுமங்கவளுவகைவாய்ந்துள
கண்படுபெரும்புனற்கடலதாமரோ. (௬)

பேழ்மணிமாடவெண்பெரியவுச்சிமேற்
றாழ்முகிற்கதுப்பிடையகிலின்சார்புகை
சூழ்தரவொளிர்நகர்த்தோகைதன்னெடுங்
காழ்தருதிகிரியான்களிப்பின்வைகுநாள். (எ)

வெந்திறல்வேளொடுமினையர்வீறொடுங்
கொந்தணிவசந்தம்வென்கொடுப்பவெண்டிசை
யுந்தழலெங்கணும்பரப்பியோங்குபு
வந்ததுவேனின்மண்மயில்வெதும்பவே. (அ)

நொய்வுடையவர்களேபலகவர்நோன்கொலை
மையலின்மனத்தரேமைந்தர்வான்றழற்
கையவெம்பாலையேகாந்தைகாய்கதிர்
வெய்யவன்றனைவனவ்வேனிலாற்கரோ. (௯)

மனைவியுமெரியினும்வாழும்வஞ்சனைத்
தனயருமொருவகைதரிப்பர்சார்துணை
முனைவனுமவனொடுமுயலுமொய்பகை
யெனையர்தம்மேல்ரோவிசைந்தபாவமே. (கo)

வீரமுண்டிறங்கியவிரைமென்சந்தன
வீரமுண்டலந்தையுண்டியாறுண்டின்மண
நாரமுண்டகன்பொழிலுண்டுநாற்கட
லாரமுண்டெளியரோபகைவராகுவார். (கக)

வாவியுங்குறுகினயாறுமாதரார்
நீவியமேகலையளவுநின்றன
காவியந்தழையுமோகழிந்தவேனிலம்
பாவியுங்கதிருமேபரந்தவெங்கணும். (கஉ)

பண்டருமிசையறுபதங்கண்மல்லிகை
விண்டிடுமலர்தொறுமிதித்தல்வேறிட்
மண்டலரின்மையின்மற்றைநாளுந்தே
னுண்டிடவெண்ணுபுகாண்டலொக்குமே. (கங)

புள்ளொடுந்தூங்கியமருதப்பூந்துணர்
தெள்ளிடுமதன்வசந்தத்திற்றிண்சிலை
யுள்ளுடைதரவளைத்தெய்யநைந்துற
நள்ளிடையற்றுநாணுல்வதொக்குமே. (கச)

திருந்தியதாதளாய்ச்செவ்வித்தேனினை
யருந்தளிசூழ்தரும்வாகையம்மலர்
கருந்தொழிற்கம்மியர்குருகிற்கட்டிய
விருந்தையிற்பொதிந்திடுமெரியையொத்தவே. (கரு)

மருக்குழல்வர்க்குமைந்தருக்கும்வாசநீர்
விருப்பமுந்தாகமும்விளையமெய்யெலா
நெருப்பினையள்ளுபுநிரந்திறைத்தென
வுருப்பமும்வெயர்வுமேயுடையவாயவே. (கசு)

விழுமியசெல்வரெந்திரத்தின்வீழ்மணந்
தழுவுநீர்வளைத்திடநாப்பட்சந்தன
மெழுகியமணிச்சிலாதலத்துமேவியெற்
பொழுதினையிங்ஙனம்பொலிந்துபோக்கினர். (கஎ)

நல்லியன்றூம்புனலாடிநானமுண்
மெல்லியவிரலலைப்பவிழ்த்துமின்னனார்
புல்லியவகிற்புகையூட்டிப்பூங்குழன்
மல்லிகைபொதிந்தனர்மாலைப்போதெலாம். (௧௮)

ஏற்றமும்வலியுந்தற்கியலவீதரு
மாற்றருஞ்சிறப்புடைவசந்தமேகவுங்
கோற்றொடிமகளிர்தங்கூந்தற்பொற்பினாற்
றேற்றமும்படைத்தனன்றுளக்கில்காமனே. (௧௯)

மல்லலஞ்சந்திரகாந்தமாடெலா
மெல்லையினீர்த்துளியிறைப்பவின்புறு
மெல்லியநறுமலர்ச்சேக்கைமேவியே
யல்லையுமொருவகையகற்றுவாரரோ. (௨0)

சூதமென்பல்லவத்துண்டத்தூறிய
மேதகுகரும்புமிழ்சாற்றுவேரியைப்
பாதிரிமணத்திடப்பருகிக்காமிகள்
பேதுறுதாகமேபெரிதுநீக்கினார். (௨௧)

கணத்தலர்செருகுகம்பலத்தமாடமேன்
மணத்தலைசந்தனவரப்புள்வாசநீர்
பணைத்தசந்திரமணிப்பாவிற்றேமல
ரணைத்தணிச்சேக்கையினரசன்வைகுமே. (௨௨)

தேறலைத்தருமதிச்செழுமணிப்புன்
றூறலைப்பருத்தபொற்கோரத்தொண்டுளை
யேறலைத்தரித்திடாதெல்லுங்கார்த்தலைத்
தூறலைச்சிறுதுளிதூற்றிக்காட்டுமே. (௨௩)

களிப்பெருமார்பினிற்சமழுமல்லிகை
வெளிப்படமுத்தவெண்கோவைமேற்படா
தொளிப்புறநறுந்தழையொதுக்கிக்கொட்டிய
துளிப்புனற்றளமயற்பருவந்தோற்றுமே. (௨௪)

தழைசெயுமோதியர்தம்மிற்றாக்கலி
னிழைசெயுமுலைமுகட்டுறுத்தியென்றெழு
புழைசெயுஞ்சிவிறிநீர்த்திவலைப்பூண்புகை
யுழைசெயுமுன்பனிப்பருவமொன்றரோ. (௨௫)

புதுக்கதிர்க்கம்பலத்தொடையிற்புல்பெட்
டையொதுக்குபுதழீஇயறுபதமுழக்கலான்
மதுப்பொசிநுண்டுளிச்சிதைவின்வான்றெறிப்
புதுப்புறமின்பனியுறுத்தியுள்ளதே. (உசு)

புரைமலராலவட்டம்பொற்பூங்கதிர்
நிரைவளைக்கையினார்நிரந்துவீசலால்
விரவியபுதுமணம்விளைக்குமெல்லொலி
வரவொருதென்றலம்வசந்தம்வாய்க்குமே. (உஎ)

இருதுவொன்றாயதிலிரவிமாறினு
மிருதுவொன்றாயதிலிறுவவென்னினு
மிருதுவொன்றாயதினெடுமிவற்றினா
றிருதுவொன்றாயதிவ்விறைவற்கென்பவே. (உஅ)

இன்னணமியன்றசீரிடந்தணந்தெழா
மின்னெழக்கீழ்ப்படவிரித்தகம்பல
நன்னிழற்கவரிகாலிரட்டநன்னர்போய்ப்
பொன்னணிமண்டபம்பொலிந்துவைகினான். (உகூ)

குழைமுகந்துளக்குபுகுலவுநீதிநா
றழைகலையாளரைத்தருதிரிங்கென
வுழையரைநோக்கினனவனுமோர்கணம்
பிழைதபநீங்குமுன்கொணர்ந்துபேணினார். (௩0)

குரிசில்பொற்றாள்கரங்கூப்பிக்கொள்குண
மரியவக்கிழமையர்மகிழ்ந்திருத்தலுந்
தெரியவக்கைப்பொருளோடுஞ்சேர்ந்தனர்
பரிமளித்தற்றொழிலாளர்பாங்கரோ. (௩க)

அளிப்படக்கரிந்துமூட்டைசத்தபாசடை
நளிப்படப்பசித்துமின்னளிர்பொற்றட்டினு
ளொளிப்படப்பசந்துநானிறங்கொடோங்கிய
களிப்படுமெல்லிலைக்கண்ணிகாட்டினார். (௩உ)

நளிவிரைமெல்லடீளிடைநட்டத்தியுந்
துணைவரவறுபதமழைத்துந்தோற்றிரு
விணைதகவொழிவுறாதமைந்தமேதகு
புணைநறுங்கலவைமுன்பொலியவேந்தினார். (௩௩)

தகரமேறியமலர்க்கிண்ணஞ்சாளிக
நுகரமேதகவகநிறைத்துநோன்குணம்
பகரமேலவர்க்குமாங்கரியபாளித
நிகரமூடியதுகழ்ச்சந்தநீட்டினார். (ருச)

சொற்றவுநறுவிரைதுதைந்தசூழ்பொருண்
மற்றவுங்காட்டிடமகிழ்ந்துகண்டபின்
முற்றவுமுணர்கலைமுநியர்க்கீந்தனன்
பற்றலர்மணிமுடிபதித்தவேலினான். (ருரு)

உற்றவிப்பருவநீர்க்கிரீடையுத்தமப்
பெற்றியிற்றியாதினுமென்னப்பேசினார்
மற்றவர்மற்றதைமனத்திருத்தினான்
சொற்றிகழவனடிதொழுதுநீங்கினார். (ருசு)

மிடலொடுதேனுகர்ஞிமிறுபாண்செயு
மடலொடுதயங்குதார்வயங்குமார்பின
னடலொடுநெருங்குவேலருங்களுரெனுங்
கடலொடுசரயுவின்கரையினெய்தினான். (ருஎ)

வேறு.

துனைவருந்தரங்கசாலந்தொறுந்தொறுஞ்சுவேதவன்ன
வினமினிதிருந்துலாவுமீர்ம்புனற்றுறைபோயீண்டு
கனையளிகெழுமுபைந்தேங்கண்மலர்க்கவின்பூம்பந்தர்ப்
புனைநிழலோடமூராப்புனல்விளையாட்டிற்புக்கான். (ருஅ)

அரிமுகமடுத்துவீழுமான்மதவளறுநாறக்
கரிமுகவோடமூர்ந்துசிலதியர்மருங்குகாப்பச்
சுரிமுகநெற்றிதுற்றச்சுடர்மணிவர்க்கந்தொக்க
பரிமுகவோடமூர்ந்துசிலதியர்பாங்குபோனார். (ருகூ)

வயந்தருவரிக்கண்வள்வாள்வயங்கவெம்மருங்கும்வந்திட்
டியைந்தவரளப்பிலாதாரெதிரெதிரோடமூரக்
கயந்தருசுழிப்பேராழிக்கடுந்திரைப்புரவிபூண்ட
சயந்தனவோடமூர்ந்துசிலதியர்தாவிப்போனார். (சுo)

கைக்குழல்சிவிறிசெம்பொற்கவின்மடல்காமர்கொம்பு
மிக்கொளிர்கலவைக்கோரமென்றொடைசுண்ணப்பேழை
தக்ககுங்குமச்செஞ்சேறுசந்தனக்குழம்புமற்றுந்
தொக்கவன்மதலையூர்ந்துசிலதியர்துவன்றிச்சூழ்ந்தார். (சுக)

மாணமாமகிழ்விலின்னபலபொருண்மலர்க்கையேந்தி
யீனமேநீங்கத்தம்மிலிருபுடைசெறிந்துசெவ்வித்
தேனுலாம்வாகைவேய்ந்திட்டணிபலசெறித்துச்சேம
வேனில்வேள்சேனைதன்னால்விளைந்ததுசுகந்தவெம்போர். (சஉ)

சாந்தினையிறைக்குவாருந்தழைகொடுதடுக்குவாரும்
பூந்தொடைவிசைக்குவாரும்புனைதுகள்போக்குவாரு
மேந்தகவிலக்குவாரும்விலக்குபுநரந்தமென்சே
றேந்தன்மேலிறைக்குவாருங்குங்குமமெறிகுவாரும். (சங)

வம்புகொண்டிலகுசீதவட்டிகைவாரிவாரிக்
கொம்புகொண்டிறைப்பவேயின்குழல்கொடுகூடுவாருங்
கம்புகொண்டிலங்குகாந்தள்கவின்கொளக்கமழுமவாச
வம்புகொண்டடர்ப்பவோராவாகநொந்தயருவாரும். (சச)

மைம்முகில்சரியக்கொங்கைமலைவட்டம்பரியக்கஞ்சச்
செம்முகம்வெளிறவுண்கட்கருவிளைசிவந்துகாட்டத்
தம்மனங்களிப்பவாடையிடையொடுந்தளரயாப்பிற்
கைம்மலர்கவினவப்போர்கலவியம்போருமொக்கும். (சரு)

தூண்டியதொடையிற்போயுந்தொடர்ந்தெறிபந்தின்மீண்டு
மீண்டுமிக்கொலியினோடுமெறிதருமிஞிறினீட்ட
மாண்டதுமருங்குலென்னமனக்கொடுவருந்திவல்லே
வேண்டுவபகர்ந்துவெம்போர்விலக்குவபோன்றவன்றே. (சசு)

கோற்றொடியார்ப்பவார்ப்பக்குவிமுலைவிம்மவிம்ம
வேற்றிடைநோவநோவப்பரிபுரமேங்கவேங்க
நூற்றுகிலொல்கவொல்கநுதற்குறிமாறமாற
மேற்றொடைவீழவீழமிகவிளையாடினாரே. (சஎ)

செருக்கிளர்சிங்கமொன்றைச்செவ்விமானினங்கள்கூண்டு
நெருக்குபுவளைத்திட்டாங்குநீர்ச்சிறுதுருத்தியேந்தித்
தருக்கியகளியின்வாசத்தண்புனற்றுரையோச்சிக்
குருக்கிளர்மணிப்பொற்பூணார்குரிசிலைவளைந்துகொண்டார். (சஅ)

நறுவிரிதொடையான்மீதங்கவர்விடுநறுநீர்த்தாரை
மறுதெமதிருக்கைசார்ந்தானெனப்புனன்மகளிர்வாழ்த்தி
யிறுவிசையுடையோன்றன்னையிரட்டியைஞ்ஞூறுதாரை
யறுவபிடேகஞ்செவ்வேயாட்டுதல்போன்றதன்றே. (சகூ)

முன்னரையடரிற்பின்னர்முயன்றெழில்வலிபெயர்ந்து
பின்னரையடரின்முன்னர்செயும்வலிபெரியவாமாற்
பன்னரும்பாங்கர்தாமுமன்னதுபலிப்பத்தன்ன
ரென்னருமுடையத்தானுமிளைத்தனன்சிறிதுநின்றான். (௫௰)

உளவியனுலகவாழ்க்கையுட்பொருளுறுதியூக்க
வளவியமதனமூலமந்திரநிலையாநின்றான்
றளவியன்முறுவனல்லார்தண்ணறுமகிலின்றூம
மளவியபுதியவாசவந்துகினெகிழ்ந்தவன்றே. (௫௧)

கலைத்தலைவலங்கைதாங்கவிடங்கைபோய்க்கடிதுகாஞ்சி
நிலைத்தலைபற்றப்பாதநோக்குபுநிற்றலோடுந்
தலைத்தலையவன்றற்பாலார்தம்மொடுமடர்ப்பவாற்றா
தலைத்தலைவீழுமின்னுக்குழுவெனவறலின்வீழ்ந்தார், (௫௨)

வேறு.

வெந்திறலினன்புடைவிளங்குமடவாரு
மந்தரவரம்பையரிலம்புனலிழிந்தார்
சுந்தரவிமானமதினின்றுமிழிதொன்மை
யிந்திரனெனக்குரிசிலும்புனலிழிந்தான். (௫௩)

ஒண்டொடியொருத்திபுனன்மூழ்கவுயர்வேலா
னெண்டகுகரத்தினினுழக்கவெழுகின்றாள்
பண்டிரவிநின்றுதிரியக்குமிறுபங்க
வண்டிரையெழுந்திடுமலர்த்திருவையொத்தாள். (௫௪)

ஐயனறல்சிந்திடவருங்களியினோடு
மொய்குழலொருத்திதன்முகம்பெயரநின்றாண்
மையின்மகிழ்வுண்டெனினும்வாடைமழைகூடத்
துய்யவதனம்பெயரோர்தோகைநிலையொத்தாள். (௫௫)

வம்புலவுதொங்கலணிமன்னன்மிசைவஞ்சிக்
கொம்பர்நிகர்மின்னொருதிகொள்புனலிறைத்தாள்
வெம்புகளியிற்குறுகும்வேழமதன்மீதே
யம்புனலிறைத்திடுமரும்பிடியையொத்தாள். (௫௬)

தண்ணுதன்மடந்தையர்களோரிருவர்தம்மி
லெண்ணருநறும்புனலிறைத்தனரெதிர்ந்தார்
வெண்ணிலவுமாறியெதிர்பாயவொருவேலை
யண்ணியெழுகின்றவிருதிங்கணிகரானார். (௫௭)

கொள்பொருள்கள்கொள்ளலிலவாய்நிதிகொடுப்பார்
வள்ளணிலைதேவரும்வகுக்கரிதுமானார்
கள்ளவிழிமையதுகவர்ந்துபுனல்யாறுந்
தெள்ளுமதராகமதளித்ததுசிறந்தே. (ருஅ)

சிற்றிடையிறச்சிலவர்நின்றுபுனல்செங்கை
பற்றுபுமுலைத்தலைபறித்தெறிதலோடு
மிற்றிதுவெனற்சரிதிறக்கும்வடமோடே
யற்றுதிருமுத்தமுமறற்றுளியுமம்மா. (ருகூ)

சரிந்தனமலர்க்குழறயங்குகுழையின்றோ
டிரிந்தனநுதற்குறியிகந்தவெழிலாரம்
பரிந்தனமடக்கொடியவர்க்கழகுடைபயத்
திரிந்தனவத்தினொருசெவ்வியுளதன்றே. (கூ0)

வேறு.

பூந்தொடியொருத்தியப்புனிதநீரெதிர்
நீந்துபுசேறலினிமிர்ந்தவார்குழன்
மேந்தகுமந்தியளவைமேதக
வாய்ந்தறிதற்கினிதளப்பபோன்றதே. (கூக)

தெறிக்குநுண்டுவலைநீர்ச்சிறந்துமூழ்குவாள்
வெறிக்கருங்குழல்புனல்விரிந்துதோன்றுதல்
பிறிக்குமெற்பொழுதையுமலிற்பெயர்த்திரு
ளெறிக்குநஞ்சுவரிவாயெழுதல்போன்றதே. (கூஉ)

அறைந்திடுமேலவரமைந்தநன்னெறி
திறம்பிடாரென்பதுதெரிந்துகாட்டுமா
லுறைந்துறமூழ்கவுமொருத்திபின்னலி
னிறந்தகுபிணிவிடாநெடியகூந்தலே. (கூ௩)

துணைமுலைபொங்கவுமருங்குல்சோரவும்
பணையொலிவான்புனல்படிந்துநீந்துவா
ளிணையிலமணிப்புயமிரண்டுமின்பவேய்ம்
புணையெனவுரைப்பதுபுதுக்கிற்றுமரோ. (கூச)

எண்கெழுமந்தியிடங்கொண்மேலெல்லாந்
தண்கெழுமாலையுந்தளமும்போதரக்
கண்கெழுகுழைகளுங்கம்புமாரமுங்
கிண்கிணிமாலையுங்கிடந்தகீழெலாம். (கூரு)

## வேறு.

இன்னவாறிலங்குபூணுனீர்ந்திரையெறியுநன்னீர்
தன்னதாமகத்துவேட்கைத்தழைப்புளதனையுமாடிக்
கன்னபாகங்களோடிக்கலகஞ்செய்கரியசெங்கட்
பொன்னவாமகளிரோடும்புதுமணிக்கரையிற்புக்கான். (சுசு)

புகரறவடித்தசெவ்விப்பூங்குழையதனிற்பூண்ட
மகரிகைவெயிலுலாவுமணிப்புயவரையைப்பார்த்தா
னிகரறுகிரணத்தெய்வநீண்மணிவலயங்காணுன்
பகருரையொன்றுமில்லான்பன்னுபுபரிந்துநின்முன். (சுஎ)

மற்றவன்றலையாமீகைவள்ளலிற்றலையானுசைப்
பற்றினிற்பூவும்பொன்னுநிகரெனப்பரந்துகாண்பா
னெற்றிதுதன்மைகொண்டானெனிற்றிருவியன்றுநாளும்
வெற்றியைத்தரலால்வேட்டான்வேறின்றின்வேட்டிலானே. சுஅ

அன்றியுஞ்சலதியுண்டவம்முனியளிக்கப்பெற்றுத்
தன்றனித்தாதைவாகுத்தரித்ததுதரணியோடு
நன்றுறத்தன்மையீந்தநல்லெழில்வலயமற்றுற்
கன்றினனுள்ளமெண்ணெண்கலைக்கடற்கரைகண்டானே. (சுகூ)

சொல்வலேத்தறுகண்வஞ்சச்சூழ்ச்சிவேத்தினமாச்சுற்றும்
வில்வலைப்பெரியவேட்டவேந்தர்கோன்விரைந்துநோக்கிப்
புல்வலைப்போகமாதர்கண்ணெனப்புறம்விடாத
வல்வலைப்புணரிவேட்டப்பரதவர்வருகவென்முன். (எ0)

பெரும்பெயர்த்தூதரோடிப்பெரிதுரைவழங்கநீண்ட
விரும்புனற்கலவர்தாழாதெண்ணிலார்வருதலோடுஞ்
சுரும்புணக்கிடந்ததாரான்சுடர்முகந்துளக்கிநோக்கி
வரும்புனற்போயவாரம்வல்லைநீர்தருதிரென்முன். (எக)

வார்நடித்தெழுந்தகொங்கையளத்தியர்கண்ணின்வண்டின்
முர்நடித்தரற்றும்புன்னைத்தண்குறுந்தாமத்தாரார்
பார்நெடிற்குடிஞையல்லாற்புணரியிற்பட்டதேனு
மோர்நொடித்தருதுமென்னுவொல்லெனவொலியல்புக்கார். (எஉ)

இடைப்படுகயங்கடோறுமிருதலைதேய்ந்துநாப்பண்
புடைப்படுநெடுங்கற்முளிற்கொளீஇப்புடைபெயராதோடிக்
கிடைப்படுகுறுங்கற்பாரமடிப்படக்கிடந்துநீரிற்
றடைப்படுமயிலைதன்னிற்றலைத்தலைசார்ந்துதேர்வார். (எங)

திணைபுனற்பரவைபுக்குத்தெண்மணற்றொடுவார்சேட்செ
லணையிடைக்கோற்காற்றோட்டிநீடடியாய்ந்தறிவாரார்த்துத்
தணையிடைக்குறுங்கணீண்டசங்கிலித்தொடக்குண்வள்வாய்
வளைதலைக்கரும்பொனீர்த்திட்டெங்கணும்வருந்திக்காண்பார். (எச)

தண்வலையீர்த்துப்போவார்தனிவலைதாழ்த்துச்செல்வார்
கண்வலைவளைத்துச்சூழ்வார்கரைவலைமுடுக்கிக்காண்பா
ரெண்வலைதெளித்துநிற்பாரெறிவலையெறிந்துகொள்வார்
நுண்வலைபரப்புகிற்பாரல்லவுநோக்குகிற்பார். (எரு)

ஆழ்கயந்தடவிமீள்வாரயிருறக்கிளறியாய்வார்
தாழ்சுவல்கிடங்குதேர்வார்சைவலக்கொத்திற்சார்வார்
பேழ்கடன்முகஞ்சென்றோய்வார்பெரும்புனலின்னபின்னு
மூழ்குபுவருந்தித்தம்மான்முயல்வனமுயன்றுமீண்டார். (எசு)

இழப்பனபொருளின்வேந்தரிழப்பதற்கியலாவார
முழப்பனவுழந்துங்காணேமென்னலுமுவகைதோன்றத்
தொழப்படுதகையினின்றுதொழுதனர்துங்கவோரேழ்
முழப்பெருமதமால்யானைவேந்தனுமொழிவதானான். (எஎ)

பெற்றுளபோலுமெண்ணம்பேதுறுமுவகையுள்ளத்
துற்றுளதுரைப்பீரென்றானோங்குமிவ்வொலியலுள்ளே
பற்றுள்குமுதநாமப்பாழியம்பாந்தளொன்று
மற்றுளததுவேநின்பொன்மணியணிகவர்ந்ததென்றார். (எஅ)

ஆற்றலினிமிர்ந்தோர்தங்கள்செருக்கெலாமவர்தம்வென்றி
மாற்றவரெதிர்க்கமாயுமென்பதுமனத்துவையாக்
காற்றினுங்கடியவேகக்காருடபாணம்வாங்கிக்
கூற்றினுங்கொடியதிண்காற்கொடுஞ்சிலைகுழைவித்தானே. (எகூ)

மிகையெழவவனிமூட்வெயிலெழவெடித்திட்டண்டம்
புகையெழவுவரியேழும்பொறியெழவிசையின்வாதத்
தொகையெழவரைகளெட்டுந்துகளெழச்சுடருஞ்செந்தீச்
சிகையெழநிமிர்ந்துவல்லேசென்றதத்தெய்வவாளி. (அ0)

பெருமதக்கரிகளெட்டும்பெரும்பொறைபிடித்துமாயப்
பருமணிமவுலித்துத்திப்பணாவரவரசுமுள்ளந்
தெருமரவிறுதிக்காலமழைமுகில்சிந்துந்தீய
வுருமெனவுரறியோடியொலியல்புக்குழக்கிற்றன்றே. (அக)

கலங்கினகுழீந்தவீட்டாகதறினபரந்துவேலை
விலங்கினவலம்பிப்பங்கம்விழைந்தனமிடைந்துமீன
மலங்கினமறிந்ததீரமலிந்ததுபேணநீரிற்
றுலங்கினபெருகியுள்ளேசுழீந்தனதுவன்றியெங்கும். (௮௨)

ஆலொக்குமனையவாளியலைப்படுசூர்தேடாடல்
வேலொக்குமல்லவாகில்வியன்கடன்மீனமாகிப்
பாலொக்கும்பணிலநாமவஞ்சனைப்படர்ந்துதேடு
மாலொக்குமன்றேற்சுற்றுமந்தரவரையுமொக்கும். (௮௩)

விண்ணெழுந்திவ்லைதத்தமேற்படவரவமென்னு
மெண்ணருமிரண்டுசோளுமியக்கறவிலையாநின்ற
தண்ணுறுஞ்சுடருமற்றவெய்துறுங்கதிருஞ்சாலத்
துண்ணெனுந்துடிப்பினுள்ளேயுவகையுஞ்சுரந்தவன்றே. (௮௪)

காற்றலாற்கனலையொக்கத்திரிந்தவெங்கணைதன்னற்ற
ரேற்றலாலெழுந்தவோதையந்நதிதுளங்கியின்னே
மாற்றலாயாகிலையமற்றொருகணத்தினிங்ங
ஞற்றலேனென்னவாய்விட்டரற்றுதல்போன்றதன்றே. (௮௫)

கிடங்குறத்தட்வியெங்கும்படர்தலுங்கெழுமுமோதை
யிடங்கொணீர்ப்புறத்துமேன்மேலெழுந்தனகுமிழியெல்லா
நடங்கொளுமனையசிற்றநகைநுதிக்கணையின்கோபக்
கொடுங்கனல்பொருதுவெம்பிக்கொப்புளம்பொடித்தபோலும். ()

வஞ்சியங்கரைதொடாவுள்வளைந்துறமறிந்துமீதே
விஞ்சியதிரைகளந்தவிழுநதிமடந்தைதானே
துஞ்சலில்சுழற்சியோடுந்துறைமுகந்துளங்கித்துன்பா
னெஞ்சயர்ந்தாற்றுதங்கணெடுநுதனெரித்தல்போலும். (௮௭)

வேறு.

கேடில்கோட்டிடைநெடுஞ்சிலைக்குடம்பையிற்கிடத்தும்
வீடிலாச்சினைசிதறியவாமெனவிரைவா
னோடிமாப்புனற்புள்ளினநெடுங்கரைதோறு
மோடிவாய்க்கொளநித்தில்ந்தெறிப்பவுமொருபால். (௮௮)

கடைதயிர்ப்படுமறிவினிற்கலங்குபுபெரிதே
யிடைபுனற்கிடையுள்ளூறவிருப்பவுமாற்று
தடைகொடித்திரைநுடக்கிடையொன்றொடொன்றலம்பி
யுடைவலைக்கிளையரற்றொலிபிறப்பவுமொருபால். (௮௯)

நெருக்குதன்பகைமேற்பெரும்பிலத்திடைநின்று
செருக்கொள்பல்பணச்சேடன்வெஞ்சினமுறச்செலுத்தும்
வருக்கவம்பினிநெழுவினின்வாளினின்வளையி
லுருக்குவேலினின்மீனினம்பாய்தலுமொருபால். (கூ0)

தெண்ணிரைக்கிடங்கிடையிடையோடுபுதியங்கு
மெண்ணுரைக்குமுதன்பெருவாயிடையெழுந்த
வெண்ணுரைத்திரண்மிதந்தெனவெண்புனல்விரிந்த
வொண்ணுரைப்பரப்புழையுழையொதுங்கலுமொருபால். கூக

தொலைந்துபன்மலர்த்தொகையொடுந்துறுகரைதோறு
மலைந்துமாத்திரைவாங்குபுதிரிதலின்மறிவா
லுலைந்துமீப்படுசெந்தனக்குறட்டொடுமுரிஞ்சிக்
கலந்துசேட்புலங்கமழ்வனகாரகிற்கடிகை. (கூஉ)

வேறு.

இன்னணந்தெய்வவாளியியற்றலுமற்றநோக்கி
யுன்னரும்பயத்தினேடுமொருபுடையொதுங்கிவாராப்
பொன்னணிவலயத்தோடும்புயங்கமாங்குமுதன்பொற்பார்
கன்னிகையொருத்தியோடுங்காவலன்முன்னரானன். (கூங)

அலையிடைத்திருவினேடுங்கற்பகமுதித்திட்டாங்கு
நிலைபெறத்தோற்றிநாகத்திறைவன்முனிற்பவேந்தன்
வலயமுமதற்குநேராமடக்கொடியென்னுங்காட்சித்
தலைவருபொருளுநோக்கித்தடஞ்சரந்தணிவித்தானே. (கூச)

புடைப்படுவிவிதவண்டமனைத்துமோருந்திப்போதி
னிடைப்படநின்றோன்றந்தவிறைவனையினிதுநோக்கி
விடப்புரையெயிற்றுச்செங்கட்பல்பொறிவிளங்குதுத்திச்
சுடர்ப்படநாகராசன்முடித்தலைதாழ்த்துச்சொல்வான். (கூரு)

உற்றுளபொருளான்மாந்தருருக்கொடுவையமீதி
லெற்றுறவருமாலோற்கேபுதல்வனுமிரண்டாம்யாக்கை
பெற்றுறவிளங்குநிற்கும்வழிபட்டலன்றிப்பின்னர்
மற்றுறவெவனுகின்றேன்வழித்தொண்டின்வந்துளேனே. (கூசு)

செம்மலர்மடந்தைநேரென்பின்னையாமிவட்டன்செங்கை
யம்மலர்சேப்பவாயத்தமைந்துபந்தாடுமங்கண்
மைம்முகில்விசும்பின்வீழோர்சோதியின்வலயமீதோன்
றிம்மெனவீழ்தலோடும்வியந்துகொண்டேந்தினளே. (கூஎ)

நீப்பிலசானுநீண்டுநெடுஞ்சிலைகிரந்தநாணிற்
றேய்ப்பெனுமாரம்பூண்டுசெசதலமிதற்குத்தெய்வக்
காப்பினிற்கருவியாகிக்கனத்ததிண்புயத்திலிந்த
வாய்ப்புடைவலயமின்னும்வனைந்திடவேண்டுமென்றே. (கூஅ)

மையுலாம்விழிக்குமுத்துவதியெனுமிவணின்பாதச்
செய்யதாமரைக்கீழ்வைகிச்செய்பிழைதீரநோந்தா
ஊயநீகைக்கொள்வாயென்றறைந்தனனரசன்றானுந்
துய்யநீயெமதுதொல்லைச்சுற்றத்துட்டுயையென்றான். (கூகூ)

நலமணிப்பாந்தணுதனயந்துளமகிழ்ந்துநன்ன
ரிலைமணிப்பூணினுற்கேயிலங்கொளியணிகட்கெல்லாந்
தலைமணிக்கலமும்பெண்ணிற்றலைமையாந்தகைசாறங்கள்
குலமணிக்கலமுமீந்தான்கொழுங்கனன்மன்னர்மாதோ. (க00)

பொன்னணிவல்யத்தோளான்புரைமறையார்ப்பநாக
கன்னிதன்காந்தளஞ்செங்கைம்மலர்பற்றும்போதிற்
றுன்னிலைவிசும்பிற்றேவதுந்துபித்தொகைநின்றார்ப்ப
மன்னியமலர்ப்பூமாரிமாமுகில்பொழிந்ததன்றே. (க0க)

திக்கெட்டும்வென்றோற்கைந்தாம்பேரனுந்திருவினானுந்
தக்கற்குமனையனனகுமுதனுஞ்சிறந்துதம்மின்
மிக்குற்றபெரியசுற்றத்தொடர்ச்சியின்விழுமிதாகப்
புக்கொத்தசிறப்பினோடுபொருந்துபுபொலிந்துநின்றார். (க0உ)

அற்புதவரசனுலோரரும்பகைதீர்த்தலாலே
சொற்புனைமணிகளுச்சிச்சுடர்முடியரவவேந்தன்
றற்பெறுந்தந்தைதன்னையடர்த்தலிற்பகையிற்சார்ந்த
மற்பெறுகலுழன்றன்னாலவரும்பயந்தீர்ந்துபோனான். (க0ங)

இம்பரிற்பரந்துநாகத்திறங்கியெண்டிசையினேறி
யும்பரிற்சிறந்தகீர்த்தியொருவனுமுவந்துமீளா
நம்புமிக்களிகூர்சர்ப்பநாயகனேவறன்னால்
வெம்பணிப்பகைதீர்வையம்புரந்துறவிளங்கினனே. (க0ச)

வாருவலயப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள்-உஉஅஅ.

# முடிசூட்டுப்படலம்.



இமையாவிழிப்புலவோரின்னமுதினெழிற்றிருவினிலங்குபூமிக் [ன்
கமையார்மடக்கொடியின்விளங்குதகைக்குமுத்துவதிகடல்சூழ்பாரி
சுமையார்புயப்பொருப்புவடிவேற்கைத்தசரதன்றன்றேன்றறேன்
ற, லமையாமனக்கருத்தினுருநோக்கிஞருயிரினவைமந்தாளன்றே. க

கள்ளார்மலர்க்குமுதஞ்செய்யமணிக்கருங்குவளைகரியகாம
ரெள்ளாவிழைசிறியகழைபெரியவென்ருமேயிலங்குவாயுந்
தள்ளாவரிவிழியுஞ்சிற்றிடையும்பெருந்தோளுந்தம்மைமாறி
யுள்ளாவுரைப்பாருக்குரையாகவுவைசிறப்பவுயங்கிஞளே. (உ)

எற்றுணெடுவானரவிமரபும்பாதாளத்திருந்தமாட்சிச்
சொற்றுள்பணிமரபுநடுவிளங்கவெம்மரபுந்தோற்றமாகக்
கற்றுருளத்தறிவுபெரிதாகவைகறையிற்காசிறேற்றம்
பெற்றுங்கருந்தகைமைப்பெற்றியிஞலொருசிறுவற்பெற்றுளன்றே.

இன்னுவிளைத்துயிருண்கொடும்பாவவசுரரெனுமீனராதித்
துன்னுர்குலத்தாழ்வுதோற்றிடநன்கிருநிலமேற்றேற்றுமேனுந்
தன்னுர்முகப்பெயர்விற்றகுமயனமிரண்டினையும்விளக்குஞ்சால்பு
மின்னுர்பகற்சுடரினன்னுன்றனிருமரபும்விளக்கிஞனே. (ச)

வானுர்புகழ்ப்பெரியமாற்றரசவயப்புலியைவாட்டும்வேட்டத்
தீனுறிணைச்சிறுகட்பெருங்கலுழிமதயானையன்னுன்செவ்வே
கூனுர்மதிநுதன்மென்குமுத்துவதியெனும்பிடியின்குலவுசெங்கை
யானுமழகளிற்றுக்கதிதியெனுமொருபேரையறைந்தானன்றே. (ரு)

ஆங்காலவிதிமுறையிற்சடங்கனைத்துமமைத்ததற்பி னமைந்தோர்க
ல்க, வாங்காவருங்கலையும்பஃறெழிலுமுடன்வளரவளரும்போதி
லோங்காநிமிர்புகழானவன்காமர்பருவமதையுவந்துநோக்கிப்
பாங்கார்புகணிருபகன்னியர்தங்கைப்பதுமம்பற்றுவித்தான். (சு)

வேறு.

அறிந்தவான்கலைகொணம்பிவளர்தனுமரசன்வான்போய்
முறிந்தவானுளிக்காகமுடுகியோரசுரனேடு
செறிந்தபோரதனிலன்னுனுயிருந்தன்னுயிருஞ்செங்கை
யெறிந்தவேல்தனிற்கொள்ளாவேற்றவேலதனுக்கீந்தான். (எ)

அஞ்சவேமருமம்பாய்ந்திட்டாவிகொண்டகலாநிற்கும்
வஞ்சவேலுரைப்பதென்னேமன்னன்போய்மடிந்தானென்னும்
வெஞ்சொல்வேல்செவியிற்பாயவிண்ணுலகடைந்தாள்வேழச்
செஞ்சொல்வேற்கருங்கணாககன்னியர்திலகமன்னாள். (அ)

கலந்தவிவ்விருவர்தம்மிற்காவலன்மகவான்காசின்
குலங்கொளாசனத்திற்பங்குகொண்டனன்கொடியனாரு
நலங்கிளர்சசிதனாவித்துணைவியாய்த்தருக்கணல்கும்
பலங்களிற்பயனறுதோர்பங்குகொண்டிருந்தாளன்றே. (௯)

புடைப்பிடித்தகன்றமுன்னூற்பொருளெல்லாம்பொதுக்குறுது
நடைப்பிடித்துணருந்தொன்மைநன்மதிக்கிழவர்வாசத்
தொடைப்பிடித்துயரும்வாகுமன்னவன்சொற்றவாய்மை
கடைப்பிடித்திளவறானேயரசெனக்கருத்துட்கொண்டார். (௧0)

படர்மணிப்பணில்முந்நீர்ப்பட்டுடையவனிப்பாவை
யிடர்மணிப்புயத்தின்மேற்கொண்டகற்றுவானியைந்தநம்பிக்
கடர்மணிச்சுடிகைப்பாந்தளாயிரமகுடமன்ன
சுடர்மணிமவுலிநன்னர்சூட்டுவான்சூழ்ந்துகொள்ளா. (௧௧)

புயனிமிர்மணியின்சோதிப்புரிசைமண்டபமும்வேத
நயனிமிர்நாதவேள்விச்சாலையுநாகஞாலம்
வியனிமிர்கிரணராசிவிமானமும்விளங்குதோற்ற
மயனிமிர்மதிவழாதமவுலியும்வனைந்தபின்னர். (௧௨)

புண்ணியர்க்குமரற்கம்மபுனைமுடிபுனைவதாய
வெண்ணியற்றினத்தினெல்லையிற்றையதென்னயார்க்கு
மண்ணியற்புதியகோலம்வளநகர்வனையுமாறு
பண்ணியற்பறையிற்சாற்றிப்படர்செவிப்படுத்திரென்றார். (௧௩)

சென்னிக்கொண்டனையமாற்றந்தூதருஞ்சிறந்துபோகி
வன்னிக்கொண்டிலங்குசெங்கண்வள்ளுவவருதியென்னாக்
கன்னிக்கொண்டலைநேர்கையாற்கெழின்முடிகவிப்பதெல்லா
முன்னிக்கொண்டுலகம்யாவுமுணர்வுறமொழிதியென்றார். (௧௪)

செறுமதக்களபச்சந்தத்தேய்வையஞ்சேறுதோய்ந்த
நறுமதுத்தெரியல்சாதிநவின்முடைமார்பநாற
வொறுமதத்தவனுமுள்ளத்துவகையினொதுங்கியூற்றி
னறுமதக்குன்றத்தேறியணிப்பறையறைகின்றானே. (௧௫)

மாத்தகைமறையினீரும்வாட்டொழில்வலிமன்னீரு
மேத்தயற்குலத்தினீருமீற்றினின்றீருங்கேண்மோ
கோத்தருமதிதிராமக்குமரன்கோகனதனீன்ற
தாத்திரிமடந்தையின்பநுகருவான்சமைந்தானன்றே. (கசு)

எடுத்தவோர்நாலின்மேலுநாலுகொண்டிசையவொன்று
படுத்தகோட்டிறத்தினுண்மைபழகியபழையராவார்
கடுத்தமாமதியிற்சொற்றகடிமணக்கிழமைநாளு
மடுத்தவீரஞ்சின்மேலுமஞ்சுகொண்டமைந்ததன்றே. (கஎ)

மாண்கொடுநகருந்தும்பிமாலையம்புறத்தவண்டு
பாண்கொடுமிழற்றுந்தாதுப்படலையந்தொடையல்சூடிச்
சேண்கொடுநாறுநானச்செந்தளந்திளைத்தமேனி
பூண்கொடுபொதிந்தியாரும்பொன்றெடும்பொலிகவன்றே. (கஅ)

திண்ணியவாயில்காப்புச்செயாதிடையிரவுகாறும்
புண்ணியர்புகழ்விடாதபுதுவிருந்தயர்கபொற்பார்
தண்ணியற்றகையவாயிற்றலைத்தலைதோறும்யாவுங்
கண்ணினர்மாடேசெங்கைகற்பகங்காட்டுகிற்க. (கக)

பூந்தொடைப்பொதியில்வீதிபுடைபுடைவிதிக்கபூசுஞ்
சாந்தணிமன்றமெங்குஞ்சதுக்கங்கள்சமைக்கவேற்கு
மாந்தர்கையருத்துமன்னவம்பலமமைக்கமுன்னான்
மேந்தகுபொதுவுஞ்செய்கவிளைபலன்விளைக்கவன்றே. (உ0)

துணைதலைத்தொடங்கியாரத்தோரணந்தொகுக்கவண்டின்
கணைதலைக்கலந்தமாலைக்காவணநிரைக்கமேரு
வணைதலைத்தருகவைக்கவாயில்கடோறும்பாளை
புணைதலைப்புதியசெம்பொற்பூரணகும்பமன்றே. (உக)

இருங்குடும்பகலாவாகவிறுப்பையாண்டொழிகவென்று
மருங்குல்விறைவற்காற்றலெண்மடங்காற்றல்செய்க
மருங்குகொண்டிளைக்குஞ்செல்வமங்கலவிழவுமற்று
மொருங்குகொண்டியற்றுகிற்கவொழிவதோராண்டதன்றே. (உஉ)

புள்ளியங்கலர்த்தார்வீதிதொறுமின்னபுகன்றபின்னர்த்
தெள்ளியங்கோயிற்கீசன்றிசைப்படவைத்தானாக
வள்ளியங்கமுதமார்ந்திட்டன்னபேருவகைவாய்ப்பத்
துள்ளியங்கெழுந்தியாரும்பெருவிழாத்தொழிலரானார். (உரு)

ஒளிபடாநின்றசெவ்வியோரிளங்கொடியும்பாரோர்
களிபடாநின்றவோகைக்காளையுங்கலந்துவைகி
நளிபடாநின்றநாளினுள்வளர்வெய்தநாளு
மளிபடாநின்றபன்மூன்றானியமகன்றபின்னை.

செருக்குவாட்டடக்கைவேத்துச்சிந்துரத்திரளையெல்லா
முருக்குவானெழுந்ததோற்றமுருகரியனையதோன்றல்
பெருக்குவான்றூய்நீராடிப்பெருந்தகைநியதிபேணித்
தருக்குவான்மறையின்றேற்றத்தேசிகற்றருதிரென்றான். (௨௫)

மெய்வகையமைந்தோன்றன்னைக்கொணர்தலும்விதியினேர்ந்த
வைவகையமைந்ததீர்த்தமவனெறியமைவினாடிச்
செய்வகையமைந்துசெய்கைநியதியைமறித்துச்செய்திட்
டுய்வகையமைந்தவாதிக்கடவுளையுளத்துவைத்தான். (௨௬)

காய்ப்பிலபலன்கள்யாவுங்கடைக்கொண்டுதலைக்கொண்டார
வேய்ப்பில்கடிகையொன்றையிடைக்கொண்டுநின்றதின்னே
காப்பணிமுகூர்த்தமென்னக்கணியெடுத்துரைப்பக்கேளா
யாப்புறுமுழவம்விம்மவெழுந்தனனிளையகோமான். (௨௭)

உடலெனச்சுற்றுஞ்சூழவுயிரினின்றொருங்குதோற்றுங்
கடலுடைச்சேனையெல்லாங்கண்மலர்பரப்பிநோக்கி
மடலுடைக்கண்ணிசூழ்ந்தமணியணிச்சிவிகையேறி
மிடலுடைக்கதிர்கொள்வேலான்வேள்வியஞ்சாலைசார்ந்தான். (௨௮)

போயதுகடிகைவந்துபுகுந்ததுமுகூர்த்தம்போற்றற்
காயதுபுலவராலுமென்னலுங்குரவனாவான்
றூயதுதுணிந்துசெய்யுமங்குரத்தொழின்முன்யாவும்
வாயதுமறைமுனார்ப்பவழாதுகொண்டமைத்தபின்னர். (௨௯)

தோன்றுடைக்கருபக்காவற்றொழிலினார்தம்மிற்றூய்மை
யேன்றுடைக்குலிசவேலாற்கெதிர்படவிருத்தல்செய்யாக்
கான்றுடைக்கதிரதாகிக்கவினியகழஞ்சுதானோர்
மூன்றுடைப்பொன்செய்காப்புவனைந்தன்முருகனுற்கே. (௩௦)

வலக்கதிர்மாயவேற்கைவள்ளலுமயன்றன்மானப்
புலக்கரிதாயநுண்மைப்புரிதொழிற்கோயில்போதத்
தலக்கிருணிலையாக்காப்புத்தரித்தசெங்கதிரினோடுங்
குலக்கதிர்க்கடவுடானுங்குடகடற்கோயில்புக்கான், (௩௧)

பாக்கியமறையின்செல்வக்குரவனும்படைகள்பத்தி
னீக்கிலவெட்டுமெட்டுநெடுந்திசைநிற்பச்செய்யாத்
தாக்கியநிருதியீசன்றலைப்படப்பதுமஞ்சக்கிர
மாக்குபுகும்பம்பத்துமன்னவாறமைத்தானன்றே. (௩உ)

புரப்புடைக்கடவுட்டன்மைபொலிந்தவப்புதியகும்ப
வரப்புடைத்தகையவாயவேதிகையதனின்வாய்ந்த
நிரப்புடைத்தருப்பைசூழநிரந்ததண்டுலத்தினிட்ட
பரப்புடைப்பதுமகாப்பட்பருமணிமவுலிவைத்தான். (௩௩)

கருத்தியல்காட்சித்தாகிக்கவினியவதற்குநீசித்
திருத்தியதிசையிற்றூயதண்டுலப்பரப்புச்செய்யா
வருத்தியில்வரைகடானோரஞ்சின்மேலஞ்சதாக
விருத்தியாங்கிறைவழாமேயெண்ணிரண்டியற்றியிட்டான். (௩௪)

முறைதருநலத்தவாயநள்ளறைநான்கின்மூந்த
மறைதகச்சிவகும்பத்தைவர்த்தனியோடும்வையா
நறைதருநளினன்முன்னமூவர்க்குநான்குநான்கா
யறைதரவமைத்தான்கும்பமற்றையவறையினன்றே. (௩௫)

பயத்தவாமணிசெய்பத்திப்பஃறலைப்பரப்பிற்செய்த
சயத்தவாந்தொழிலையெங்ஙன்சாற்றுதறளங்கண்மூன்றி
னயத்தவாமயன்மாலீசனண்ணுபுமேலவாதி
மயத்ததாமணிகொளுச்சிமாமுடிமலர்க்கைகொண்டான். (௩௬)

திவ்வியமணிகோளன்னமவுலியைச்சிறந்தபஞ்ச
கவ்வியமொடுமொருறுவிதிமுறைகழுமவாட்டி
யவ்வையின்மறித்தும்வையாவருமறையமைவினுகச்
செவ்வியபடையின்கும்பச்செழும்புனற்றுரைசேர்த்தான். (௩௭)

பணித்தவுத்தரத்திற்கும்பநன்புனல்பதுமன்முன்னு
வணித்தகைக்கடவுண்மூவர்க்கடைவினலாட்டல்செய்யா
மணித்தலைச்சிவகும்பத்தைவர்த்தனியோடும்வாங்கிக்
கணித்தபிடேகஞ்செய்தானுதியாங்கடவுட்கம்மா. (௩அ)

மற்றையவிதிகள்யாவுமாசறவாற்றிமாட்சிப்
பெற்றியவிதியினேமம்பிழைதபாடந்தபின்ன
ரொற்றையந்திகிரித்தேரோனுவரிவாயெழுந்திட்டும்பர்ச்
செற்றியவுதயவெற்பின்றிகழ்முடிதரிக்கவந்தான். (௩௯)

கொன்னிமிர்பதுமக்கோயிற்குரவனுக்கோயில்வைகுஞ்
சொன்னிமிர்பழையவேதத்துறைமுறைநியதியாற்றிப்
பொன்னிமிர்பதுமராகப்பொலங்கழலிலங்கப்போகி
மின்னிமிர்தமரவேலான்வீங்கொளிவிமானஞ்சேர்ந்தான். (சO)

வேறு.

பண்டழைத்தபல்கலைப்பரப்புணர்ந்துபௌவமார்
மண்டழைத்தமாசினுண்மதித்திறம்வழாதோர்
விண்டழைத்ததெய்வவிச்சுவகன்மனன்னமிக்கசீ
ரெண்டழைத்தசிற்பராலியற்றமுற்றியைந்தது. (சக)

கயிரவச்சுடர்மணிக்கவின்கொளுத்திரத்தது
செயிரறத்திரட்டியசெழுந்துகிர்ப்பதத்ததா
லுயிர்படைத்தவன்னவன்னவோவியத்ததோங்கொளி
வயிரவிட்டமிட்டதுமணிக்கொடுங்கரத்தது. (சஉ)

ஊதகத்தரிக்குலம்பிடர்ப்புறத்துறுத்திய
போதகத்தருநிரைபொலிந்தசித்திரத்தது
மீதகத்திலங்குபல்படத்ததுவிளங்குகோ
மேதகத்தமைத்தபற்பவேதிகைக்குறட்டது. (சஙு)

சூழ்சுடர்ச்செயாடகத்தகண்டநற்சுருக்கது
பேழ்படுத்தவேமமிட்டபட்டிகைப்பெருக்கது
காழ்படுத்தநாவலம்பொனிட்டிழைத்தகம்பது
தாழ்கிளிச்சிறைப்பொனிற்செய்தாடியங்குடத்தது. (சச)

மேகபந்திசெக்கராகமிக்கராகவெயில்விடு
மாகமண்டுபற்பராகமவுலியுச்சிவைத்தது
பாகமொன்றுமுத்துமொன்றுபச்சையும்படுத்திடை
நாகவொண்மணிச்செய்பீடிகைப்பொலிந்தநள்ளது. (சரு)

கைத்திறத்தபல்லியக்கணங்கறங்கவெங்கணு
மித்திறத்தவன்னமானநள்ளிருப்பதாயினு
னத்திறத்தொராழியஞ்சயந்தனத்தலர்ந்தெழு
மெய்த்திறத்தவெய்யசெய்யபானுவின்விளங்கினன். (சகூ)

கங்கையிற்கொணர்ந்ததுங்காவேரிகன்னிதந்ததும்
பொங்குசிந்துவந்ததும்பொருங்கடற்பிறந்தவு
மங்கலத்தமற்றவும்வனங்கொணர்ந்துமண்டின
சங்கமுற்றபல்சனந்தபணியத்தகும்பினே. (சஎ)

வேறு.

முறைமுறைவலம்புரிமுகிலின்வாய்விட்
வறைகடல்குறைபடப்பணில்மார்த்தெழ
மறையவரிளவறன்முடியின்மாமறைத்
துறையபிடேகமேதொடங்கினாரரோ. (சஅ)

துண்ணெனுமுழக்கெழவிரைவின்றுப்பெழ
வண்ணறன்முடியின்மேலாட்டுமந்தநீர்
புண்ணியவொருவனால்வேண்டப்பொங்கழற்
கண்ணுதன்முடியின்வீழ்கங்கைபோலுமே. (சகூ)

நிலைத்தலைப்புவியெலாமுவக்குநீர்மையிற்
சிலைத்தலைக்கையவன்முடியிற்சிந்துநீ
ரலைத்தலைப்புனலெலாம்பருகியார்ப்பொடு
மலைத்தலைப்பொழிமுகின்மழையுமொக்குமால். (ரு0)

பண்பொழிமாகதர்துதியிற்பற்றுவ
வெண்பொழிசாதகமகிழ்ச்சியேய்ப்பவே
தண்பொழிநீருடற்றழைப்பத்தங்கினேன்
மண்பொழிகாலநீர்மழையொப்பாயினான். (ருக)

பலங்கெழுமந்திரபவித்திரந்தரு
மிலங்கொளிவெண்புனலினிதினாட்டலா
னலங்கெழுநீர்பொழிமுகிலின்வாய்நனி
துலங்கொளிமின்னெனவிளங்கித்தோன்றினான். (ருஉ)

அம்முறைமுடிந்தபினம்பொன்மாரிபெய்
கைம்முகிலல்லதுதருவுங்காட்டுவான்
செம்மையினேக்கினனுலப்பில்சீர்ப்பொரு
ளிம்மெனவளப்பிலரெதிர்கொண்டிண்டினார். (ருங)

தன்மனநினைப்பினுஞ்செம்பொன்ரூபத
ரின்மனநினைப்பினுமதிகமீந்தனன்
றென்மனநினைப்பினிலவருந்தொக்கவர்
நன்மனநினைப்பினுமதிகநல்கவே. (ருச)

மெய்திகழ்பலபொருள்வீக்கம்பெற்றுள
செய்திகொண்மாதவர்தெரித்தவாழ்த்துரை
பொய்தவிர்தானமுற்பொருளினாற்பெரி
தெய்தியபலத்தையும்பின்னிட்டேய்ந்தவே. (ருரு)

வன்சிறைப்படுநரைவிடுத்தும்வஞ்சனை
யின்கொலைப்படுமுயிரெடுத்துமின்னுயிர்க்
கொன்சுமைப்பரங்களைத்தவிர்த்துங்கூட்டுறை
புன்சிறைக்கிளிமுதற்காப்பும்போக்கினான். (ருசு)

நத்தொடுதுந்துபிகறங்கநாகரும்
பொத்துபுதடஞ்செவிப்புலனின்றாகவே
வித்தகவிமானநின்றிழிந்துவெண்சுடர்
முத்தணிமண்டபநடுவண்முன்னினான். (ருஎ)

ஆசறுநுண்டுகின்முறுக்கியார்விரை
பூசுபுகுஞ்சிநீர்புலர்த்திப்போக்கியே
நேசமொடரும்பெருநியதியாற்றினன்
காசறுதங்குலக்கடவுட்பேணினான். (ருஅ)

அலைபடுநித்திலத்தொகையுமஞ்சினைக்
குலைபடுவெண்மலர்க்குவையுங்கோதில்வெண்
ணிலைபடுநுண்டுகிற்கலையுநீடுதென்
மலைபடுமாரமும்வனைந்திட்டானரோ. (ருகூ)

தலமணிச்செம்மணியணியுந்தாழ்பணிக்
குலமணிப்பைம்மணியணியுங்கோளுயர்
நிலமணிப்பொன்மணியணியுநீண்டபொ
னிலமணிப்பூணினாகமேந்தினான். (சுo)

எண்ணிலபரிதியுமளப்பிலிந்துவு
மண்ணலமேருவொன்றுதித்தவாமென
விண்ணுலகதனையும்விழுங்கும்வெவ்வெயி
றண்ணிலவெதிரெழச்சமைந்துதோன்றினான். (சுக)

அல்விரிதாரகைக்கணமுமல்லிடைச்
செல்விரிமின்னுவின்றிரளுஞ்செல்லகல்
கல்விரியொருபெருங்கதிருமேய்தரு
மெல்விரியாசனத்தினிதுமேவினான். (சுஉ)

ஆட்சிகொண்டிணியரைந்தாயமுச்சடை
யேட்சிகொண்டிலக்கினமெய்திற்றென்னலுங்
காட்சிகொண்டுலகெலாங்களிப்பவெங்கணு
மாட்சிகொண்டுயரருமறைகளார்த்தவே. (சுங)

மொய்த்தனபல்லியமுழக்கம்வாழ்த்தொலிக்
கெய்த்தனவவ்வொலியெழாததன்வயின்
வைத்தனமாமறைவகுணியங்கதைத்
துய்த்தனதேவதுந்துபித்தொனிப்பரோ. (சுச)

திருமணிச்செவ்வியதிரளின்றிவ்வியம்
வருமணிப்பஃறலைமவுலிகைக்கொளா
வருமணிக்காவணநிழனடந்தணிக்
குருமணித்தாழ்குழைக்குரவனெய்தினன். (சுரு)

வேறு.

ஓங்குகவுல்கமெங்குமுல்லாவுகபுகழ்பாரேழுந்
தாங்குகபுயங்களுளுந்தழைக்குகமறைகளென்று
வாங்கரும்விதியினேர்ந்திட்டருமறைக்கிழவனம்பொற்
பூங்கழலடியினுற்கேபுனைமுடிசூட்டினனே. (சுசு)

பண்களிப்பெய்தவாதிமறையவர்பரந்துபாங்க
ரெண்களிப்பெய்தவாசியெடுத்தெடுத்தியம்பவின்பாற்
கண்களிப்பெய்தியாருங்கழலிணைதொழுதபின்னர்
மண்களிப்பெய்தப்போகிமணியணிக்கோயில்புக்கான். (சுஎ)

வரையகப்புயத்தாற்கண்டுமெலர்ந்தனகளித்தவான
நிரையகத்தமைந்தராசகுமாரியர்நிறைந்தவின்பப்
புரையகத்திசைந்தகஞ்சப்பூக்களுமலர்ந்தமோரோர்
மரையகத்திருந்தசெவ்விமான்களுமலர்ந்தமன்றே. (சுஅ)

நரம்பியலமுதகீதநலத்தயாழ்மொழியார்செய்யும்
வரம்பிலவளத்தவானமங்கலவகைகள்காணு
நிரம்பியகடிகைமூன்றுநிகழ்ந்தபினுகநாட்டுத்
தரம்பிறிதிலாதயாகசாலையையடைந்தானன்றே. (சுகூ)

மகிழ்ச்சியின்மலர்ந்தசோதிமவுலிதண்டுலத்தின்வாய்ந்த
திகழ்ச்சியிற்செறிந்தபற்பவேதிகைசிறக்கவையாப்
புகழ்ச்சியிற்பொருந்தும்வேதபூரணகுதிநடந்த
நிகழ்ச்சியிற்பின்னுமன்னநிறைமணிமவுலிவேய்ந்தான். (எ0)

சுந்தரவணிகொடன்னையுதயத்தின்மேருச்சுற்று
மந்தருநிழலிற்செவ்வேயாடியிற்கண்டுநாகத்
திந்திரனனையவேந்தனிமையவரனையராச
பந்திகொண்முதன்மைத்தோற்றமண்டபம்பரிந்துபுக்கான். (எக)

நிறைகுடங்கவரிதோட்டியிணைக்கயனிமிர்பதாகை
யறைதருமுரசுதீபமாடிகொண்டநந்தர்சூழத்
திறைசொரிமன்னர்சூளாமணிகடேய்ப்புண்டசெவ்வி
யிறையவனிருந்தசிங்காசனத்தினிதிருந்தானன்றே. (எ௨)

செவித்திறன்மருவுஞ்செம்பொன்மடங்கலாசனமுந்தெய்வப்
புவித்திருமடந்தைகோளாமன்னனும்பொலிந்ததோற்றம்
பவித்திரப்பதுமவுந்திப்பண்ணவன்பரியமார்புங்
கவுத்துவமணியும்போன்றுவிளங்கினகவின்கொண்டம்மா. (எ௩)

உளந்தருகவரிபாங்கரிரட்டுவ்வரசரோடுங்
களந்தருகீர்த்தியஞ்சியொடுங்குபுகாட்சித்தாக
வளைந்தவும்போலுமன்றேல்வான்முகடளவுமோங்கி
யளந்திடவிவன்றன்கீர்த்தியங்குரித்ததுவும்போலும். (எ௪)

முடிமலர்மணியின்சோதிமீதுமோர்முடியிற்றோற்றக்
கடிமலர்சுருதிவாய்மைமுற்படக்கறங்கவைகும்
படிமலர்நெடியகீர்த்திப்பார்த்திபன்பதுமச்செவ்வி
யடிமலர்மகுடம்வேய்ந்தவரசருமளப்பிலாரே. (எ௫)

பொன்னபூந்தாமமார்ப்பொற்புடைக்கங்கைநாடன்
றன்னபூங்கமலமன்னதாளிணைமகுடஞ்சூடு
மின்னபூபாலர்தம்மையளப்பதற்கியலுமென்னி
லன்னபூபாலர்தம்மையளப்பதற்கமையுமாமால். (எ௬)

நவ்வியங்கருங்கண்மாதர்நயந்தவர்நயனக்கெல்லாந்
துவ்வியலளிக்குமாதிச்சுத்தநன்னிருத்தங்காணு
நொவ்வியுறுனமீரெட்டளித்துநோன்றிசைகளெட்டுங்
கவ்வியகதிரின்செம்பொற்காப்பணிநீக்கினானே. (எஎ)

ஆயினபொழுதினுண்ணூன்மந்திரத்தமைந்தகல்வி
வாயினரரசவேழம்வருகவென்றுரைத்தலோடும்
போயினர்வினையினேவற்றொழிறலைப்பூண்டோர்பொங்கிக்
கூயினர்கொணர்கவல்லேகுலக்களிற்றரசையென்றார். (எ௮)

வெய்யதாமுட்குந்திண்சொற்பாகனுமடிசில்வீழ்த்த
நொய்யதாமலிந்தகண்டக்கவளமுன்னிறைத்துநீத்து
நொய்யதாக்கழையின்றுண்டங்கறித்துநோன்கோட்டின்மேல்
கையதாயசைஇநின்றகடுங்களிற்றருகணுனன். (எ௯)

மறம்புகக்கைகனீர்தூற்றிமதமயக்கதனிற்பாகன்
றிறம்புறக்கணித்திட்டுள்ளேசிறுகுரன்முழக்கிக்கன்ன
முறம்புடைநிமிர்த்துநிற்பமுற்பதக்குரங்கின்வெஞ்சொற்
புறம்புறப்புடைத்துமெல்லப்போற்றுபுதைவந்தானே. (அ0)

ஈருழையதனின்வாமவிடந்தணந்திலங்குபாச
நேருறவலங்கைபற்றவிடங்கைவென்னேடநீண்ட
பாரியநிகளயட்டவலயத்துமிதித்துப்பார
வூருவினுறுத்தியெட்டிட்டொய்யெனவெருத்தஞ்சேர்ந்தான். (அக)

வண்ணவெற்பிரண்டுகாலின்வெண்முகின்மறிந்தாலொக்கத்
துண்ணெனச்சுருக்கியிட்டதூமடிதழாயபின்னர்த்
தண்ணிறத்தரத்தநன்னீர்சரேரெனவெறிந்துதாழ்வி
லெண்ணரைக்கலிங்கமப்பியீர்ம்புனல்புலர்த்தியிட்டான். (அஉ)

இறுக்கிழைப்பின்னுக்காணுரவிபடம்பொதியப்பட்ட
முறுக்கிழைப்புரோசைபின்னர்முன்னதுவாங்கிவீக்கி
நிறுக்கருந்தவிசின்மும்மைநிலைப்படநெடுங்கச்சார்த்து
வெறுக்கையங்கயிற்றுக்கண்டையிருபுடைவிளங்குவித்தான். (அ௩)

கனைவனவினங்கொள்கன்னங்கவுட்கிடைக்கவரிக்கற்றை
வனைவனவனைந்துகோட்டுவரிப்பனவரித்துவாச
நனைவனமலரங்கண்ணிநாற்றுவநாற்றிநெற்றி
புனைவனபுனைந்துபின்னர்ப்பூட்டுவபூட்டினானே. (அச)

மாடுறத்தெழிக்கும்வெய்யவடமொழித்தறுகண்வல்ல
மூடிறக்கவைமுட்கோலர்மும்மருங்கமைந்தபின்னர்ச்
சேடுறத்திருத்தும்வள்வாயங்குசந்திகழவாங்கி
நீடுறக்குறுங்கட்பூட்டுநெடுந்தொடர்நீக்குவித்தான். (அரு)

பரம்படவிசித்திட்டுள்ளபருவடப்புரோசைப்பட்டி
னுரம்படநுழைந்தபாதமுறுத்தியகுறியிற்பேராத்
தரம்படப்பொழியுந்தானக்கவுளினிற்றும்பிபம்பிச்
சுரம்படமிழற்றவாங்குத்தோரணநடந்ததன்றே. (அசு)

குணித்திறைகுறைந்தாலன்றேகுலக்களிற்றரசியாஞ்செய்
பணித்திறைசிதைத்தலென்றுப்பார்த்திபரிரியல்போத
மணிக்குவைவிடருவேமவகைக்குவையோடுமற்றை
யணிக்குவைசிதருவேகிவாயிலையடைந்ததன்றே. (அஎ)

துயக்கறுமுரசமுன்னபல்லியந்துவைக்குமோதை
மயக்குலகெங்குமாகமங்கலவாழ்த்துவிம்ம
நயக்குலமகளிர்வீசுநல்லெழிற்கவரிமென்கா
லியக்கிருபாலுமாகவெழுந்தனனிராசராசன். (அஅ)

பொற்றலந்தெரிதிபோதிற்புனைதலமுணர்திசோதிக்
கற்றலங்கணித்தியென்னக்காவலர்நெறிமுன்காட்ட
மற்றலம்புனைந்தமாலைமதுவடிநனைப்பப்போகிச்
செற்றலந்தடவுஞ்செங்கைச்சிந்துரமீதணுறுன்.(அகூ)

தாகநாட்டழற்கட்டிங்கட்டண்ணிறமெய்யமுன்ரு
டேகநாட்டிகற்றிண்வெண்கோட்டிடிமுழக்கிபத்தின்மீதாப்
போகநாட்டதிபன்செல்வப்பொங்கெழிற்பவனியந்த
நாகநாட்டேகியாங்குநல்லுலாச்செல்லுகின்ருன். (கூ0)

வேறு.

கழங்கெனமணிக்குலநிரம்பினதிசைத்திசைகதிர்ச்சோதியே
வழங்கினதெருத்தலைமயங்கினகடைப்படமணிக்கோடொடே
முழங்கினதுடித்தொகைமுரன்றனவலைக்கிளைமுதற்ருனிடைத்
தழங்கினமுருட்டினமிரங்கியகுறட்டொடுதனிப்பேரியே. (கூக)

இடியாயவெடியாயசெவியாயவொலியாகவிருபாலுமே
கடியாயமததாரைதனிலேகுபிறகாறுகடலாகவே
முடியாதவிருகோபவிழிநீடுகனலோடிமுனரேகவே
மடியாததனிமேருவரைபோலநிரைபோனமதயானையே. (கூஉ)

முதிர்தாரிஞெலியோடுமிதிதாளவிதியாவமுறைவாளிபாய்
சதிராவவிடையேறுநடைசால்வசிலவூடுதரியாதுபோய்
விதிராதுதலைவீதிவிசைபோவவரலாவமிகுசேனையூ
டெதிரேகலரிதாகவிருபாலுநிலையாவவினிவாசியே. (கூ௩)

உடுவானமுகடேறுகடலாடையுடைஞாலமொழியாதரோ
நடுவானவிடநீதிநளிர்பானுமுதலாகநனிகூறினே
தடுமாறியெழுதூளிபொதியாதபொருள்வேறுதகவேதெனு
நெடுவானிதிசைநேடிவரமாடுசெலலானநிமிர்தேரரோ. (கூச)

விஞ்சேறுமரவத்தளம்பாய்கடாமென்னுமேதக்கதோர்
செஞ்சேறுமிதியாகருஞ்சேறுசுரியாசெலற்பாலதோ
நஞ்சேறுகதிர்வேல்வலத்தானவிளையோர்நடைப்பாலினே
மஞ்சேறுகைம்மாவரும்வீதிதொறுமார்வளத்தானமே. (கூரு)

தொடையல்லவேரித்தளச்சேறுசுண்ணத்துகட்கீயநீ
ளிடையல்லவாரத்திரட்கோவைசெம்பொன்னெழிற்றூரிழைக்
கிடையல்லவாசப்பனித்தோயமீதிற்கிளைத்தேறுபல்
குடையல்லவீதிப்பரப்பாவவெங்குங்கொடிச்சால்மே. (௯௬)

அதிகத்தெடுத்தபடையிதனுக்கிடைக்கிடையணிச்சோதிநீ
டுதியைப்பெருக்கிசைகொள்கருவித்தொனிக்கிடையுரைப்பாடலாற்
றுதியிற்றொடக்கியசைகவரிக்குலக்கிடைதுகிற்போர்வுவான்
மதியைத்திருத்தியனபளிதச்சுடர்க்கிடைமணித்தீபமே. (௯௭)

மிகலிற்படித்துகளில்வெளிறிக்கணத்தொக்கவேள்போலுவார்
செகிலிட்டசெக்கர்விரிபொடியிற்சிவத்துய்த்ததேராழியா
லுகலுற்றபொற்றுகளினுலவிப்பசப்புற்றதூடெழு
மகிலிட்டகுய்ப்புகையினளவிக்கறுத்திட்டதாகாசமே. (௯௮)

பின்னுக்குழற்கணைவிழிப்பூவைமென்சொலவர்பேராரணி
மின்னுக்குழுக்கவினுமதியக்குடைத்தலைவர்வீறூர்முடிப்
பொன்னுக்கெறிக்குநகுமணிவிட்டசோதியிவைபோதாமலே
யென்னுக்கெறிக்குமொர்பகற்பானுவென்றிங்கெழுந்தேயரோ. ௯௯

வேறு.

தலம்வந்தபொருள்களெல்லாந்தன்னுளித்தழைக்குஞ்சால்பிற்
குலம்வந்தசிறப்பின்மிக்ககோநகரதனைச்சூழ
நலம்வந்தவகிலமான்றனிடம்வந்துநயந்துவைக
வலம்வந்துகனகமாடமணியணிக்கோயில்புக்கான். (௧௦௦)

அந்தரம்போகிப்போரிலடற்குசனிறந்தானென்னும்
வெந்தழலுள்ளத்துள்ளேவிளைந்தெழுமுருப்பமெல்லாஞ்
சிந்தைகொளவர்க்குந்தண்ணெனிழலாலிவன்றன்செவ்விச்
சந்திரவலயமன்னதனிக்குடைநீக்கிற்றன்றே. (௧௦௧)

வேறு.

பொங்கனற்கொழுந்துவெம்புகையின்பின்னெழும்
வெங்கதிர்க்குலமினனுதிப்பவிஞ்சுமாற்
றங்குநற்குணங்கண்முன்பின்னர்சார்ந்திடா
திங்கிவற்குதயமோடெழுந்தவென்பவே. (௧௦௨)

பூணுடைப்புகழினன்றம்மைப்புன்மைநீ
ரேணுடைச்சிந்தையினிருத்திவைத்தபோற்
சேணகர்த்தெய்வதமெவையுஞ்செம்மலை
மாணுடைத்தத்தமமனத்துவைத்தவே. (௧௦௩)

குறுந்துளிமதுத்தொடைக்குரிசிற்காட்டலாற்
பெறுந்துளிதரும்புனல்பெருகும்பீடிகை
நறுந்துளிபுலர்வதன்முன்னநாற்கட
லுறுந்துளிதோய்ந்ததாலாழியோடியே. (௧௦௪)

தொடைத்தனுவீரனுமிவன்கைத்தொட்டவிற்
கடத்தருவசிட்டனதரியவிஞ்சையே
திடத்துறுபாணமிவ்விரண்டுஞ்சேர்ந்தபோ
திடத்தலையுண்டுகொலெடுக்கலாதவே. (௧௦௫)

பாரினைக்குசனிவன்பரித்தபோதெதிர்
காரின்முன்பின்னரிற்கலிக்குநன்னதி
நீருறப்பெருகுபுவளனிரந்தபோற்
சீரினிற்சனங்களுஞ்சிறந்தவென்பவே. (௧௦௬)

கொடுத்தனகொளாமையுங்கூற்றின்பொய்ம்மையை
விடுத்தலும்பிடித்திடுவிரதமாகவு
நடுத்தவிரரசரைநலிந்துநன்னிலைப்
படுத்தலினுடையனேவிரதபங்கமே. (௧௦௭)

அடுத்திடுமிளமைகைத்தழகிம்மூன்றிலொன்
றிடைப்படன்மன்னவர்மதத்திற்கேதுவாற்
றடுப்பருமிப்பொருண்மூன்றுந்தன்னுழிப்
பிடிப்பவும்பிடித்திலன்மதத்தின்பெற்றியே. (௧௦௮)

அநித்தியப்பகையல்லபகையென்றுங்கிரண்
டநித்தியப்பகைபுறம்பல்லவுள்ளவா
மநித்தியப்பகையின்முனறுத்திட்டானரோ
வநித்தியப்பகையல்லபகையோராறுமே. (௧௦௯)

பொற்றிருவொருவழிப்படாதுபோதலு
நிற்றலுமாதலேநிலைமைத்தாகவுங்
கற்றலத்தரைத்திடுங்கனகரேகையிற்
பற்றினளிவனையேவிடாதுபாங்கரோ. (௧௧௦)

நீக்கறத்திசைதிசைநெருங்கவொற்றரை
யூக்கலிலிவற்கொளிப்புளதொன்றில்லையே
சேக்குமண்டிலவினன்றனக்குஞ்செங்கதிர்
போக்கலில்வெளிப்படாப்பொருளுமில்லையே. (௧௧௧)

பல்பெருங்கதிருடைப்பானுவான்வழிச்
செல்லினுமிருநெறியயனஞ்செல்லுமா
லெல்லியுமிரவுநூலிசைத்தவோர்நெறி
யல்லதுபிறிதுசென்றறிகிலானரோ. (௧௧௨)

கற்றவர்சொற்றுளகாலத்தேதுயின்
மற்றுளனேனுமெம்மருங்கும்போக்கிய
வொற்றரேகண்ணெனவுடைமையாலவர்
சொற்றனவெல்லையுந்துயிலுமில்லையே. (௧௧௩)

மதிவழிப்பெருங்களிவரினுமீங்கிவன்
விதிவழிப்போதலைவிளம்பவேண்டுமோ
நதிவழிப்போமலானரலைவேறொரு
புதுவழிப்போதுமோபெருகும்போதுமே. (௧௧௪)

தேரினுலரண்கள்வேண்டுவதிறேடுமேற்
பாரினீரிவணைவேறொன்றிற்பற்றலி
னேரினற்பயந்துகொணிமிர்கைம்மாவடு
மூரிவாளரிமலைமுழையிற்றுஞ்சுமே. (௧௧௫)

அறத்தினையின்பநற்பொருளுக்காகவே
குறைத்திலனவைக்குமெண்ணுலகிற்கொள்கையான்
முறைத்தருமிப்பொருண்மூன்றுமொன்றுபோற்
பொறுத்தனனீதிநூற்பொருளொடென்பவே. (௧௧௬)

புதைத்திடினுதவியும்போதுமல்லவே
மிதத்திடில்விகாரமும்விளையுமென்கையாற்
புதைத்திலன்மிதத்திலனறவும்பொங்குநட்
பிதத்தரைமத்திமபெலத்திருத்தினன். (௧௧௭)

ஆறிலொன்றழிவுறுதடர்தவத்தினு
மாறிலொன்றரும்பொருளகங்கொணட்டினு
மாறிலொன்றாறுவெங்களவறுத்தலா
லாறிலொன்றணிகவிங்கிவனுக்காயவே. (௧௧௮)

அன்னியவெஞ்சமமறியுமாயினு
நன்னரினல்லதுநலிவதின்மையாற்
றன்னவர்கூறியகுறியிற்சார்தரு
மின்னெனவிந்தையுமிவனைவேண்டுமே. (௧௧௯)

குறுந்துளிமதுத்தொடைக்குரிசிற்காட்டலாற்
பெறுந்துளிதரும்புனல்பெருகும்பீடிகை
நறுந்துளிபுலர்வதன்முன்னநாற்கட
லுறுந்துளிதோய்ந்ததாலாழியோடியே. (௧0௪)

தொடைத்தனுவீரனுமிவன்கைத்தொட்டவிற்
கடத்தகுவசிட்டனதரியவிஞ்சையே
திடத்துறுபாணமிவ்விரண்டுஞ்சேர்ந்தபோ
திடத்தலையுண்டுகொலெடுக்கலாதவே. (௧0௫)

பாரினைக்குசனிவன்பரித்தபோதெதிர்
காரின்முன்பின்னரிற்கலிக்குநன்னதி
நீருறப்பெருகுபுவளனிரந்தபோற்
சீரினிற்சனங்களுஞ்சிறந்தவென்பவே. (௧0௬)

கொடுத்தனகொளாமையுங்கூற்றின்பொய்ம்மையை
விடுத்தலும்பிடித்திடுவிரதமாகவு
நடுத்தவிரரசரைநலிந்துநன்னிலைப்
படுத்தலினுடையனேவிரதபங்கமே. (௧0௭)

அடுத்திடுமிளமைகைத்தழகிம்மூன்றிலொன்
றிடைப்படன்மன்னவர்மதத்திற்கேதுவாற்
றடுப்பருமிப்பொருண்மூன்றுந்தன்னுழிப்
பிடிப்பவும்பிடித்திலன்மதத்தின்பெற்றியே. (௧0௮)

அநித்தியப்பகையல்லபகையென்றுங்கிரண்
டநித்தியப்பகைபுறம்பல்லவுள்ளவா
மநித்தியப்பகையின்முனறுத்திட்டானரோ
வநித்தியப்பகையல்லபகையோராறுமே. (௧0௯)

பொற்றிருவொருவழிப்படாதுபோதலு
நிற்றலுமாதலேனிலைமைத்தாகவுங்
கற்றலத்தரைத்திடுங்கனகரேகையிற்
பற்றினளிவனையேவிடாதுபாங்கரோ. (௧௧0)

நீக்கறத்திசைதிசைநெருங்கவொற்றரை
யூக்கலிலிவற்கொளிப்புளதொன்றில்லையே
சேக்குமண்டிலவினன்றனக்குஞ்செங்கதிர்
போக்கலில்வெளிப்படாப்பொருளுமில்லையே. (௧௧௧)

பல்பெருங்கதிருடைப்பானுவான்வழிச்
செல்லினுமிருநெறியயனுஞ்செல்லுமா
லெல்லியுமிரவுநூலிசைத்தவோர்நெறி
யல்லதுபிறிதுசென்றறிகிலானரோ. (௧௧௨)

கற்றவர்சொற்றுளகாலத்தேதுயின்
மற்றுளனேனுமெம்மருங்கும்போக்கிய
வொற்றரேகண்ணெனவுடைமையாலவர்
சொற்றனவெல்லையுந்துயிலுமில்லையே. (௧௧௩)

மதிவழிப்பெருங்களிவரினுமீங்கிவன்
விதிவழிப்போதலைவிளம்பவேண்டுமோ
நதிவழிப்போமலானரலைவேறொரு
புதுவழிப்போதுமோபெருகும்போதுமே. (௧௧௪)

தேரினுலரண்கள்வேண்டுவதிறேடுமேற்
பாரினீரிவனைவேறொன்றிற்பற்றலி
னேரினுற்பயந்துகொணிமிர்கைம்மாவடு
மூரிவாளரிமலைமுழையிற்றுஞ்சுமே. (௧௧௫)

அறத்தினையின்பநற்பொருளுக்காகவே
குறைத்திலனவைக்குமெண்ணுலகிற்கொள்கையான்
முறைத்தருமிப்பொருண்மூன்றுமொன்றுபோற்
பொறுத்தனனீதிநூற்பொருளொடென்பவே. (௧௧௬)

புதைத்திடினுதவியும்போதுமல்லவே
மிதத்திடில்விகாரமும்விளையுமென்கையாற்
புதைத்திலன்மிதத்திலனறவும்பொங்குநட்
பிதத்தரைமத்திமபெலத்திருத்தினன். (௧௧௭)

ஆறிலொன்றழிவுறாதடர்தவத்தினு
மாறிலொன்றரும்பொருளகங்கொணட்டினு
மாறிலொன்றூறுவெங்களவறுத்தலா
லாறிலொன்றணிகவிங்கிவனுக்காயவே. (௧௧௮)

அன்னியவெஞ்சமமறியுமாயினு
நன்னரினல்லதுநலிவதின்மையாற்
றன்னவர்கூறியகுறியிற்சார்தரு
மின்னெனவிந்தையுமிவனைவேண்டுமே. (௧௧௯)

அறைவனகடல்களுமதியுமாய்ந்திடிற்
குறைவனநிறைவனகொள்ளுமீங்கிவ
னிறைவனவல்லதுபெருகுநீடிருக்
குறைவனதன்மையைக்கொள்வதில்லையே. (கஉ௦)

இரவலர்க்கினன்கரமிசைந்திடாபகல்
விரவலர்க்கிந்துவின்கரங்கள்வேண்டிடா
புரவலர்க்கேறனன்குணங்கள்பொன்னடி
பரவலர்க்கன்றுநன்கிசையப்பட்டவே. (கஉக)

இப்பெருங்குணங்களால்விளக்கமெய்திநின்
றெப்பெருமன்னர்க்குமிறைவனாயினு
னெப்பிலதேவரினுயர்ந்தவாயிர
மெய்ப்பெரும்விழியுடைவிமலன்போலரோ. (கஉஉ)

இன்னணந்தனித்தனியியம்பிலிக்குல
மன்னவர்சரிதையைவகுக்கற்பாலதோ
நன்னரினீதிநூனடாத்துநாமவேற்
பின்னவர்தலைமையின்பெற்றிபேசுவாம். (கஉ௩)

முடிசூட்டுப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள்-உசகக.



# குலமுறைப்படலம்.



விட்டராதரவிழுநிலத்திவன்பெருமனைவி
வட்டராதரநயிட்டதன்வரத்திலுலளித்த
கட்டராதரநிகர்முலைக்கன்னிநற்புதல்வ
னிட்டராகவன்மலைநிகர்பெருவலிநிட்டதன். (க)

கோவினுறநிநேமியிங்கிவன்றருகுரிசில்
பூவினுறளிப்பொங்கெழிற்பொற்கொடியனையார்
காவிநாறணிக்கட்சுரும்புறங்குபுகவினு
நாவிநாறலர்க்குஞ்சியானளனெனுநாமன். (உ)

பாடற்புண்டரிகத்தசெம்பதுமமேந்திபகைக்
கோடற்புண்டரிகத்திசேரிவன்றருங்குரிசி
னீடற்புண்டரிகத்தரியரனுடைநிலத்த
வாடற்புண்டரிகத்தைநேராயபுண்டரீகன். ௧௩

மாணலார்க்கணங்காமிவன்மைந்தன்பார்வளர்ந்த
வேணலாசனனேய்பவனியாதினுமதியாக்
கோணலார்சிலைகொண்டுதெவ்வடர்த்திடுங்குணத்தாற்
பேணலார்தொழுஞ்சேமதன்வாவெனும்பெரியோன். ௧௪

இலகங்கைப்புயலிவன்றருங்குமரனெப்பொழுதுங்
கலகங்கைத்திடாவசுரரைக்காய்குவோன்றீமை
விலகங்கைப்பதாகினிசுரரேகொளும்விறலா
லுலகங்கைக்கொடேவானிகனெனும்பெயருளோன். ௧௫

மருங்குணத்திழிவயற்றிருநாட்டிவன்மைந்த
னொருங்குணத்தினூல்வழியுருப்பகைவரையுந்
தருங்குணத்தினிற்றனுவினலன்றியும்வணக்கு
மருங்குணத்தினுமமுமகீனகுவாமால். ௧௬

மாரியாத்திரண்மணிநிகர்கரத்திவன்மைந்தன்
போரியாத்திரன்பாரியாத்திரமெனப்புகலு
மூரியாத்திரமாம்வரையன்னமாமுரணூற்
பாரியாத்திரனெனும்பெயரானடற்பரியான். ௧௭

காலனஞ்சனற்கதத்திவன்மைந்தன்போர்கடிந்த
வேலனஞ்சனவெம்மையன்விழைவொடும்பூமி
பாலனஞ்சனந்தழைத்திடப்பரிக்கையாற்பகர்பேர்
சீலனஞ்சலர்க்கசனியேறனையமெய்த்திறலான். ௧௮

சோபனன்னவகண்டமுமண்டமுந்தொழுதாட்
பூபனன்னவன்புதல்வன்வெம்பொருங்கலிப்பாவ
கோபனன்னவன்கொடியினுன்குறித்தெழும்பதும
நாபனன்னவனுமமுந்தெரியினுன்னுபன். ௧௯

கைச்சிரத்தவன்கடுங்கதிர்கண்ணினிற்பொலியும்
வச்சிரத்தவாளணியிவன்மைந்தன்மாற்றலர்தம்
பச்சிரத்தநாறடற்கதிர்வேலினுன்பசும்பொ
னச்சிரத்தவர்க்கிபவன்வச்சிரநாபன். ௨௰

சிருவிலங்கலிற்றிணிபுயத்திவன்றருஞ்செம்மன்
மருவிலங்கடர்த்திடுங்கைம்மாவனையதோள்வலியா
னருவிலங்கயிலெடுத்தடையாரைவென்றருளு
நருவிலங்கலர்த்தொடையினான்சங்கணநாமன். (கக)

நாகக்குந்தொடர்புகழிவன்மைந்தனாட்டியதிண்
பாகக்கந்துகவடர்த்தெதிர்ந்தார்முடிபறித்தே
யாகக்கந்துகமடித்திடுங்களிற்றினானளப்பில்
வேகக்கந்துகத்தான்பெயர்வியுஷிதாச்சுவனே. (கஉ)

மருவரத்தினாற்றிருத்தியவாட்படைமறவோர்
செருவரத்தினாவலியிவன்மகன்றிமிரம்
வெருவரத்தினான்மிளிர்படைக்காசியில்விமலன்
றருவரத்தினாமமும்விச்சுவசகனே. (கங)

வயனத்தன்னமார்கோசலமன்னிவன்மகனீ
ரயனத்தன்றிருத்தேசுளான்பாற்கடலமர்ந்த
சயனத்தன்றடநாகநீத்தகன்றிடுஞ்சலச
நயனத்தன்றனதங்கமாமிரணியநாபன். (கச)

மின்னிலங்கணிப்பூணுடையிவன்றரும்விறலோ
னுன்னிலங்கயனுலகளந்திடும்புகழுடையோன்
பொன்னிலங்கமழ்பொய்கைநாடுடையவன்புயன்மே
வென்னிலங்களுமிகற்கவுசல்லியனெனுமால். (கரு)

உரமிட்டங்கணைத்துகுத்தழுத்தெடுத்தெடுத்துழவர்
கரமிட்டங்கவனுயர்த்துநாடுடையவன்காளை
பரமிட்டந்தருஞானபூரணப்பொருள்பற்றும்
பிரமிட்டனெனும்பேருடைப்பெரும்புகழ்ப்பெரியோன்.

தருமுப்போதநீர்நிலத்தவன்செம்மறற்பொருளை [ப்
வருமுப்போதுமெண்மனத்தினான்மறங்கொண்மாற்றலர்க்கு
பொருமுப்போருடைப்பூதரங்களைப்பொடிபடுத்து
முருமுப்போல்பவன்புத்திரனெனும்பெயருடையோன். கஎ

சீரணக்கலாமனத்தரையுருவிவன்செம்மல்
பேரணக்கலாமிகுமறவோருயிர்பிரிப்போன்
காரணக்கலாமுதயமுற்றெழுதருங்காட்சிப்
பூரணக்கலாமதியனபுகழுடைப்புஷ்யன். (கஅ)

தருவதந்தியுமணியுமாங்கையிவன்றனயன்
செருவதந்தினமரசர்மேற்செய்திடுந்திறலோ
னுருவதந்தியொண்பிறையெனயாவருமுவப்போன்
றுருவசந்தியாம்பெயருடைப்பெரும்புகட்டூயோன். (௧௯)

கனிவலத்தகவடியினூர்கொளமதன்கடுக்குங்
குனிவலத்தவில்லிவன்றருங்குரிசின்மாலவன்ற
னனிவலத்தவொண்டிகிரியின்விளங்குநானிலமெண்
டனிவலத்தசுதரிசனனெனும்பெயர்த்தக்கோன். (௨௦)

வேறு.

வீறுடையிளையனுமிப்பெரியனைவிளங்கக்கொண்ட
வாறுடையியல்பிற்றூயவம்மரபிளையசிங்க
வேறுடைவண்முஞ்செவ்வியெழிலுடைமழவுத்திங்கட்
பேறுடைவிசும்புங்கஞ்சப்பிஞ்சுடைத்தடமும்போலும். ௨௧

ஒளியினுமகுடம்வேய்ந்தவிவனுறச்சிறியனேனுங்
களியினற்றிசையோரெட்டும்புகழ்செலக்கவினுநின்றான்
வெளியினற்பரந்துசெல்லுமேகத்தின்குருளைவீசும்
வளியினுலன்றோவெட்டுமாதிரம்பிடிப்பதம்மா. (௨௨)

தேசிவன்சிறிதுகொல்லோதந்தைவீற்றிருந்தசெம்பொ
னசனஞ்சிறிதுகொல்லோவமர்ந்தகத்திருந்தபோதிற்
றேசிவன்மணிக்காலுள்ளவவ்வுபுசிறந்தசெம்பொ
னசனப்புறம்புபாய்ந்ததம்மகொலறிகிலேமே. (௨௩)

வடித்தலங்கயில்கொள்வேலான்வயதொரா றுடைமைவாய்ந்த
வடித்தலமழகுபூத்தவாசனத்தணிசெய்கீழ்ப்பொற்
படித்தலந்தோயாவேனும்பருக்கைமாவரசர்தங்கண்
முடித்தலமலர்ந்தவென்றாற்பின்னரென்மொழியுமாறே. ()

சாணைகொண்டிருண்டகாசுதணந்தவெள்ளிலையதாரைக்
கோணைகொண்டிலங்குவைவேற்கோவிளங்குரிசில்கூற்று
வீணைகொண்டிலங்குகையார்மனமெனவிலக்கொன்றின்றி
யாணைகொண்டலர்ந்துபோகியாசைகொண்டமைந்ததன்றே

கணிப்பரம்பொருவேற்கண்ணார்காலமுட்கருதிக்காதற்
பிணிப்பரம்பொறுப்பநாளிற்பிறங்குவான்பெரியவான
மணிப்பரம்பொருநின்றெங்குமயக்கறமலர்ந்தசோதி
யணிப்பரம்பொருதவாகுவகிப்பரம்பொறுத்ததன்றே. (௨௬)

கடைபடக்கற்றுங்கல்லார்கன்மதிவிதியிலார்சொற்
றடைபடக்கல்லாரேனுஞ்சார்ச்சியிலுணர்வதாக்கார் [இ
புடைபடச்சொன்னமுற்சொல்பொருளெலாம்புறம்பு நோக்
யிடைபடச்சொன்னபிற்சொலிரும்பொருளெய்தினனே. ()

கண்குடையழகினான்றன்கலப்பரும்பருவந்தன்னு
ளெண்குடைதாவிற்றேவரெண்ணலைவெள்கினாள்போற்
பண்குடையளிகண்மூசும்பங்கயக்கிழத்திகொற்ற
வெண்குடைநிழலதாகிமெய்யுறத்தழீஇயினாளே. (உஅ)

மதிசெயும்வல்த்திராசசத்தியிவ்வண்ணமாட்சி
யதிசயம்விளைப்பநன்னராண்டுசென்றகன்றபின்னர்த்
துதிசெயுங்கலைகள்யாவுந்துகடபக்கற்றுத்தொல்லை
விதிசெயுந்துணையினோடுமேதகவிளங்கினானே. (உகூ)

தெண்ணளிப்பருவக்காமர்செம்முறிவிரிந்துசீர்சா
லெண்ணளிக்கவின்மென்போதுமலர்ந்தனுராகமென்னுந்
தண்ணளிச்செழுந்தேன்றேங்கித்தாமரைமுகத்துநல்லார்
கண்ணளிக்கினியகாமதருவெனக்காட்சித்தானான். (௩௦)

கணிவிளக்குரியநாளிற்கனமணிக்கோடிதோறும்
பணிவிளக்கம்பொன்மௌலிப்பார்த்திபர்பந்தமாக
வணிவிளக்கதனோடல்லுமெல்லியுமலங்குசோதி
மணிவிளக்கிலங்குபூணான்மனைவிளக்கொளிர்வைத்தான். ()

வெம்புமாலாழிநாமத்திவன்விளங்கிளமையென்னுங்
கொம்புகாலொசியமூப்புப்பணியுறைகொண்டபின்ன
ரம்புவியனைத்துந்தன்சேயக்கினிவருணனென்னு
நம்பிமாட்டளித்துத்தெய்வநைமிசாரணியம்புக்கான். ()

கலைப்படாநின்றவிக்குவாகுவின்மரபின்காட்சித்
தலைப்படாநின்றவேந்தர்தம்பெருந்தகையநீதி
வலைப்படானாகிநல்லோரறிவெனும்வாய்மைதன்னு
ணிலைப்படாவிவன்றன்வெய்யநீர்மையைநிகழ்த்துகிற்பாம்.

## குலமுறைப்படலமுற்றிற்று.

ஆ செய்யுள்-உ௬௬௬.



# பிழைதிருத்தம்.



| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௨௯ | ௨௨ | ௨ | வரிப்பதும்குயில் | வரிப்பதுங்குயில் |
| ௫௮ | ௫௭ | ௨ | யுய்யா | யுய்யாப் |
| ௫௯ | ௧ | ௨ | பரை | புரை |
| ௬௧ | ௨௰ | ௨ | படரா | படராப் |
| ,, | ௨௪ | ௪ | ஞுஞுதனசுடரோ | ஞுஞுதனசுடரே |
| ௬௩ | ௩௮ | ௨ | கூற்றும் | கூற்றம் |
| ௭௰ | ௯௧ | ௨ | மகிந்து | மகிழ்ந்து |
| ௯௫ | ௧௮௮ | ௨ | வலிகண் | வலிக |
| ௧௰௨ | ௨௪௨ | ௧ | ணிகல | ணிலக |
| ௧௫௪ | ௪௯ | ௩ | தேஞுவி | தெஞுவி |
| ௧௭௧ | ௧௰௰ | ௧ | தார்குழல் | தார்க்குழல் |
| ௧௭௬ | ௧௭ | ௩ | மண்ணுள | மண்ணுள |
| ௨௧௨ | ௨௬ | ௩ | சிலைபோதன் | சிலைப்போதன் |
| ௨௧௬ | ௫ | ௧ | நாட்டிடை | நாட்டடை |
| ௨௬௨ | ௪௪ | ௩ | கற்பத | ஈற்பத |
| ,, | ௪௯ | ௨ | சேப்பு | செப்பு |
| ,, | ௫௰ | ௧ | க்ணிக்கி | கணிக்கி |
| ௨௬௪ | ௬௨ | ௧ | னவிண் | னவின் |
| ௨௭௬ | ௧௰௨ | ௨ | வான்முக | வாண்முக |
| ,, | ௧௰௩ | ௨ | கவரும் | கவருங் |
| ௨௮௭ | ௭௪ | ௨ | நீடடி | நீட்டி |
| ௩௰௧ | ௮௰ | ௩ | குரங்கின் | குறங்கின் |